# சங்கீதத்தின் தெய்வாம்ஸம்

## தமிழிசை

## ஆய்வுக் கட்டுரை



LORD CHAKRATHALWAR சககரத்தாழவார்

அமைப்பு:

செல்வி அ சூடாமணி

உரிமைப்பதிவு செய்தது

வெளியீடு

2001

ஸ்ரீரங்கநாதர் துணை

சங்கீதத்தின் தெய்வாம்ஸம்

தமிழிசையில்

ஸ்ரீத்யாகப்ரும்மம்

முதல்

திருவரங்க வரலாறு முடிய

முகவுரை

ஸ்ரீரங்கநாராயணஜீயர் ஸ்வாமிகளின்

அருளுரையோடு கூடியது



GODDESS RENGANAYAKI அரங்கநாயகி தாயார்



LORD RENGANATHA அரங்கநாதர்

# தமிழிசைக்கான ஓர் ஆய்வுக் கட்டுரை


அமைப்பு

## செல்வி அ. சூடாமணி

195/107, கீழச்சித்திரை வீதி, திருவரங்கம், திருச்சி–620 006.


[உரிமை பதிவு செய்தது] 2001

[விலை 300]

இசைக்கு அதிபதியான அணிஅரங்கன்



அழகியமணவாளன்

நாலாயிரப்பொருளாம் நம்பெருமாள்

திருவரங்கம் பெரியகோயில்

முகவுரை

**ஸ்ரீரங்கனாதர் துணை**

**ஸ்ரீரங்கனாதர் ஸ்தோத்திரம்**

*''ஸப்தப்ரகாரமத்யே ஸரஸிஜ முகுளோத்பாஸமானே விமானே*
*காவேரி மத்ய தேஸேம்ருதுதர பணிராட் போகபர்யங்க பாஹே*
*நித்ராமுதராபிராமம்கடினிகடசிர பார்ஸவின்யஸ்த ஹஸ்தம்*
*பத்மாதாத்ரீகராப்யாம் பரிசித சரணம் ரங்கராஜம் பஜேஹம்''*

*''கங்கையிற் புனிதமாய, காவிரிநடுவு பாட்டுப்*
*பொங்குநீர் பரந்து பாயும், பூம்பொழிலரங்கந்தன்னுள்,*
*எங்கள் மாலிறைவனீசன், கிடந்ததோர் கிடக்கைகண்டும்,*
*எங்ஙனம் மறந்துவாழ்கேன், ஏழையே னேழையேனே - என்று அழகிய மணவாளனை*
*தொண்டரப்பொடியாழ்வார்'' பாசுரமாகப்பாடி மகிழ்கிறார்*
*நம்மாழ்வார் உயர்வற, மயர்வற, அயர்வறும், அமரர்கள் அதிபதி எவனவன் என்கிறார்*
*இங்கு அ, உ, ம காரத்தை, உ, ம, அகாரமாக வைத்துப்*
*பாடியதன் ரகசியார்த்தம், எல்லையில்லாதப் பேரின்பவீடான*
*மோக்ஷத்தை அடைய உகாரம், மகாரம், அகாரமான*
*கீதம்பாடி ராகம்பாடி, கீர்த்தனம்பாடி, நாமசங்கீர்த்தம்பாடி அணி*
*அரங்கனின் திருவடியை அடைய முடியும் என்றும் தாத்பர்யத்திற்காகப் பாசுரத்தை*
*அமைத்துள்ளார். இதே போன்று இசைக்கு அதிபதி அணி அரங்கனே என்று*
*ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடுகிறார் இந்த ஆய்வு தன்னில் ''சங்கீதத்தின் தெய்வாம்ஸம்*
*என்ற தலைப்பில் ஆழ்வாராதிகளும், ஏனைய மகனீயர்களும், இசைபாடித் துதித்தனர்*
*என்றும், ஸ்ரீத்யாகப்ரும்மத்தின **''சங்கீதத்தின் தெய்வாம்ஸம்''** பற்றியும் கூறப்பட்டுள்ள*
*இந்த ஆய்வு வெற்றி பெற ஆசீர்வதிக்கின்றேன். இந்த ஆய்வுக்கு உதவி செய்த*
*ஜெயம்மாளுக்கும், ஆய்வு நடத்தி முடித்த செல்வி அ சூடாமணிக்கும் அரங்கன்*
*அருள் புரியட்டும் இது ஒரு ஆய்வுக்கான கட்டுரை ஆகும்*

*இங்ஙனம்*
*ஸ்ரீரா நாராயணஜீயர்*
*ஸ்ரீரங்கம்*

*இடம் : ஸ்ரீரங்கம்*

*தேதி : 30.12.2001*

**இந்த பக்கத்தின் குறிப்பு எஸ்.கே.ரங்கராஜ் பட்டர் அவர்களால் சரி பார்க்கப்பட்டது**

| தெய்வங்கள் | ஓம் | தாளங்கள் |
|---|---|---|
| விஷ்ணுக்கு | -- | விஷ்ணுதாளம் |
| ப்ரம்மாவுக்கு | -- | பிரும்ப தாளம் |
| ருத்ரனுக்கு | -- | மேகதாளம் |
| வினாயகருக்கு | -- | ஜய தாளம் |

**திக்குகள், திக்குகளின் அதிபதிகள் - அவர்களுக்கான தாளம்**

| திசை | | அதிபதி | | தாளம் |
|---|---|---|---|---|
| கிழக்கு | - | இந்திரன் | - | மேகதாளம் |
| தென்கிழக்கு | - | அக்னி | - | மல்லதாளம் |
| தெற்கு | - | யமன் | - | ப்ரேததாளம் |
| தென்மேற்கு | - | நைருதன் | - | மங்களதாளம் |
| மேற்கு | - | வருணன் | - | ப்ரமரதாளம் |
| வடமேற்கு | - | வாயு | - | ஸார்வகிதாளம் |
| வடக்கு | - | சந்த்ரன் | | |
| | | ஸோமன் | - | மங்களதாளம் |
| வடகிழக்கு | - | ஈசானமூலை | - | ப்ருங்கிணிதாளம் |

**விமானத்தை காப்பவர்கள்:- 8 பேர்கள்**

| | |
|---|---|
| 1. குமுதன் | 5. சங்கு கர்ணன் |
| 2. குமுதாக்ஷன் | 6. சர்வநேத்ரன் |
| 3 புண்டரீகள் | 7. சுமுகன் |
| 4. வாமனன் | 8. சுப்ரதிஷ்டன் |

எஸ்.கே.ரங்கராஜபட்டர்

**இந்த பக்கத்தின் குறிப்பு எஸ்.கே.ரங்கராஜ பட்டர் அவர்களால் சரி பார்க்கப்பட்டது**

**விமானத்தை சுற்றி கீழே திரு வண்ணாழி பிரகாரம் அங்குள்ள நான்கு பேர்கள்**

1 கணபதி

2 அனநதன்

3 நருஸிமமன

4 துர்ககை



இந்த பக்கத்தின் குறிப்பு எஸ்.கே.ரங்கராஜ பட்டர் அவர்களால் சரி பார்க்கப்பட்டது

**விமானத்தை காக்கும் எட்டு பேர்கள், பெயர், தாளம், நிருத்யம், ராகம், ஸ்வரம்**

| எண் | எட்டுபேர்கள் | தாளம் | ந்ருத்யம் | ராகம் | ஸ்வரம் |
|---|---|---|---|---|---|
| 1. | குமுதன் | சமதாளம் | விலாஸ | காந்தார | ஷட்ஜம் |
| 2. | குமுதாக்ஷன் | பத்தாவதாளம் | ஸர்வதோபத்ர | கௌல்ய | நிஷாத |
| 3. | புண்டரீகன் | ப்ருங்கிணீ | கேதகநிருத்தம் | கைசிகப்பன் | காந்தார |
| 4. | வாமனன் | மல்லதாளம் | சக்ரமண்டல | நட்டகாஷ | மத்யமம் |
| 5. | சங்குகர்ணன் | மங்களதாளம் | காந்தாரகுட்டிம | ஸ்ரீகாமத | பஞ்சமம் |
| 6. | சர்வநேத்ரன் | ஜயதாளம் | ப்ருஷ்டகுட்டிம | கைசிகபண் | தைவதசுரம் |
| 7 | சுமுகன் | பத்ரதாளம் | கடிபந்தநிருத்தம் | தக்ஷராகம் | தைவநிஷாதம் |
| 8 | சுப்ரதிஷ்டன் | ட்க்ரீதாளம் | வாமஜானூர்தவ | நாளபாணி | தைவதஸ்வரம் |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | பஞ்சமம் |
| மானவ | மல்லதாளம் | சர்வதோபத்ர | மேகபஞ்சமம் | மத்யமம் |
| பரஸ்னீகர்பன் | ப்ரமானந்த | விலாஸாநிருத்தம் | மேகராகம் | மத்யமம் |
| கருட | ககினிதாளம் | | | |
| | ஆகாயதாளம் | விஷ்ணுக்ராந்த | கருடராகம் | மத்யமம் |
| விஷ்வக்ஸேனர் | ஜயதாளம் | ஸ்வஸ்திகநிருத்தம் | நராபுராகம் பண் | வ்ருஷப |

விமானத்தை 187 தேவதைகள் காப்பதாக குறிப்பு தந்துள்ளார்.

ஸை
எஸ்கே. ரங்கராஜ பட்டர்
அவர்கள்

# சங்கீதத்தின் தெய்வாம்ஸம்

*பை*
***சங்கீத விதூஷகி***
***ஸ்ரீமதி துரைசாமி, பி.ஏ.***

*எனது கணவரின் சகோதரி அ.சூடாமணி இந்த ஆய்வுதனை பல காலம் ஆழ்ந்து ஆய்வு நடத்தி பெரும் வெற்றியை கட்டுள்ளார். அவருடைய இசை ஞானம் அவருக்கு ஓர் வரப்ரசாதம். மேலும் அவருக்கு அவரது தாயார் ஆரம்பக்காலம் முதற்கொண்டு இசைப் பயிற்சி அளித்தது, அவர் கச்சேரி செய்தது, அவர் வகுப்பு நடத்தியது நடத்தி வருவது அனைத்துமே எனக்குத் தெரியும். தற்போது அவருடைய தாயார் பெயரில் ''ஜெயம்மாள் சங்கீத குரு குலத்தை நடத்தி வருகிறார். என் நாத்தனார் அவர்கள் ஆதிரங்கம், மத்யரங்கம் அந்தியரங்கம் பற்றி அறிய மைசூர் மாநிலத்தில் உள்ள ஸ்ரீரங்க பட்டிணம், ப்ளப் என்று சொல்லும் சிவசமுத்திரம், இது அவருடைய ஆய்வுக்கு மிகவும் முக்கியமானது என்று சொன்னார். தலைகாவேரி சென்று பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். தலைகாவேரி அழைத்துச் சென்று சிவசமுத்திரம் காட்டி அழைத்து வந்தேன். இதன் பின் திருவரங்கத்தை பற்றிய அவருடைய ஆய்வுதனை முடித்துள்ளார். எல்லோரும் உதவி செய்துள்ளார்கள். ஆனால் ஆய்வின் கருத்து அவருடையது என்பதனை கூறிக்கொள்கிறேன். அவரும் நானும் இசை வழியில் பழகினவர்கள் அவரைப்பற்றி நான் எவ்வளவோ கூற நினைக்கிறேன். என் குடும்பத்தில் இசைக்கு அதுவும் தமிழிசைக்கு ஆய்வாளர் இருந்திருக்கிறார் என்று நினைக்கும்போது மிக்க மகிழ்ச்சியாக உள்ளது.*

***இங்ஙனம்***
*(திருமதி ஸ்ரீமதி துரைசாமி பி.எ.சங்கீத விதூஷகி.)*

*தேதி:*

***இடம் - ஸ்ரீமதி துரைசாமி***
***7, ராஜா காலனி***
***கலெக்டர் ஆபீஸ் ரோடு,***
***கன்டோன்மென்ட்,***
***திருச்சி - 620 001***

## முன்னுரை

### இந்த ஆய்வு பற்றிய எனது கருத்துரை : சூடாமணி

திருவரங்கத்தில் ஸம்ரோக்ஷணம் நடக்கப் போகிறது என்று எல்லோராலும் பெருமைபட பேசியதை காதால் கேட்டு மகிழ்ந்த நான் தினமும் கோயிலுக்கு செல்லும் பொழுது அரங்கனிடம் எனது ஆய்வுதனை முடித்துவிட்டேன். ஆனால் இதனை ஸம்ரோக்ஷணத்திற்கு முன் என்னால் வெளியிட முடியவில்லையே என்று வருத்தத்தோடு கூறிவிட்டு வீடு திரும்புவேன். திருப்பணிகள் நடந்தேறின. ஸம்ரோக்ஷண நாளும் நெருங்கியது. ஆனால் எனது புஸ்தக வெளியீடு செய்வதற்கான எந்த வழியும் பிறக்கவில்லை. குடமுழுக்கை தரிசிக்க மக்கள் கூட்டம் கூட்டமாக திருவரங்கத்தை சூழ்ந்துகொண்டு அரங்கனோடு கூடி மகிழ்ந்து திளைத்தார்கள். நானும் யாக சாலையைச் சுற்றி சுற்றி வந்து இறைவனிடம் என் மனக்குறையை வெளியிட்ட வண்ணமே யிருந்தேன். அப்பொழுது தான் எனக்கு எதிர்பாராத ஓர் சந்தர்ப்பம் கிடைத்தது. விமான குடமுழுக்கைக் காணும் பாக்யம் கிடைத்தது. குடமுழுக்கிற்குப் பின் எனது ஆய்வுதனை அரங்கன் ஏற்றுக் கொண்டான் என்பதற்கு ஸம்ரோக்ஷணம் அன்று நடந்ததை கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருக கூறுகிறேன். குடமுழுக்கு முடிந்தவுடன் சுந்தர்பட்டாச்சாரியார் அவர்கள் எல்லோரும் 'கோவிந்தா' என்று சொல்லுங்கோ என்று விமான உச்சிமீதிருந்து அரை கூவினதை அடுத்து லக்ஷோபலக்ஷம் பேர்கள் ''கோவிந்தா கோவிந்தா'' என்றபோது என் மெய் சிலிர்த்தது. எனது ஆய்வின் 24வது அக்ஷரமும் 'கோவிந்தா'தானே. கண்ணீர்மல்க 'கோவிந்தா' என்று நானும் கூவியழைத்தேன் அரங்கனை. எனது ஆய்வு அரங்கனால் ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டதை கேட்டவுடன் சந்தோஷத்தால் நிறைவான எண்ண அலைகளோடு விமானதளத்திலிருந்து கீழே இறங்கினேன். கம்பராமாயணத்தை அரங்கன் ஏற்றுக் கொண்டான். அரங்கனால் ஏற்றுக்கொள்ளப்பட்ட இந்த ஆய்வு தெய்வீகமாக்கப்பட்டுவிட்டது என்ற மனநிறைவு பெற்றபோது என் செவியில் கேட்டது.

''ஏழுபிறப்பில் அடியவரை எழுதாப் பெரியபெருமாளை
எழுத அறிய பொருமான் என்றெண்ணா தெழுதியிருந்தேனே'' என்ற திருவரங்கக் கலம்பகமும்.

இதனை தொடர்ந்து எனக்கு நிதி தந்து எனது ஆய்வினை ஏற்ற பெருமாள் திருவேங்கடமுடையானை.

''பதின்மர் செந்தமிழைப் படிக்கிலாய் கேளாய்' என்று துவங்கி
மதி நுதல் அலர்மேல் மங்கை நாயகனார்.
மலர்பதம் கிடைப்பது எவ்விதமே'' - என்ற திருவேங்கட கலம்பகமும்.

என் நினைவில் நீங்காது நின்றகலாது, நிற்கின்றதுவே - இறைவனை நம்பினோர் கைவிடப்படார் என்று புரிகிறது.

வாழ்க தமிழ், வளர்க தமிழ்த் தொண்டு'

**சங்கீதத்தின் தெய்வாம்ஸம்**

**ஆய்வாளர் நன்றி உரை**

இந்த தலைப்பு கொண்ட ஆய்வுக்கு நான் தேர்ந்தெடுத்துள்ளவைகளை சரிபார்த்து வழிகாட்டி உதவிய எனது தாயார் குருகும்பகோணம் திருமதி ஜெயம்மாள் அவர்களுக்கு நன்றி கூறுகிறேன். இது சம்பந்தமாக ஐவர் கொண்ட குழுவை அமைத்துக் கொண்டேன். இந்த ஆய்வுக்கு எனக்கு ஸ்ரீமுகம் எழுதித் தந்து உதவிய ஸ்ரீரங்கம் கோயில் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் சுவாமிகளுக்கு தெண்டன்சமர்ப்பிவிக்கின்றேன். அடுத்து, திருவரங்கம் கோயில் பட்டார் சுமாமிகள் எஸ் கே.ரங்கராஜபட்டர் அவர்கள் பேரீதாடன குறிப்புகளை சரிபார்த்தார். சுந்தர்பட்டரவர்கள் பேரீதாடன குறிப்புகளை தந்துதவினார். அதனை அரங்கனின் ஆசியாக ஏற்று அவர்களுக்கு தெண்டன் சமர்ப்பிவிக்கின்றேன். எனது சகோதரர் மனைவி ஸ்ரீமதி துரைஸ்வாமி அவர்கள் என்னைப்பற்றி கருத்துக்கணிப்பு எழுதி உள்ளார். சகோதரி விஷயலக்ஷ்மிநரஸிம்மன் வீணை வாய்ப்பாட்டை என்னுடன் என் தாயார் குருகுலத்தில் இசை பயின்றவர். அவர் அவரது கணவர் ஆய்வு சம்பந்தமாக நான் கேட்ட குறிப்புகள், புஸ்தகங்களை பெற்று தந்து உதவியுள்ளார்கள். எனக்கு என்னுடைய ஆய்வுக்கு என் சகோதரர்கள், சகோதரர் மனைவிமார்கள், நிதி உதவி சிரமப்படும்போது உதவியளித்துள்ளார்கள். எனது சகோதரர் சகோதரி குழந்தைகள் ராமருக்கு அணில் செய்த உதவி போல் சின்ன சின்ன உதவிகளை செய்துள்ளார்கள். நான் கேட்டபோது தேவைபட்ட புஸதகங்கள் (குறிப்புகளை சரிபார்க்க) பெற்றுத் தந்து உதவியதற்காக, அனைவருக்கும் என் நன்றியறிதலை சமர்ப்பிவிக்கின்றேன். இந்த ஆய்வில் முக்கியமாக எனக்காக பொறுப்பேற்று என்னுடைய வழக்கறிஞர் திரு.கிரி அவர்கள் என்னை நோட்டரிபப்ளிக் ரிஜிஸ்ட்ரேஷனுக்காக அழைத்துச்சென்று தானே அந்த வழக்கறிஞர் முன் எனது ரிஜிஸ்டிரேஷனை செய்து தந்தார். அந்த உதவிக்கு என் இதயபூர்வமான நன்றியறிதலை தெரிவிக்கின்றேன். மேலும் முடிவுரையாக இதில் ஓர் சிறப்பை கடவுளர்களால் அருளப்பட்டதை கூற விரும்புகிறேன் கடவுள்கள் மனித உருவத்தில் வந்து அவதாரிகைகளை செய்ததாக இதிஹாஸ புராணங்கள் கூறுகின்றன. ஆனால் எனக்கு மிகுந்த ஆச்சர்யத்தை அளித்து கண்களில் ஆனந்த பாஷ்யம் பெறுகினதை துடைக்கத்தெரியாமல் இருந்தது, ஓர் சம்பவத்தால். நான் எடுத்துக்கொண்ட அமைப்பில் ஓம் நமோ நாராயணா என்ற நாமத்தை கூறினது, ஓம் நமச்சிவாய என்ற நாமத்தை கூறினது, இரண்டிலிருந்தும் ராமநாமம் பிறக்கிறது என்பதை எழுதினது ராமநாமம் தாரக மந்த்ரம். இதுவே ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் மூலமந்த்ரம் என்று எழுதினதை முடித்த என் ஆய்வு முற்றுப்பெற்றதை ஸ்ரீமன் நாராயணன் ஸ்ரீநமச்சிவாயபெருமாள் இருவரும் ஆசீர்வதித்து தங்கள் பெயரை என் ஆய்வுப் புத்தகத்தில் முத்திரை குத்தி ராம நாமத்தை ஸ்தாபிதம் செய்து விட்டார்கள். என்னுடைய புஸ்தகத்திற்கு அருளுரை வழங்கியவர் ஸ்ரீரங்கநாராயணஜீயர்ஸ்வாமிகள். ஆய்வு உண்மையானது என்று ஆசீர்வதித்துவிட்டார். வழக்கறிஞர் திரு நமசிவாயம் அந்த உண்மையை உறுதி செய்துவிட்டார். நான் இறைவனை எங்ஙனம் போற்றிக் கூறுவது என்று திகைக்கையில் எனக்கு கடவுளின் அருளொளி தெரிகிறது.

இங்ஙனம்

(அ.சூடாமணி)

இந்த பக்கத்தின் குறிப்பு எஸ்.கே.ரங்கராஜ பட்டர் அவர்களால் சரி பார்க்கப்பட்டது

**விமானத்தை காக்கும் எட்டு பேர்கள், பெயர், தாளம், நிருத்யம், ராகம், ஸ்வரம்**

| எண் | எட்டுபேர்கள் | தாளம் | ந்ருத்யம் | ராகம் | ஸ்வரம் |
|---|---|---|---|---|---|
| 1. | குமுதன் | சமதாளம் | விலாஸ | காந்தார | ஷட்ஜம் |
| 2. | குமுதாக்ஷன் | பத்தாவதாளம் | ஸர்வதோபத்ர | கௌஸ்ய | நிஷாத |
| 3. | புண்டரீகன் | ப்ருங்கிணீ | கேதகநிருத்தம் | கைசிகப்பன் | காந்தார |
| 4. | வாமனன் | மல்லதாளம் | சக்ரமண்டல | நட்டகாஷ | மத்யமம் |
| 5. | சங்குகர்ணன் | மங்களதாளம் | காந்தாரகுட்டிம | ஸ்ரீகாமத | பஞ்சமம் |
| 6. | சர்வநேத்ரன் | ஜயதாளம் | ப்ருஷ்டகுட்டிம | கைசிகபண் | தைவதசுரம் |
| 7 | சுமுகன் | பத்ரதாளம் | கடிபந்தநிருத்தம் | தக்ஷராகம் | தைவநிஷாதம் |
| 8 | சுப்ரதிஷ்டன் | ட்க்ரீதாளம் | வாமஜானூர்தவ | நாளபாணி | தைவதஸ்வரம் |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | பஞ்சமம் |
| மானவ | மல்லதாளம் | சர்வதோபத்ர | மேகபஞ்சமம் | மத்யமம் |
| பரஸ்னீகர்பன் | ப்ரமானந்த | விலாஸாநிருத்தம் | மேகராகம் | மத்யமம் |
| கருட | ககினிதாளம் | | | |
| | ஆகாயதாளம் | விஷ்ணுக்ராந்த | கருடராகம் | மத்யமம் |
| விஷ்வக்ஸேனர் | ஜயதாளம் | ஸ்வஸ்திகநிருத்தம் | நராபுராகம் பண் | வ்ருஷப |

விமானத்தை 187 தேவதைகள் காப்பதாக குறிப்பு தந்துள்ளார்.

ஸை
எஸ்கே. ரங்கராஜ பட்டர்
அவர்கள்



மாணவி
செல்வி அ.சூடாமணி



ஆசிரியை
கும்பகோணம் திருமதி ஜெயம்மாள்

## குரும்பரம்பரை விவரம்

### நூலாசிரியை உரை

நான் தியாகப்ரும்ம சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்தவர். சங்கீதத்தில் தெய்வாம்சம் பற்றி கூற வேணும் என்ற ஆவல் உந்த தியாகப்ரும்மம் பற்றிய ஆய்வுக் கட்டுரையை துவங்கி உள்ளேன். எனது தாயார் கும்பகோணம் திருமதி ஜெயம்மாள் அவர்கள் சங்கீத கலாநிதி உமையாள்புரம் ஸ்வாமிநாதய்யரிடம் சிஷ்யை பயின்றவர். அவர் தியாகப்ரும்ம சிஷ்ய பரம்பரையை சேர்ந்தவர்.

### குருபரம்பரை வரிசை

### ஸ்ரீத்யாகப்ரும்மம்

### மானம் பூசாவடி வெங்கடசுப்பையர்

| | |
|---|---|
| மஹாவைதிய நாதய்யர் | பட்டணம் சுப்ரமண்ய அய்யர் |
| சங்கீத கலாநிதி | |
| உமையாள்புரம்ஸ்வாமி நாதய்யர் | ராமநாதபுரம் ஸ்ரீநிவாஸஅய்யங்கார் |
| ஜெயம்மாள் | அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் |
| சூடாமணி, மைதிலி | |
| பிரேமா, விஜயலஷ்மி, சிஷ்யை, சிஷ்யர்கள் | கிருஷ்ணன், ஆ.ராஜமய்யர் மற்றும் பலர் |

எனது தாயார் சங்கீதகலாநிதி உமையாள்புரம் ஸ்வாமிநாதஅய்யரிடம் 7 முதல் 12 வயது வரை இசைப்பயிற்சியை 2 வருடம் வாய்பாட்டும் 3 வருடம் வீணை வாத்ய இசையுமாக இசை பயின்று பின் பல காலம் குருகுல இசைப்பள்ளி நடத்தி உள்ளார். இசைக்கச்சேரிக்கு பக்கவாத்யமாக எனக்கு வாசித்து உதவியுள்ளார். நான் எனது 9 வயது முதற்கொண்டு குருகுலம் தொடங்கி 21 ஆண்டுகள் வீணை வாய்ப்பாட்டு சிட்க்ஷை பயின்று பின் 39 வருடமாக இசை வகுப்பு நடத்தி வருகிறேன். தற்போது எனது தாயாரின் வேண்டுகோளுக்கிணங்க தமிழ் இசையை ஆய்வு நடத்தி முடித்துள்ளேன். நான் 15 ஆண்டுகளுக்கு மேலாக மேடை கச்சேரி அனுபவம் அடைந்திருக்கிறேன். இந்த ஆய்வில் நான் கூறப்போகும அனைத்தும் விஷயமும் நான் எனது குருகுலத்தில் பயின்றவையேயாகும்.

அ. சூடாமணி

# சங்கீதத்தின் தெய்வாம்சம்

## ஸ்ரீத்யாகப்ரும்மம் பற்றிய விசேஷாம்ஸங்கள்

**முன்னுரை:**

*சங்கீதத்தின் தெய்வாம்சம் பற்றி கூற விரும்பி இக்கட்டுரையை துவங்கும்போது குருவுக்கு அஞ்சலி செய்து பிரார்த்தித்து துவங்குகிறேன்.*

**சங்கீதத்தின் தெய்வாம்ஸம் என்பதென்ன?**

*ஸங்கீத சாரம்:- மஹான்கள் இறைவனை நாதவடிவினனாக்கி, நாதத்தோடுநாதோ பாஸனை செய்து லயத்தின் வடிவமான கீர்த்தனைகளை, வழிபாட்டுக்கு உற்றகருவியாக கருதி சங்கீதத்தின் மூலம் இறைவனைக் கண்டார்கள். வீணைக்கற்றவர்களும், சுருதி, ஜாதி, கதி, யதி, தாளம் பிரஸ்தாரம், இவைகளை நன்கு பயின்றவர்கள் 'பேரின்ப வீட்டை' எளிதில் அடைவார்கள் என்று, வேத, சாஸ்திர, புராணங்கள் கூறுகின்றன. இதனையே யாக்ஞவல்க்யர் ஸ்ம்ருதியில்,*

*''வீணா வாதநதத்வஜ்ஞ: ச்ருதி ஜாதிவிசாரத்த:*
*தாளஜ்ஞச்சாப்ரயாஸேன மோக்ஷமார்க்கம் நியச்சயதி'' - என்று கூறியுள்ளார்.*

*இதன் பொருள் - வீணை வாசிப்பதில் தேர்ச்சி பெற்றவனும், ச்ருதிசாஸ்திரத்தில் நிபுணனானவனும், தாள ஞானத்தை அடைந்தவனும், பிரயாசையின்றி மோக்ஷமார்க்கத்தை அடைகிறான் என்பதே. இதிலிருந்து ஸங்கீதஸாஸ்த்ர ஞானத்திற்கு எவ்வளவு பெருமையை முன்னோர்கள் கொடுத்துள்ளார்கள் என்பது தெளிவாகிறது.*

*சங்கீதம் ஒரு கலை. அதற்கென்று ஒரு நியமம், கட்டுப்பாடு உள்ளது. ஆகவே இதில் கணிதமும் விஞ்ஞான கோட்பாடுகளுக்கு உட்பட்ட ஒருகலையுமாக பரிணமிக்கிறது. நாதோபாஸனையால் சத்கதி அடையலாம் என்கிறார்கள். இதனையே ஸ்ரீத்யாகப் பிரும்மம் கூறுகிறார். ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதப்ரும்மம் ஆவார். அவர் சங்கீதத்தில் தெய்வாம்சம் கண்ட மஹான். இவரது அடுத்தடுத்த பிறப்பினாலும், தெய்வ அருளுக்கு பாத்திரமானவராக இவரது வாழ்க்கை அமைந்தது. இவரது முற்பிறவியும் இப்பிறவியின் பயனே ஸ்ரீ ராம காவ்யப் படைப்பிற்கு காரணமானது. ஸ்ரீமத்ராமாயணத்தை இசை மூலம் தெய்வாம்சத்தை உணரவைக்க முடிந்தது.*

**சங்கீதத்தின் தெய்வாம்சம் -**

*தி டிவைன் பவர் ஆப் ம்யூசிக் - ஸ்ரீத்யாகப்ரும்மம் தெய்வத்தை வழிபட இசையின் வடிவில் நமக்கு அளித்துள்ளார். ஏனையோரும் சாமானியரும், பரப்ரும்மமும் எங்ஙனம் பக்தியைப் பெறலாம், அடையலாம் என்பதையும், பக்தி மூலம் எங்ஙனம் சித்திக்கலாம் என்பதையும் பக்தி மூலம் எங்ஙனம் நற்பயனடையலாம், நற்பண்புகளை பெறலாம் என்பதனையும், கீர்த்தனைகள் மூலம் தெளிவாக்கியுள்ளார். பொதுவாகவே வேத, ஸாஸ்த்ர, புராணங்களிலிருந்து நற்பயனை அடையலாம் என்கிறார்.*

**இசையின் சக்தி:-**

*பவர் ஆப் ம்யூசிக்:- இசையின் சக்திக்கு ஸ்ரீத்யாகப்ரும்மம் சொன்னார். ஸாம வேதத்திலிருந்தே ஏழுஸ்வரங்கள் தோன்றின. இதையே ஸப்தம் என்ற முறைப்படி ஸாமவேதிகள் ஸாமகானம் பாடுகிறார்கள். இறைவனை வசப்படுத்துகிறார்கள். அப்படி ஸாமவேதிகளாக ஆக முடியாவிட்டாலும் ஸப்தஸ்வரங்களின் மூலம் இசை வடிவினை பாடி இறைவனை வழிபடலாம் என்பதனை தெளிவாக்கி உள்ளார் ஸ்ரீத்யாகப்ரும்மம்.*

**ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதயோகி என்பது பற்றி ஒரு கண்ணோட்டம், இவரது முற்பிறவியின் வரலாறு. -**

***ஸ்ரீவால்மீகியின் இப்பிறவியே ஸ்ரீத்யாகப்ரும்மம் என்பது வரலாறு. 200 ஆண்டுகளுக்கு முன் தென்னாட்டில் தோன்றிய மும்மூர்த்திகளில் நடுநிலை கண்டவர் ஸ்ரீத்யாகப்ரும்மம். இவர் ஸ்ரீவால்மீகி முனிவரின் மறு அவதாரம் என்பதனை நிரூபிப்பது போல் அமைந்தது இவரது ராமபிரபாவ கீர்த்தனைகள். ஸ்ரீவால்மீகி ராமாயணத்தை எழுதச்சொன்ன அதே ஸ்ரீநாரதஸ்வாமி (தேவமஹரிஷி) துறவி வடிவில் வந்து ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு ''ஸ்வரார்ணவம்'' நாரதீயம் என்னும் ஸ்வரரகசிய நூல்கள் அளிக்கப்பட்டது என்றாலும் என்று கூறப்பட்டாலும் இது ஒரு ஸ்வர ரகசியநூல் மட்டும் அல்லாது ஏனைய சாஸ்திரங்களும் அடங்கிய நூலாகும் என்பது எனது ஆய்வு கண்ட முடிவு. (இதனை பின்பு விளக்கப்பட உள்ளது.)***

தமிழில் ''பஞ்ச பாரதீயம்'' என்னும் இசைநூல், நாரதர் இயற்றிய இசைத்தமிழ் நூல்தான் ஸ்வரார்ணவம் என்று ஆக்கப்பட்டது என்பது எனது ஆய்வின் மையக்கருத்து. சங்கீதத்திற்கு முதலாசிரியராக நாரதமஹரிஷி நர்த்தன நாட்டிய நூல்களுள் ஐந்து சம்ப்ரதாயதொகுதிகளை ஒன்று சேர்த்து 'பஞ்சபரதம் என்ற நூலை இயற்றினார் என்று புராணம் கூறுகிறது. ஆக ஸ்ரீத்யாகப்ரும்ம கீர்த்தனை பலவகைகளில் சிறப்புற்றது என்பதற்கு அவருடையஸ்வரார்ணவம், நாரத மகரந்தம் முதலியவற்றால் தெரியவருகிறது. தேவ மஹரிஷியான நாரதரிடமிருந்து பெற்ற நூல்களால் உலகுய்ய இசைக்கு வழிவகுத்ததன் பொருட்டு ஸ்ரீநாரதரை தனது குருவாக பாராட்டும் ஸ்ரீத்யாகப்ரும்மக் கீர்த்தனைகள் அனைத்தும் சங்கீத, நாட்டிய, நாடக, ஸ்வர, தாள, லய, யதி, ஜதி, ப்ரஸ்தாரங்கள், ஸ்வராட்க்ஷரங்கள், விசேஷார்த்தங்கள் கொண்டு தொகுத்து நமக்கு அளித்தார் என்று தெளிவாகிறது. மேலும் இவரது இசையில் சங்கீத ஸாஸ்திரம், நாட்டிய சாஸ்த்ரம், புராணவைபவம், இதிகாசவரலாறு, ராமாயணஸேவாபராயணம் தெரிய வருகிறது. நௌகாசரித்ரம், துருவசரித்ரம் ஆகிய அனைத்தையும் அறியும் வாய்ப்புள்ளது. இறைவனை, கதைகள் மூலம் உபன்யாஸம் மூலம் தரிசிக்கலாம் என்ற உயர்ந்த தத்துவங்கள் அடங்கியது இவரது கீர்த்தனைகள் எனலாம்.

**எளிய முறையில் சங்கீதத்தில் தெய்வீகம் எப்படி அமைந்துள்ளது :-**

சங்கீதத்தால் மோக்ஷமடையலாம் என்பது மஹான்களின் கருத்து, சித்தாந்தம். கடவுளை எல்லோராலும் பார்த்துவிட முடியாது. ஆனால் இன்னிசையால் அனைவரும் ஒன்று கூடி திவ்யநாமம் பாட, அந்த கூட்டு முயற்சியால் அனைவருமே தெய்வ அருளை பெற்றுவிடலாம் என்பதனை அவருடைய, திவ்யநாம கீர்த்தனைகள் மூலம் தெளிவாகிறது. சாமானியருக்கும் பஜனைமூலம் சத்கதியடையலாம் என்றதற்கு உத்ஸவஸம்ப்ரதாயக்ருதி மூலம் தெளிவடையச் செய்திருக்கிறார். இதில் கத்யம், பத்யம் கொண்டு நர்த்தனமாடி தெய்வத்தை வசப்படுத்திவிடலாம் என்கிறார். இன்னும் காணலாம் உஞ்ஜிவ்ருத்தி பஜனையில் ஸம்பரதாயப்படி பாடி, கூத்தாடி தெய்வாம்சத்தை கொணர்ந்துவிடுவதை பார்க்கிறோம். அந்த கூட்டு குழுவினர் அனைவருக்குமே 'ஸத்கதிப்ராப்தி' ஏற்பட்டுவிடுகிறது.

**இவரது கீர்த்தனைகள் எவ்விதம் தெய்வாம்சம் பெற்றது என்பதற்குச் சான்று :-**

நமது இசைக்கலை, வேதத்திலிருந்து, சாமவேத மந்திரங்களிலிருந்து, சாமகானத்தில் இருந்து தோன்றி இலக்கண, இலக்கியங்கள் வகுக்கப்பட்டு வளர்ச்சி அடைந்துள்ளது. ஸ்ரீவால்மீகி மஹரிஷி ஸ்ரீமத்ராமாயணத்தை இசைவடிவாக்கி குசலவர்களுக்கு பயிற்றுவித்தார் வீணை இசை மூலம் என்பது வரலாறு. ஸ்ரீத்யாகப்ரும்மம் வீணை இசையோடு (தினந்தோறும் பஜனையில்) கீர்த்தனைகளை மாணாக்கர்களுடன் பாடுவார் என்கிறது அவரது சரித்ரம். இவரது கீர்த்தனைகள் ஸாமவேத ஸாஸ்த்திரத்திற்கு சமானமானதாகும். ஸ்ரீநாரதமஹரிஷி ஸ்ரீமத்ராமாயணத்தை எழுதவித்திட்டவர் என்பது புராணம் அதே ஸ்ரீமத்ராமாயணம் இதிஹாஸம் புராணமாகும். அது த்ரேதாயுகம். அந்த ஸ்ரீநாரத முனிவரால் இக்கலியில் ஸ்ரீத்யாகப்ரும்மத்தை ஸ்ரீராமகாவியத்தை இசைமூலம் வடிவாக்க வழி கோலினார் என்பதனை பன்முறை உரைக்கலாம். ஸ்ரீவால்மீகியாக இருந்த போது படைத்த இதிஹாஸபுராணமான ஸ்ரீமத்ராமாயணத்தை சங்கீதசாராம்சமான கீர்த்தனைகளாக உருவாக்கி ஸ்ரீமத்ராமாயணத்தை ஸேவித்த புண்யத்தை நமக்குக் கிடைக்க வழிவகுத்துள்ளார் என்றால் மிகையாகாது. ராமநாம கீர்த்தனைகள் பலப்பல, ராமநாமமே தாரகமந்த்ரம். இவரது கீர்த்தனையில் ராமநாமத்தால், ராமாயணத்தால் தெய்வாம்சம் பெற்றது. இவருடைய கீர்த்தனையில் காவ்யபுருஷன் ஸ்ரீராமன். ஸ்ரீவால்மீகியின் காவ்ய புருஷனும் ஸ்ரீராமனே ஆவார். அந்த ஸ்ரீராமன் இஷ்வாகுகுலதனமான அரங்கனைப் பூஜித்தார். அதே பூர்வஜென்மதொடர்பாக ஸ்ரீத்யாகப்ரும்மமும் ஸ்ரீரங்கத்தை சிறப்பித்து கீர்த்தனைகள் அமைத்தார். அதில் முக்யமானக்ருதி ''ஓரங்கசாயி'' பூலோக வைகுண்டமான திருவரங்கம் 108 திவ்யதேசங்களில் ஒன்றானதும், ஓம் என்ற ப்ரணவ மந்திரமே அனைவருக்கும் மோக்ஷமடைய சித்திக்க பாராயணம் செய்யவேண்டிய ஒன்றாகும் என்று அவர் கூறிய சான்றாகும். தேவதா சம்பந்தமான உத்தமவிமானம் <u>64</u> விதமான விமான பேதங்களில் ப்ரணவவிமானம் திருவரங்கம். அதுபோல ஆயகலை <u>64</u> என்பதும் விசேஷ அம்சம். மேற்சொன்ன விமானம் ப்ரணவாகாரவிமானம் ஓம் என்னும் எழுத்து வடிவமாக விளங்கும் விமானம் என்பர். அந்த வேதஸாரமான ஓம் என்பதன் உட்பொருளானவன் ஸ்ரீரங்கநாயகன் ஆவான். அந்த ஸ்ரீரங்கநாதனை ஆராதித்தவர் ஸ்ரீராமன். அந்த ஸ்ரீராமனின் ராமாயணத்தை அறிந்த காவியத்தலைவன் ஸ்ரீவால்மீகி மஹரிஷி. அந்த மஹரிஷியின் மறு அவதாரமே ஸ்ரீராமனை துதித்த ஸ்ரீராமகாவியத்தை புனைந்த ஸ்ரீத்யாக ப்ரும்மம் நமக்கு ஓம் காரத்தின் மூலமாக மோக்ஷமடையலாம் என்பதனை உணர்த்துகிறார். அந்த அரங்கன் ஸ்ரீமன்நாராயணனே என்பது ஸ்ரீவால்மீகிக்கு தெரியும். அதனை இப்பிறவிப் பயனாகத்தான் அனுபவித்ததை நமக்கு உணர்த்தி அரங்கனை ஸேவித்தால் பூலோக வைகுண்டத்தை ஸேவித்தால், அதுவே மோக்ஷம் கிட்ட வாய்ப்புள்ளது என்பதனையும், அந்த வேதசாரமான விமானம் ஓம்ப்ரணவமந்த்ரத்தை நமக்கு தெளிவடையச் செய்கிறது

என்பதை 'ஓ ரங்கசாயி' க்ருதி மூலம் தெளிவாக்குகிறார். மேலும் அந்த அச்சுதனே, அனந்தனே, கோவிந்தனே, 24 ஸ்ருதியின் அதிபதி கோவிந்தனே மோக்ஷத்திற்கு அதிபதி என்கிறார். அதனை உணர்த்தவே ஸ்ரீரங்கபஞ்சரத்தனமாக ஐந்து கீர்த்தனைகளை பாடியுள்ளார். மேலும்ஸ்ரீத்யாகப்ரும்மம்,

வேதம்:- என்ன கூறுகிறது 'வேதஸாஸ்த்ரபுராணம்' என்று பாடுகிறார்.

ஸாஸ்த்ரம்:- 'ஸங்கீதஸாஸ்த்ரக்ஞானமு' என்று பாடி ஸங்கீத ஸாஸ்த்ரம் அறிந்தால் மோக்ஷம் ஏற்படுகிறது என்கிறார்.

புராணம்:- ஸ்ரீராம காவ்யமான ராமாயண பாடல்கள், சிவபுராணம், த்ருவ சரித்ரம், ப்ரஹலாத சரித்ரம் போன்ற புராணம், சரித்திரங்களை கொடுத்து சத்கதி அடையும் மார்க்கத்தை விளக்குகிறார். ஸ்ரீரங்க புராணத்தின் மஹிமையை உரைக்கிறார். த்வைதம், அத்வைதம் பற்றி எடுத்துரைக்கிறார். ''த்வைத அத்வைத ஸுகமா'' என்கிறார்.

ஸத்பக்திக்கு என்ன மார்க்கம்? 'மோக்ஷமு கலதா' என்கிறார். ஸங்கீதஞானத்தால் சன்மார்க்கம், என்கிறார். 'சங்கீதக்ஞானமு பக்திவினா' என்கிறார். ஒருவன் ஒன்றுமே அறியாதவனாய் இருப்பினும் அவன் இசையின் மூலம் தூய்மை அடையலாம் என்கிறார். சாமதானபேத தண்டத்தால் கடவுளை நம் வசமாக்கி கடவுளை தரிசிக்கலாம் என்கிறார். நாலுவித புருஷார்த்தங்கள் பற்றி 'தெரதீயகராதாவில்' கூறுகிறார். வேதசாரம் என்ன என்று பொருளுரைக்கிறார் - 'நாததநு மனிசம்'. சாந்தமாக தெய்வத்தை எப்படி வழிபடுவது 'சாந்தமுலேக' என்கிறார். அவரவர்கள் மனோதர்மப்படி அர்த்தம் கொள்ளக்கூடிய சிறப்பான கீர்த்தனைகளை தெய்வீகமணத்தோடு பாடி உள்ளார் ஸ்ரீத்யாகப்ரும்மம் எனலாம். நவரஸத்தை பற்றிக்கூறி நவரஸத்தால் அவனைக் கவர்ந்து விடலாம் என்கிறார். (பாலகனகமய) முதற்பாடல். ஆஹதம் என்றால் என்ன? என்கிறார். அனாஹதம் யோகிகளே பெறக்கூடியது அதை 'ஸ்வரராகஸுதா' கீர்த்தனையில் விவரிக்கிறார். ஹரிநாமஸங்கீர்த்தனம் செய்தால் மட்டும் போதும் பரம்பொருள் அன்பை பெற்றுவிடலாம் 'ஹரிதாஸுலு' என்கிறார். மேலும் ஸ்ரீராமனை மட்டும் பூஜிக்காமல் சிவனையும் பூஜிக்க வேண்டும் என்கிறார். ''சிவசிவ என ராதா'' பல கீர்த்தனைகள், சத்கதி அடைய பராசக்தி அருள் வேண்டும் என்கிறார். ''பாலாத்ருபுரஸுந்தரியைப் பாடுகிறார்''. அநாகதம் பெறநரஸிம்ம மூர்த்தியை துதிக்கவேண்டும் என்கிறார் ''ஸ்ரீநரஸிம்ம'' பலரஞ்சனி.

அநாகதம் பெற நாராயணன் சோதரி பார்வதியை வழிபட வேண்டும் என்கிறார்.

''தாரினி தெலுஸுகொண்டி'', ஓம்ப்ரணவாதிபதி ஸ்ரீமன்நாராயணனை துதிக்க வேண்டும் என்கிறார். சிவாய நாமத்திற்கு அதிபதி சிவனே ''இலலோப்ரணதார்த்தி'' என்கிறார். ஓம்ப்ரணவத்தை தெளிவுப்படுத்தியவன் - சுப்ரமணியனை பாடுகிறார். ''நீவண்டிதைவமு'' ஓம்ப்ரணவாகார விமானத்தை ஸ்ரீரங்கத்தை பாடுகிறார் - இசை பிரியனான அரங்கனை நமஸ்கரித்தால் இசைநுணுக்கங்களை பெற முடியும் என்கிறார்.

''கிருஷ்ணனை பாடுகிறார் - குழலே ஓம் தத்துவத்தை ஒலிக்கும் கருவி என்பதனை உணர்ந்து பாடுகிறார் (கான மூர்த்தி) என்கிறார்.

துருவனை பக்திக்கு அழைக்கிறார் - வந்தனமும் பாடி'' நாராயணனை பஜிக்கக் கூறுகிறார்.

ப்ரஹலாதனை கூறி, நாராயணனை நினைவுகூர்ந்து பாடுகிறார். 'வாஸுதேவயனி' வாஸுதேவஸர்வம் என்று கூறி 24 வது ஸ்ருதி கோவிந்தா என்று நிர்ணயிக்கிறார். ப்ரணவ விமானத்தின் அச்சுத, அனந்தா, கோவிந்தா என்ற 24 அக்ஷரத்தின் தத்வார்த்தத்தை கூறி வாசுதேவஸர்வம் என்கிறார். இசையை தனக்களித்த நாரதரை வணங்குகிறார். 'நாரதகுரு ஸ்வாமி' குருகடாக்ஷம் முதலில் பெறவேண்டும் என்பதறிய வேண்டுகிறார். திவ்ய நாம கீர்த்தனைகளை பாடி திவ்யமான பரந்தாமனின் அருளை கீர்த்தனைகளில் தெளிவுபடுத்துகிறார். தசாவதாரத்தை அறிந்து துதிக்க, 'தீநஜநாவன' என்ற பூபாளம் ராகத்தில் பாடியுள்ளார். 'பத்து அவதாரம் எடுத்தவன்' க்ருஷ்ணன் என்று ஜயதேவர் கூறுகிறார். இவரோ தசாவதாரம் எடுத்தவன் ராமனே என்கிறார். உத்ஸவஸம்ரதாய கீர்த்தனைகளில் பெருமாளை வழிபடுவதை எப்படி என்று ''ஹெச்சரிககராரா பாடுகிறார்.'' மேலும் கர்னாடக இசைக்கு வழிவகுத்துள்ளார். சாஸ்த்ரிய சங்கீதத்தை நிலை நிறுத்தியுள்ளார்.

உறிந்துஸ்தானி இசைராகத்திற்கு முக்யத்துவம் அளித்துள்ளார் (ஹமீர்கல்யாணி)

மேலை நாட்டவரை கவரும் வண்ணம் நோட் அமைந்துள்ளார்.

மேளராக வரிசைக்கு பாடலை பாடியுள்ளார்.

தாளத்தின் உச்ச முறையை தனது கீர்த்தனைகளில் அமைந்துள்ளார்.

ஸ்வராக்ஷரம் பற்றி வரிக்குவரி கூறுகிறார். அதிலேயே 24 ஸ்ருதியின் ஸூக்ஷ்மத்தை புலப்படுத்துகிறார். 48, 96 நுட்ப ஸ்ருதிகளை விளக்குகிறார். தமிழ் இசையை கணக்கெடுத்து காட்டுகிறார். ("நீ பஜனகான" ஸ்வராட்க்ஷரம் நிஷாதம்) காட்டுகிறார்.

(யோசனாகமலலோசன, நுட்பஸ்ருதிக்கு). க்ருதிகளில் மூர்ச்சனாஸ்தானத்தில் ஸ்ருதி நிர்ணயத்தை விளக்குகிறார். ஜீவஸ்வரத்தில் நுட்பஸ்ருதிகளின் ப்ரயோகத்தை உணர்த்துகிறார். லயப்ரஸ்தாரம் தாளப்பிரஸ்தாரம் நிறைவாக்கியுள்ளார்.

ராக, தாள, பாவ நேர்த்தியை கொண்டு நவரஸங்களை சங்கதி மூலம் உணர்த்துவதோடு பக்தியை பெறுவது எப்படி என்பது பற்றி தெளிவுபடுத்துகிறார். நவரஸத்தால் பக்திமார்க்கம் பெற்றுவிடலாம் என்று இவரது பாடலில் உணரும்படி செய்வித்துள்ளார். இவற்றிற்கு சிகரமாக பஞ்சரத்னம் பாடி ராகம், தானம், வழிகிடைக்கச் செய்துள்ளார். 'பஞ்சபாரதீயம்' பெற்று அதனாலேயே தனக்கு இசை மூலம் தெய்வாம்சத்தை பெறமுடிந்தது என்று பஞ்சரத்னம் பாடியுள்ளார். மேலும் எல்லாப்ரஸ்தாரங்களையும் படிப்பதைவிட பாடலிலேயே பெற பாடியுள்ளார். எம்மதத்தினருக்கும் அவரது கீர்த்தனையை விரும்பும்படி எளிய முறையில் பாடியுள்ளார். இவரது பஞ்சரத்னத்தில் ஸ்வரக்கோர்வை, தாளக்கோர்வை, லயக்கோர்வை, யதிகோர்வை, ஸ்வராக்ஷரப்ரயோகம், தாளவழிபாட்டுக்கு இலக்கணம், வர்ணமாக பாடவும் உதவும்படியாக அமைந்துள்ளது சிறப்பு. பீராசீன சம்ப்ரதாய வழி என்னென்ன என்பதனை உணர்த்திய மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம். ஓம்ப்ரணவத்தை மூலாதாரமாகக் கொண்டது இசை என்பதனை உணர்த்தியவர். ஓம் ப்ரணவம் மூன்று எழுத்துடையது. அ,உ,ம, அகாரம், உகாரம், மகாரம் (ஸ்ருஷ்டி, படைத்தல்) (ஸ்திதி, காத்தல்), (ஸம்ஹாரம் அழித்தல்). ஓம்காரத்தில் வேதார்த்தங்கள் எல்லாமே அடங்கி உள்ளது.

இந்த ஓம்காரத்தின் மூலமந்திரமே அச்சுத மத்யமம் என்றும் மத்யமச்ருதி என்பதனை ஸ்ரீத்யாகப் பிரும்மம் உணர்த்துகிறார். மூன்று மத்யமும் உணராதவன் முழுசங்கீதம் உணராதவன், தெரியாதவன் ஆகிறான் என்கிறது சாஸ்திரம், பஞ்சாட்சரம் ஜபிப்பவன் ஐந்து மத்யமத்தை உணரலாம். 'நமசிவய' என்னும் மந்த்ரத்தை உச்சாடணம் செய்பவன் 'ம' பீஜத்தை உணருகிறான் என்கிறது சாஸ்திரம். சுத, சுத்த, அச்சுத, பிரதி, அப்பிரதி என்று ஐந்து மத்யமத்தின் ஒலியை ஸ்ரீத்யாகப்ரும்மம் உணர்த்தியுள்ளார். இசைக்கு ஓர் முன்னோடியானவர் ஸ்ரீத்யாகப்ரும்மம். நாதயோகி, ப்ரம்மயோகி சிவயோகி நாதப்ரும்மம் ஆகிறார். எந்த ஓம்காரத்தை எடுத்துரைத்ததோ இவரது கீர்த்தனைகள் சாமவேதத்திற்கு சமானமாகிவிட்டது என்று தெளிவாகிறது. ஆதாரப்பூர்வமாகிவிட்டது இதனையே,

"வேதஜனித வரவீணா வாதநதத் வக்ஞ', என்ற மேற்கோளிலிருந்து வீணாவாதநத்தில் சிறந்த தத்வக்ஞர் ஸ்ரீத்யாகப்ரும்மம் என்பதனை கூறுகிறேன். கடைசியாக இவரது பாடல்களினால் சங்கீதத்தின் தெய்வாம்சத்தை உணரமுடிகிறது. உணரவழி வகுக்கப்பட்டுள்ளது. கடவுளை அடைய என்ன வழி, சன்மார்கம் அடைவது எப்படி, இகபர சௌக்யம் பெறுவது எங்ஙனம், ஆராதிக்கும் வழி என்ன, பகவானின் கல்யாண குணங்களை சொல்லி ஹரி கதை சத்கதி அடைவதெப்படி, வேதம் என்ன சொல்லுகிறது, சாஸ்திரம், புராணம் என்ன கூறுகிறது, பூஜை செய்வது எங்ஙனம், த்வைதம் அத்வைதம் என்ன என்பது இவை அனைத்தையும் உணரும்படி நமக்கு கிடைத்துள்ளது இவரது பாடல்கள். இவருடைய இசையில் தெய்வாம்சம் எங்ஙனம் பெறுகிறது என்பதனை மேற்படி மேற்கோள்களால் கூறியுள்ளேன். இந்த ஆய்வுக்கான பத்து பகுதிகளும் எனக்கு குருகுலத்தில் போதிக்கப்பட்டுள்ளது. அத்துடன் ஆய்வுக்கான விவரத்தைக் கண்டறிந்தும் தொடுத்துள்ளேன்.

சங்கீதத்தின் தெய்வாம்ஸத்தை:- (தி டிவைன் பவர் ஆப் மியூஸிக்) ஐ

ஊர் ஊராகச் சென்று அலையாமல் தன்னைத்தேடி வந்த சிஷ்யகோடிகளுக்கு திருவையாற்றிலிருந்தபடியே தெய்வாம்சத்தை சத்பஜனை மூலம் சங்கீத நிகழ்ச்சி மூலம் தெளிவுபடுத்திய மஹான், ஸ்ரீத்யாகப்ரும்மம் ப்ருக்காக்கள் தெளிவாகக் கேட்க பாடக்கூடியவர். ஸ்ரீத்யாப்ரும்மம் உச்சஸ்தானத்தில் பாடும் சாரீரம் படைத்தவர் என்று சொல்லப்படுகிறது. அவர் பாடும் பொழுது தாரஸட்ஜத்தில் அபூர்வரஸனையோடு கேட்கும் நாதத்தினை மாணவர்கள் தாங்கள் கூடப்பாடுவதை நிறுத்தி விட்டுக்கேட்பது உண்டு என்று அவரது சரித்திரம் கூறுகிறது. அவரது குரலிலே காட்டும் ஸ்வரசுத்திலயத்தால் பரிணமிக்கும் ஆத்மஸந்தோஷத்தை அடைந்தவர்கள் சிஷ்யர்களைத் தவிர அவர் பஜனையை கேட்க வந்த அனைத்தவருமே ஆவார்கள் என்று புகழப்படும் ஸ்ரீ தியாகப்ரும்மம் குரலில் ஒரு கண்ணாடியில் வர்ணப்பட்டைகள் எப்படிதோன்றி

பரிணமிக்குமோ அவ்வண்ணம் அவருடைய குரலில் பரிணமித்த சுருதிகளும் சிறப்பாக இருந்தது என்று பலரும் குறிப்பிட்டுள்ளார்கள். இவரது பாடல்கள் 72 மேளத்திலும் பாடப்பட்டுள்ளது. 70-வது பாடல் நாசிகாபூஷணி மாரரமணியாகும்!. இவர் 200 க்கு மேற்பட்டராகங்கள் பாடியது உலகப்பிரசிதம் என்று கூறப்படுகிறது. அவரது கீர்த்தனைகள் விசிராந்தியான ஸ்தானங்கள் ஸ்தாயியில் நின்று சஞ்சரிக்கும் கீர்த்தனங்கள் ஆகும். ராகத்தின் அடிப்படையை ஸ்வராட்க்ஷரம் நுட்ப ஸ்ருதியில் திட்டவட்டமாகத் தெளிவுபடுத்துவது என்பது இவரது சிறப்பு என்று கூறுகிறேன். இப்படிப்பட்ட இந்த மஹானின் திவ்ய சரித்திரத்தை ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் தெய்வாம்ஸம் என்று எடுப்பு எடுத்து துவங்குகிறேன் அடுத்து வரும் அத்தியாயத்தில்.

# விளக்க உரை
# சங்கீதத்தின் தெய்வாம்சம்
# தி டிவைன் பவர் ஆப் மியூசிக்
# பகுதி - 1

எடுப்பு.

***ஸ்ரீத்யாகப்ரும்மம் தெய்வாம்சம் பற்றிய விசேஷ அம்சங்கள்***

*நான் ஸ்ரீத்யாகப்ரும்ம சிஷ்ய பரம்பரையில் வந்த்தனால், எனக்கு ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் சங்கீதத்தின் தெய்வாம்சம் பற்றி கூறவேண்டும் என்ற ஆவலில் குரு அஞ்சலியோடு இந்த கட்டுரையை, ஆய்வுக்கான கட்டுரையை, குருவை பிரார்த்தனை செய்துகொண்டு துவங்குகிறேன்.*

***ஸ்ரீ கணபதி ஸ்தோத்திரம்***

*''பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை*
*நாலும் கலந்து உனக்கு நான் தருவேன் கோலம்செய்*
*துங்க கரிமுகத்துத்தூமணியே! நீ எனக்குச்*
*சங்கத் தமிழ் மூன்று தா!*

***ஸ்ரீ ஸரஸ்வதி ஸ்தோத்திரம்***

*''யாகுந்தேந்து துஷாரஹார தவளா*
*யாஸுப்ர வஸ்த்ராவ்ருதா*
*யாவீணா வரதண்டமண்டிதகரா*
*யாச் வேத பத்மாஸனா*
*யாப்ரஹ்மாச்சுத ஸங்கரப்ப்ருதிபிர்*
*தேவை: ஸதா பூஜிதா*
*ஸாமாம் பாது ஸரஸ்வதி பகவதி*
*நி: சேஷ ஜாட்யாபஹா''*

***ஸ்ரீகுரு ஸ்தோத்திரம்***

*''குருர்ப்ரம்மா குருர்விஷ்ணு: குருர்தேவோ மஹேச்வர:*
*குருசாட்சாத் பரம்ப்ரம்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம:*

***ஸ்ரீ அபிராமி அந்தாதி***

*''தனம் தரும் கல்வி தரும் ஒருநாளும் தளர்வறியா*
*மனம் தரும் தெய்வவடிவு தரும் நெஞ்சில் வஞ்சமில்லா*
*இனம் தரும் நல்லனவெல்லாம் தரும் அன்பரென்பவர்க்கே*
*கனம் தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே.''*

***ஸ்ரீ லக்ஷ்மி ஸ்தோத்திரம்***

*''ஸர்வ மங்கள மாங்கல்யே ஸிவே ஸர்வார்த்தஸாதகே*
*ஸரண்யே த்ரயம்பகே தேவீ நாராயணீ நமோஸ்துதே''*

***ஸ்ரீ ரங்கநாதர் ஸ்தோத்திரம்***

*''ஸப்தப்ரகார மத்யே ஸரஸிஜ முகுளோத்பாஸமானே விமானே*
*காவேரி மத்யதேஸே மிருதுதர பணிராட் போகபர்யங்கபாஹே*
*நித்ராமுத்ரா பிராமம் கடிநிகடசிர பார்ஸவின்யஸ்தஹஸ்தம்*
*பத்மா தாத்ரீ கராப்யாம் பரிசித சரணம் ரங்கராஜம் பஜேஹம்.''*

### ஸ்ரீரங்கனாநதர் ஸ்துதி

*''க்ருஹீதஸங்க ப்ரஹரு ஹீத சார்ங்க:*
*விகோஸ கட்க பிரக்ரு ஹீத சக்ர:*
*ஸ்ரீமான் சமாருட விஹங்க ராஜா:*
*ஸ்ரீரங்கராஜபதி மேஸஹாய:''*

### ஸ்ரீ ஆஞ்சநேயர் ஸ்தோத்திரம்

*''கோஷ்பதி க்ருதவாராஸிம் மஸகிக்ருத ராக்ஷஸம்*
*ராமாயணம ஹாமாலாரத்னம் வந்தே நிலாத்மஜம்*
*அஞ்ஜநா நந்த நம் வீரம் ஜாநகீ ஸோக நாஸநம்*
*கபீஸ மக்ஷ ஹந்தாரம் வந்தே லங்கா பயங்கரம்.''*

*''மநோஜவம் மாருத துல்யவேகம்*
*ஜிதேந்திரியம் புத்திமதாம் வரிஷ்டம்*
*வாதாத்மஜம் வாநரயூத முக்யம்*
*ஸ்ரீராமதூதம் ஸிரஸா நமாமி.''*

### ஸ்ரீராமானுஜர் பாசுரம்

*''அடையார் கமலத்து அலர்மகள்கேள்வன் கையொழியென்னும்*
*படையோடு நாந்தகமும் படர்தண்டும் ஒண்சார்ங்கவில்லும்*
*அடையார் புரிசங்கமு மிந்த பூதலம் காப்பதற்கென்று*
*இடையே இராமானுச முனியாயின விந்நிலத்தே என்று*
*கூறிக்கொண்டும்*

### ஸ்ரீ பரவாசுதேவர் ஸ்தோத்திரம்

*''தமேவமத்வா பரவாசுதேவம் - ரங்கே சயம் ராஜவதர்ஹணீயம்*
*ப்ரபோதகிம் யோக்ருத சுக்திமாலாம் - பக்தாங்க்ரிரேணும்*
*பகவந்தமிடே''.*

*''பச்சை மாமலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்*
*அச்சுதா அமரரேரே ஆயர்தம் கொழுந்தேயென்னும்*
*இச்சுவைதவிர யான்போய் இந்திரலோகமாளும்*
*அச்சுவைபெரினும் வேண்டேன் அரங்கமா நகருளானே''.*

*''உயர்வற வுயர்நல முடையவன் எவனவன்*
*மயர்வற மதிநலம் அருளினன் எவனவன்*
*அயர்வறும் அமரர்கள் அதிபதி எவனவன்*
*துயரறு சுடரடி தொழுதெழன்மனனே''*

*''திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்*
*அருக்கன் அணி நிறமும் கண்டேன் செருக்கிளரும்*
*பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்*
*என்னாழி வண்ணன்பால் இன்று''.*

*என்று கூறிக்கொண்டு, ஆழ்வார்கள் கண்ட அழகிய மணவாளனை இசைநாயகன் என்பதனை, ஆழ்வார்கள் பாசுரங்களிலிருந்து தெளிவு பெற கூறுகின்றேன்:*

*பச்சை மாமலைபோல் மேனி என்ற பாசுரத்தில் தொண்டரடிப்பொடி ஆழ்வார் அச்சுதா, அனந்தா, கோவிந்தா, என்பதன் மூலமும், அச்சுதா அமரரேரே, ஆயர்தம் கொழுந்தே என்னும் அடியின் மூலமும் இசையின் தத்துவத்தை நமக்கு புலப்படுத்துகிறார். அச்சுதா என்பது ஓம் ப்ரணவாதிபதி ஸ்ரீரங்கபதி, இசைத்தலைவன். ஓம்ப்ரணவத்தை உரைத்தவன், அனந்தன் (சயனத்தை) அனந்தன்மேல் பள்ளிக்கொண்டவன். பஞ்சாட்சரத்தின் தத்துவத்தை நமக்கு உரைத்தவன். காவிரியை மாலையாக [illegible]து ஸ-ப-ஸ் ஸட்ஜம பஞ்சம ஸட்ஜமாதி பதி என்பதனை உணர்த்தியவன், கோவிந்தன் குழலூதும் [illegible]ன் குழலே ஓம்ப்ரணவநாதத்தை (நமக்கு புரிய ஒலிப்பது) குழல் மூலம் தெளிவுபடுத்தி கோவிந்தா என்பதே*

இசைக்கு முடிவு என்பதனை உணர்த்தி கோவிந்தாவே 24 வது அக்ஷரத்தின் முடிவு என்பதனை அச்சுதா, அனந்தா, கோவிந்தா, என்பதன் மூலம் நமக்கு உணர்த்தியவன் குழல்லூதும் கண்ணன். இதனை ப்ரணவ விமானத்தில் காணலாம் ஸ்ரீவாசுதேவராக. ஸ்ருதின் தத்துவத்தை அறியவே இப்பா சுரத்தை தொண்டரடிப் பொடியாழ்வார் பாடியுள்ளார். அதற்கு அரங்கனே அதிபதி என்பதனையும் தெளிவுபடுத்தியுள்ளார். மேலும் இதனையே திருப்பாணாழ்வார் அமலனாதிபிரான் என்று பத்து பாடலை பாடி ஓம் தத்துவத்தின் உட்பொருளான அகார, உகார, மகாரமே, 'ப்ரணவம்' என்று தெளிவுபடுத்தி ப்ரணவத்தின் அதிபதியே இசைக்கு அதிபதி என்று நமக்கு புலப்பட செய்ய அமலநாதிபிரான் அடியார்க்கென்னை ஆட்படுத்த, உவந்த உள்ளத்தனாய், மந்திபாய் வடவேங்கடம் என்று உரைத்து பாதாதி கேச வர்ணனையை பாரமாய, துண்டவென்பிறயான், கையனார் என்று பாதுகையை கூறி இதன் உட்பொருள் எல்லாவற்றிற்கும் முடிவானவன் பரம்பொருள் அவனுடைய பாதாதி கேசம் பாடி இசையின் தத்வார்த்தத்தை தமிழ் வேதமாகிய பாசுரம் மூலம் நமக்கு அறியவைக்கிறார். இந்த ஓம் தத்துவத்தை தெளிவுப்படுத்தியவர் திருபாணாழ்வார் ஆவார். இந்த அகார, உகார, மகாரத்திற்கு ப்ரம்மா, விஷ்ணு, சிவன் அதிபதி ஆவார். மூவரே இசைக்கு அதிபதியாவர். ஆகவே இசையின் தத்துவத்தை பிரபந்தம் மூலம் நாம் தெளிவடைய முடியும். இப்படிப்பட்ட பாசுரங்களை பாடியும் அதனைப் பொருளுணர்ந்தும் அனைத்து தெய்வங்களையும், ஆச்சாரியர்களையும், மகான்களையும் தென்டன் சமர்பித்துக் கொண்டும்,

''ஆதியிலே தமிழ் இசைதான் தரணி போற்றும் இசையாக
இருந்தது என்று தொடங்கி'' இசையை உய்வித்து மஹான்
ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதயோகி என்று கூறி இசை ஆய்வு
நடத்த துவங்குகையில்,

**தமிழும் ஆரிய வேதமுமாக**

திராவிட வேதம் முன்னே செல்ல, அரங்கன் திவ்யப்பிரபந்தத்தை இசையோடு கேட்டுக்கொண்டு, ஆரிய வேதம் (ருக், யஜுர், ஸாம வேதம்) பின் தொடர அணி அரங்கன் தமிழிசை வளர்த்தான், ஓம் என்ற தமிழெழுத்தே தரணி போற்றும் இசைக்கு தலையான எழுத்து என்றான். அதனாலேயே ''ஓம் ப்ரவணத்தை'' கூறிய அரங்கனை, மாலும் மருகனையும் துதித்து 'ப்ரணவமே' நான் என்று கூறி இசை வளர்த்த அணி அரங்கன் போற்றி, திருவரங்கநகர் ப்ரணவவிமானம் இசையின் தத்துவம் என்று கூறி வரலாறு சிறப்பித்த 'அணி அரங்கந்தன்னா' என்ற தொண்டரடிப்பொடி ஆழ்வாரும்,

''உயர்வர என்று கூறிய நம்மாழ்வாரும்,
அடியோமோடும் என்று கூறிய பெரியாழ்வாரும்
வையம் தகளியா, அன்பேதகளியா, திருக்கண்டேன் என்ற
பொய்கைமுனி, பூத, பேய்யாழ்வாரும், அருளிய
பிரபந்த இசையான தமிழிசைக்கூறி
''சூடிக்கொடுத்த சுடற்கொடியே''

என்ற ஆண்டாளின் திருப்பாவை பாடி

''கற்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ'' என்ற தமிழிசைப்பாடி

''பூநிலாய ஐந்துமாய் என்ற திருசந்த விருத்தம் பாடி சந்தம் பாடின திருமழிசை பிரானைப்பாடி''

''பச்சைமாமலை போல் மேனி'' என்று சொன்ன தொண்டரடி பொடியாழ்வார்

தாழ் பணிந்து அவர் சொன்ன அச்சுதா, அமரரேரே ஆயர்தம்கொழுந்தே என்று அகாரம், உகாரம், மகாரம் கூறி அஷ்டாக்ஷரத்தின் பெருமை கூறி ''வாடினேன் வாடி'' என்று பாடின திருமங்கை மன்னன் புகழ் பாடி 8 அக்ஷரம் கூறின வேதம் நான்கினை கூறின தமிழ்வேதமாகிய நாலாயிரத்தில் இடம் பெற்ற மின்னுருவாய் முன்னுருவில் வேதம் நான்காய் என்று பாடின ஆழ்வார் பாதம் பணிந்து, திருவாய்மொழி யாயிரம் பாடி தமிழில் சதுர்வேதத்திற்கு ஒப்பான பாசுரங்களில் ஆத்ம உபதேசம் தொடங்கி ஆயிரம் பாசுரம் பாடின நம்மாழ்வாருக்கு சிரம் தாழ்த்தி 'முனியே நான்முகனே முக்கண்ணப்பா' என்று திருமாலை தாம் அடைந்ததை அருளிச்செய்தல் மூலம் இசையை நாம் பாடி, தமிழிசை பாட்டுதான் தரணி போற்றும் இசை என்று கூறி இவ்வாய்வுதனை முடிக்க நினைக்கின்றபோது, எமக்கு புலப்பட்ட தமிழிசைப்பற்றி தருகின்றேன். ஸாம வேத சங்கீதையின் வடமொழி, தமிழிசை, தமிழும் ஆரிய வேதமும் பற்றியபாடல்களைப் பார்ப்போம்.

**தமிழும் ஆரிய வேதமும் பற்றியது**

**ஈண்டு, பொங்கர் நாடு, ஒளிநாடு, தென்பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூமிநாடு, மலைநாடு, அருவாநாடு, அருவாவடதல் நாடு என்னும் செந்தமிழ்நாட்டிலுள்ள பேரறிவாளர்களும், பேரருளாளரும் ஏனையோரும், வடமொழி மறையைப் போற்றுகின்றார்கள் என்பது முணர்க அது வருமாறு.**

**தொல்காப்பியம்**

''அளபிறந்துயிர்த்தலு மொற்றிசை நீடலு''
முளவென மொழிப விசையொடு சிவணிய (இந்த பாடலும்)

**வீரசோழிய உரை**

''வடமொழிச் சந்தம் இருபானாறென''
இருவித சந்தமிவிற்றொன்றெழுத்தா விலங்கு மற்றை

**அப்பர் தேவாரம்**

''சாமுண்டி சாமவேதங் கூத்தொடும் பாடவைத்தார்''

**சுந்தரர் தேவாரம்**

''சாமவேதம் பெரிதும் முவப்பானை''

**சம்பந்தர் தேவாரம்**

''தயங்கு சோதி சாம வேதர்''
''சாமவேத மார்கீத மோதிய தசமுகன் பரவுநாமதேய முடையர்''

**திருமந்திரம்**

''வேதத்தைவிட்ட அறமில்லை வேதத்தின்''
ஒதத்தகுமற மெல்லா முளதர்க்க''

**சிலப்பதிகாரம்**

''ஓதிய வேதத்தொளியுறினல்லது போதார்'' எனவும்

**நீலகண்டபாடியம்**

''வேதோ பிசிவாகம: வேதமுஞ்சிவாகமமே''
ஸ்ரீருத்திரத்தையோதினவர் உருத்திரபசுபதிநாயனார்

**பெரிய புராணம்**

''தேவருமெழுதவொண மறையைத் தமிழ்செய்து திருப்பதிகம்
மூவரும் எனவும்
அருமறைகள் திருக்காப்புச் செய்துவைத்த அக்கதவும்
திருப்புள்ளிருக்கு வேளூர்''

**திருவாசகம்**

''வேதங்களையாவென வோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே
''பண்டாய நான் மறைகடாமறியா வெம்பெருமான்
''அருமறையின் நான் கோலமிட்டாற்றுமப்பனே
அல்லையீதல்லையீதெனமறைகளுமண்மைச் சொல்லினாற்றுதிக்கும்
சுருதி செந்தமிழாக்கிய மொழியர்!

**வேதாரணிய புராணம்**

''வீரிய சத்தியாவும் விந்தனம் மீன நின்னால்
ஆரியமாகி எனவும்,

**திருவாதவூரார் புராணம்**

''பங்கயச் செங்காம் நான்கும்
வேத புத்தகமுமமுதமும் தன் விழிமணிவடமும்''

**சீவக சிந்தாமணி**

''மாமலர் தெரியலான் மணிமிடற்றிடைக் கிடந்த
சாமகீதமற்றுமொன்று சாமி நன்கு பாடினான்''
''நரம்புறு தெள்விளிநவின்ற நான்மறை''

**சிலப்பதிகாரம்**

''நான் மறைமா பற்றிமுறையொருபால்
முத்தச் செல்வத்து நான் மறைமுற்றி''

**மணிமேகலை**

''சார்பிற்றோன்றா வாரண வேதக்
காதியந்தமில்லையது நெறியெனும்''

**திருவள்ளுவர் மாலை**

''செய்யாமொழிக்கும் திருவள்ளுவர் மொழிந்த
பொய்யாமொழிக்கும் பொருளொன்றே''

**நீலகேசி**

''நாத்திகமல்லது சொல்லலையாயின் முனாள்பயந்த
சாத்திரமாவது வேதமன்றோவது தான் சுயம்பு எனவும்''

**கந்தர் கலி வெண்பா**

''பாமேவு தெய்வப் பழ மறையும்''
''ஏடகத்தெழுதா வேதச் சிரத்திருக்குமிவன்''

**சகலாகம பண்டிதரின் நூல்**

''மறைகளீசன் சொல்''
''ஆரணாமாக மங்கள ருளினாநுருவு கொண்டு'' எனவும்

**நக்கீரர் கோபப்பிரசாதமுடையரின் நூல்**

''ஆரியப்புத்தகப்பேய் கொண்டு புலம் புற்று''

**திருமுரு காற்றுப் படை**

ஒருமுகம்
''மந்திரவிதியின் மரபுளி விழா அது
அந்தணர் வேள்வி யோர்க்கும்மே'' எனவும்

**சிவஞான பாடியம்**

''வேதநித்தனாகிய பரமசிவனாற் கூறப்பட்டமையினாலும்
இறுதிக் காலத்துப் பரமசிவனிடத்திலொடுங்கிப் படைப்புக்
காலத்திற்றோன்று மாதலாலும் நித்தியமென
உபசரித்துக் கூறப்பட்டது''.

**திருவிளையாடற் புராணம்**

''ஈட்டிய சாமமாயிர முகத்தானிமிர்ந்தது வடதிசை முகத்தில்
பிரணவமுதித்ததவனிடை வேதம் பிறந்தது எனவும்''
(தமிழிசையே தரணிபோற்றும் இசை
சாமவேதனால் ஆனது என்பதற்கு மேற்படி பாடல் கூற்று)

**புறநானூறு**

*''அறம்புரிகொள்கை நான்மறை முதல்வர்*
*திறம்புரிபசும்புற் பரப்பினர் கிடப்பி''*

**சிறுபாணாற்றுப் படை**

*''அருமறை நாவினந்தணர்க் காயினும்''*

**பெரும்பாணாற்றுப்படை**

*''வளவாய்க்கிள்ளை மறைவினி பயிற்றும்*
*மறைகாப்பானருறைபதி சேப்பின்''*

**பட்டினப்பாலை**

*''நான் மறையோர் புகழ் பரப்பியும்'' எனவும்*

**நான் மணிக் கடிகை**

*''மறையறிப அந்தணர் புலவர்'' எனவும்*

**ஆசாரக் கோவை**

*''வான்முறை யான் வந்த நான் மறையாளரை''*

**ஒட்டக் கூத்த இராமாயணம்**

*''தேன்றி கழிதழியான்றன்றிருச் செவிகார நின்கை*
*தான்றிகழ்வீணையாகப்பாடுதி சாமமென்றார்''*
*''பன்னிருசாமகீதம் பரிவுடன் பாடலுற்றான்''*
*''மனுநூறும் வேதமவையோராயிரமும்*
*விளங்கும் கலையுந்தசகிரீவனோத''*
*''முன்கையில் நரம்புவெட்டி முன்னிருக்கிசைகள் பாட''*

**பெரிய திருமொழி**

*''பண்டைநான் மறையும் வேள்வியுங்கேள்விப்*
*பதங்களும் பதங்களின் பொருளும்*
*பிண்டமாய் நின்ற பிறங்கொளியனலும்*
*பெருகிய புனலொடு நிலனும்*
*கொண்டல் மாருதமும், குறைகடலேழும்*
*ஏழு மாமலைகளும் விசும்பும்*
*அண்டமும் தானாய் நின்றவெம்பெருமான்*
*அரங்கமாநகர் அமர்ந்தானே*
*''சந்தோகா பௌழியா தைத்திரியா சாமவேதியனே*
*நெடுமாலே எனவும்*
*இன்னும் பிறநூலும் இப்படியே லகுவனவற்றார் காண்க.*

*வேதம் பற்றிய மேற்சொன்னவற்றிலிருந்தும், வேதத்துக்கு சமானமான நாலாயிரப் திவ்யப் பிரபந்த பாசுரங்களிலிருந்தும், தமிழும், ஆரிய வேதமும் தமிழிசையும் பிரபந்தமும் இசையோடு மணத்தது என்பது வரலாற்று உண்மை. வேதங்களை உத்தாரணம் செய்தவர்கள் மறைகளுக்கு மேற்பட்டவர்கள், புவனங்கள் அனைத்திலும் நிறைந்திருப்பவர்கள், இவர்கள் எத்தனையோ மன்வந்தரங்களை (மனுவின் ஆயுட்காலங்களை) கடந்தவர்கள் வாத்தியம், தாளம், ஸ்வரம், கானம் இவற்றில் திளைப்பவர்கள் இவர்கள் வேதத்தை போற்றினார்கள், தமிழ் வேதமாகிய பிரபந்தத்தை போற்றினார்கள். தேவாரம், திருவாசகத்தை போற்றினார்கள், தமிழ் மண்ணில் ஆழ்வார்கள், நாயன்மார்கள் தோன்றி, தமிழிசையை (பண்ணாகிய தேவார, திருவாசகம் திவ்யப்பிரபந்தத்தை) பரப்பினார்கள். நிலைநாட்டினார்கள். வேதத்திற்கு சமானமான தமிழ் நூல்கள் தோற்றுவிக்கப்பட்டன. தமிழே ஆதாரமானது என்று நிலைநாட்டினார்கள்.*

த்யாகராஜருடைய வேத, சாஸ்த்ர, புராணமே, தமிழிசைக்கு எங்ஙனம் உறுதுணையாக இருந்தது என்பதுவே ஆய்வின் தலையாய பகுதிகள்.

ஆழ்வார்கள் பாசுரங்களினாலேயே ராமாயணம் நிறைவுற்றது. வால்மீகம் தழைத்தது. பாசுரப்படியாக ராமாயணத்தை நமக்களித்தவர் பெரியவாச்சான் பிள்ளை.

ஸ்ரீவால்மீகியின் வடமொழியான ராமாயணத்தை தமிழ் மணமாக்கி தந்த பெருமகன் பெரிய வாச்சான்பிள்ளை.

குலசேகராழ்வார் - ராமாயணத்தை பாக்களால் பாடினார்.

ஆழக்கால்பட்டவர் என்ற நாமம் பெற்றவர்.

திருமங்கைமன்னன்

நம்மாழ்வார் பாசுரங்கள் - ப்ரபந்தத்தில் தமிழ் சிறப்புற்றது

இடைச்செருகல் இல்லாத தமிழ்பாக்கள் உருவாயின.

பிள்ளைத்தமிழ் பாடினார் பெரியாழ்வார்

மாணிக்கங்கட்டி வயிர இடைகட்டி என்று பாடினார். இதுபோல ஸ்ரீத்யாகப்ரும்மம் ராமாயணத்தை எளிய முறையில் கீர்த்தனைகளாக தொகுத்து பாடினார். ஓம் ப்ரணவமேதான் மூலாதாரம் அதுவே தமிழிசை என்று ஆயிற்று. ஓம் என்பதே உயிர்மெய் எழுத்தாயிற்று, தமிழிசை பண்ணாயிற்று.

<u>''சங்கீதத்தில் தெய்வாம்சத்தில்'' வரும் அங்கங்கள்:</u>

1. <u>ஓம் ப்ரணவம்</u>: காயத்ரீ பட விளக்கத்துடன்
2. திருவரங்கக் கோயிலே இசை தத்துவம் கொண்ட கோயில் எனக் கூறல்.
3. வேத, சாஸ்த்ர, புராணம் பற்றிக் கூறல்.
4. <u>வேதங்களில்</u>:- வேத, வேதாந்த சாரம் முதலியன சங்கீதத்தில் எங்ஙனம் தெய்வாம்ஸம் ஆகிறது.
5. <u>சாஸ்திரம்</u>:- சாஸ்திரீய சங்கீதம், சங்கீத சாஸ்திரம் இது மிகப் பெரிய அங்கம் சாஸ்திரீய சங்கீதம் அது பற்றி விளக்கம்.
6. <u>புராணம்</u>:- இராமாயணம், மஹாபாரதம் போன்றவைகளின் தெய்வாம்ச சிறப்புகள், இசைக்கு எங்ஙனம் சம்பந்தப்பட்டது. மார்க்க சங்கீதம் ராமாயண காலத்தில் அமைக்கப்பட்டது.
7. <u>இதிஹாஸ புராணம்</u>:- இதிஹாஸ புராணம் பற்றிய சிறப்பு, சரித்திர சம்பந்தமானது, கீர்த்தனைகளில் எங்ஙனம் பொருந்துகிறது, அதற்கும் தி டிவைன் பவர் ஆப் ம்யூசிக்கிற்கும் என்ன சம்பந்தம்.
8. <u>வரலாறு</u>:- ஹிஸ்டரி ஆப் ம்யூசிக் ஆதிகாலம் முதல் தற்காலம் வரை இசை எங்ஙனம் இருந்துது. மஹான்களைப் பற்றி, வாக்கேய காரர்களைப் பற்றிய, வரலாற்றுத் தொகுப்பு இசையில் அவர்கள் தெய்வாம்சம் எவ்விதம், புரந்தரதாஸர்,தீக்ஷிதர், சியாமா சாஸ்த்ரிகள்.
9. <u>கர்னாடக இசை</u>:- சாஸ்த்ரீய சங்கீதத்திற்கும், சங்கீத சாஸ்த்திரத்திற்கும், கர்னாடக இசைக்குமான விவரங்கள்.
10. <u>கீர்த்தனைகள்</u>:- த்யாகராஜ கீர்த்தனைகள் எதனால், எப்படி சிறப்புற்றது. ஏனையோரை காட்டிலும் எந்த வகையில் சிறந்தது என்பது பற்றி விளக்க உரை.
11. <u>இதுவரையில் கையாளப்படாத உண்மை வரலாறு</u>:- 24 ஸ்ருதிகள், கோவிந்தா என்ற பெயர் ஓம்ப்ரணவத்திலிருந்து (தமிழிசை எப்படி இருந்தது) திருவரங்கக் கோயிலே இசை சிறப்புக் கொண்டதென்பது பற்றிய உண்மை வரலாறு.
12. <u>த்யாகராஜ கீர்த்தனை வரலாற்றுச் சிறப்பு:-</u> ஸ்வராட்க்ஷரம், 12, 24, 48, 96 நுட்பஸ்ருதிகள், ராகத்தில் எங்கு ப்ரயோகம். ஸ்வராட்க்ஷரமே ஸ்ருதியை காட்டும் கருவியாகும். 12 ஸ்தானங்கள், 24 ஸ்ருதிகள், 48,96 ஸ்ருதிகள், நுட்பஸ்ருதிகள் என்ற விளக்கம்.
13. <u>வாக்கேய காரர்கள்</u>:- சமகாலத்தவர்கள் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள்.

14. ***புத்தகங்கள் எத்தனை கையாளப்பட்டது என்ற விளக்கம்:-*** தனியாகத் தரப்படுகிறது.

15. ***நாட்டிய சாஸ்த்ரம், சங்கீத சாஸ்த்ரம், தர்ம சாஸ்த்ரம்:-*** துணை எப்படி, பிரித்தது எங்ஙனம் பாட்டில் ஜதிக்கோர்வை கலந்தது. உதாரணம் நாட்டிய பாடல் விவரம்.

16. ***வேதம்:-*** சதுர்வேதம் (ருக், யஜுர், சாம, அதர்வண), சாமகான இயல் பற்றிய விளக்கம், இசையோடு கலந்த விவரம்.

17. ***யோகிகள், நாதயோகிகள் தெய்வாம்சம் பெறுவது எங்ஙனம்:-*** பற்றிய விளக்கம் நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்தில் ஆழ்வார்கள், ராமாயணத்தில் வால்மீகி, ராமன் பற்றிய குறிப்பு, மஹாபாரதத்தில் கண்ணன், கீதை, குழல் ஓம் என்னும் தத்துவம் கொண்ட கருவி, ஆஹதம், அனாகதம் யோகிகளின் சிறப்பு.

18. ***சாமவேதத்திலிருந்து சங்கீத சாஸ்த்ரம் வேறுபடுகிறதா?:-*** பற்றிய விளக்க உரை.

19. ***ஓம்ப்ரணவத்தை பற்றிய விளக்கம் அதன் தாத்பர்யம் அதன் பயன் அதற்கும் ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கும் சம்பந்தம் என்ன?:-*** விரிவான விளக்க உரை, கருத்துரை, முடிவுரை - திருவரங்கச் சிறப்பு எழுதி த்யாகராஜர் சம்பந்தப்பட்டது எங்ஙனம் என்று கூறி அதன் பயன் பற்றிய விளக்கவுரை.

20. ***ஆஹதம், அனாஹதம்:-*** என்ற விளக்கம்.

21. ***தத்துவம் வேதாந்த சாரம்:-*** பற்றிய குறிப்பு

22. ***முடிவாக இசையினால் நாம் பெறப்போகும் அரிய லாபம் என்ன:-*** மோக்ஷம் மட்டும்தானா? பிறவித் துன்பம் போகிறதா? மனபலமடைகிறதா? இசைப் பயன் என்ன என்ற ஆய்வின் முடிவு.

23. ***தமிழிசை பெயர்கள், கர்னாடக இசைப் பெயர்கள், தமிழ் நாட்டில் ஆதி இசை எப்படி இருந்தது:-*** மிகத் தகுந்த ஆதாரத்தோடு குறிப்பேடு தனிப்பகுதியாக தரப்பட்டுள்ளது.

24. ***எனது குருகுலத்தில் நான் பெற்ற பயன் யாது?*** எனது ஆசிரியை, குருபரம்பரை பற்றிய குறிப்பு

25. ***குருபரம்பரை பற்றியது -*** ஸ்ரீத்யாகப்ரும்மம் பற்றிய சிறப்பு விளக்க உரை

26. ***ராகம், தானம் பற்றி கூறுதல் - வீணை வாய்பாட்டிற்கு:-*** எப்படி பாடுவது என்ற விளக்கம்

27. ***குருகுலத்தில் பயின்றால் அடையும் பயன் என்ன:-*** இசைக்கு வடிவமா? எழுத்துக்கு இலக்கணமா? சொல்லுக்குப் பொருளா? பொருளுக்கு விளக்கமா? விளக்கத்துக்கு நீதியா?

28. ***இதற்கான விடையின் தொகுப்பு தரப்பட்டுள்ளது:-*** கர்னாடக, ஹிந்துஸ்தானி இசை பற்றி கூறப்பட்டுள்ளது. மோனை, எதுகை பற்றி விளக்கம், ஸ்வராட்க்ஷரம் பற்றி கூறுதல், இசை இலக்கணமுடையது எனக் கூறல், சொல்லுக்கு விளக்கம், பொருளுடையது இசை, நீதி போதிப்பது இசை மனுநீதி எனக் கூறுதல், நமசிவய, நாராயண, ராமநாமம் கூறல்.

29. ***நாட்டிய சாஸ்த்ரம் இசை ஆராய்ச்சிக்கு தேவையானதா?:-*** சாதாரண விளக்கம்.

30. இயல், இசை, நாடகம் பற்றிய குறிப்பு

31. ***ஸ்ரீத்யாகப்ரும்ம கீர்த்தனை இதில் எந்த வகையில் சம்பந்தப்பட்டது?:-*** எல்லா வகையிலும் சிறந்தது என்று ஆதாரத்துடன் விளக்கப்படுகிறது.

32. ***இசைக்கு ஆதாரம் ஸ்ருதி, லயம்:-*** ஸ்ருதி மாதா, லயம் பிதா எனக் கூறல்.

33. யுகத்தில் சிறப்புற்ற விஷயங்கள் என்ன? அவையில் இசையின் பங்கு என்ன? எந்த காலந் தொட்டு வருகிறது - என்பது விளக்கம்.

34. பெரிய மகனீயர்கள் பற்றிய குறிப்பேடு, செயல்பாடு, கோட்பாடு, அவர்கள் ஆக்கபூர்வமாக சொன்னது, அதன் பயன் அதை நாம் எங்ஙனம் சிறப்படையச் செய்வது,

இதுவே ஆய்வின் முடிவாகும் எனக் கூறல் - இந்த ஆய்வின் பெரிய மகனீயர்கள் பற்றியக் குறிப்பேடு ஸ்ரீத்யாகப்ரும்மம், வால்மிகி, நாரதர் ஆகும்.

ஆய்வின் அமைப்பு பற்றிய விளக்கம்
செல்வி: சூடாமணி

இதனைத் தொடர்ந்து

108வது திவ்யதேசமும், முதல் திவ்யதேசமுமான திருவரங்க விமானமே சிறந்தது என்பது பற்றிய ஒரு கருத்துக் கணிப்பு தரப்படுகிறது. ஏனெனில் ஓம் என்ற ப்ரணவாகார திவ்ய விமானம் என்பது ஒன்று, முதலும் முடிவுமானதாகி பூலோக வைகுண்டம் என்று பெயர்பெற்று மற்றொன்றுமாகி திகழ்ந்தமையால் ஆகும். சோழ நாட்டுத் திருப்பதிகள் 40. 1. ஸ்ரீரங்கம் (திருவரங்கம்) ப்ரணவாக்ருதி விமானம் 2. மூலவர் - ஸ்ரீரங்கநாதர் (பெரிய பெருமாள், நம் பெருமாள், அழகிய மணவாளன்) - புஜங்கசயனம் (ஆதிசேஷ சயனத்தில் திருக்கோலம்) தெற்கே திருமுக மண்டலம். உத்ஸவர்:- நம் பெருமாள் என்ற சிறப்புப் பெயருடன் நின்ற திருக்கோலம், உடையவரை எம்பெருமானார் என்று அழைக்கப்படுகிறார். தாயார்:- ஸ்ரீரங்கநாயகி (ரங்கநாச்சியார்) தீர்த்தங்கள்: சந்த்ர புஷ்கரணி, காவேரி, கொள்ளிடம், வேதசிருங்கம். ஸ்தல விருக்ஷம்: புன்னை. ப்ரத்யக்ஷம்: தர்மவர்மா, ரவிதர்மன், சந்த்ரன், விபீஷணன். விசேஷங்கள்: இங்கு, தொண்டரடிப் பொடிஆழ்வார் நந்தவன கைங்கர்யமும், திருமங்கையாழ்வார் திருமதில் கைங்கர்யமும் செய்த இடம். ஸ்ரீமந்நாதமுனிகளால் திவ்யப் பிரபந்தத்தை ராகதாளங்களுடன் பாடும் முறை 'அரையர்சேவை' என்ற பெயரில் இங்கு நடந்து வருகிறது. நம் பெருமாளின் திவ்ய ஆக்ஞையின்படி ஸ்ரீமணவாளமாமுனிக்கு குழந்தையாக வந்து நின்று ''ஸ்ரீசைலேச தயாபாத்ர'' தனியனை அருளிச் செய்து மணவாளமாமுனிக்கு பஹுமானமாக அளித்தார் இது ஒரு தனிச்சிறப்பு. இந்த ஸ்தலம் பூலோக வைகுண்டம். வடக்கு உள்பிரகாரத்தில் வ்ரஜாநதி இருப்பதாக ஐதீகம். (வைகுண்டத்தில் இருப்பதுபோல்) கம்பராமாயணம் அரங்கேற்றப்பட்ட போது சிரக்கம்பம் செய்து ஆமோதித்த நரசிம்மமூர்த்தி இங்கு கோயில் கொண்டுள்ளார். சந்த்ரபுஷ்கரணி உள்ளது. இங்கு பல விஷயங்கள் அடங்கி உள்ளது. இங்கு பெரிய கருடன், சுக்ரீவன், அங்கதனுக்கு கோயில் உள்ளது மூலவர் ரங்கநாதர் கர்ப்பக்ருஹத்தின் மேல் தங்க விமானம் உள்ளது. இதில் பரவாஸுதேவர், சங்கர்ஷணர், ப்ரத்யும்னன், அனிருத்ரன், நாராயணன் உள்ளார்கள். அரையர்கள் அரையர் ஸேவையின்போது ''ஆர்வமுடன் ஐவருக்கு அருள் செய்த பெருமாள்'' என்கிறார். விமானத்தில் 4 கலசங்களை நாலு வேதங்களென்றும், ஐந்து கலசங்களை காயத்ரீயின் ஐந்து தலைகள் என்றும், ஐவராகியவர்களை குறிக்கிறதென்றும் கூறுவர். இந்த விமானம்தான் ஓம்ப்ரணவ விமானமாகும். இந்த விமானத்தில் 8, 24, 32 வியூகங்களாக அமைந்தது என்று எனது ஆய்வின் கண்ணோட்டம். கர்னாடக இசையைத் தொடங்குமுன் இசைக்கு அதிபதி அரங்கனே என்ற என் ஆய்வின் கருத்துக்கொண்டு இசைக்கு ஆதாரம் திருவரங்கம் என்பதனால் இந்த ஒரு சில முக்கிய குறிப்புகளைத் தருகின்றேன். ''என் தாயார் எனக்கு ஆராய்ச்சிக்கான குறிப்புகளை'' உணர்த்தியபோது பாரத யுத்தத்தில் அபிமன்யு வியூகத்தை உடைத்து உட்சென்றான். வெளிவரத் தெரியாமல் போனது. இதுபோல பெருமாளின் விமானத்தில் உள்ள வியூகம் (ஓம்காரத்தினால் கட்டுப்பட்ட வியூக நிலையாகும்) அதனை இசைக்கு ஆதாரமாகச் சொல்ல வேண்டும். இதில் உள்ள வியூகங்கள் கணிதம் கொண்டது. ஆகவே வியூகத்தில் உள்ளே செல்லும்போது அறிந்துகொண்டு செல்ல வேண்டும். வெளியே வர நியமத்தோடு வரத் தெரிந்து வர வேண்டும். அப்படி செய்தால் மட்டுமே ஓம் என்ற ப்ரவணத்தை நாம் உணர்ந்து வழிப்பட்டோம் என்று நமக்கு பகவதானுக்ரஹம் கிட்டி மோக்ஷோபாயம் கிடைக்கிறது என்று எனது குரு ஜெயம்மாள் அவர்களால் அறிவுரை தரப்பட்டது. அது என்னவென்றால் பாஞ்சராத்ர ஆகமப்படி நியமத்தோடு பூஜைகள் நடக்க வேண்டும். பகவத் பிம்பத்தில் பகவானின் ப்ராணப்ரதிஷ்டையை பாஞ்சராத்ர ஆகம விதிப்படி நியமத்தோடு செய்யப்பட்டுள்ளதால் இந்த ஓம் என்ற ப்ரணவ விமானத்தை நியமத்தோடு வழிபாடுகள் நடத்தி வழிபட வேண்டும் என்பது திருவரங்க விதிமுறையாகும் என்று எனக்கு அறிவுரை வழங்கப்பட்டது.

# கர்நாடக இசை

# கர்ணாடக ஸங்கீதம்

**தொடுப்பு**

*நாம் கற்கும் கலைகள் சாதாரண கலைகள், சாஸ்திரங்கள் என்று இரண்டு பிரிவுகளாக பிரிக்கப்பட்டுள்ளது. கலைகள் சாமானிய கலைகள், லலித கலைகள் என்று பிரிக்கப்பட்டுள்ளது. கலைகள் ஆய கலைகள் 64 என்று கூறப்படுகிறது. இதுபோல் தேவதாவிமானங்கள், 64 விதமான விமானபேதங்கள் என்று கூறப்படுகிறது. இதில் ஒன்றானதானது ப்ரணவாகாரதிவ்ய விமானமாக கூறப்பட்டுள்ளது. ஸ்ரீரங்க விமானம் ஓம்ப்ரணவ வடிவமானது. இந்த விமானம் பற்றி பின்னால் கூறப்படவிருக்கிறது.*

*இந்த 64 கலைகளில் சாமானிய கலைகளும் லலிதகலைகளும் சேர்ந்தவை. லலித கலைகள் நம் இருதயத்தை தொட்டு, நல்லுணர்ச்சியையும், கலைநயத்தையும் உண்டாக்கி நம்மை பரவசப்படுத்துகிறது. சங்கீதம், கவிதை, ஓவியம், சிற்பம், சித்திரம் என்பவை லலித கலைகளின் முக்ய அம்சமாகும். நடனம், ஹரிகதை, நாடகம், கேயநாடகம், நிருத்ய நாடகம் முதலியவைகளும் லலித கலைகளே. காதால் கேட்டு இன்பம் பெறக்கூடிய சங்கீதம் சிரவண கலையாகும். செவிக்கு இன்பத்தை தரக்கூடிய இசையை பெற்ற மானிடர் பெரும்பேறு பெற்றவராவர்.*

*"**மானிடராய் பிறக்க நல்ல மாதவம் செய்திட வேண்டும்மம்மா**" என்ற வாய்மொழிக்கு ஒத்து மனித, மாந்தர்களாகிய நாம் பெற்ற பேற்றினை காக்கவே இந்த கர்னாடக இசையைப் பற்றி ஆய்வுதனை எழுத முற்பட்டுள்ளேன். இந்த கர்னாடக சங்கீதம் பாமரர் முதல் பாலர்வரை, மனிதர்கள் முதல் பண்டிதர்கள், விருத்தர்கள் வரை, பசுமுதல் பாம்பு முதலான ஜந்துவரை ஸங்கீதம், இசை இன்பம் தரக்கூடியது. இசை பயிலுவதினால் பக்தி, அன்பு, பிறரிடம் மரியாதையாகப் பழகுதல், தன்னடக்கம், மனநிம்மதி, த்யானம் முதலான நற்குணங்கள் படிகிறது. இதுவே என் ஆய்வின் முதற்படியாகும் தி டிவைன் பவர் ஆப் ம்யூசிக் (சங்கீதத்தின் தெய்வாம்சம்).*

*மனிதனின் கட்டுப்பாட்டுத் தன்மை இசையினால் பெற முடிகிறது. ஆத்மத்யானம் பெற முடிகிறது. முடிவில்லா பேரின்ப வீடான மோக்ஷமடைய வழி கிடைக்கிறது. இசை மூலம் அனைத்து உலக மக்களையும் சேர்க்க முடிகிறது. உலக ஒற்றுமைக்கு இசை ஒரு வித்தாகிறது. செல்வத்தால் பெற முடியாத பேரின்பத்தை ஒருவன் இசை மூலம் கிடைக்கப் பெறலாம். தான் என்னும் அகந்தையை ஒழிக்க வல்லது இசை.*

*"**அகத்தின் அழகு முகத்தில் தெரியும்**" என்பதை இசைப் பயின்ற வல்லுனரைக் கண்டு கூறிவிடலாம். இசையைப் பயின்றவர்கள் சாமுந்திரிகா இலட்க்ஷணத்தை அடைந்தவர்களாக இருப்பர். இதையும் இசைகற்றுத் தேர்ந்தவர் பெற்ற முகம் காட்டிவிடும். இப்படிப்பட்ட இசையின் நோக்கம் ரஸம் அல்லது உணர்ச்சியை உண்டாக்குவதே. இப்படிப்பட்ட ரஸம் தானரஸம், நவரஸம் என்று இரண்டு பிரிவுகள் அடங்கியது.*

***கான ரஸம்:*** *- வாத்ய சங்கீதம் வீணை இசையை ராக விந்யாஸம் செய்வது, சிறப்பிப்பது, மனத்தை ஈர்க்கக் கூடிய விசேஷமான ராக, தாள, பாவ நேர்த்தி கொண்ட கீர்த்தனைகளை வாசித்து, பாடுவது போன்றவற்றால் ஏற்படுவது கான ரஸமாகும்.*

***நவ ரஸம்:*** *- ஸாகித்யத்தில் உள்ள நவரஸ சங்கதிகளினாலும் இசை சிறப்படைவது நவரஸமாகும். இதற்கு உதாரணம் ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் முதல் கீர்த்தனை "**ஏல நீதயராது**" இதில் நவரஸம் அடங்கியுள்ளது எனக் கூறலாம். ஒவ்வொரு மஹான்களும் தங்களுக்கு உரிய சிறப்பை அவர்களுடைய கீர்த்தனைகளில் நவரஸங்களையும் காட்டி பேர் பெற்றார்கள். ஸ்ரீத்யாகப்ரும்ம கீர்த்தனைகளோ மேற்சொன்ன கானரஸம், நவரஸத்தோடு அமைந்து பேர் பெற்றதாகிவிட்டது என்றால் மிகையாகாது. இவருடைய கீர்த்தனைகள் கான ரஸ, நவரஸத்தோடு கூடினதாக அமைந்து பேர் பெற்று, புகழ் அடைந்து இன்றும் நம்மிடையே நிலைத்து நிற்கின்றது. நவரஸம் என்பது - ஸ்ருங்கார ரஸம், ஹாஸ்ய ரஸம், கருணா ரஸம், வீர ரஸம், பய ரஸம், துக்க ரஸம், ரௌத்ர ரஸம், அற்புத ரஸம், சாந்த ரஸம். இசையை, கர்னாடக இசையை ரசித்து அனுபவிப்பவர்களை ரஸிகர் என்றழைப்பர். இந்த படி ஸ்ரீத்யாகப்ரும்மம் ஸ்ரீராமரை "**நின்னு வினாஸ-கமுகான**" (ஹனுமத் தோடி ராக கீர்த்தனை, ரூபக தாளம்) க்ருதியில் ராக ரஸிகனென்றும், "**தாசரதே நிருணமுதர்ப**"வில் (தோடி ராகம்) ரசிக சிரோமணி என்றும் அழைக்கிறார். சங்கீதம் எல்லா தேசத்தவருக்கும் பொதுவானது. எந்த காலத்திலும் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டு எல்லோராலும் ஒப்புக்கொள்ளும்படியான நியமங்களை கொண்டு உருவானது. ஸப்தஸ்வரங்கள் அனைத்து*

ஸங்கீதங்களுக்கும் பொதுவானது. சுருதியை மிகவும் அனுசரித்து (ஸ்ருதி வித் மைனியூட்) காலப் பிரமாணம் கொண்டு லயசுத்தியோடு பாடுவது கானமாகும். இந்த சுத்த இசையை குழந்தைகள் முதல் பசுக்கள் வரை ஸர்ப்பம் வரை இசையை உணர்கின்றது.

ஸங்கீதத்திற்கு காந்தர்வ வேதம் என்று பெயர். காந்தர்வ வேதம் நான்கு உபவேதங்களில் ஒன்று. கடவுளை அடைய ஞான மார்க்கம் தேவை. அந்த ஞானமார்க்கத்திற்கு சங்கீதம் ஒரு ஸாதனமாகும். இதனையே 'வித்யை' என பெரியோர்கள் ஆன்மீகத்தோர் கூறுவர். கடவுளே நாதப்ரும்மமாக விளங்குகிறார். அந்த நாத வடிவமே ஓம் என்னும் ப்ரவண மந்திரத்தின் மூலகர்த்தா, ஓம் காரத்தில் வேதார்த்தங்கள் எல்லாமே அடங்கி உள்ளது. நாதமே வேதங்களின் சப்தம், வேதமே நாதமயமானது. ப்ரணவமும் நாதமயமே இவ்வகையிலேயே ப்ரணவஸ்வரூபத்தின் தலைவனான இறைவனை அடைய நாதோ பாஸனை செய்து மோக்ஷமடைகிறார்கள். அவ்வகையில் மோக்ஷமடைந்த நாதப்ரும்மம் என்னும் நிலை பெற்றவர் ஸ்ரீத்யாகப்ரும்மம் ஸங்கீத மார்க்கமே மோக்ஷமடைய சிறந்த மார்க்கம் என்பதை "**ஸங்கீத ஞானமு பக்தி வினா**" என்று ஸ்ரீத்யாகப்ரும்மம் கூறுகிறார்.

ஸங்கீதக் கலை தெய்வீகக் கலை:- 1. சிவபெருமான் கையில் டமருகமும், 2. கண்ணபிரான் கையில் குழலும், 3. ஸரஸ்வதி கையில் வீணையும் இருப்பது ஓர் ஆழ்ந்த கருத்து. ஸ்ரீத்யாகப்ருமத்திற்கு தெய்வீகமாகக் கிடைத்த '**ஸ்வரார்ணவம்**' என்னும் கிரந்தத்தில் இந்த ஸ்லோகம் பின்வருமாறு காணப்படுகிறது.

**ஸ்வரார்ணவம்**

"வீணாவாதனதத்வஜ்ஞ: ச்ருதி சாஸ்த்ரவிசாரத்: தாளஜ்ஞச்சரப்ரயாஸேன மோக்ஷமார்க்கம் ஸகச்சதி"

என்னும் இந்த ஸ்வரார்ணவம் தான் ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு ஸ்ரீநாரதரால் அளிக்கப்பட்டது. ஸ்வரார்ணவ ஸ்லோகத்தையே ஸங்கீத ரத்னாகரத்தில் சார்ங்கதேவர் கூறியுள்ளார்.

யாக்ஞவல்க்யர்ஸ்ம்ருதியில்

"வீணாவாதநதத்வஜ்ஞ: ச்ருதி ஜாதி விசாரத:
தாளஜ்ஞச்சரப்ரயாஸேன மோக்ஷமார்க்கம் நியச்சயதி"

இது யாக்யவல்க்யர் ஸ்ம்ருதி, ஸ்வரார்ணவத்தின் பொருள்: வீணை வாசிப்பதில் தேர்ச்சி பெற்றவனும் ஸ்ருதி சாஸ்திரத்தில் நிபுணனானவனும், தாளஞானத்தை அடைந்தவனும் பிரயாசயின்றி மோக்ஷமார்க்கம் அடைகின்றான் என்பதே. இதனின்றும் சங்கீத ஸாஸ்த்ர ஞானத்திற்கும், வீணை வாசிப்பதற்கும், தாளஞானத்திற்கும் எவ்வளவு பெருமையை முன்னோர்கள் கொடுத்துள்ளார்கள் என்பது தெளிவாக புரிகிறது. மேலும் ஸ்ரீத்யாகப்ரும்மம் 'வேத ஜனிதவரவீணா' என்பதனை நமக்கு உணர்த்தி உள்ளார். வீணையின் தாத்பர்யத்தை வேதத்தில் காணலாம். "சாமகானத்தினால் உயர்ந்தவன் இராவணன்" இதை இராமாயணம் கூறுகிறது. ஆதலால் ஸாமவேதத்தில் ஸங்கீதம் பற்றியதை விரிவாக கூறப்படவிருக்கிறது.

லலித கலையில் முக்கியமானது ஸங்கீதம். அது ஓர் உன்னதமான கலை. ஸாமானிய வார்த்தைகளில் வெளியிட முடியாத அதிநுட்பமான கருத்துக்களையும் இசைமூலம் வெளியிட முடியும். இதற்கு உதாரணமாக ஸ்ரீத்யாகப்ரும்மக் கீர்த்தனைகளில் பிரகாசிக்கும் ஸாஹித்ய பாவ ஸங்கதிகளை கூறலாம். ஸங்கீதத்திற்கும் ஸாகித்யத்திற்கும் உள்ள நுட்ப வித்யாசத்தை பின்னே வரும் ஸ்லோகம் கூறுகிறது.

ச்ருதி ஸ்மிருத்யாதி ஸாஹித்யநானா சாஸ்த்ரவிதோபிச்
ஸங்கீதம்யேன ஜானந்தித்விப்தாஸ்தேம்ருகா: ஸ்மிருகா:

"ஒருவன் ச்ருதிகளிலும், ஸ்மிருதிகளிலும், ஸாஹித்யத்திலும், நானா விதஸாஸ்திரங்களிலும் நிபுணத்துவம் அமைந்திருந்த போதிலும், அவன் ஸங்கீதம் கல்லாதவனாக இருந்தால் அவன் மனிதனில்லாது மிருகமாக கருதப்படுவான்."

மனிதன் கடவுளின் அருளால் பேசுவதற்கு மட்டுமல்லாது பாடவும் அருள்பெற்று இருக்கிறான் என்பதை உணர வேண்டும். வாயால் மனமாரப் பாடி கைவிரலால் வீணையை மீட்டி வாசித்து பேரின்பமடைய கொடுத்த இந்த சரீரத்தை அந்த வழிக்கு கொண்டு செல்ல வேண்டும். மனிதனின் தேகத்தில் இசை சம்பந்தமாக அமைந்திருப்பதை காணலாம்.

1. குரல் காற்று வாத்யத்தின் அமைப்பையும்

2. காது தோல் கருவியின் அமைப்பையும் (செவிப்பறை)

*3. உள்காது தந்திவாத்யத்தின் அமைப்பையும் ஒருவாறு உணர்த்துகிறது. இதனாலேயே மனிதன் குழல், நாதசுரம், வீணை, மிருதங்கம் போன்ற இசைக் கருவிகளை வாசிக்க முடிகிறது.*

*4. இசையை பயிலாதவன் இவ்வுலகில் தனக்குக் கிடைத்த பேற்றினை இழந்தவனாகி விடுகிறான்.*

***கீதத்திற்கும் ஆறு லக்ஷணங்கள்:-***

*இசைக்கும் ஆறு லக்ஷணங்கள் ஸுத்தஸ்வரம், சுவையோடு பாடும் திறம், அழகான ராகம், அம்சமான வர்னமெட்டு, மதுரமான வார்த்தைகள், அணிகள் ஒழுங்கு ஆகும்.*

***ஸங்கீத சாஸ்த்ரம்:-** ஸங்கித ஸாஸ்திரத்திற்கு காந்தர்வ தத்வம் என்று பெயர். வால்மீகி ராமாயணத்தில் குசலவர்கள் காந்தர்வ தத்வஜ்ஞர்களெனப் புகழப்பட்டுள்ளார்கள்.*

***கானத்தின் சிறப்பு, ஸங்கீதத்தின் பிரிவுகள்:-***

*ஸங்கீதம் மூன்று வகைப்படும்: தமிழிசை, ஹிந்துஸ்தானி இசை, கர்னாடக இசை. நாதத்தால் உலகம் முன்னேறியது. இந்த நாதத்தை தெய்வ வழிபாட்டிற்காக வார்த்தைகளில் தோத்திரமாக சொல்ல ராகம் உருவெடுத்தது. இந்த தோத்திரமே பண்ணாகி ராகத்தோடு உருவாயிற்று. இப்படிப்பட்ட தோத்திரமே பண் என்ற முதல் நூல் ஆயிற்று. பின்பு ஆறு சாஸ்திரங்கள் அறுபத்தி நான்கு கலைகளுடன் இதிகாச புராணத்தோடு, இசை பெருக்கெடுத்தது ஆதியிசையாக பின் இறைவனை வழிபட நாதத்தோடு காந்தர்வ வேதமெனப்படும் சங்கீத சாஸ்திரத்தை தெய்வீக அருளோடு தமிழ் பாக்களால், சுருதி சுரத்தோடு உலகுக்கு அளித்தார்கள். இதுவே தென்னிந்தியா முழுவதும் தமிழிசை எனப்படும் ஆதியிசையாக உருவெடுத்தது. தென்னிந்தியாவில் வாழ்ந்த பழங்குடி மக்களால் இந்த தமிழிசை பாடப்பட்டு வந்தது என்று ஆராய்ச்சியாளர்கள் வரலாறு படைத்துள்ளனர். ஆகவே தமிழிசையே தரணி போற்றுமிசையாக நுட்ப ஸ்ருதிகளை கொண்டதாக 24 ஸ்ருதிகளை உடையதாக பரிணமித்தது.*

*இந்த இந்திய ஸங்கீதம் புராதனமானது, பழமையானது. இந்தியா முழுவதும் ஒரே சங்கீதமாக இருந்த இது பின் வடநாட்டில் இந்துஸ்தானி ஸங்கீதம், தென்நாட்டில் கர்னாடக இசை என்றும் இந்தப் பிரிவுகள் ஏற்பட்டன. பின் அவைகள் பிரபலமடைந்தது. இதன் பின்னே தனித்தனியாக வளர்ச்சி பெற்று ஆதி ஸங்கீதம் தமிழிசை என்றும், கர்னாடக இசையென்றும் பிரிந்து இரண்டு ஜீவ கிளை நதிகளாக விளங்குகின்றன. இதனையேதான் ஸ்ரீ த்யாகப்ரும்மம் ஹிந்துஸ்தானி ராகத்திற்காக ஹமீர்கல்யாணியில் ''**மானமுலேதா**'' கீர்த்தனையைப் பாடி கர்னாடக சங்கீதத்தின் சிறப்பை காட்டியுள்ளார்.*

*கர்னாடக ஸங்கீதம் ஸர்வஜனஸம்மதமான சாஸ்த்ரம் ஏற்பட்டுள்ளதாலும், ராக லக்ஷணங்கள் தெளிவடைந்து இருப்பதாலும், வாக்கேயகாரர்கள் அழகான உருப்படிகளை இயற்ற சாத்தியமாயிற்று. வித்வான்களும் மனோதர்ம ஸங்கீதத்தை சீராக கையாண்டு வர பாட கர்னாடக சங்கீதம் உதவுகிறது. கர்னாடக சங்கீதம் என்பதே சரியான சொல். இஃது கர்ண பரம்பரையாக வந்து ஸங்கீதம் எனப் பொருளாகிறது. இது என் தாயார் குருகுலத்தில் எனக்களிக்கப்பட்ட கருத்துரை. ஆனால் கர்ணாடக ஸங்கீதம் மருவி கர்னாடக ஸங்கீதம் ஆயிற்று என்னும் கூற்று சரியானதாகாது. கர்னாடக சங்கீதமே சரியான சொல் ஆகும் என்பது என் கருத்தாகும்.*

*பூர்வகாலத்தில் இந்த இசை உன்னத இசையாக அப்யஸிக்கப்பட்டு வந்தது. இவ்விஷயத்தை சிலப்பதிகாரம், புராதன தமிழ் இசை நூல்களிலும் பார்க்குங்கால் விளங்கும். இந்த ஸங்கீத முறை தற்போது வழக்கத்திலில்லாமல் அநேகமாக மறைந்து போய்விட்டாலும், அதன் சிறந்த அம்சங்கள் பிற்கால ஸங்கீதத்தில் ஸ்வீகரிக்கப்பட்டுள்ளது என்பது கவனிக்கத் தக்கது. பண்டை காலத்தில் தென்னிந்தியா லலிதகலைகளில் உச்ச ஸ்தானத்தை அடைந்துள்ளது என்பதற்கு சான்றாக பரதருடைய நாட்டிய சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளதை காணலாம்.*

*''தத்ரதாக்ஷிணாத்யா ஸ்தாவத்பஹுந்ருத்த கீதவாத்யா*
*கைசிகிபராயா: சதுரமதுர லலிதாங்கா பினயாச்ச*
*தக்ஷினஸ்யஸமுத்ரஸ்யததாவிந்த்யஸ்ய சாந்தரே''*

***இதன் பொருள்:** தென்னிந்திய மக்கள் பற்பல நடனங்களிலும், வாய்பாட்டிலும், வாத்ய ஸங்கீதத்திலும் விசேஷ ஆர்வம் காட்டுகிறார்கள். அவர்களுடைய கலைகளில் அழகும் மதுரமும் முக்ய அம்சங்களாக விளங்குகின்றன. அவர்களின் சாமர்த்தியமான அங்க அபிநயங்கள் மெருகுடன் ப்ரகாசிக்கின்றன. இப்படி கலைகள் உலாவும் நாடானது வடக்கே விந்த்ய பர்வதத்தினாலும் மற்ற மூன்று திக்குகளில் சமுத்திரத்தினாலும் சூழப்பட்டுள்ளது. அதுதான் நமது பாரதம்.*

<u>தர்நாடகம்</u>:- என்பதற்கு கரை + நாடு + அகம் என்று பொருள் கூறுவது மிக்க பொருத்தமென்று இதனின்று தெரியவருகிறது. விளங்குகிறது.

<u>ஸங்கீதம்</u>:- கீதம் (வாய்பாட்டு), வாத்யம், நிருத்யம் இம்மூன்றும் சேர்ந்ததே ஸங்கீதமாகும். இங்கு ஒரு விஷயம் பற்றி கூற ஆசைப்படுகிறேன். ஸ்ருதியான கலை, (நிருத்ய கலை பிரிக்கப்பட்டு) கீதம் (வாய்ப்பாட்டு), வாத்யம் என்னும் இரண்டு கலைகளுமே ஸங்கீதமென கருதப்பட்டுள்ளது என்று ஆகிவிட்டது. இதில் ஒரு விஷயம் என்னவென்றால் ஸங்கீதம் விசேஷமானதால் நிருத்யம் எப்படி பிரிக்கப்பட்டதோ, அதேபோல் ஸங்கீதம் வாத்யம் இல்லாமலும் பாடப்படும் ஆத்மார்த்த கீதமே ஸங்கீதமென பிரிக்கும் காலம் தற்போது ஏற்பட்டுள்ளது. வாத்யத்தின் ஒலி மிகுதியால் இசையின் தரம் குறைந்துவிடும் நிலை பரவலாக ஏற்பட்டு வருவதால், பக்க வாத்யமே இல்லாது கீர்த்தனைகளை பாடுவோர் துவங்கி உள்ளார்கள். ஆனால் 'ஸ்ருதிமாதா', 'லயம் பிதா' என்று எனது குருகுலத்தில் உபதேசிக்கப்பட்டுள்ளது. ச்ருதியை தாயாகவும், லயத்தை தந்தையாகவும் கூறப்பட்டுள்ளது. இதேபோல் ஸ்ருதியோடு கூடிய பாட்டிற்கு லயத்திற்காக வாத்யம் அவசியமானது. அதில்லாது பாடும் கானம் ஆத்மகானமாகிவிடும். முக்கியமாக பாட்டு பாடும் பொழுது யாமொடு பாடுவார்களேயாகில் அது தேவகானமாக கேட்க பரவசமடையச் செய்கிறது. இன்னிசை, என்பதன் பேர் பெற்ற காரணமே கீதத்தோடு வாத்யமும் சேர்ந்து பாடுவது என்பதனால்தான் இசையை, கீதத்தை நாட்டியத்தின் ஒரு முக்ய அம்சமாக கருதப்படுகிறது. கீதத்தை சரிவர ஸ்ருதியில்லாமல், சாரம் லயத்தோடு காணப்படாமல் போகுமானால் அந்த நிருத்யம் எடுபடாமலே போய்விடும். என்னதான் நிருத்திய கலை பிரிக்கப்பட்டு கீதம், வாத்யம் என்று இரண்டுமே ஸங்கீதம் என கருதப்பட்டாலும், நிருத்யத்தின் அமைப்போடு கூடிய ஸங்கீதம், கீர்த்தனையில் அமையாது இருக்கவே இருக்காது. ஏனெனில் ஸ்லோகங்கள் சங்கீத ரத்னாகரம்.

''கீதம் வாத்யம் நர்த்தனம் சத்ரயம் ஸங்கீத முச்யதே''

என்ற சுலோகத்தின் படி ஒவ்வொரு கீர்த்தனை அமைக்கப்பட்டபோதும் அதில் நிருத்தியத்திற்கு கண்டிப்பாக இடம் இருக்கும். ஒரு கீர்த்தனை நிர்ணயிக்க வேண்டுமானால் அதில் ஸ்ருதி சுத்தி, லயம், நிருத்யம் மூன்றும் அடங்கியதாக அமைக்க வேண்டியது மரபு, பொது மரபாகும். பிராசீனமுறையும் கூட. இதனையே மஹான்கள் செய்து காட்டியுள்ளார்கள். ஸ்ரீத்யாகப்ரும்ம கீர்த்தனைகள் நாட்டியத்திற்கும் ஏற்கும் வகையிலே அமைந்திருப்பது சிறப்புடையது என்று கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். உதாரணமாக ''ஸ்ரீரகுவரப்ரமேய'' காம்போதிராகப் பாடல், ப்ரஹ்லாத பக்தி விஜயத்தில் ''நனுவிடிசிகதலகுர'' ரீதிகௌளை கீர்த்தனை ஆகும்.

ஆதலால் பண்டை காலத்தில் ஸங்கீதத்தை நாட்டிய கலைக்கு அனுகுணமாக ஒரு உபகலையாக கருதினார்கள் என்பது பொருத்தமாகாது, மஹான்களினாலேயே கலை சிறந்தது எனலாம். ஏனெனில் மஹான்கள் இசையை தனிக்கலையான கண்ணோட்டத்தில் பார்க்கவில்லை. பூர்ணகலையாக இன்றும் மஹான்களுடைய கீர்த்தனைகள் ஜீவியஸ்ரேஷ்டமாக நித்யமாக அழியாது இருப்பது என்பது இயல் இசை நாடகம் இம்மூன்றையும் சேர்த்துதான் பார்த்தார்கள் என்று கூறலாம். அதுபோல கீதம், வாத்யம், நிருத்யம் மூன்றுமே ஸங்கீதம் என்று கருதப்பட்டது என்பதுதான் சரி. ஆகவே கர்னாடக இசை, சாஸ்த்ரீய ச்ங்கீதம் ஏனையவற்றிற்கும் நாட்டிய சாஸ்தரம் இணைந்தே மஹான்கள் க்ருதிகளை அமைத்தார்கள் என்றால் அதுதான் சங்கீதம். சங்கீத சாஸ்த்ரம், சாஸ்த்ரீய சங்கீதம், கர்னாடக இசை கர்னாடக சங்கீதம் என்று பொருள் கொண்டதாயிற்று. கர்னாடக இசைக்கு ஆதார ஸ்தானம் நாதம். நாதம் இல்லாத இசையை கேட்க முடியாது. நாதத்திலிருந்து இனிமையான சங்கீதம் பிறக்கிறது. நாதத்தின் நிலை நிறுத்தப்பட்ட தீர்மானமே சுருதி. சுருதி நிர்ணயிக்கப்பட்டவுடன் ஸ்வர ஸ்தானம் அந்த நிர்ணயிக்கப்பட்ட ஸ்ருதியிலிருந்து கணக்கிடப்பட்டு ஸ்வரபேதத்தால் ராகங்கள் ஏற்பட்டு ஒவ்வொரு ஸ்வரபேதத்தாலும், ஒவ்வொரு ராகம் பிறக்க வாய்ப்பேற்படுகிறது.

<u>நாதம்</u>:- ஆஹத நாதம், அநாஹதம் நாதம் என்று இரண்டு வகைப்படும்.

1. மனிதனுடைய முயற்சியின்றி இயற்கையினாலேயே கேட்கப்படும் நாதம் அநாஹத நாதம்.
2. மனிதனுடைய முயற்சியால் அதாவது மனிதனால் பாடப்படும் இசை வாத்யம் முதலியவைகளாலும் அவனால் உருவாக்கப்படும் இசை ஆஹத நாதம்.
3. அநாஹத நாதத்தின் சூட்க்ஷமங்களை யோகிகளே அறியக் கூடியது. அநாஹத நாதத்தின் <u>மர்மங்களை</u> சூட்க்ஷமங்களை யோகிகள் மட்டும் அறியக் கூடியது. அந்த அநாஹதத்தின் முடிவே ஓம் என்ற ப்ரணவம். இந்த ஓம் என்ற ப்ரணவத்தின் முடிவே எம்பெருமான்.

''ஓம் இத்யாதி மனோச்சரத்வனிதம் ஜோதிஷ் மதாம் த்யோதகம் யோமவ்யா பிபரம் சிவாம்கயம் அகலம் ஜோதிப்ரபத்யேத்யா. (அல்லூர் சிவாச்சாரியார்)

சாதாரணமாக ஆன்மாக்கள் நாதோபாஸம் செய்வது மாத்திரம் ஆரம்ப காலத்தில் இயலாதது ஆகும். பலநாள் ஈசனை, பெருமானை, உருவ வழிபாட்டில் வழிபாடு செய்து அந்த உருவத்தை மறந்து நாதமயமாக மனதிலே த்யானித்து வழிபாடு செய்வது நாதோபாஸனையாகும். ஓம்காரத்தை உபாஸனை செய்வது உபநிடதங்களில் ப்ரதிகோ பாஸனம் எனக் கூறப்பட்டிருக்கிறது. அதை அறிந்து வழிபாடு செய்வது மற்ற இந்திரியங்கள் மனது புத்தியாவும் லயமாகி அந்த நாதவடிவிலேயே திளைத்து ஆனந்தப்படுவதுதான் அதற்கு பலனாகும். சாஸ்திரங்களில் இதே ஓம்காரத்தை முற்றிலும் துறந்த துறவிகள் தினந்தோறும் அனுஷ்டானம் முடித்து அதிகமான ஜபம் செய்ய வேண்டியதும், ப்ரணவமேயாகுமென உபநிடதங்கள் கூறுகின்றன. அது மாதிரி ப்ரணவத்தை மட்டுமே ஜபம் செய்பவர்களே இக்கலியில் பெரிய மஹான்களாக காணப்படுகிறார்கள். இவ்வகையிலே ஸ்ரீத்யாகப்ரும்மம் அவதார புருஷர் மஹான் ஆவார்.

<u>நாதம் அதன் முக்யம்:</u> ஆஹதம் அனாஹதம் இதைப் பற்றி சுலோக (12-16) பக்கம் 5-ல் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

<u>இனி அநாஹதம் பற்றிப் பார்ப்போம்</u>:-

ஆதாரச் சக்ரத்துக்கு பன்னிரண்டு அங்குலத்திற்கு மேல் ப்ரஹ்மகிரந்தி இருக்கிறது. அதிலிருந்து கிளம்பும் வாயுவே நாதத்தை உண்டாக்குகிறது. 1 அங்குலம், 3/4 தற்கால அங்குலம் ஆதாரம் சங்கீத தர் பணம் ஸ்லோகம் (38,39)ல் ஆதார சக்ரத்திற்கு 12'' திற்கும் மேல் ப்ரம்மக்ரந்தி உள்ளது. அதிலிருந்து கிளம்பும் வாயுவே நாதத்தை உண்டாக்குகிறது. இதையே சௌந்தர்ய லஹரி 69வது ஸ்லோகத்தில் ஸங்கீத ஞானம் பற்றி கூறுகிறது. சரீரத்திலுள்ள ஆறு ஆதார சக்ரங்களும் மணிபீடங்கள் அவை மூன்று கண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

1. அக்னி கண்டத்தில் உள்ள ப்ரம்மகிரந்தி - பிரம்மாவின் இருப்பிடம்

2. சூர்ய கண்டத்திலுள்ள விஷ்ணுக்ரந்தி - விஷ்ணுவின் இருப்பிடம்.

3. ஸோம கண்டத்தில் உள்ளருத்ரகந்தி - ருத்திரரின் இருப்பிடம். ஆறு சக்ரங்களிலும் அந்தர்யாக முறையில் தேவி பூஜிக்கப்படும்போது மும்மூர்த்திகளும் பூஜிக்கப்படுகிறார்கள். இதையே ஸ்வராத்யாயம் 3-ம் ப்ரகரணத்தில் ஸங்கீத ரத்னாகரம் முதல் ஸ்லோகம் - பை சார்ங்க தேவர்

''சைதன்யம் சர்வபூதனாம் வித்ருதம் ஜகதாத்மனா
நாதப்ரும்மா ததாநந்தமத்விதீய முபாஸ்மஹே''

நாத வடிவானவன் ஓம் ப்ரணவத்தின் அதிபதியானவன், உலகமெங்கும் வ்யாபித்துள்ளவன். அனைத்து ஜீவன்களுக்கும் ஆதாரமானவன். அனைத்து ஜீவன்களுக்கும் ஆனந்த மயமான வாழ்வளித்து நிறைவளிக்கும் அந்த நாத ப்ரும்மத்தை வணங்குவோம். (இது கர்நாடக இசைக்கு தாரக மந்த்ரஸ்லோகமாக கருத வேண்டும்.) **''நாதோபாஸனையா தேவா''** (உ-ம்) ஸ்லோகம். (சங்கீத ரத்னாகரம் படைப்பு சார்ங்கதேவர் நாதோபாஸனைக்கு அதிபதிகளான ப்ரம்மா, விஷ்ணு மகேஸ்வரர்களை, ஸேவித்த புண்யம் நாதோபாஸனை செய்பவருக்கு கிடைக்கிறது.) ஆகவே கர்னாடக ஸங்கீதம் பாட தெய்வ அருள் பெற வழி வகுத்து கொள்ள வேண்டும். இதனையே ஸௌந்தர்ய லஹரியில் (25-வது ஸ்லோகம்) (48-ம் பக்கத்தில்) கூறப்பட்டுள்ளது.

1. த்ரயாணாம் தேவானாம் (25-ம்) ஸ்லோகம் ஸௌந்தர்ய லஹரி

2. வ்யவஹாரேத்வஸௌ (9-ம்) ஸ்லோகம் சங்கீத ரத்னாஹரம், அனுஷ்டானத்தில் ஹ்ருதயத்தில் உண்டாகும் நாதம். <u>மந்த்ர</u>மென்றும், கண்டத்தில் உண்டாகும் நாதம் மத்யமென்றும், சிரஸில் உண்டாகும் நாதம் <u>தாரம்</u> என்றும் சொல்லப்படும்.

1. தாரம் மத்யத்தை விட இரட்டிப்பாகவும்

2. மத்யம் மந்த்ரத்தைவிட இரட்டிப்பாகவும் இருக்கும். இதிலிருந்து ஒரு ஸ்வரத்திற்கும் அதன் மேல் ஸ்தாயி ஸ்வரத்திற்கும் / ஆதாரம் ஒன்று என்றால் / மத்யத்தைவிட தாரம் இரட்டிப்பாகவும், மத்யம் மந்த்ரத்தைவிட இரட்டிப்பாக இருக்கும்.

| இருமுறை விவரம் | (மந்த்ரம்) | (மத்யம்) | (தாரம்) | மந்த்ரம் - மத்யம் - தாரம் |
|---|---|---|---|---|
| | 1 | 2 | 4 | 1:2:4 |
| | 2 | 4 | 8 | 2:4:8 |

இதிலிருந்து ஆதாரத்திற்கும் அதன் நேர்ஸ்தானமான தாரஸ்தாயிக்கும் சுருதி பேதமடைவது புரிகிறது. இந்த இசைத் தத்துவத்தை ஆதியிலேயே உணர்ந்து இருந்தார்கள் என்று நிச்சயமாகப் புரிகிறது. ஆகவே மந்த்ரம் 1 என்றால் மத்யம் 2 பங்காகிறது. மத்யத்தைவிட தாரம் 2 மடங்காகிறது. மந்த்ரம் 1: மத்தியம் 2 : தாரம் 4 ஆகிறது. ஆக (1) மந்த்ரஸ்தாயி 1 பங்கானால் அதன் நேர்மத்யஸ்தாயிஸ்வரம் 2 பங்கு அதற்கு நேர்ஸ்தாயி மந்த்ரஸ்தாயிக்கு நாலு பங்குகளாகிவிடும். மந்த்ரஷட்ஜத்திற்கு வினாடிக்கு 120 அதிர்வு எண்கள், ஆனால் மத்யஷட்ஜத்திற்கு, தாரஸட்ஜத்திற்கும் முறையே 240 , 480 அதிர்வெண்களாகிறது.

இனி அனாஹதத்தில் ஜீவப்ரம்ம ஐக்யம் பற்றி பார்ப்போம். ''**ஸௌந்தர்ய லஹரி**'' 38-வது ஸ்லோகம் '**ஸமுன்மீலத் ஸம்வித்**' கமல மகரந்தைக் கரஸிகம் விசுத்தி சக்ரம் பதினாறுதள கமலம். ''**ஆஹாசாத் வாயு**'' ஆகாயத்திலிருந்து வாயு தோன்றுகிறது. வாயு தத்துவத்திற்கு இருப்பிடம் அநாஹத சக்ரம். அது பனிரெண்டு தள கமலம். இங்கு ''ஹம்'' என்ற சிவனையும் 'ஸ' என்ற சக்தியையும்'ஹம்ஸேஸ்வரன், ஹம்ஸேசுவரி என்ற 54 வாயவ்ய மயூகங்களுடன் உபாசிக்க வேண்டும். இந்த ஹம்ஸங்களின் சம்பாஷணைகளைதான் பதினெட்டு வித்தைகள் எனப்படுகிறது. அவையாவன: (வேதங்கள் 4 ருக், யஜுர், ஸாம, அதர்வண) (சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தஸ், ஜோதிஷம் 6 ஆகும்) (மீமாம்ஸம், நியாயம், புராணம், தர்மஸாஸ்த்ரம் 4 ஆகும்). (ஆயுர்வேதம், தனுர் வேதம், காந்தர்வ வேதம், நீதி ஸாஸ்த்ரம் ஆக நாலு) பதினெட்டு வித்தைகள், இதனை உணர்ந்தறிந்த நாதயோகி மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம். வித்யோபாஸகர்கள் அந்தர்முகமாக இருந்து கொண்டு அநாகதஸக்ரத்தில் ஏற்படும் சப்தத்தை கவனித்தால் ஸ்ரீவித்யாஷோடசியிலுள்ள அக்ஷரங்களும், ஸ்ரீ வித்யா குருவின் ஸ்வரூபமும், தேவியின் ஸ்வரூபமும் (ஆக பதினெட்டும்) சப்த மூலமாக பிரத்யக்ஷமாக அனுபவிக்கப்படும் (தேதியூர் ஸுப்ரமணிய சாஸ்த்ரி) ஸௌந்தர்யலஹரி. இந்த விதமாக அனுபவித்து மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதயோகி ஆவார். இக்கலியின் அவதாரப் புருஷர் ''**தாரிணிதெலுஸு கொண்டி**''யில் அம்பாளை அனுபவிக்கிறார். தியானிக்கிறார்.

பாவனோபநிஷத்: தன்னை சுற்றிலும் தன்னொளியால்

1. எல்லா ப்ரம்மாண்ட மண்டலங்களிலும் எல்லையின்றி ப்ரகாசிக்கும் ஆத்ம ஜோதியை த்யானம் செய்து மோக்ஷமடைந்தவர் மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம். ஸ்ரீகுருவே அனைத்துக்கும் காரணமாய் விளங்கும் சக்தி.
2. ஆதலால் ஒன்பது வாயில்களுடன் தோன்றும் தேகம், குருவின் வடிவாகும்.
3. ஒன்பது சக்ரங்களையும் கொண்ட இதுவே ஸ்ரீசக்ரத்தின் வடிவமாகும்.
4. தாதுக்களுக்கு அதிதேவதையான வாராஹி தந்தை வடிவம் குருகுல்லா தேவி தாயின் வடிவம்.
5. தர்மம், அதர்மம், காமம், மோக்ஷம் என்ற புருஷார்த்தங்கள் நாற்புறமும் சூழ்ந்துள்ள கடல்கள் - இதனையே ஸ்ரீத்யாகப்ரும்மம் 'தெரதீயஹ ராதா'வில் பரமபுருஷ தர்மார்த்த மோக்ஷமுல என்கிறார்.
6. இச்சரீரமே நவரத்னத்தீவு - இப்படிப்பட்ட சரீரத்தை கொண்டு இகபர சௌக்யத்தில் மூழ்கிவிடாமல் அவனை துதித்து பாதாரவிந்தத்தை தழுவ வேண்டும் என்கிறார் ஸ்ரீத்யாகப்ரும்மம். ஏடிஜன் மிதிஹா - கடவுளை கண்டு உரையாட முடியாத ஜென்மம் எதற்கு என்கிறார். ஆகவே நமக்கு கிடைத்த சரீரத்தின் பெருமையை உணர வேண்டும் என்கிறார்.
7. தோல் (மாம்ஸம், ரத்தம், மேதை, மஜ்ஜை, நரம்புகள், எலும்புகள் முதலிய 7 தாதுக்கள் (ஓஜஸ்ஸுடனும்) நவரத்தினங்களாவன.
8. ஸங்கல்பமேகல்ப விருக்ஷங்கள், உள்ளொளி பொருந்திய மனமே கற்பக உத்யாவனம்.
9. நாவினால் உரைத்தக்க இனிப்பு, புளிப்பு, கசப்பு, உவர்ப்பு, கார்ப்பு, துவர்ப்பு என்னும் அறுசுவைகளும் (வஸந்தம் முதலிய) ஆறு ருதுக்களாவன.
10. ஞானமே (விசேஷ) அர்க்கியம் (இந்திரிய) அக்னியில் அர்ப்பணம் செய்யப்படும். நேயவஸ்துக்களே ஹவிஸ்ஸாகும். அறிபவன் (தானே) ஹோமம் செய்பவன், அறிபவனும் அறிவும், அறியப்படுவதும் ஒன்றேயென்ற அபேதபாவனையே ஸ்ரீசக்ர பூஜையாகும்.

11. நியதியுடன் சிருங்காரம், பயம், கோபம், வெறுப்பு, ஹாஸ்யம், வீரம், கருணை, வியப்பு, சாந்தி முதலிய ஒன்பது ரஸங்களும் சேர்ந்து அணிமா முதலிய பத்து ஸித்தி தேவதைகள்.

12. காமம், கோபம், லோபம், மோஹம், மதம், மாற்சர்யம், புண்ணியம், பாவம் இவை எட்டும் ப்ராஹ்மீ முதலிய எட்டு மாத்ருகா சக்திகள்.

13. மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்கள், இவைகட்கு மேலுள்ள அகுல ஸஹஸ்ராரம், கீழுள்ள குலஸஹஸ்ராரம், இந்த்ரயோனி என்னும் உள்நாக்கு ஆக ஒன்பது ஆதாரங்களும் (இவற்றின் ஸமஷ்டியாக ஒன்றுங்கூட்டி பத்தும்) முத்ராசக்திகள்.

14. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், செவி, மெய், கண், நாக்கு, மூக்கு, வாக்கு, கை, கால், பாயு உபஸ்தம் (என்னும் பதினைந்தும்) இவைகளால் மாறுபடும் மனத்துடன் காமா கர்ஷினீ முதலான பதினாறு சக்திகள்.

15. பேசுதல், வாங்குதல், நடத்தல், கழித்தல், ரமித்தல் என்னும் ஐந்து கர்மேந்த்ரிய தொழில்களும், தியாகம், கிரகணம் உபேக்ஷ என்ற புத்தியின் தொழில்களும் அணங்ககுஸுமா என்ற எட்டு சக்திகள்.

16. அலம்புஸா, குஹு, விச்வோதரீ, வாரணா, ஹஸ்திஜிஹ்வை, யசோவதீ, பயஸ்வினீ, காந்தாரீ, பூஷா, சங்கினீ, ஸரஸ்வதீ, இடை, பிங்களை, ஸுஷும்னை என்ற பதினான்கு நாடிகளின் சக்திகளே ஸர்வஸம்க்ஷோபிணீ முதலிய பதினான்கு சக்திகள், சரீரத்தில் 3 ஸ்தாயிகளின் ஸ்தானங்களும், சரீரத்திலுள்ள நாடிகளில் முக்கியமான நாடிகளாகிய இடை, பிங்களை, ஸுஷும்னை என்பவைகள், ஸங்கீத தர்பணம் சுலோகம் 46, 49-ல் கூறப்பட்டு உள்ளது பார்க்கலாம்.

17. பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்ஜயன் என்னும் பத்து வாயுக்களும் வெளிப்பத்து கோணங்களிலுள்ள தேவதைகள்.

18 - 20 மேற்கூறியவற்றில் பிராணன் முதலிய ஐந்து வாயுக்களுடன் சேர்ந்து உபாதிபேதத்தினால் ஜாடராக்கினி ரேசகம், பாசகம் (உணவைப் பக்குவப்படுத்தல்) சோஷகம் (உலர்த்தல்) தாஹகம் (எரித்தல்) ப்லாவகம் (நிறைத்தல்) என்ற ஐந்து வகைத் தொழிலை செய்வதாக ஆகிறது. க்ஷாரகம், உத்தாரகம், க்ஷோபகம், ஜிரும்பகம், மோஹகம் என்ற தொழில்களை நாகன் முதலிய ஐந்து உபவாயுக்களுடன் சேர்ந்து செய்வதாகிறது. அவை மனிதர்களுடைய சரீரத்தில் பரவிபக்ஷ்ய, போஜ்ய, சோஷ்ய, பேய வடிவான ஐந்து வகைப்பட்ட உணவை ஜீரணம் செய்கின்றன. இப்பத்துவித அக்கினி கலைகளும் ஸர்வஜ்ஞா முதலிய உள்பத்துக் கோணதேவதைகள்.

21. குளிர், வெப்பம், இன்பம், துன்பம், விருப்பம், ஸத்வம், ரஜஸ், தமஸ் என்பவை வசினீ முதலிய எட்டு சக்திகள்.

22-25 சப்தம் (ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம்) முதலிய ஐந்து தன் மாத்திரைகள் (தேவியின் கையிலுள்ள) ஐந்து புஷ்ப பாணங்கள் மனமே கரும்பு வில், ஆசையே பாசம், கயிறு, துவேஷம், அங்குசம் (இவை பரதேவதையின் கையிலுள்ள ஆயுதங்கள்)

26. அவ்யக்தம், மஹத் அஹங்காரம் என்பவையே காமேச்வரீ, வஜ்ரேஜ்வரீ, பகமாலனீ எனப்படும் உள்முக்கோண தேவதைகள்.

27. உபாதியற்ற ஞானமே (பிந்து வடிவான) காமேசுவரர்.

28. எப்பொழுதும் ஆனந்த பரிபூர்ணமாயிருக்கின்ற தனது ஆத்மஸ்வரூபமே பரதேவதையாகும் லலிதை.

29. சிவப்பு நிறம் (ஜீவன், சிவன், சக்தி ஆகிய) இவ்வனைத்தின் விமர்சம் (அபேத வடிவான அனுஸந்தானம்)

30. சித்தம் (இந்த சாதனையால்) ஒரு முகப்படுதலே ஸித்தியாம்.

31. பாவனை செய்வதே உபசாரம்.

32. நான், நீ, உண்டு, இல்லை, செய்யத்தக்கது, செய்யத்தகாதது, உபாசிக்கத் தக்கது என்ற வேறுபாடுகளை எல்லாம் ஆத்மாவில் லயம் செய்தலே ஹோமம்.

33. பாவனைக்கு இதுவரை கூறப்பட்ட விஷயங்களிலும் ஏற்றத் தாழ்வைக் காணாதிருத்தல் தர்ப்பணம்.

34. பதினைந்து திதிகளின் வடிவமாய்க் காலம் மாறிவருவதை (ஸாக்ஷியாயிருந்து) காண்பதே காட்சி.

35. <u>இவ்வாறு மூன்று முகூர்த்தமோ</u> இரண்டு <u>முகூர்த்தமோ</u> அல்லது ஒரு முகூர்த்தமாவது பாவனையில் நிலைத்திருப்பவன் ஜீவன் முக்தனாவான். அவனே சிவயோகி எனக் கூறப்படுவான். இதனையே ''விதுலு ஜீவன் முக்து லனித்யாக ராஜு¬தெலியு'', ''ராகஸு¬தாரஸ'' என்ற ஆந்தோளிக ராகத்தில் பாடுகிறார். '**மனமே ராகம்**' எனப்படும் அமுதரஸத்தைப்பருகி மலர்ச்சி பெறுவாயாக. அது யாகம், யோகம், தியாகம், போகம் இவற்றின் பலன்களை தரவல்லது ஸதாசிவ சுத்த சைதன்ய ஸ்வரூபமான நாதம், பிரணவம், ஸ்வரம் இவற்றை அறிந்தவர்களே ஜீவன் முக்தரென இத்தியாகராஜன் அறிவன்' என்கிறார். இதனையே பாவநோப நிஷத் கூறுகிறது. ஆகவே ஸ்ரீத்யாகப்ரும்மம் அம்பாளை த்யானித்து அம்பாள்மேல் பல பாடல்களை பாடியுள்ளார். அவர் சிவயோகி என்பதனை நிலைநிறுத்தி உள்ளார். சிவனையும் பாடியுள்ளார். நமச்சிவாய பஞ்சாட்சரமும் நமோநாராயணாய அஷ்டாக்ஷரமும் சேர்ந்தது ராமநாமம் என்பதனால் சிவனையும், ராமனையும் ஆராதித்தார். ராமநாமத்தை உலகுக்கு உய்வித்த மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம் <u>நாதயோகி, சிவயோகி, நாதப்ரும்மம்</u> ஆகிறார். நமசிவய என்ற பஞ்சாட்சரத்திலிருந்து மபீஜம், ஓம் நமோநாராயணாய என்ற அஷ்டாக்ஷரத்திலிருந்து ராபீஜம் இரண்டும் சேர்ந்தது ராமநாம தாரக மந்த்ரம் என்பதனை நமக்கு உணர்த்திய மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம். இவர் திருத்தவத்துறையெனப் பெறும் லால்குடியில் உள்ள தபஸ்தீர்த்தபுரமென்று வழங்கும் இத்தலத்தின் ஈசுவரராகிய ஸப்தரிக்ஷீசரை, குறித்தும், அம்மனாகிய பிரவிருத்த ஸ்ரீமதியை குறித்தும் ஸ்வாமி ஐந்துக்ருதிகளையியற்றினார். கதிநீவே - தோடி, லலிதேஸ்ரீ- பைரவி, தேவஸ்ரீ - மத்யமாவதி, மஹிதப்ரவ்ருத்த - காம்போதி (ஐந்து), ஈசபாஹிமாம் - கல்யாணி. இதில் மற்றொரு விசேஷம் என்னவென்றால் லால்குடியில் பிரமன் வால்மீகிக்கு ப்ரத்யக்ஷம். இது சரிதம் இதனைத் தொடர்ந்து ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் மறு அவதாரம் வால்மீகி என்பது எனது ஆய்வின் கருத்து.

<u>தோலூர்:</u> சுந்தரேச்வரரை ஐந்து கீர்த்தனைகளில் பாடியுள்ளார் - ஈவஸு¬த - சஹானா - கோரிஸேவிம்பர - கரகரப்ரியா, சம்போமஹாதேவ - பந்துவராளி, நம்மிவச்சிந - கல்யாணி, ஸு¬ந்தரேச்வருநி - சங்கராபரணம்.

<u>திருவெற்றியூரில்</u>:- இருக்கும் த்ரிபுரசுந்தரி அம்மனை ஐந்து கீர்த்தனைகளில் பாடியுள்ளார். கந்நதல்லி - ஸாவேரி, ஸு¬ந்தரி நிந்து - ஆரபி, ஸு¬ந்தரி நந்நிந்தரிலோ - பேகட, ஸு¬ந்தரிநீதிவ்ய - கல்யாணி, தாரினி தெலுஸு¬கொண்டி - சுத்தஸாவேரி. மேற்படி கீர்த்தனைகளை பாடி ஸ்ரீத்யாகப்ரும்மம் சிவயோகி என்பதனை நமக்கு உணர்த்துகிறார். ஸ்ரீத்யாகப்ரும்மம் ராமனைப் பாடினார். நாராயணனின் அம்சம் ஸ்ரீராமன் என்பதனை உணர்ந்து ஓம் நமோநாராயணாய என்ற அஷ்டாக்ஷர மஹிமையை நமக்கு உணர்த்தவே ராமநாமத்தை நமக்கு உணர்த்தினார்.

<u>அனாஹதம் பற்றி பெரியாழ்வார், நம்மாழ்வார் கூறுவது:-</u> யோகமார்க்கத்தை சரீரத்தோடு இணைத்து வைணவ ரீதியில் ஆறு ஆதாரங்கள் கொள்ளப்படுகின்றன. மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம், நிசுத்தி, ஆக்ஞி, ஸஹஸ்ராரம் ஆகும்.

''சோர்வினால் பொருள் வைத்ததுண்டாகில்
சொல்லுசொல்லென்று சுற்றுமிருந்து
ஆர்வினாலும் வாய்திறவாதே
அந்தகாலமடைவதன் முன்னம்.''
''மார்வமென்பதோர் கோயிலமைத்து
மாதவனென்றும் தெய்வத்தை நாட்டி
ஆர்வமென்பதோர் பூவிடவல்லார்க்கு
அரவதண்டத்திலுய்யலுமாமே''

யோகமார்க்கத்தை சரீரத்தோடு இணைத்து வைணவ ரீதியாக ஆறு ஆதாரங்கள் கொள்ளப்படுகின்றன. மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞி என்பதாகும். <u>ஸஹஸ்ராரத்தில் ஸமாதி எய்துதல்:</u> இதனை நம்மாழ்வார் உண்ணும் சோறு, தலைவாது நகர்நோக்கி என்ற தலைப்பின் கீழ் ஞானம் பற்றி கூறுவதாவது.

''உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன், எம்பெருமான் என்றென்றே கண்கள் நீர்மல்கி மண்ணினுள் அவன் சீர் வளம் மிககவனூர் வினவி, திண்ணமென்னிள மாண்புகு மூர்திருக்கோளூரே''. நம்மாழ்வார் ஞானம் மார்க்கம் - சன்மார்க்கம் பெரியாழ்வார் யோகம் - நம்மாழ்வார் ஞானம் பற்றி உரைப்பது.

<u>அனாஹதம்</u> சரீரத்தில் <u>கண்டத்தில்</u> வருவது அதற்கு கோயில் அமைப்பில் ஸ்நான மண்டபம் என்று கருதப்படுகிறது. விக்ரஹ வழியில் நரஸிம்மம் இப்பொழுது அனாஹதத்தின் ஸ்வரூபம் விக்ரஹ வழியில் நரஸிம்மனை த்யானம் செய்கிறார்கள். அதானது கண்டத்தில் நிறுத்தி உபாஸிக்கும் போது கண்டத்திற்கு மேல் நரஸிம்ம ஸ்வரூபம் காட்சியாக ஸித்திக்கிறது. அதற்கு மேல் ஸஹஸ்ராரத்தில் அமர்ந்த நரஸிம்மனின் சிலிர்த்துத் தொங்கும் ஜடை வழியாகப் ப்ரமரந்திரத்தில் இருந்து அமிர்ததாரை (கண்டத்தின் காட்சியளிக்கும் மூர்த்தியின் ஜடையின் மூலமாக) வர்ஷித்து பெருகுவதை ஆனந்தமடைந்து பரவசப்பட்டு தெய்வஅருள் பெற்று சித்தியடைகிறார்கள் நாதயோகிகள்.

ஸஹஸ்ராரத்தில் அமிர்த்ததாரை எப்படி சித்திக்கிறது என்ற கேள்வி எழும். இதற்கு விடை ந்ருஸிம்ம ரூபத்தில் கண்டத்தில் மேல் நரஸிம்மனுடைய ஸ்வரூபத்தை அனுபவித்து அமிர்ததாரையை ஸஹஸ்ராரத்தில் பெரும்பாக்கியம் நாதயோகிக்கு மட்டுமே ஸித்திக்கிறது. ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதயோகி ஆவார். அவர் நரஸிம்மனை த்யானித்து நாதப்ரும்மமானவர். அதனை அனுபவித்ததாலேயே நரஸிம்ம மூர்த்தியை பாடியுள்ளார். இதையே ஸௌந்தர்ய லஹரியில் ஆறு ஆதார சங்கரங்களையும் கடந்து சென்று ஸஹஸ்ராரத்தில் ஸமாதி எய்துதல் ஷட்சக்ர வேதனம் என்றும் அந்தர்பாகம் என்றும் சொல்லப்படும் அது இங்கே விளக்கப்படுகிறது.

1. மூலதாரமும் ஸ்வாதிஷ்டானமும் சேர்ந்து அக்னி கண்டம்.

2. அதற்கு மேல் பிரம்மக்ரந்தி என்று ஒரு முடிச்சு உள்ளது.

3. மணிபூரகமும் அநாஹதமும் சேர்ந்து சூரிய கண்டம் அதற்கு மேல் விஷ்ணுக்ரந்தி என்று ஒரு முடிச்சுள்ளது.

விசுத்தியும் ஆக்ஞையும் சேர்ந்து ஸோமகண்டம் அதற்கு மேருத்ரக்ரந்தி என்ற ஒரு முடிச்சு உள்ளது. க்ரந்தி என்பது நாடிகளின் முடிச்சையும் நாடியினுள் பாயும் எண்ணங்களின் பூர்வவாஸனையால் ஏற்படும் சிக்கல்களையும் குறிக்கும். மூலாதாரத்தில் எழுந்த பராசக்தி ஸ்வாதிஷ்டானத்தைக் கடந்து, மணிபூரகத்தில் பிரதியக்ஷமாவாள். அங்கே அர்க்கியம், பாத்யம், முதல் பூஷணம் வரை உபசாரங்கள் செய்து அநாஹதத்திற்கு அழைத்து வந்து தூபம் முதல் தாம்பூலம் வரை உபசாரங்களை செய்து விசுத்திக்கு அழைத்து வந்து அங்கே பராஸக்தியை ஸிம்மாஸனத்தில் இருக்கச் செய்து, சந்திர கலாரூபமான ஸ்படிகமணிகளால் பூஜித்து, ஆக்ஞாசக்கரத்திற்கு அழைத்து நீராஜனம் செய்து ஸஹஸ்ராரத்திற்கு நடுவிலிருக்கும் சந்திர மண்டலத்தில் சதாஸிவனுடைய ஸமீபம் சேர்த்து அவர்களை சுற்றிபடுதாவை போட்டு தான்ஸமீபத்திலிருந்து கொண்டு அம்பாள் மூலாதாரத்திற்கு திரும்பும் ஸமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். இதுதான் அந்தர்யாகம் அல்லது ஸமயாசாரம் எனப்படும் மானஸாபூஜை. இதை முறையோடு ஸேவித்து ஸித்தியடைகிறார்கள் நாதயோகிகள். இதற்கு உதாரணமாக சதாசிவ பிரம்மேந்திராள், ஸ்ரீத்யாகப்ரும்மம். இவர் ஸ்வரார்ணவம் என்னும் புகழ்பெற்ற நூலை கசடறக் கற்றுணர்ந்தார் என்பதை 'ஸ்வரராக சுதா' என்னும் சங்கராபரண கிருத்தியின் சரணத்தின் மூலம் அறியலாம். 'ஸ்வரார்ணவத்தின் ரகசியங்களை அறிந்துணர்ந்த த்யாகராஜன் என்று அதில் குறிப்பிடுகிறார். அந்த நூலிலே சிவன் - பார்வதி சம்பாஷணை மூலம் சங்கீத சாஸ்திரம் விளக்கப்பட்டது என்பதையும் அதே க்ருதியில் அறிய முடிகிறது.

''கோடிஜபம் த்யானம், கோடித்யானம் லயம்
கோடிலயம் கானம்'', இப்படிப்பட்ட தத்துவங்கள் அநேகம் உள்ளன.

நல்ல நாதமே சங்கீதத்திற்கு ஆதாரம். நல்ல ஸ்ருதி நாதத்தோடு கூடிய பாட்டு, நிலைத்த ஸ்ருதியிலிருந்து ஸ்வரங்கள், ஸ்வரக் கோர்வையில் ராகங்களின் அழகு இவையெல்லாமே நாதத்தை சேர்ந்தது. நல்ல நாதத்தோடு கூடிய இசைக்கு நம்மை மெய்மறக்கச் செய்யும் சக்தி உண்டு. அதன்பால் தொடர்ந்து வரும் ஸ்ருதி, ஸ்வரம், அதன்பின் ராகக்கலை இவை எல்லாமே சேர்ந்து இசையின் கர்னாடக இசையின் வடிவமாகும் என்பது (இந்த கர்னாடக இசையின் விரிவுரை ஆய்வுக் கட்டுரையின்) என் முடிவாகும். குருவுக்கு அஞ்சலியோடு கர்னாடக இசை, கர்னாடக சங்கீதம் இவற்றின் ஆய்வுக் கட்டுரையை சமர்ப்பிவிக்கின்றேன்.

## தி டிவைன் அண்ட் தி டிவினிட்டி

சங்கீதத்தின் தெய்வாம்சம், சங்கீதத்தால் தெய்வாம்சம் பெறுவது எப்படி? சங்கீதத்தின் தெய்வாம்ஸம் பெற்ற இடம் திருவரங்கம். அணி அரங்கனே இசைக்குத் தலைவன். அரங்கனிடமிருந்து தெய்வாம்சம் பெற முடியும் என்பதற்கு ஸ்ரீத்யாகப்ரும்மம் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறார்.

### குருப்போதம:

சங்கீதத்தால் தெய்வாம்சம் பெற்ற மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம் நமக்கு பல வழிகளில் தெய்வத்தை சுலபமான முறையில் அடைய இசைஞானம் உள்ளவர்கள் இசைபாடி மோக்ஷம் பெறலாம் என்பதை பல பாடல்கள் மூலம் நமக்கு அளித்துள்ளார். நாதோபாஸனைக்கு நாதோபாஸனா, மோக்ஷோபாயத்திற்கு மோக்ஷமுகலதா, நமது சரீரத்திலுள்ள பிராணவாயுவும் உஷ்ணமும் சேர்ந்தல்லவா ஓம்கார மயமான ஏழு ஸ்வரங்களை பிறக்க வைக்கின்றன. மங்களகரமான வீணா வாத்யத்தால் இசைபாடி பரமனை அடையலாம். இது சங்கீதத்தின் தெய்வாம்சத்திற்கான வரையறு. நாதோபாஸனாவில் மும்மூர்த்திகள் சங்கரன், நாராயணன், பிரமன், நாதோபாஸனையை நன்கு உணர்ந்தவர்கள். இவர்கள் வேதங்களை உய்வித்து அவர்களுக்கு மேற்பட்டவர்கள் என்று நமக்கு உணர வைத்தவர்கள். இவர்கள் மூவரும் வாசுதேவனிடத்தில் சங்கமம். இவர்களை பூஜித்தால் மோக்ஷம் அடையலாம் என்கிறார். மேலும் மந்த்ர, யந்த்ர, தந்த்ர அனைத்துக்கும் இருப்பிடம் இம்மூவரும் ஆவார்கள். இசைக்கு வேண்டிய வீணையோடு லயம், ஸ்வரம் முதலியவற்றை நன்கு அனுபவித்தவர்கள். உலகத்தை கட்டியாண்டவர்கள் உலகத்தில் பிறந்து இசையாலேயே மோக்ஷம் அடையலாம் என்று நமக்கு உணர்த்தியவர்கள். இவர்களை அடைய இசையை ஒரு மார்க்கம் என்று ஸ்ரீத்யாகப்ரும்மம் உரைத்ததோடில்லாமல் மார்க்க சங்கீதத்தை நமக்கு தந்து உதவியுள்ளார். மேலும் ஓம்காரத்தை ஓம், ஓம், ஓம் என்று ஸதா உச்சரித்து, ஓம் ப்ரணவத்தின் உட்பொருளை உணர்ந்து அதனால் மோக்ஷமடைய தெரியாதவர்களுக்கு, அதற்கு இணையாக தெய்வத்தை போற்றும் கீர்த்தனைகளை பாடி தெய்வாம்சம் அடையலாம் என்று நமக்கு உரைத்த மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம்.

### ஸ்ரீத்யாகப்ரும்ம வம்சம்

இராமபிரம்மம்
(மனைவி ஸீத்தம்மா)

| | | |
|---|---|---|
| பஞ்சநத பிரம்மம் | பஞ்சாபகேச பிரம்மம் | தியாகராஜ பிரம்மம் |

### ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் பாட்டனார்

கிரிராஜகவி

### ஸ்ரீத்யாகப்ரும்ம பாரம்பரை பற்றிய விவரங்கள்

ஸ்ரீத்யாகராஜர் திருவாரூரில் ஸவர்ஜித்ளு சித்திரை மீ 25தி (4.5.1767) திங்கட்கிழமை பூச நக்ஷத்திரம் கடக லக்னத்தில் கூடிய சுபதினத்தில் பிறந்தார். இவரது மறைவு (6.1.1847) புஷ்யபகுள பஞ்சமி. இவரது முன்னோர் ஆந்திர தேசத்தில் கர்நூல் மாவட்டத்தில் காகர்ல வம்சம் என்ற பரம்பரையைச் சேர்ந்தவர்கள். மஹாராஷ்டிர அரசர்கள் காலத்தில் தஞ்சை மாவட்டத்தில் குடியேறினார்கள். ஸ்ரீத்யாகராஜரின் பாட்டனார் கிரிராஜகவி என்பவர் ஷாஜி அரசர்கள் காலத்தில் ஸமஸ்தான வித்வானாக இருந்தவர். வடமொழியிலும், தெலுங்கிலும் யக்ஷகானங்கள் இயற்றியுள்ளார். ஸ்ரீத்யாகராஜருடைய தகப்பனார் ராமப்ரும்மம் என்பவர் (பாரத்வாஜ கோத்ரம் ஆபஸ்தம்பஸூத்திரம்), கல்வி கேள்விகளிலும் சிறந்தவர். புராண ப்ரவசனத்தில் வல்லுநர். கிரிராஜ ப்ரும்மம் ஒரு சமயம் ஆந்திராவிலிருந்து காசிபோய் கங்கையின் தீர்த்தம் கொணர்ந்து ராமேஸ்வரத்தில் கோயிலில் அபிஷேகம் பண்ணி திரும்பி ஆந்திரா போகும் வழியில் திருவையாறு சென்ற சமயத்தில் அங்கு 10 நாள் ஸ்ரீமத்ராமாயண ப்ரவசனம் பண்ணி திரும்பிப் புறப்படுகையில் ஆந்திரா செல்ல வேண்டாம் திருவையாற்றிலேயே தங்கவும் என்று வாக்கு கேட்டு அதன்படியே திருவையாற்றில் தங்கினதாக வரலாறு. தஞ்சாவூர்காரர்கள் அவருக்கு ராமாயண ப்ரவசனத்திற்காக ஒரு ராமர் படம் சம்பாவனையாக அளித்ததாக ஸ்ரீநிவாஸய்யர் (ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் சகோதரர் சப்பேசன் பரம்பரையை சேர்ந்தவர்) சொன்னார். அந்த படம் தற்போது அவரிடம் உள்ளது. மேலும் சப்பேசன் பெண் வயிற்று பிள்ளை ஸ்ரீராமுடுபாகவதர் பிள்ளை குப்புஸ்வாமி. இவர் பெண்ணிடம் ஒரு ராமர் படம் (ஸ்ரீத்யாகராஜருடைய பெண்ணிற்குப் பரிசாகக் கொடுத்தது) அதன்பின் ராமுடுபாகவதர் பேத்தி பர்வதம் வீட்டில் உள்ளது. அந்தப் படம் கோதண்டராமர் படம் அதனை ஸ்ரீத்யாகராஜர் பெண்ணின் விவாகத்திற்கு வெங்கட்ரமண பாகவதர் பரிசாக அளித்தார். அந்தப்

'ஓரங்கசாயி' 'பூலோக வைகுண்ட 'மிதியனி' என்கிறார்.



# ஸ்ரீ த்யாகப்ரும்மம்

படத்தில் மனங்கவர்ந்த அந்தகோதண்டராமர் உருவத்தை தரிசித்து சுவாமிகள் **'நன்னு பாலிம்ப''** என்ற பிரசித்தமாக **''மோகன''** ராக கிருதியை பாடியதாக வரலாறு. அந்த பருவதம் அவர்களிடமே (ஸ்ரீத்யாகப்ரும்மம் வாசித்த வீணையை கொடுத்துவிட்டதாகவும் சிப்ளா கட்டை 'ராம, ராம' என்ற பெயரோடு கூடிய உட்காரும் பலகை, தம்புரா அனைத்தையும் வாலாஜாப் பேட்டையில் உள்ளது அதனை பர்வதம்மாளிடமிருந்து வெங்கட்ரமண பாகவதர் சிஷ்ய பரம்பரை பெற்றுக்கொண்டுவிட்டதாக திரு.சீனுவாசன் கூறினார். ஸ்ரீத்யாகராஜரின் பெண் சீதாலட்சுமிக்கு அம்மன் அக்ரஹாரம் குப்புஸ்வாமி என்பவருக்கு கன்னிகா தானம் செய்து த்யாகராஜன் என்ற ஒரு மகன் இருந்தான். அவனும் இசை பயின்று குருவம்மாள் என்ற பெண்ணை மணந்து இல்லறம் காத்தான். ஆனால் முப்பதாம் ஆண்டில் வானுலகம் எய்தினான். இத்துடன் த்யாகராஜர் சந்ததி முடிந்தது. இந்த விவரம் திரு.சீனிவாசனால் நேரில் சென்ற எனக்கு கூறப்பட்டது. ஸ்ரீத்யாகராஜர் பார்வதி என்ற பெண்ணை மணந்தார். ஐந்து ஆண்டுகள் அவருடன் வாழ்ந்து மறைந்தபின் பார்வதியின் விருப்பப்படி அவளுடைய சகோதரி கமலாம்பாளை மணந்தார். இந்த விவரமும் எனக்கு அவரால் தரப்பட்டது. ஸ்ரீத்யாகராஜருக்கு தஞ்சாவூர் ராமாராவ் என்ற அறிய மாணவர் குருவிடம் தாராளமாகப் பழகுவார். மற்ற சீடர்களில் முதுமையானவர் திருவெற்றியூர் வீணை குப்பையர், திருவையாறு ஐயா பாகவதர், வாலாஜாப் பேட்டை வெங்கட்ரமண பாகவதர், மானம்பூசாவடி வெங்கட சுப்பையர் முக்கிய சிஷ்யர்கள் ஆவர். ஸ்ரீத்யாகப்ரும்மத்தைப் பற்றி வரலாற்றுக் குறிப்பு மற்றும் இசை ஏடுகள் பலராலும் எழுதப்பட்டு வந்தபோதிலும் நான் த்யாகப்ரும்ம சிஷ்ய பரம்பரை என்ற முறையில் எனக்குத் தெரிந்த சில பல விஷயங்களைப் பற்றி கூற விரும்புகிறேன். ஸ்ரீத்யாகப்ரும்மம் முரிகி நாடு அல்லது முலகநாடு என்ற குலத்தைச் சேர்ந்த தெலுங்கு பிராமணர் ஆவார். அவர் பாரத்வாஜ கோத்ர ஆபத்ஸம் பசூத்ரத்தை சேர்ந்தவர் (கர்நூல் ஜில்லாவில் காகர்ல வம்சத்தில் பிறந்தவர். இது பலராலும் கூறப்படுகிறது.

<u>பொதுக் குறிப்பு:</u>

காகர்ல வம்ஸத்தில் செருகுவாள்ளு பிரிவை சேர்ந்தவர் என்று நௌகா சரித்திரத்தில் தொடக்கத்தில் ஐந்தாவது காண்ட பத்தியத்தில் ஸ்ரீத்யாகராஜர் தன்னை காகர்ல சமுத்திர சந்திரன் என்று குறிப்பிடுகிறார். மேலும் ஸ்ரீத்யாகப்ரும்மம் தான் ராமப்பிரும்மத்தின் மகன் என்பதனை **'தொருகுண இடுவண்டிசேவ'** என்ற பிலஹரிராக கீர்த்தனையில் முத்திரை சரணத்தில் சொல்லியுள்ளார். **'ப்ரஹலாத பக்தி விஜயம்'** இசை நாடகத்தின் பல ச்ருதியில் **''ஸ்ரீராமப்ரும்மதநய''** என்கிறார். இவர் தன் தாயை நினைவு கூறி **'சீதம்ம மாயம்ம'** என்று பாடுகிறார். ஸ்ரீத்யாகப்ரும்மம் இயல், இசை, நாடகம் மூன்றிலும் கை தேர்ந்தவர்

இயல் - இராமருடன் வாதம் செய்து பேசுவது

இசை - இராமாயண கீர்த்தனையை நமக்குத் தந்தது.

நாடகம் - நௌகா சரித்ரம், பிரஹ்லாத பக்தி விஜயம் போன்ற நாடகத்தை எழுதியது.

சிறந்த இலக்கிய கர்த்தா, சிறந்த சாகித்ய கர்த்தா, சிறந்த நாடக கர்த்தா ஆவார். இவருடைய கீர்த்தனைகளில் மோனை, எதுகை, இலக்கணத்திற்குட்பட்டதாகவும் அமைந்தது சிறப்பு. ஆரம்பகர்த்தா என்று சொல்லும் புரந்தர தாஸர் காலம் 1484 - 1564 இசைகலை கற்பதற்கு இன்றியமையாத ஸ்வராவளி, அலங்காரம், கீதம் முதலியவைகளை இயற்றியது மட்டுமன்றி பல்லாயிரக்கணக்கான கீர்த்தனைகளை உருவாக்கியுள்ளார். இவரது காலத்திற்கு முன் காலம் தாலப்பாக்கம் அன்னமாச்சாரியார் (1408 - 1503) வாழ்ந்தவர். இவர் வடமொழி, தெலுங்கிலும் ஆயிரக் கணக்கான கீர்த்தனைகளை உருவாக்கியுள்ளார். இருந்தும் தற்போதுதான் இவரது பாடல்கள் வெளிவர தொடங்கியுள்ளன. இவரது சாகித்யங்கள் தெலுங்கில் அமைந்தது. இதற்கு பின் க்ஷேத்ரக்ஞர், பத்ராசல ராமதாஸர் பாடியுள்ளார்கள். இதன்பின் 18-வது நூற்றாண்டின் கடைசி பகுதி 19-ம் நூற்றாண்டின் முற்பகுதி கர்நாடக இசைக்கு பொற்காலமாகும். ஸங்கீதமும் மூர்த்திகள் ஸ்ரீத்யாகராஜர், ஸ்ரீ முத்துஸ்வாமி திக்ஷிதர், ஸ்ரீ ஸ்யாமாஸாஸ்திரிகள் காலமாகும். இவர்களில் நடுநாயகமாக விளங்கி புகழ் வானில் ஒளி குன்றாத சுடராகத் திகழ்ந்தவர் ஸ்ரீத்யாகப்ரும்மம். இம்மூவர் பிறந்த தலம் ஒரே ஊரான திருவாரூர். இம்மூவருள் உலகச் சிறப்புற்றவர் ஸ்ரீத்யாகப்ரும்மம். காரணம் இயல், இசை, நாடகம், மேலும் இவரது சிறப்பு வால்மீகி முனிவரின் மறு அவதாரம் என்பதாகும். அதனை அவர் தெளிவுபடுத்தியுள்ளார். மேலும் ஸ்ரீமத் ராமாயணத்தை பல இடங்களில் குறிப்புணர்த்தி தன்னை யார் என்று தெளிவு படுத்தியுள்ளார். வேத, சாஸ்த்ர, புராணத்திற்கான சான்றுகளை கீர்த்தனைகளில் தெளிவுபடுத்தியுள்ளார். கர்னாடக இசைக்கும், தமிழிசைக்கும், உள்ள வேறுபாட்டை தெளிவுபடுத்தியுள்ளார். இவர் 24 ஸ்ருதியை நிர்தாரணம் செய்துகாட்டியுள்ளார். 24 ஸ்ருதி, எப்படி எங்கு ப்ரயோகம், 48, 96 நுட்ப ஸ்ருதிகள் எங்கு எப்படி ப்ரயோகம் என்று ஒவ்வொரு கீர்த்தனையிலும் நிரூபணம் செய்துள்ளார். மேலும் ஸ்வராட்க்ஷரம் வைத்து ராகத்திற்கு வரும் சிறப்புக்கான ஸ்வரம் என்று

எடுத்துக்காட்டியுள்ளார். கீர்த்தனைகளில் ஸ்வராக்ஷரம் (உ.ம்) ''ஸ்ரீராம பாதமா'' பாதமா சாகித்யம் ஸ்வரம் இதுவே இந்த ராகத்திற்கு பிரதிபலிக்கச் செய்யும் ஸ்வரம். ஸ்வராட்க்ஷர சாகித்யம் ஆகும் என்கிறார். ஒவ்வொரு ராகத்திற்கும் $^1/_2$ - $^1/_4$ - $^1/_8$ - $^1/_{16}$ நுட்ப ஸ்ருதி எங்கு வருகிறது என்று விதரணையாக பாடிக்காட்டி தமிழிசையின் வரலாற்றுச் சிறப்பை தன் சாகித்யத்தில் வடித்துள்ளார். ஸ்வரக் கோர்வை, ஸ்வர அணி, கம்பிதம், அடைவுகள், தாளப்ரஸ்தாரம், ஸ்ருதி நிர்மானம், லயவின்யாஸம், யதிப்ரஸ்தாரம், ஸ்ரோதோவஹ, கோபுச்சம், ராக, தாள, பாவ, லய, ஸ்ருதி, ஸாகித்ய, நாட்ய, அலங்கார, ஸாகித்ய நளின, நவரஸ, எளிமை, கோர்வை, மோனை, யதுகை, இவ்வளவு இருந்தும் இவரது கீர்த்தனையின் மிகச் சிறப்பான அம்சம் மனனம் செய்ய சிறந்த, எளிய, லய, நடை கொண்ட கீர்த்தனையாக இவர் அமைத்ததால் என்றே சொல்ல வேண்டும். ஆதலால் ஏனைய வாக்கேயகாரர்களை விட இவரது கீர்த்தனை மிகச் சிறப்புடையது எனலாம். ஸ்ரீதீக்ஷிதர் ராக முத்திரை வைத்துள்ளார். ஸ்ரீத்யாகப்ரும்மமோ ஸ்வாரக்ஷம் மூலம் ராகமுத்திரையை குத்தியுள்ளார்.

கர்னாடக இசை, தமிழிசை, இந்துஸ்தானி இசைக்கான ராகங்களைப் பாடியுள்ளார். அவற்றில் கீர்த்தனைகளை புனைந்துள்ளார். மேலும் இவருடைய கீர்த்தனை உலகத்தில் எந்த பாகத்திலும் சிறப்புற்று விளங்கியதன் காரணம் இவர் வீணையைக் கொண்டு ராகபாவத்தை மாணாக்கர்களுக்கு எடுத்துக்காட்டி ராகத்தின் சரியான விவரத்தை முத்திரை குத்தினது என்பதுதான். மேலும் இவரை 96 கோடி ராமஜெபம் செய்தார் என்று எழுதி உள்ளார்கள். என் தாயார் எனக்களித்த விவரத்தின் படி 100 கோடி ராமஜெபம் செய்தார் என்பது வால்மீகியின் சித்தாந்தபடி சதகோடி ராமாயணம் செய்தார் என்பதும் ஒன்றாகவே இருப்பதால் எனது ஆய்வின்படி ஸ்ரீத்யாகப்ரும்மம் 100 கோடி ராமநாமம் கூறி ராமனை தரிசித்தார் என்பதாகும். இவர் 2000-க்கும் மேல் வர்னம் செய்தார் என்று வரலாற்று அறிஞர் கூறுகிறார். வர்னங்கள் எல்லாமே அவருடையது. அதனை அவரவர்கள் மாற்றி தங்கள் பெயருக்கு மாற்றினார்கள் என்பது அவருடைய கருத்து. இவருக்கும் ஸ்ரீமத்ராமாயணத்திற்கும் தொடர்பு உண்டு. இவர் தன்னை ஒரு கவி என்றும், முனிவர் என்றும், தெய்வாம்ஸம் பொருந்தியவர் என்றும், முக்காலமும் உணர்ந்வர் என்பதனை தன் இறப்பு நாளை குறித்தும் சொன்ன நாளில் பரகதியடைந்ததிலிருந்தும் ஏனைய மஹானிலும் சிறந்த தனித்தன்மை பெற்றார் என்பதே எனது முன்னுரையின் முடிவுரையாகும். ஸ்ரீத்யாகப்ரும்மம், ஸ்ரீதீக்ஷிதர், ஸ்ரீஸ்யாமாஸாஸ்திரிகள் ஆகிய மூவரில் ஆய்வு த்யாகப்ரும்மம் பற்றி என்பதனால் குறிப்பில் முதலாக குறிப்பிட்டுள்ளேன். ஆனால் வயதுப்படி ஸ்ரீஸ்யாமாஸாஸ்திரிகள் (1762 - 1827), ஸ்ரீத்யாகப்ரும்மம் (1767 - 1847), ஸ்ரீதீக்ஷிதர் (1776 - 1835) இம்மூவருள் நடுவரான ஸ்ரீத்யாகப்ரும்மம் பல சிறப்புகளைப் பெற்று ஸ்ரீத்யாகப்ரும்மம் என்ற நிலை அடைந்தார் என்பதற்கு அநேக மேற்கோள்கள் காட்டியுள்ளேன். எப்படி ஸ்ரீத்யாகப்ரும்மம் மூவருள் ஒருவராக இருந்த போதிலும் இசை உலகில் நிலையான முதல் இடத்தை பெற்றார் என்று. இதேபோல் தாளப்பாக்கம் அன்னமாச்சாரியார், வடமொழி, தெலுங்கிலும் அநேகம் இயற்றியிருந்தாலும் அவருக்கு இளையவரான புரந்தர தாஸர் சிறப்புற்றார். இதே முறையில் ஸ்ரீத்யாகப்ரும்மத்தை 100 கோடி ராமஜெபத்தை (ஸ்ரீராக்ருஷ்ணயதீந்திரர்) செய்யச் சொல்லி இறைவனை வழிபடச் சொன்னார். இப்புனித நோன்பை 21 வருடங்கள் தொடர்ந்து அரிய தவப்பயனாக ஸ்ரீராமரை தரிசித்தார். நேரிலும் ஸ்வப்னத்திலும் தரிசித்த இம்மஹானின் சரித்ரம் ஏ‹ னய வாக்கேயகாரர்களின் சரித்ரத்தைவிட வித்யாசமானதோடு இல்லாமல் இசைவழியிலும் கர்னாடக இசை, தமிழிசை, இந்துஸ்தானி இசை ஏனையவற்றிற்கும் தனித்தன்மை அளித்து 24 ஸ்ருதிதான் ஆதாரமானது என்று ஆணித்தரமாகக் கூறியதோடு அல்லாமல் அதனை கீர்த்தனைகளில் அமைத்துப் பாடி, நிரூபித்து மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம் என்று கூறி அவரது திருஅடியைப் பணிந்து எனது தாயின் திருஅடி தொழுது எனது குலதெய்வத்தை அடிபணிந்து அரங்களை அடிபணிந்து இந்த ஆய்வுதனை 'சங்கீதத்தில் தெய்வாம்ஸம்' ஸ்ரீத்யாகப்ரும்மம் என்ற தலைப்புடன் முடிக்கின்றேன்.

ஸ்ரீத்யாகராஜருடைய சிஷ்ய பிரபாவங்கள்

1. தஞ்சாவூர் ராமராவ், 2. தில்லை ஸ்தானம் ராமய்யங்கார் 3. வீணை குப்பையர் 4. வாலாஜாப் பேட்டை வெங்கட்ரமண பாகவதர் 5. மானம்பூசாவடி வெங்கட சுப்பைய்யர். இதன்பின் ஸ்ரீத்யாகப்ரும்ம சிஷ்யராக வந்த மஹாவைத்யநாதய்யரும், பட்டணம் சுப்ரமண்ய அய்யரும், மானம்பூசாவடி வெங்கடசுப்பய்யர் சிஷ்யர்கள் ஆவார்கள். 7. இதற்கு பின் மஹாவைத்யநாதய்யரிடம் சங்கீத கலாநிதி உமையாள்புரம் ஸ்வாமி நாதய்யர் அவர்களும் 8. சங்கீத கலாநிதி உமையாள்புரம் ஸ்வாமிநாதய்யரிடம் கும்பகோணம் திருமதி ஜெயம்மாள் அவர்களும் 9. எனது தாயாரிடம் நான் குருகுலமாக 21 ஆண்டுகள் இசையை பயின்றுள்ளேன். எனது சகோதரிகளும் என் தாயாரிடம் சிஷ்யை பயின்றவர்கள். இதர மாணவி, மாணாக்கர்களும் பயின்றுள்ளார்கள். 10. என் தாயார் எனக்கு அருமையான பல விவரங்களைத் தந்தார். ஸ்ரீத்யாகப்ரும்மம் வீணையோடு கீர்த்தனைகளை தினமும் பஜனையில் பாடி வாசிப்பார் என்ற குறிப்பை தந்தார்.

## ஸ்ரீத்யாகராஜரை காணவந்த மேதைகள் முக்யமான விவரங்கள்

*பல ஊரிலிருந்து அவரைக் காண பல மேதைகள் வந்ததாக வரலாறு. அதில் காசியிலிருந்து ராமேஸ்வரம் மார்க்கமாக வந்த கோபிநாதபட்டாசார்யா என்ற சங்கீத வித்வான் ஸ்ரீத்யாகப்ரும்மத்தை பார்க்க திருவையாறு வந்தார். இவர் ஸ்ரீத்யாகராஜருடைய க்ருதிகளின் அழகையும் இனிமையையும் பருகியதாகவும் அவரை நேரில் தரிசிக்க ஆவல் கொண்டதாயும் சொன்ன மாத்திரத்திலேயே மனம் நெகிழ்ந்த சுவாமிகள் ''தாசரதே நீருணமு'' என்று தோடி பாடலை பாடினார். தெலுங்கிலும் சமஸ்கிருதத்திலும் பல பக்திப் பாடல்களை இயற்றியுள்ள தூமுல் நரஸிம்மதாஸர் என்ற ஆந்திர தேச புலவரும் இவரை தரிசிக்கவந்து, தரிசனத்துக்குப் பின் ஸ்வாமிகளின் ராமபக்தியின் மேன்மையைக் கண்டு ஒப்பற்ற இசையையும் போற்றி பல பத்யங்கள் இயற்றி உள்ளார். ஸ்ரீமுத்துஸ்வாமி தீக்ஷிதரும் பல தடவை ஸ்வாமிகளை ஸந்தித்துப் பேசியுள்ளார் மணிரங்குராகத்தில் ''மாமவபட்டாபிராமா''வை பாடி ஸ்ரீத்யாகராஜரை மகிழ்வித்ததாக வரலாறு. ஸ்ரீகோபால கிருஷ்ண பாரதியார் ஸ்ரீத்யாகராஜரை காண வந்தார். அவரை கண்டு தரிசித்தபின் அவர் விருப்பத்திற்கிணங்கி அன்றிரவே ''சபாபதிக்கு'' என்ற ஆபோகி ராகப் பாடலை பாடியதாக வரலாறு. கேரளத்தை சேர்ந்த கோவிந்தமாரார் என்ற சிறந்த பாடகர். சாரீரம், லயம் இரண்டிலும் தேர்ச்சி பெற்றவர். பல்லவியை ஆறு காலங்களில் பாடக் கூடிய திறமை உடையவர். அவரை ஷட்காலகோவிந்தமாரார் என்று அழைப்பர். புகழ் பெற்ற அவர் திருவையாறு வந்து ஸ்ரீத்யாகராஜரை சந்தித்து அன்றிரவு ஏகாதசி பஜனையில் கலந்துகொண்டு 'சந்தன சர்சித' என்று தொடங்கும் ஜயதேவர் அஷ்டபதியை ஆறு காலங்களில் பாடி அனைவரையும் மெய் மறந்து வியக்க செய்தார். அவரை போற்றும் வகையில் ஸ்ரீத்யாகப்ரும்மம் ''எந்தரோமஹாநு பாவுலு'' என்று ''ஸ்ரீராக'' பஞ்சரத்ன கீர்த்தனையை சிஷ்யர்களுடன் பாடினார். கோவிந்தமாராரும் இசைப் புலமையையும் பக்தியையும் கொண்டாடி மகிழந்ததாக வரலாறு.*

## ஸ்ரீத்யாகப்ரும்மம் பற்றிய குறிப்பு

*ஸ்ரீத்யாகப்ரும்மம் தோற்றத்தில் ஒரு ஸாதுபோல் எல்லோரையும் வசீகரிக்கும் முகபாவத்துடனும், ஒளி வீசும் கண்களுடனும், மெலிந்த தேகத்துடனும், நீண்ட கழுத்தும், துளசி மணிமாலையும், நல்ல உயரமும் கொண்டவர். நெற்றியில் கோபிசந்தனத்தால் ஊர்த்வபுண்டரமும் (நாமம்) உஞ்சவிருத்தியில் அணியும், தலைப்பாகையையும் மேல் அங்கவஸ்திரமும் ஒரு கையில் ஜபஸுத்திரம் சிப்ளாவும் மற்றொரு கையில் தம்புராவும் விளங்கும் தூயகோலத்தையும் கொண்டவர். எப்போதும் ஜபமாலை கொண்டு ராமஜபம் செய்வார். இந்த கோலத்தில் இவரை அனைவரும் வணங்குவார்களாம். பேச்சில் விநயமும், இனிமையும், அன்பும், பண்புடன் நல்லதை கண்டு பொறாமையுறாமலும், போற்றும் குணமும் நேர்மையிலிருந்து வழுவாத திண்மையும் ஜீவகாருண்யமும் நிறைந்தவர். இதனால் இவர்களுக்கு சீடர்கள் நிறைய பேர் இருந்தார்கள். சிஷ்யர்கள் அனைவருக்கும் பாரபட்க்ஷமில்லாமல் பாடங்களை செவ்வனே போதிப்பார் என்று இருடைய சரித்திரம் கூறுகிறது. உஞ்சவிருத்தி காலத்தில் தலையில் சிகப்பு பட்டை குஞ்சம் வைத்துக் கட்டுவார். இதற்கு <u>''பென்னபாகை''</u> என்று பெயர். இவருடைய உஞ்சவிருத்தியில் கையில் வைத்திருக்கும் பிக்ஷாபாத்திரத்தை பார்க்கும் பாக்யம் எனக்குக் கிடைத்தது. அவரது சந்ததியில் வந்த ஸ்ரீநிவாஸன் அவர்கள் எடுத்துக்காட்டினார். ஸ்ரீராமர் பட தரிசனமும் கிடைத்தது. அவருடைய ராமராம என்ற மணப்பலகையும், தம்புரா, சிப்ளாவும் ஆந்திராவில் இருக்கும் வெங்கட்ரமண பாகவதரிடம் இருப்பதாகவும் வீணை இருக்கும் இடத்திற்கு திரு. ஸ்ரீநிவாஸன் அழைத்து செல்வதாகச் சொன்னார். எனக்கு ஏற்பட்ட உடல்நிலை பாதிப்பால் செல்ல முடியாமல் போய்விட்டது.*

## ஸ்வாமிகளின் தலை யாத்திரையும் முக்கியமான சம்பவங்களும்

*முதல் முதலாக ஸ்ரீத்யாகப்ரும்மம் காஞ்சிபுரத்தில் வசித்து வந்த தனது தந்தையாரின் நண்பரான உபநிஷத்ப்ரும்மம் என்ற பெரியாரின் உத்தரவின் பேரில் சிஷ்யர்களுடன் யாத்திரை கிளம்பி முதலில் காஞ்சிபுரம் வந்து சில நாள் தங்கி வரதராஜ பெருமாள் பேரில் வரதராஜநினு, விநதாஸுத, வினாயகுனி பாடல்கள் பாடப்பட்டன. அங்கிருந்து திருப்பதி சென்று வெங்கடேசப் பெருமாளை தரிசித்து தெரதீயகர்ராதா வெங்கடேசநின்னு என்று பாடினார். சென்னைக்கு வரும் வழியில் புத்தூரில் ஒரு கோயில் கிணற்றில் விழுந்து உயிர்துறந்த ஒரு பக்தனை உயிர்ப்பித்து நாஜீவாதார பாடினார். சோளிங்கபுரம் வந்தார். நரஸிம்ம, ஆஞ்சனேய மூர்த்திகளின் மேல் பாடினார். சென்னை வந்தார், கோவூர் சுந்தரேச முதலியார் வீட்டில் தங்கி தேவகா[illegible]தரி ராகத்தை விஸ்தாரமாக பாடியதாக வரலாறு. வீணை குப்பையர் வேண்டுகோளுக்கிறங்கி திருவொ[illegible]ர் வந்து அங்கு புகழ்பெற்ற திருபுரசுந்தரி அம்பாள் மேல் ஐந்து கீர்த்தனைகள் பாடினார். பின்னர் [illegible]ச முதலியார் விருப்பப்படி குன்றத்தூருக்கு அருகாமையிலுள்ள கோவூர் வந்து அங்கு ஸ்ரீசௌந்தர்யநாயகியுடன் வீற்றிருக்கும் ஸ்ரீஸுந்தரேஸ்வர் மூர்த்தியை தரிசித்து ஐந்து கீர்த்தனைகள்*

பாடினார். பின் அவ்வூரை விட்டு ஒரு காட்டு பாதைவழியே செல்லும் போது கள்வர்கள் கற்களை வீசினார்கள். பல்லக்கில் உள்ளிருந்து ஸ்வாமிகள் ஸ்ரீராமனை ''முந்நுவெநுக'' என்ற தர்பார்க்ருதியை பாட ஸ்ரீராமன் லக்ஷ்மண சமேதராய் வில்லேந்தி தோன்றி காத்ததாயும், அவர்களை தரிசிக்கும் பாக்யம் கள்வர்களுக்கும் கிடைத்து திருந்தி ஸ்ரீத்யாகப்ரும்மத்திடம் உபதேசம் பெற்றதாகவும் ஸ்ரீத்யாகப்ரும்ம சரித்திரம் கூறுகிறது. மற்றும் லால்குடி, நாகப்பட்டிணம், ஸ்ரீரங்கம் முதலான தலங்களுக்கு சென்று பாடி கடைசியாக திருவையாறு கோயில்கொண்டு உள்ள பஞ்சநதீஸ்வரர் பேரில் கீர்த்தனைகள் பாடி சிறப்பித்துள்ளார். 108 திவ்ய தேசங்களை தரிசிப்பவர்கள் கடைசியாக திருவரங்கம் ஸேவித்து முடிக்க வேண்டும் என்பது பிராசீன சம்ப்ரதாயம். இப்பொழுதும் அப்படியே யாத்ரீகர்கள் செய்கிறார்கள். இதன்படியே திருவரங்கத்தை ஸேவித்து ஸ்ரீரங்கம் பஞ்சரத்னமாக அரங்கனை பாடினார். வைகுண்ட ஏகாதசி உற்சவத்தில் முத்தங்கியணிந்து காட்சி தந்த மூலவரை பெரிய பெருமாளை (<u>ஓரங்கசாயி</u> என்ற க்ருதியிலும் நம்பெருமாளை <u>ஜூதாமுராரே</u> (என்ற க்ருதியிலும், சித்திரை திருநாளில் வெள்ளி குதிரை வாகனத்தில் பவனி வந்த அரங்களை தெற்கு சித்திரை வீதி 86-ம் லக்கத்தில் தங்கியிருந்த போது ஸ்ரீத்யாகப்ரும்மம் <u>ராஜுவெடல</u> என்ற (தோடி) ராகப் பாடலிலும், பங்குனி உத்ஸவம் குதிரை வாகனத்தில் பவனி வந்த ஸ்ரீரங்கநாதனை (விநராதா) தேவ காந்தாரி கீர்த்தனையிலும் மகர சங்கராந்தி அன்று உபயநாச்சியாருடன் மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும் அரங்கனை <u>தருணஜூடவய்ய</u> (சாரங்கா) என்ற க்ருதியிலும் பாடி திருவரங்கத்தை பாடி அரங்கனை சிறப்பித்துள்ளார். கடைசியாக திருவையாற்றில் 6.1.1847ம் ஆண்டு ராமனின் திருவடியை அடைந்தார். 108 திவ்ய தேசங்களை ஸேவித்த பின் கடைசியானது திருவரங்கம் ஸேவித்து முடிப்பவர்கள் வேறு எங்கும் செல்ல மாட்டார்கள். இதுபோல ஸ்ரீத்யாகப்ரும்மம் திருவரங்கம் ஸேவித்ததுடன் திருவையாறு சென்று முக்தியடைந்தார் என்று எனது குருகுலத்தில் சொல்லப்பட்டதாகும்.

<u>ஸ்ரீத்யாகப்ரும்மம் பற்றி சிறப்பேடு</u>

ஸ்ரீத்யாகப்ரும்மம் சங்கீத சாஸ்த்திரத்தை சிறப்பித்து உணர அவரது கீர்த்தனைகளில் காட்டியுள்ளார். <u>24</u>வது ஸ்வரம் கோவிந்தா என்பதனை பல கீர்த்தனங்களில் கூறியுள்ளார். மோனை, யதுகை, ப்ரஸ்தாரம் காட்டியுள்ளார். ஸ்வராட்க்ஷரம் கூறி எடுப்பு எடுத்து 12, 24, 48, 96 நுட்ப ஸ்ருதியை காட்டியுள்ளார். 6 காலங்களை அவரது கீர்த்தனையில் செய்து காட்டியுள்ளார். விளம்பித, மத்ய, த்ருத, விளம்பிதமத்ய, மத்யத்ருத, த்ருத அதித்ருதகாலங்களையும், த்ருத, அதித்ருத, அதி அதித்ருத, காலங்களை சிறப்பு மிக பாடியுள்ளார். அநுலோம, பிரதி லோமத்தை கீர்த்தனைகளில் காணலாம். அதிதம், அனாகதம் எடுப்பை காணலாம். கோபுச்ச, ஸ்ரோதோவஹ அணிகளை காணலாம். ஸப்தஸ்வரம் பற்றி கூறுகிறார். எட்டு ஸ்வரம் மேளகர்த்தா அதுதான் ஆதாரம் என்கிறார். பனிரெண்டு ஸ்வரஸ்தானம் பற்றி அறிய பாடி உள்ளார். வாஸுதேவஸர்வம் என்கிறார். <u>24</u> ஸ்ருதியே ஆதாரம் நிரந்தரம் என்கிறார். <u>25</u> ஸ்ருதி பரமாத்மா என்கிறார். ஜீவாத்மா பரமாத்மாவிடம் ஐக்கியம் என்கிறார். ஓம் ப்ரணவமும் பற்றி ஓம்காரத்தை பற்றி கூறுகிறார். ஓம்ப்ரணவம் காயத்ரீ பற்றி கூறுகிறார். 48, 96 நுட்ப ஸ்ருதிகளை பேதங்களை கீர்த்தனையில் வடித்து காட்டியுள்ளார். இசை மூலம் ஜீவாத்மா பரமாத்மாவிடம் சேருவது பற்றி கூறுகிறார். த்வைத, அத்வைத பேதம் பற்றி தெளிவு படுத்துகிறார். நவரஸம் பற்றி கீர்த்தனைகளில கூறியுள்ளார். பஞ்சரத்ன கீர்த்தனையில் கோபுச்ச, ஸ்ரோதோவஹ'' ராகம், தானம், பல்லவி, ஸ்வரங்கள் எப்படி பாடினால் ரமிக்கும் என்று, ஆலாபிக்கும் வழி என்பதை, தெளிவுபடுத்தியுள்ளார். இயல், இசை, நாடகம் முத்தமிழுக்கு பாடியுள்ளார். வேத சாரம் பற்றி கூறுகிறார். ருக், யஜுர், ஸாமம், பற்றி கூறுகிறார். மனத்தை அடக்கி ஆத்மத்யானம் செய்து ஜீவாத்மா பரமாத்மாவை அடைய த்யானம் பற்றி கூறுகிறார். உபநிடதம் பற்றி உரைக்கிறார். ஓம் என்ற எழுத்து தமிழ் எழுத்து என்ற ஓம்காரத்தை பற்றி பாடியுள்ளார். அரங்கனே இசைக்கு அதிபதி, திருவரங்கமே இசைக்கு ஆதாரமான கோயில் என்று காட்டுகிறார். கீர்த்தனைகளில் மோக்ஷோபாயம் பற்றி கூறுகிறார். ஸங்கீத சாஸ்த்திரம் பற்றி கூறுகிறார். வேத ஸாஸ்த்ரப் புராணம் இசைக்கு எங்ஙனம் தொடர்பு என்பது பற்றி கூறுகிறார். நாதோபாஸனையால் மோக்ஷம் அடைய வழியைப் பற்றி கூறுகிறார். ஸ்ரீமத்வால்மீகி இராமாயணம் படிக்க முடியாதவர்களுக்கு ராமாயணத்தை பாடலாக வடித்து அமைத்துக் கொடுத்துள்ளார். ஸங்கதிகளாலேயே பகவானை நாடுவதை தெரிவிக்கின்றார். நாட்டிய சாஸ்திரத்திற்கு பாடல் அமைத்துள்ளார். துருவ சரித்ரம் எழுதியுள்ளார். கிருஷ்ணனை பாடுகிறார். ராமனை பாடுகிறார். சிவனை பாடுகிறார். நாராயணனை பாடுகிறார். 72 மேள ராகத்தில் பாடியுள்ளார். நாகநந்தினி, காங்கேய பூஷணி, கீர்த்தனைகள், தீக்ஷதரை போல் ராகம் பெயர் வைக்கவில்லை என்கிறார்கள். ஆனால் இவர் ஒரு ராகத்தின் நுட்ப ஸ்ருதிகளை ப்ரயோகம் செய்ததை ஸ்வராட்க்ஷர குறிப்பால் காட்டியுள்ளார். இவரது பாடல்கள் தெலுங்கு, ஸமஸ்க்ருதத்தில் கிருதிகளை அமைந்துள்ளார். நுட்ப ஸ்ருதியிலிருந்து இவருக்கு கிடைத்தது பஞ்சபாரதீயம் என்று புலனாகிறது. ஸங்கீதத்தின் மூலம் ஆத்மாநுபவம் எப்படி கிட்டுகிறது. அதிலிருந்து ஆத்மா எங்ஙனம் விடுபடுகிறது என்கிற தத்துவத்தை நமக்கு தெள்ளத் தெளிவாக உணர்த்தியுள்ளார்.

திருவரங்கப் பாடலில் ஓரங்கசாயி விசேக்ஷமான கற்பனையோடு பாடியுள்ளார். முத்தங்கிஸேவையை நினைவு கூறுகிறார். இவருடைய கீர்த்தனைகளில் சங்கீத சாஸ்திரத்திற்காக ''சங்கீத சாஸ்திரக்ஞானமு'' முகாரி பாடலை பாடினார். ஸாட்க்ஷாத்காரன் அந்த மஹான் விஷ்ணுதான் என்ற பாடலை மோக்ஷமுகலதா என்று தெளிவாக்குகிறார். த்யானத்தால் கிடைக்கும் பயன் என்னே என்கிறார். ''த்யானமே வரமைந'' தன்யாஸி பாடல்' ''ராமபக்தி சாமராஜ்யம்'' 'ராமனுயை பக்தி என்ற சாம்ராஜ்யம் யாருக்கு கிடைக்குமோ அவர்களை நமஸ்கரித்தால் மகா விசேஷமாகும். இதில் ஸ்ரீத்யாகப்ரும்மம் இராமசாம்ராஜ்யத்தை பட்டாபிகேஷகத்தை வால்மீகி தன் அகக்கண்களால் தரிசித்தார். அதே ஸ்ரீவால்மீகியின் மறு அவதாரமான ஸ்ரீத்யாகப்ரும்மம் இராமனை தரிசித்தார். ராமலட்சுமண, சீதா, ஹனுமானோடு, அந்த ஸ்ரீத்யாகப்ரும்மத்தை நாம் நமஸ்கரித்து ராமனை ஸேவித்து புண்யத்தை பெறுவோமாக.

<u>ஸ்ரீவால்மீகியின் காவ்யம் ஸ்ரீமத் ராமாயணம்</u>

<u>ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் காவ்யம் கேசவ கீர்த்தனம் இராமகாவ்யம்</u>

<u>இவருடைய ஒற்றுமையான விவரங்களிலிருந்து ஸ்ரீத்யாகப்ரும்மம் ஸ்ரீவால்மீகி என்று நிருபணமாகிறது</u>

அதாவது ஸ்ரீமத் ராமாயணத்தை கிர்த்தனையாக வடித்துக் காட்டியுள்ளார். ஸ்ரீராமனை பற்றி வால்மீகி எழுத நினைத்தபோது பிரம்மாவால் ஞான திருஷ்டியை அடைந்த வால்மீகி விசித்தரமான பதச்சேர்க்கையுள்ள சுலோகங்களால் ராமசரிதத்தை செய்தார். இந்த காவியத்தை கற்று ஜனங்களுக்கு வெளிபடுத்தக் கூடியவர் யார் என்ற போது குசலவன் என்ற இரண்டு சிஷ்யர்கள் ராமாயணத்தை தங்களுக்கு உபதேசிக்கும்படி கேட்டனர். மதுரமான சாரீரம் உடையவர்கள் வேத வேதாந்தங்களை பூர்ணமாய் கற்றவர்கள். ஸகல வேதசாஸ்திரங்களில் அர்த்தங்களை வெளியிடும் காவ்யமான ஸ்ரீமத்ராமாயணத்தை அவர்களுக்கு உபதேசித்தார். படிப்பதற்கும், பாடுவதற்கும் மதுரமான <u>த்ருதம், மத்யம், விளம்பித</u> என்று <u>காலப் பிரமாணங்களுடைய ஷட்ஜம் முதலிய ஏழு ஜாதி (ராக முறை) களால் அமைக்கப்பட்டதாக தந்த்ரீவாத்யங்களுக்கும் லயத்திற்கும் ஒத்ததாக சிருங்காரம், கருணை, ஹாஸ்யம், வீரம், பயானகம், ரௌத்ரம், பீபத்ஸம், அத்புதம், சாந்த மென்ற நவரஸங்களால் அலங்கரிக்கப்பட்ட அந்த காவியத்தை அவர்கள் கற்றார்கள்.</u> சங்கீத சாஸ்திரத்தின் உண்மையை அறிந்தவர்கள் வீணை வாத்யம் வாசிப்பதில் நிபுணர்கள் <u>மந்திரம், மத்யும், தாரம்</u> என்ற ஸ்வரங்களின் உற்பத்தி ஸ்தானங்களை அறிந்தவர்கள் ராமாயணம் இத்துணையானது அதை வால்மீகி முனிவரால் குசலவனுக்கு போதிக்கப்பட்டது. <u>இந்த விவரங்களிலிருந்து ராமாயண ஸ்லோகங்கள் எப்படி அமைக்கப்பட்டிருந்ததுவோ அப்படியே ஸ்ரீத்யாகப்ரும்மம், கிர்த்தனைகள், த்ருதம், மத்ய, விளம்பிதகாலப் பிரமாணங்களிலும் ஷட்ஜம் முதலிய ஏழு ஜாதிகளால் (ராகமுறை) அமைத்தும், தந்த்ரீ வாத்யத்திற்கும் லயத்திற்கும் ஒத்ததாகவும் தந்த்ரீலயஸ்வர ராகவிநோதுலு' நாதோபாஸனாவில் உரைத்ததிலிருந்தும், கீர்த்தனைகளை த்ருத, மத்ய, விளம்பித காலப்ரமாணங்களில் அமைத்தும் ஏழுஜாதிகளின் தாள வகைகளை அமைத்து ராமாயண பாடல்களை அமைத்ததிலிருந்தும் இவரை வால்மீகி மறு அவதாரம் என்று உறுதியளிக்கின்றேன்.</u>

**வால்மீகியின் அவதாரம் பற்றிய சிறப்பேடு**

'த்யாயன்க்ருதே, யஜன்யஜ்ஞைஸ் - த்ரேதாயாம், த்வாப்ரேZர்ச்சயன்
யதாப் னோதி ததாப்னோதி கலௌ ஸங்கீத்ய கேசவம்'
க்ருதயுகத்தில் தியானத்தாலும்,
திரேதாயுகத்தில் யாகங்களால் ஆராதித்தும்,
துவாபரத்தில் அர்ச்சித்தும், எதை ஒருவன் அடைவானோ, அதை கலியில்
கேசவகீர்த்தனத்தாலேயே அடைவான்.

(விஷ்ணு புராணம்: 6.2.17)

க்ருதயுகத்தில்:- கிருணுமஹரிஷிக்கும் பாம்பிற்கும் பிறந்து வேடனால் வளர்க்கப்பட்டு 'மரா' ராம என்று தியானித்து புற்றிலிருந்து வெளிவந்ததால் வால்மீகி என்று பெயர் பெற்றார்.

த்ரேதாயுகத்தில்:- வால்மீகி பிறந்த பின் யாகங்கள் செய்து (முனிவர்கள் யாகங்களில் ஸ்ரேஷ்டமானவர்கள்)

துவாபரயுகத்தில்:- த்ரேதாயுக - த்வாபரயுக சந்த்யாம்சத்தில் மஹாவிஷ்ணு ராமாவதாரம் செய்தார். அந்த மஹாவிஷ்ணுவே ஹரி பகவானே, ரஜோகுணம் கொண்ட நான்முகன் உருவத்தை ஏற்று ப்ரஜாஸ்ருஷ்டி செய்தார். அந்த மஹாவிஷ்ணுவை, ஆதிபகவானை ரஜோகுணம் கொண்ட நான்முகனை அர்சித்து.

*கலியில், கலியுகத்தில்:- கேசவ கீர்த்தனத்தாலே எதை அடைவானோ (அது மோக்ஷம்) இங்கு விளக்கம் முடிவை அடைகிறது. அது (ஸ்ரீத்யாகப்ரும்மம் வால்மீகியின் அவதாரமாக பூவுலகில் பிறந்து) (கேசவ கீர்த்தனத்தாலே அடைவான்) மோக்ஷமடைந்தார்.*

*துவாபரத்தில் அர்ச்சித்தும் எதை ஒருவன் அடைவானோ அதைக் கலியில் கேசவ கீர்த்தனைத்தாலேயே அடைவான் என்றதற்கு ஒப்பாக (விஷ்ணு புராணம் 6.2.17)*

*த்வாபரத்தில் ஸூர்யகுலத்தில் அவதரித்த மஹாவிஷ்ணுவை, ராமனை மனத்தில் தியானித்து ஆராதித்து, பூஜித்து, மஹாவிஷ்ணுவின் சக்தி ஸூர்யனிடத்தில் மாத்திரம் இல்லை. ப்ரம்மா, விஷ்ணு, சிவன், மூவரிடத்திலும் அந்த சக்தி மூன்று வேதஸ்வரூபங்களாக விளங்குகிறது. ஆகவே அத்தகைய மஹாசக்தி கொண்ட மஹாவிஷ்ணுவின் அவதாரமான ஸூர்யகுல திலகனானராமனை பூஜித்து ப்ரம்மாவின் அநுக்ரஹத்தால் புவிக்கு ராமாயணத்தை படைத்தான் வால்மீகி. அந்த வால்மீகியே கலியில் கேசவ கீர்த்தனத்தாலே மேலான மோக்ஷத்தை அடைந்தான் என்றால் அது ஸ்ரீத்யாகப்ரும்மம் கேசவ கீர்த்தனத்தை பாடி ராமனை பாடி தெய்வாம்சம் பெற்றார் என்ற விஷ்ணுபுராண விளக்கத்தோடு இந்த ஆய்வின் முக்கியப் பகுதியான வால்மீகியின் அவதாரத்தை பற்றி விளக்க வேண்டியதாயிற்று. இது எனது குருகுலத்தில் எனது ஆசிரியை கும்பகோணம் ஜெயம்மாள் இட்டபணி ஆதாரம் சேர்த்தது விஷ்ணு சகஸ்ரநாமம், விஷ்ணுப்புராணம்.*

*அமைப்பு*
*செல்வி. அ.சூடாமணி*

*இங்கு ஒரு சிறப்பு விஷயத்தை கூறி எனது ஆய்வின் குறிக்கோளை நினைவு கூறுகிறேன். இந்த ஸ்லோகத்தில் புண்டரீகாக்ஷனை வாஸுதேவனைதான் ஸர்வம் என்று கூறுகிறது. விஷ்ணு புராணமும் கூறுகிறது. விஷ்ணு சகஸ்ரநாமமும் கூறுகிறது. இதையே ஸ்ரீத்யாகப்ரும்மம் கலியில் வாஸுதேவஸர்வம் என்கிறார். அவர் விஷ்ணு புராண மஹிமையை கண்டவர். கண்டு ரசித்தவர். ராமனை படைத்தவர். ஸ்ரீவால்மீகியின் மறு அவதாரமான ஸ்ரீத்யாகப்ரும்மம் விஷ்ணுவே வாஸுதேவன் என்றார். அவர் மஹிமையை ராமனாகக் கண்டு தரிசித்தார். அந்த ராமன் ஆராதித்த அரங்கனே இசைக்கு அதிபதி, திருவரங்கமே இசைக்கு ஆதாரம் என்கிறார்.*

## ஸ்ரீத்யாகப்ரும்மம் வால்மீகி என்று விளக்கப்படுகிறது

*இப்போது நடக்கும் ஸ்வேதவராஹகல்பத்தில் வைவஸ்வத மன்வந்தரத்தில் இருபத்தெட்டாவது சதுர்யுகத்தில் திரேதாயுகத்தின் முடிவில் வால்மீகி என்று ஒரு மஹரிஷி இருந்தார். அவர் எண்ணிறந்த வருஷங்களாக கடுந்தவம் செய்து பகவானுடைய கிருபையை பெறறார். அவருடைய ஆசிரமத்திற்கு ஒரு நாள் பிரம்மா வந்தார். அனேக கல்யாண குணங்களுடைய, ஸூரியனை ஆதிபுருஷனாக உடைய, இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ஓர் அரசர் ராமனென்று ஜனங்களால் அறியப்பட்டு வெகு கீர்த்தியுடன் அயோத்தியை ஆண்டு வருகிறார். இதர அரசர்களை போலிராமல் தம் வர்ணத்துக்குரிய அத்யயனம், தானம், யாகம், ராஜநீதி முதலிய தர்மங்களை என்றும் கைவிடாதவர் என்று நாரதர் வால்மீகிக்கு கூறினார். இப்போது விளக்கப்பட வேண்டியது ஓர் விஷயம் ஆகும்.*

*ஸ்ரீமத்ராமாயணத்தை இயற்றியவர் ஸ்ரீவால்மீகி பகவான். ஸ்ரீவால்மீகி மஹரிஷி வருணனுடைய பத்தாவது புத்திரனென்றும் வருணனுடைய புத்திரனனாக பிருகுவின் வம்சத்தில் பிறந்தவரென்று கூறப்படுகிறது. ப்ருகுவின் சகோதரனென்றும் பிரசேதஸின் புத்திரனென்றும் புராணங்களில் பலவிதமாக சொல்லப்படுகிறது. இவருடைய பெயர் ரிக்ஷன் இவர் தவம் செய்து கொண்டிருக்கையில் புற்று வளர்ந்து இவரை மறைத்துக் கொண்டது. பிறகு கடுமையான மழை பெய்து அது கரைந்து வெளிப்பட்டார். இந்த காரணத்தால் வருணனுடைய புத்திரர் என்று சொல்லுவதுண்டு. இவரது சரித்திரம் ஆனந்த ராமாயணத்தில் விரிவாக சொல்லப்படுகிறது. மேலும் கிருணு என்ற மஹரிஷி தவம் செய்து கொண்டிருக்கையில் அவருடைய கண்களிலிருந்து பெருகின வீரியத்தை ஒரு பாம்பு புஜிக்க அதன் வயிற்றில் நான் பிறந்தேன். பால்ய முதல் வேடர்களால் வளர்க்கப்பட்டேன். பிராமணனாய் பிறந்த நான் வளர்ப்பு முறையால் அனேக கெட்ட காரியங்கள் செய்து பின் ஸப்தரிஷிகளின் அருள்வாக்கால் மரா என்று ஜபிக்கச் சொன்னார்கள். அதுவே உன் நாமம் ஆக ராம என்று நான் மனத்தை நிலை நிறுத்தி ஆசையை விடுத்து யாவையும் மறந்து உன் தாரக நாமத்தை ஜபித்தேன். உன் ரூபத்தை தியானம் செய்தேன். உன் அனந்த கல்யாண குணங்களை நினைத்தேன்.*

வெகுகாலம் சென்றது. என்னை சுற்றி காடும் புதரும் மண்டியது. மஹரிஷிகள் அங்கே வந்து என்னை வெளிவரும்படி கூறினார்கள். நான் தியானம் கலைந்து வந்து அவர்களை நமஸ்கரித்தேன். அவர்கள் நீ தாரக மந்திரத்தை ஒரே மனதுடன் தியானித்தாய். பாவம் உன்னை விட்டு நீங்கியது. மஹாஞானியாகிறாய். மஹரிஷியானாய். எங்களுக்கு சமமாய் ராம பக்தர்களின் சிரேஷ்டனாய் முதலில் பிராமணனாய் பிறந்தாய் இப்போது புற்றிலிருந்து வெளிப்பட்டாய். இதே உனக்கு இரண்டாம் பிறப்பு. இந்த காரணத்தால் உனக்கு வால்மீகி என்று பெயர் வழங்கட்டும் என்று ஆசீர்வதித்தார்கள். பிரும்மாவால் விஸ்தாரமாகச் சொல்லப்பட்ட ராம சரிதத்தை அவருடைய உத்திரவால் நாரதர் வால்மீகிக்கு உபதேசித்தார். தன்னிடத்தில் சந்தோஷமடைந்த பிரம்மாவால் அருளப்பட்ட திவ்ய திருஷ்டியால் ராமசரிதம் யாவையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் பார்த்தார். அந்த ராமாயணம் என்னும் மஹாகாவியத்தை ரத்னமாக செய்தார். இப்போது விளக்கப்பட வேண்டியது க்ருதயுகத்தில் வால்மீகி தியானித்தது ராம நாமம், திரேதாயுகத்தில் வால்மீகியை யாகங்களால் ஆராதித்தது த்வாபரயுகத்தில் அர்ச்சித்தும் சூரியனை, விஷ்ணுவை, ராமனை, அர்ச்சித்தும் கலியில் கேசவ கீர்த்தனத்தாலேயே அடைவான் என்றதற்கொப்பாக ஸ்ரீத்யாகப்ரும்மம் ராமனை கீர்த்தனத்தாலே பூஜித்து ஸ்ரீத்யாகப்ரும்மமாக நாதப்ரும்மமாக ஸ்ரீவால்மீகி தான் என்று மறு அவதாரமாக ஸ்ரீத்யாகப்ரும்மமே பிறந்து உலகத்தை கேசவகீர்த்தனம் பாடி எல்லோரையும் புண்ணியம் பெறச் செய்தார் என்று கூறி ஸ்ரீத்யாகராஜர் வால்மீகியின் மறு அவதாரமே என்று நிரூபித்துள்ளேன்.

### ஸ்ரீவால்மீகியின் ப்ரபாவம்

இப்பூவுலகில் மலைகளும் நதிகளும் உள்ளளவும் ஸ்ரீமத்ராமாயண கதையும் ப்ரஸித்தியுடன் விளங்கி வரும் என்பது ஸ்ரீவால்மீகி பகவானுடைய திருவாக்கு. பிரம்மாவால் விஸ்தாரமாக செய்யப்பட்ட ராமசரிதத்தை அவருடைய உத்தரவால் நாரதர் வால்மீகிக்கு உபதேசித்தார். வால்மீகி வேத வேதாந்தங்களால் அறியக்கூடிய பரம புருஷனுடைய ஸ்வரூபத்தை அந்த உபதேசத்தால் ஸந்தேகவிபரீதமின்றி அறிந்தார். தன்னிடத்தில் சந்தோஷ மடைந்த பிரம்மாவால் அருளப்பட்ட திவ்யதிருஷ்டியால் ராம சரிதம் யாவையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் பார்த்தார். வேதங்களின் அர்த்தத்தையே விவரிக்கும் ராமாயணமென்ற காவிய ரத்னமாக அதை செய்தார். ராமாயணம் புருஷார்த்தங்களை உபதேசிக்கிறது. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷமென்ற புருஷார்த்தங்களை உபதேசித்து, முன் நடந்த சரிதத்தை வர்ணிப்பதே இதிஹாஸத்தின் லக்ஷணம். ஸ்ரீமத்வால்மீகி ராமாயணம், வியாஸருடைய பாரதம், கர்க்கஸம்ஹிதை முதலியவை இவ்விதமானவை. ராமம் பூர்வம், உத்தரமென்ற இரண்டு காண்டங்களுள்ளது. ராமனுடைய சரிதம் முழுவதும் பூர்வகாண்டம். வஸிஷ்டர் ராமனுக்கு வேதாந்த உபதேசத்தை வால்மீகி பரத்வாஜருக்கு உபதேசித்தது உத்தரகாண்டம். இதுவே யோகாவஸிஷ்டம், ஞானவஸிஷ்டம், பூர்வ காண்டத்தில் தர்ம, அர்த்த, காமமும், உத்தர காண்டத்தில் மோக்ஷமும் உபதேசிக்கப்படுகின்றன. மேலும் திராவிட தேசத்தில் விளங்கின ஆழ்வாராதிகள் வால்மீகி ராமாயணத்தை மோக்ஷோபாயமென்றும் வேதாந்தத்தின் முக்ய பாகமென்றும், சரணாகதி க்ரந்தமென்றும் எண்ணி பல உத்தம க்ரந்தங்களை அருளிச் செய்திருக்கிறார்கள். அது இதிஹாஸம் தானே என்று நினைக்கவில்லை. அது உபதேசக்ரந்தமென்று, குருவால் அநுக்ரஹிக்கப்பட்டு ரஹஸ்யார்த்தங்களுடன் சீடர்களுக்கு விதிப்படி உபதேசிக்க வேண்டுமென்று எச்சரித்திருக்கிறார்கள். இதனை வால்மீகியின் மறு அவதாரமான ஸ்ரீத்யாகப்ரும்மம் ஒவ்வொரு ஏகாதசி பஜனையிலும் புதுப்புது கீர்த்தனைகளை (ராமாயணக் கீர்த்தனைகள்) சீடர்களுக்கு முறைப்படி உபதேசமாக வீணையிலேயே வாசித்து விளக்கம் கூறி போதித்து இருக்கிறார். பூர்வகாண்டம் ஆறுகாண்டங்களாக பிரிக்கப்பட்டு 24,000 சுலோகங்கள் உள்ளது. இதன்படியே ஸ்ரீத்யாகப்ரும்மம் 24,000 பாடல்கள் பாடினார். வேதத்தின் உபதேசம் அரசனுடைய ஆக்ஞையைப் போன்றது. அதை இஷ்டப்படி மாற்றமுடியாது. இஷ்டப்படி அர்த்தங்களை செய்ய முடியாது. கீழ்ப்படிந்தே தீர வேண்டும். பலனை பற்றி விசாரிக்க முடியாது. உபதேசம் செய்யாவிட்டால் கெடுதி நேரும். செய்தால் பலன் கிட்டும். வேதத்திற்கு சமானமானது புராணங்கள், மூன்று லோகங்களிலும் நடக்கும் சகல விஷயங்களையும் அறிந்த நாரதர் வால்மீகியிடம் ஹே! வால்மீகி பிறர் சொல்லும் விஷயத்தை ஸந்தேக விபரீதமில்லாமல் கிரஹித்து ஞாபகத்தில் வைத்துக் கொள்ளக்கூடிய சக்தி உமக்கு பூரணமாக உள்ளது. ஆகவே ஸ்ரீராமனை பற்றி கூறுகிறேன் எழுதுங்கள் என்கிறார். ஸூரியனை ஆதிபுருஷனாக உடைய இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ஓர் அரசர் ராமனென்று ஜனங்களால் அறியப்பட்டு வெகுகீர்த்தியுடன் அயோத்தியை ஆண்டு வருகிறார். ஸாமுத்ரிகாசாஸ்திரத்தில் சொன்ன ஸகல உத்தமலக்ஷணங்களும் பொருந்தியவர். தன் நிஜ ஸ்வரூபத்தை மறவாதவர் சாஸ்திரங்களின் உட்கருத்தை கண்டவர். யாவராலும் பூஜிக்கத் தகுந்தவர். இப்படிப்பட்ட ராமரை நாரதர் வால்மீகி பகவானை எழுத சொன்னார். அதே நாரதர் வால்மீகியின் மறு அவதாரமான ஸ்ரீத்யாகப்ரும்மத்தை ராமாயணத்தின் சாரமான விஷயத்தை பாடும்படி கூறி நாரதீயம், ஸ்வரார்ணவம் முதலிய நூல்களை அளித்தார். மேலும் வால்மீகி பற்றிய விவரத்தை அவருக்கு நாரதர் நினைவுகூர்ந்தார்.

''எந்த ஒரு புண்யம் செய்ய க்ருதயுகத்தில் பத்து ஆண்டுகள் பிடிக்குமோ - அதை த்ரேதாயுகத்தில் செய்ய ஒரே ஆண்டில் பெற்றுவிடலாம். அதையே த்வாபரயுகமானால் ஒரு மாதத்தில் ஈட்டிவிடலாம். அதையே கலியுகமானால் ஒரே நாளில் அந்த புண்ணியத்தை சம்பாதித்து விடலாம்.'' க்ருதயுகத்தில் யோக நிஷ்டையிலிருந்து த்யானம் செய்து (வேடனாகயிருந்து யோகநிஷ்டையில் மரா, மரா என்ற எழுத்து ராம என்று தாரக மந்திரமாகியது) வால்மீகியாகி, த்ரேதாயுகத்தில் யாகம் செய்து (வால்மீகி த்ரேதாயுகத்தில் பிறந்தார் யாகம் செய்தார்) த்வாபர யுகத்தில் அர்ச்சித்து ஸ்ரீமஹாவிஷ்ணு ப்ரும்மாவாக இருந்து ஸ்ருஷ்டியை செய்கிறார். மூவுலகங்களையும் சிருஷ்டியை செய்த அந்த ப்ரம்மாவையும் (ஸுர்யகுல திலகனான ராமன் விஷ்ணு ஆவான்) ஆகவே ஸுர்யனையும், விஷ்ணுவான ராமனையும் அர்ச்சித்தும் வால்மீகி முனிவர். கலியில் கேசவ கீர்த்தனையால், கேசகனுடய (நாம ஸங்கீர்த்தனம் செய்வதாலே கிடைத்துவிடும்) விஷ்ணு புராணம் கூறுகிறது. (இந்த மேற்படி வரிகளுக்கு ஒப்பாக ஸ்ரீத்யாகப்ரும்மம் வால்மீகி என்று தெரிந்து கொண்டு கேசவகீத்தனைகளான ஸ்ரீமத்ராமாயணத்தை கீர்த்தனைகளாக வடித்து பாடினார். இதனின்று புராணத்திலிருந்து ஸ்ரீவால்மீகியே தியாகப்ரும்மம் என்பது உறுதியாயிற்று) மேற்படி விஷ்ணு புராணத்தில் இதை மேற்சொன்னதை க்ருத, த்ரேதாயுக, த்வாபர, கலியுக விஷயத்தை வேதவியாஸர் நதியில் நீராடியபோது முனிவர்களுக்கு கூறினார். நிற்க.

பகவானை அடைய விரும்புவோர்கள் உச்சரிக்கும் மஹாமந்திரம் ஓம் நமோபகவதே வாஸுதேவாய என்னும் த்வாதசாக்ஷரீ மஹாமந்த்ரமாகும். இதில் வரும் பகவான், வாஸுதேவன் ஆகிய இரண்டு பதங்களும் ஸுக்ஷ்மமான உட்கருத்துக்கள் உண்டு. ஆகவே வாஸு தேவ பகவான் பக என்பது - ஞானம் சக்தி, பலம் ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் என்று ஆறு குணங்களைக் குறிக்கும். இவை அந்த விஷ்ணுவினிடத்தில் குடிகொண்டிருப்பதாலும் சமஸ்தஜீவர்களின் உற்பத்தி, அழிவு, வருதல், போதல், வித்யை, அவித்யை ஆகிய இந்த ஆறு அம்சங்களையும் அவன் ஒருவனே அறிவான். பரமாத்மா ஸர்வவாந்தர்யாமியாக எல்லா உயிரிடத்தும் வாஸம் செய்கின்றான். எல்லா உயிர்களும் எந்த பரமாத்மாவிடம் வாஸம் செய்கிறதோ அந்த பரமாத்மாவே வாஸுதேவன் ஆகிறான் (விஷ்ணுவே, பிரம்மா, சிவன் விஷ்ணு) மகாவிஷ்ணுவே ஆகிறார். ஆகவே வாஸுதேவஸர்வம் என்று கூறுகிறார் ஸ்ரீத்யாகப்ரும்மம். ஆக புராண இதிஹாஸத்திலிருந்து ஸ்ரீத்யாகப்ரும்மம் ஸ்ரீவால்மீகியின் மறு அவதாரம்என்று தெளிவுபடுத்தப்படுகிறது இந்த ஆய்வில்.

இதில் முக்கியமான விஷயம் என்னவென்றால்

க்ருதயுகத்தில் - வேடன் த்யானம் - வால்மீகி

த்ரேதாயுகத்தில் - வால்மீகி யாகம் செய்தார். வால்மீகி ஆசிரமத்தில் சீதை லவகுசருடன் இருந்தார்.

த்வாபரயுகத்தில் - பிரம்மா, சிவன், விஷ்ணு மூன்று வேதஸ்வரூபங்களாக விளங்குகிறார்கள். ஸுர்யனிடத்திலும் விஷ்ணுவின் சக்தி இருப்பதால் வால்மீகி தனக்கு ஸ்ரீமத்ராமாயணத்தை பணித்தமைக்கு பிரம்மாவுக்கும்,

சிவன், விஷ்ணு (ஸுரிய நாராயணனை அர்ச்சித்தும்) கலியில் நாம ஸங்கீர்த்தனம் செய்து ஸ்ரீத்யாகப்ரும்மம் பிரம்ம, விஷ்ணு, சிவன் மூவரையும் ஸ்தோத்தரித்து கீர்த்தனம் பாடி ஸ்ரீமத்ராமாயணத்தை கீர்த்தனையாக புனைந்து தன்னை வால்மீகி என்பதனை உலகுக்கு உணர்த்தினார்.

''ராமகாவியம்'' எழுதிய புண்யம் வால்மீகிக்கு கிடைத்தது. ராமாயண கீர்த்தனை செய்த புண்யம் வால்மீகிக்கு கிடைத்தது. ராமாயண பாராயணம் செய்து இராமபிரானை ஸேவித்த புண்ணியம் வால்மீகிக்கு கிடைத்தது. ராமாயண கீர்த்தனையால் ராமபாராயணம் செய்த புண்யம் வால்மீகியாகிய ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு கிடைத்தது. ஆகவே ஸ்ரீத்யாகப்ரும்மம் வால்மீகியேதான் என்பது ஆதாரத்துடன் நிருபணம் செய்துள்ளேன்.

ஆய்வின் முக்கிய அமைப்புப் பகுதி
செல்வி அ.சூடாமணி

## ராமாயணம் வேதத்தின் வ்யாக்யானமே

வேதத்தின் சாரமே ப்ரணவம் ப்ரவணத்தின் வ்யாக்யானமே காயத்ரீ. ஏழு கோடி மஹா மந்திரங்களில் அது முதன்மை வாய்ந்தது. அதன் 24 அக்ஷரங்களும் ராமாயணத்தின் 24,000 சுலோகங்களில் ஒவ்வொரு ஆயிரத்தின் அத்யக்ஷரங்களாக மஹரிஷியால் அமைக்கப்பட்டிருக்கின்றன. அந்த மஹரிஷி ஸ்ரீவால்மீகி ஆவார். இதே போன்று ஓம் என்னும் ப்ரணவ மந்திரத்தின் மூலாதார மந்திரமான அச்சுதமத்யமத்தை கொண்டே இசை உய்விக்கப்பட்டது என்பது எனது அன்னையின் கூற்று. ஓம், ஓம், ஓம் என்று ஒலியை நாபியிலிருந்து ஓம் என்ற ஒலியை கூட்டிக்கொண்டே சென்று அதனை ப்ரமரந்தத்தில் முடித்து அந்த பரம்பொருளை அடைவதே யோகிகளுக்கு சாத்தியமானது. ஸ்ரீத்யாகப்ரும்மம் ராமாயணத்தை கீர்த்தனை வடிவமாக்கி வேதத்தின் வ்யாக்யானமாக நமக்கு அளித்து தான் நாதபிரும்மம் என்று நமக்கு உணர்த்தியுள்ளார். மேலே சொன்ன ப்ரணவமந்திர தத்துவமே அவரது உயர்ந்த சித்தாந்தம். (ராம ராம என்ற நாமம்) அஷ்டாக்ஷர பஞ்சாட்சரத்தின் கூட்டு எழுத்தே ராம நாமம் என்று நமக்கு உணர்த்தி இந்த ராம நாம தாரக மந்திரம், இந்த ராமாயணம் வேதத்தின் வியாக்யானம் என்று, தான் வால்மீகி என்பதையும் இங்கு மறைமுகமாக கூறுவதை நாம் போற்ற வேண்டியதாகும். ப்ரணவத்தின் வியாக்யானமே காயத்ரீ, ஏழுகோடி மஹா மந்திரங்களில் முதன்மையானதோ அதேபோல் 24 ஸ்வரங்களுக்கும் முதலும் முடிவானது முடிவானவள் காயத்ரீ 24 ஸ்ருதிக்கு, 24 அக்ஷரங்களுக்கு அந்த 24 அக்ஷரங்களின் முதல் எழுத்தை கொண்ட கீர்த்தனைகள் பாடியுள்ளார். இவர் 24,000 கீர்த்தனைகள் புனைந்தார் என்று இவரது சரித்திரம் கூறியது. 24 எழுத்துக்கள் கொண்ட காயத்ரீ மஹா மந்திரத்தின் ஒவ்வொரு எழுத்தையும் ஒவ்வொரு ஆயிரத்தின் முதல் எழுத்தாக அமைத்து ராமாயணத்தில் வால்மீகி பகவான் இயற்றியிருக்கிறார். அவ்விதம் அமைந்த 24 ஸ்லோகங்களே காயத்ரீ ராமாயணம் எனப்படுகிறது. இந்த வால்மீகி ராமாயணமே வேதத்தின் வியாக்யானமே என்கிறார் ஸ்ரீவால்மீகியாகிய ஸ்ரீத்யாகப்ரும்மம்.

## நாதப்ரும்மம் ஸ்ரீத்யாகப்ரும்மம்

### நாதயோகி

ப்ரும்மா முதலான தேவரும், அகஸ்தியர், நாரதர் முதலான தேவரிஷிகளும் மார்கண்டேயர் முதலிய முனிபுங்கவர்களும், தும்புரு, கின்னரர்களும், சார்ங்கதேவர் முதலான ஸங்கீத ஸாஸ்த்திர வித்பன்னர்களும், உலகை மயக்கிவிக்கும் உயர்திறம் படைத்துள்ள ஒலி வடிவமாய, வடிவமான ஸங்கீதத்தில் ஸ்ரீபகவானது பரமகல்யாண குணங்களை சேர்த்துப் பாடி பேரானந்தப் பெருங்கடலில் மூழ்கிக் கிடந்தனராம். அப்படிப்பட்ட ஸங்கீதத்தை வழிபட்டு தானும் அவ்வழி நடந்து நாதப்ரும்மமாகி, நாதயோகி, ஆனவர் ஸ்ரீத்யாகப்ரும்மம். இறைவன் நாதவடிவானவன். நாதநாம நமச்சிவாயவே என்பதிலிருந்து இறைவன் நாதவடிவானவன் என்பது தெரிகிறது. பரந்தாமன் பரமபதத்திலோ கயிலாயத்திலோ, யோகிகளிடத்திலோ மாத்திரம் இல்லாமல் பரமபாகவதரிடத்திலும், பகவான் திருநாமத்தை நாம ஸங்கீர்த்தனம் செய்பவரிடத்திலும் இருக்கிறான். ஆகவே பகவானை நாமஸங்கீர்த்தனம் செய்வதானது உயர்ந்தது என்பது நமக்கு உரைத்து உணர வைக்கிறார். ஸ்ரீத்யாகப்ரும்மம் ஒரு நாதயோகி என்பது தெளிவாகிறது இப்படியே ஆழ்வார்கள் இசையால் தமிழிசையால் பகவானின் கல்யாண குணங்களை சொல்லி நாதவடிவம்தான் நம்மை உய்விக்கும் என்பதனை பாசுரங்கள் மூலம் உரைக்கிறார்கள். தமிழிசையை பாடி நாதவடிவமே ஈசான் என்று கூறுகிறார்கள். ஆழ்வார்கள் பாசுரத்தால் இசைப்பாடி இசை வடிவானவன் அரங்கனே என்று உறுதிபடுத்தி இருக்கிறார்கள். இதுவே ஸ்ரீத்யாகப்ரும்மம், நாதவடிவானவன், இசைக்கு அதிபதி அரங்கள் என்பதனை நமக்கு பல கீர்த்தனைகளில் எடுத்துரைக்கிறார். நாதயோகி நாதப்ரும்மமாகிய ஸ்ரீத்யாகப்ரும்மம்.

''சைதன்யம் ஸர்வபூதாகம்
நிர்வ்ருதிர் ஜகதார்ம நாம்
நாப்ரும்ம ததாநந்தம்
அத்விதீயம் உபாஸ்மஹே''

எது அனைத்து சீலரிடத்திலும் ஆன்மாவாய் விளங்குகின்றதோ, எது எவ்வுலகத்தும் வாழும் உயிரினங்கட்கு இணையற்ற இன்ப வெள்ளத்தை அள்ளிச் சொரிவதாய் உள்ளதோ, எது நாத ஒலி வடிவாயும், ஆனந்தமயாமன அரும்பொருளாயும் உளதோ, அந்த இரண்டற்ற தனித்தியங்கும் முழு முதற்பொருளை அன்புடன் வழிபடுவோம். இதனையே ஸ்ரீத்யாகப்ரும்மம் தன் கீர்த்தனையில் 'நாதோபாஸனா' என்கிறார். நாத உபாஸனையால் மோக்ஷம் கிட்டுகிறது என்று தெளிவாக்கிய நாதயோகி
பசுர்வேத்தி சிசுர்வேத்தி வேத்திகான ரஸம்பணீ -

குழந்தை இசைகேட்டு அழுகையை நிறுத்துகிறது. கொடிய விலங்குகள் இசையை கேட்டு மயங்குகிறது. நல்ல பாம்பும் மகுடி நாதத்தில் மயங்குகிறது. நாதத்தால் இந்த உலகை ஞான வழிபடுத்த முடியும். நாத உபாஸனையால் உலகை உய்விக்கச் செய்ய முடியும். நாதத்திற்கு இருப்பிடம் ஆகாயம். அண்டத்தில் இருப்பதுதான் பிண்டத்தில் இருக்கிறது என்பார்கள். அதன்படி இந்த நாதம் நமக்குள்ளும் இருக்கிறது. சகல ஜீவராசிகளிடத்திலும் இருக்கிறது. அதனால்தான் மனதை நாத வழியில் வயப்படுத்த வேண்டும் என்கிறார் நாதயோகி ஸ்ரீத்யாகப்ரும்மம்.

யாகம் - கர்ம காரியம் செய்பவர்களுக்கு

யோகம் - தியானமுறைகளில் ஈடுபடும் யோகீஸ்வரர்களுக்கு

தியாகம் - அனைத்தையும் துறந்துவிட்ட நிலையில் உள்ள சன்யாசிகளுக்கும்

போகம் - உலக இன்பம் துய்க்கும் சம்சாரிகளுக்கும் ஒருங்கே சுகத்தை அளிக்கும்

சக்தி வாய்ந்த இந்த நாதம் நாதத்தின் மகிமையை ராகஸுதாரஸ கீர்த்தனையில் பாடுகிறார், கூறுகிறார் நாதபிரும்ம ஸ்ரீத்யாகப்ரும்மம் மந்திர சப்தங்களுக்கு எப்படி கண்டமாயிருந்து கொண்டே அக்கண்டத்தில் சேர்க்கிற சக்தியிருக்கிறதோ அப்படி சங்கீதரசப்தங்களுக்கும் சக்தி இருக்கிறது. ஸ்வரஸ்தானம் ஒன்றை தீர்க்கமாக - கோர்வையான சுருதியை சேர கூட்டியோ அல்லது கமகமாக நன்றாக இழைத்தோ மூர்ச்சனையின் உச்ச நிலையை ஸ்பஷ்டமாக தொட்டு விடுகிற போது கண்டமே அகண்டாநுபவத்தில் சேர்ந்துவிடுகிறது. இந்த அகண்டாநுபவம்தான் அத்தனை வேத, வேதாந்த, யோக, மந்திர, தந்திர, சாஸ்திரங்களுக்கு லக்ஷியமாயிருப்பது. இதை சாதித்து தரும் ஸ்தானத்தில்தான் ஓசை, ஒலியை, நாதப்ரும்மம், சப்தகும்பம் என்று ஸாக்ஷாத் பரமாத்மாவாகச் சொல்வது, இந்த நிலையை கொண்டவர்தான் ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதப்ரும்மம் என்று பரமாத்வாக ஸேவிக்க வேண்டியவர். இந்த பரமாத்மாவாகச் சொல்வது கோல் ஆக நினைத்து தாது என்ற இந்திரியத்தின் மூலம் மனஸின் இந்திரிய சுகத்துக்காக இன்றி ஆத்ம சௌக்யத்திற்காக, சங்கீத அப்யாஸம் பண்ணும்போது, அது நாதோபாஸனை நாதயோகம் என்ற உயர்ந்த பெயரைப் பெருகிறது. இந்த நாதயோகம் செய்ய நமக்கு பல கீர்த்தனங்களில் புரிய தெளிய வைத்திருக்கிறார் ஸ்ரீத்யாகப்ரும்மம். ஆகவே இவரை நாதயோகி என்று சிறப்பாக தனிப்படுத்திக் கூறுவது, கூற வேண்டியது நமது கடன். அர்த்தத்தோடும் அக்ஷரத்தோடும் கலந்து மனமுருகிப் பாடும்போது, பாடுகிறவருக்கும், கேட்கிற ஸதஸ் முழுவதற்கும் பரமாத்மாவிடம் தோய்ந்து நிற்கிற பெரியதான இன்பம் கிட்டுகிறது என்கிறார் காஞ்சி மஹா பெரியவர் அவர்கள். இதையே ஸ்ரீத்யாகப்ரும்மம் **'நாதஸுதாரஸம் பிலநு'** என்ற ஆரபிக் கீர்த்தனையில் பாடுகிறார். வேதம், புராணம், ஆகம ஸாஸ்திரங்கள் இவற்றிற்கும் ஆதாரமான நாதமென்னும் அமுத ரசமே இவ்வுலகில் மானிட உருவத்துடன் அவதாரம் எடுத்தது. **''ஸ்ருஷ்டி காலத்தில் வேதம் ஸப்தரூபமாகத் தோன்றியது''** ப்ரளய காலத்தில் இது மறையும். திரும்பவும் உலகம் தோன்றும்போது இது தோன்றும். இப்படி பெரியவர்கள் கூறுகிறார்கள். காவியத்திலும் சாஸ்த்திரத்திலும்கூட வேதத்திற்கு பாஷ்யமாக எழுந்துள்ள நூல்களிலும் கூட இப்படியே கூறப்படுகிறது. நாதயோகமாக நமது சங்கீதத்தை முன்னோர்கள் சாதனை செய்து வந்திருக்கிறார்கள். ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதயோகமாக சாஸ்திரீய சங்கீதத்தை பாடி நாதயோகியாகியது எடுத்துகாட்டாகும். வேதமந்திரங்களில் வைகரீ, பச்யந்தீ, மத்யமா, பராவாணீ முதலிய சொற்கள் இசைகலையை விவரிக்க வழங்குகின்றன. யாகங்களிலும் உற்சவங்களிலும், பிரசாரக என்றும் பாடகர்கள் பங்கெடுத்துக் கொள்வது வழக்கமாக உள்ளது. ராமாயண காலத்தில் சங்கீதம் நல்ல வலிமை, செல்வாக்கை பெற்றுயிருந்தது. வீணை கையில் வைத்துக்கொண்டு இசையாலேயே ஸ்ரீமத்ராமாயணத்தை பாடினார்கள். லவகுசர்கள் என்று இதிகாசம் கூறுகிறது. இந்த ராமாயணத்தின் கதையில் கதாசிரியர் வால்மீகி அவரே ஸ்ரீத்யாகப்ரும்மம், ஒரு நாதயோகி என்பது புலப்படுகிறது. நமக்கு அமைதி, நிம்மதி, ஆரோக்யம், மனத்தூய்மைக்கு, இசை அனுபவம் துணை புரியும் என்றும் இசையாலேயே யாவற்றையும் பெற முடியும் என்றும் கூறுகிறார். நாதப்ரும்மம் உணர்த்தியும் இருக்கிறார். இசைப்பற்றியது:

1. நாதத்தைவிட சிறந்த மந்திரமில்லை.
2. ஆத்மாவைவிட உயர்ந்த இஷ்ட தெய்வம் வேறு இல்லை.
3. திருப்தியைவிட சிறந்த சுகம் வேறு இல்லை.
4. நாத அனுசந்தானத்தைவிட - பாடுவதைவிட - மேலான பூஜை வேறு ஏதும் இல்லை.

பூஜையைவிட கோடி மடங்கு சிறந்தது ஸ்தோத்திரம். ஸ்தோத்திரத்தைவிட கோடி மடங்கு மேலானது ஜபம். ஜபத்தை விட கோடி மடங்கு உயர்வானது ஸங்கீதம். இவற்றை இவரது கீர்த்தனையாலேயே வடித்து கூறியுள்ளார். இப்படிப்பட்ட இந்த மஹானை நாம் நாதயோகி, நாதப்ரும்மம் என்று திட்டவட்டமாக உலகுக்கு கூற கடமைப்பட்டவர் ஆவோம். ஆக ஸ்ரீத்யாகப்ரும்மம் ஒரு சிறந்த நாதயோகி ஆவார் என்பது ஆய்வின் முடிவு.

## இசையில் ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதப்ரும்மம் என்பதின் முடிவுரை

ஸ்ரீத்யாக ராஜ ஸ்வாமிகள் ஒரு கனவு கண்டார். அந்த கனவு பற்றி ''கிரிபைநல'' என்ற கீர்த்தனத்தில் சஹானா ராகத்தில் வர்ணித்துள்ளார். அதாவது இன்னும் 10 தினங்களில்தான் ஸ்ரீராமபிரானின் திருவடித் தாமரையை சேர்வார் என்பதே அக்கனவு. மறுநாள் புஷ்ய சுத்த ஏகாதசி வெகு விரிசையாக நடந்தேறியது. இரவு பஜனை முடிந்தது. எழுந்து செல்லவிருந்த சீடர்களை பார்த்து கையமர்த்தினார் ஸ்வாமிகள். வருகிற புஷ்ய பகுள பஞ்சமி நாளன்று இங்கு ஓர் அற்புதம் நடக்கவிருக்கிறது. அனைவரும் தவறாது வரவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதன்பிறகு சதுர்த்தி அன்று பரமஹம்ஸ பிருமானந்தேந்திர ஸ்வாமிகளை தன் இல்லத்திற்கு தருவித்தார். தனக்கு சந்நியாசம் அளிக்க வேண்டினார். அவர் நீர் ஜீவன் முக்தர் ஆயிற்றே உமக்கு சந்நியாஸம் தேவையில்லை என்கிறார். ஆனால் ஸ்ரீத்யாகராஜர் வற்புறுத்தலில் அவருக்கு சந்நியாஸம் வழங்கினார். ஸ்ரீத்யாகராஜருக்கு நாதப்ரும்மானந்தா என்ற திருநாமத்தை சூட்டினார். ஸ்ரீத்யாகப்ரும்மம் நான் நாளை முற்பகல் 11 மணி அளவில் அடியேனை ராமபிரான் அழைத்துக் கொள்வதாக வாக்களித்துள்ளார். ஆகவே இப்போதிலிருந்தே இடைவிடாது பஜனை நடந்தேரட்டும் என்கிறார். அன்று காலை ''பரமாத்முடு'' வாகதீஸ்வரி, 'பரிதாபமு' மனோஹரி பாடல்களை பாடினார். அப்போது சிஷ்யர்களும் பாடினார்கள். அப்போது ஸ்ரீத்யாகப்ரும்மம் யோக சமாதியில் சூழ்ந்தார். அக்குறிப்பிட்ட நேரத்தில் சுவாமிகள் சிரஸின் உச்சியிலிருந்து ஓர் அமானுஷ்யமாக ஒலி எழுந்து ஒளிப்பிழம்பு உச்சந்தலையிலிருந்து பளிச்சிட்டு மெதுவாக வானைநோக்கி மேலே எழும்பி வடதிசை நோக்கிச் சென்று மறைந்தது. அவர் மறைந்த தினம் ஜனவரி 6.1.1847 ஆகும். அவருக்கு பரமஹம்ஸ பிரம்மானந்தேந்திர ஸ்வாமிகள் நாதப்ரும்மானந்தா என்ற திருநாமத்தை சூட்டியதில் ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதப்ரும்மமாகவே விண்ணுக்கு எழுந்தருளினார் என்ற உணர்வு நம்மை சிலிர்க்க வைக்கிறது.

## ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடிய பாடல்களும் அவற்றின் சிறப்பும்

## 72 மேள ராகங்களிலும் கீர்த்தனைகளை ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடியுள்ளார்

ஸ்ரீத்யாகப்ரும்மம் ஸ்வரார்ணவம் கற்றார். கற்றுவுணர்ந்த பின் 'ஸ்வரராக ஸுதா' என்ற கீர்த்தனையில் சரணத்தில் தெரியப்படுத்துகிறார். ஸ்வரராகஸுதா என்று ஆரம்பித்து ஸ்வரம், ராகம் ஆகியவற்றின் அமுத ரஸத்துடன் கூடிய பக்தியே சுவர்க்கம், மோக்ஷம் இரண்டையும் அளிக்கவல்லது. மூலாதாரத்தில் பிறக்கும் நாதத்தை அறிவதே மகிழ்ச்சி தரும் மோக்ஷம் என்கிறார். மேலும் கோலாகலம் நிறைந்த ஏழு ஸ்வரங்களின் உற்பத்தி ஸ்தானங்களை தெரிந்து கொள்வதே ஒருவனுக்கு மோக்ஷமாகும். *அனேக ஜென்மங்களுக்கு பிறகு ஒருவன் ஞானியாக விளங்குவது* மோஷமடையும் வழியாகும். ஆயினும் இயற்கையான பக்தியுடன் இராக, ஞானம் படைத்தவன் அதிவிரைவில் முக்தன் ஆகிறான். ஸ்வரார்ணவத்தில் சிவன் - பார்வதி சம்பாஷணை மூலம் சங்கீத சாஸ்த்திரம் விளக்கப்பட்டது என்பதையும் அதே கீர்த்தனையிலிருந்து அறிகிறோம். அடுத்து நான் கூற உள்ளது இந்த ஸ்வர ராகஸுதாவின் அனேக ஜென்மங்களுக்குப் பிறகு *ஒருவன் ஞானியாக விளங்குவது* மோக்ஷமடையும் வழியாகும் என்கிறாரே இங்குதான் கவனிக்க வேண்டும், ஸ்லோகம்

த்யாயன் க்ருதேயஜன் யஜ்ஞைஸ் - த்ரேதாயாம்
த்வாபரே அர்ச்சயன்
யதாப்னோதி ததாப் னோதி கலௌ ஸங்கீர்த்ய கேசவம்

க்ருதயுகத்தில் தியானத்தாலும், த்ரேதாயுகத்தில் யாகங்களால் ஆராதித்தும், துவாபரயுகத்தில் அர்ச்சித்தும் எதை ஒருவன் அடைவானோ அதைக் கலியில் கேசவக் கீர்த்தனத்தாலேயே அடைவான் விஷ்ணு புராணம் (6,2,17) மேற்சொன்ன ஸ்லோகத்தின்படி கலியுகத்தில் ஸ்ரீத்யாகராஜனாக பிறந்து கேசவகீர்த்தனங்களில் சிறப்புறுவான் என்று அசரீரியின்படி மேற்சொன்ன வாக்கியத்தின்படி வால்மீகியானர் ஸ்ரீத்யாகராஜன் ஆக அவதரித்து கேசவ கீர்த்தனையாக சிறப்புற்று முக்தியடைந்தார் என்பது மேற்படி கீர்த்தனையில் அனேக ஜென்மங்களுக்கு பிறகு ஒருவன் ஞானியாக விளங்குவது மோக்ஷமடையும் வழியாகும் என்பதற்கு பொருந்தும். ஸ்ரீத்யாகப்ரும்மம் தன்னை வால்மீகி என்பதை எடுத்துக்காட்டிய க்ருதி ஸ்வராகஸுதாவாகும். அவர் 24,000 கீர்த்தனைகளை பாடினார். அவை தற்போது நம்மிடையே இல்லை. ஆனாலும் அவர் தன்னை வால்மீகி என்பதனை எடுத்துக்காட்டும் மற்றொரு விவரத்தை உங்களுக்கு ஸமர்ப்பிவிக்கிறேன். இராமாயணத்தை இருபத்தி நாலாயிரம் ஸ்லோகங்களாக வால்மீகி செய்தார். தாமும் இருபத்தி நாலாயிரம் கீர்த்தனைகளால் ஸ்ரீராமனை துதிக்க வேண்டும் என்று மனதில் உறுதி கொண்டார் ஸ்ரீத்யாகப்ரும்மம். இதிலிருந்து இவர் தன் முன் ஜென்மம் வால்மீகி என்று தெரிய வருகிறது. இவர் தாம் கொண்டுள்ள எண்ணம் எவ்வித இடையூரின்றி நிறைவேற 'கிரிராஜஸுதா தனய ஸதய' என்றும் பங்காள கீர்த்தனையை பாடி

விநாயகரையும் பின்பும் இராமனையும் பற்றி பாட ஆரம்பித்தார். இவரது சகோதரன் இவரை இரவு வெளியேற்றின போது இராமர் சீதை (ஆஞ்சநேயன்) வயோதிக தம்பதியாகவும் ஆஞ்சநேயன் சிறுவனாகவும் வந்து உணவு (சத்துமாவு) அளித்ததாக குறிப்பு கூறுகிறது. அப்போது வந்தது சீதாராமன் ஆஞ்சநேயன் என்பதை தெரிந்து கொண்டு மனம் நெகிழ்ந்து **'பவனுத'** என்ற மோகன ராக க்ருதியை பாடினார். ஆஞ்சநேயரை பற்றி **'கலுகுணபதநீரஜ'** பூரிணலலித ராகம் ஆதிதாள க்ருதியை பாடினார். ஸ்ரீத்யாகப்ரும்மம் ஆதியில் ஸ்ரீவால்மீகியால் ராமாயணம் நூறு கோடியாக செய்யப்பட்டது. இதன்படிதான் ஸ்ரீத்யாகப்ரும்மமும் நூறுகோடி ராமநாமம் ஜபித்ததாக எனது தாயாரின் குறிப்புப்படி எழுதியுள்ளேன். ஸ்ரீத்யாகப்ரும்மம் இலக்கியம் இசை இரண்டிலும் புலமை வாய்ந்த குடும்பத்தில் தோன்றியவராயிற்றே. சிறுவயதிலிருந்தே அப்போது வழக்கத்திலிருந்த சங்கீத நூல்கள் அனைத்தையும் படித்து முடித்தார். இவ்விதமாக சங்கீத சாஸ்திரத்தை முறையாக ஐயந்திரிபுற கற்றார். ஒரு கோடி ராமஜெபம் செய்து முதன்முதலில் **'ஏலநீ தயராது'** என்ற கீர்த்தனையை பாடினார். அவர் நூறு கோடியை முடித்ததும் கதவு தட்டும் சத்தம் கேட்டு சென்று அவரது மனைவி திறந்தார். ராம லக்ஷ்மணரை பார்த்தார். ஸ்ரீத்யாகராஜர் வருமுன் திரும்புவதைக் கண்டு கற்றை குழலோடு செல்வதை பார்த்து **'அலகலல்ல ஆடகனி'** கீர்த்தனையை பாடினார் என்று குறிப்புகள் தெரிவிக்கின்றன. இங்கு ஒரு விளக்கம் எல்லோருடைய குறிப்பும் தொண்ணூற்று ஆறுகோடி ராமஜெபம் ஸ்ரீத்யாகப்ரும்மம் செய்ததாக கூறுகிறதே தவிர <u>100</u> கோடி ராமஜெபம் செய்ததாக கூறுவது எனது குரு ஜெயம்மாள் அவர்கள் மட்டுமே ஏனெனில் ஸ்ரீமத் வால்மீகி சதகோடி ஸ்லோகம் பாடி ஸ்ரீமத் ராமாயணம் இயற்றினார் என்று ராமயணம் கூறுகிறது. ராமனின் அநுக்ரத்தை நினைத்து **'ராமநீஸமானமெவரு'**, **'மேருஸமானதிர'** **'கருணாசமுத்ர ராமா'** என்னும் பல கீர்த்தனைகளை பாடினார். மேலும் இவரது பாடல் மகாரஞ்ஜகமானது **'நகுமோமு'** ஆபேரி ராகப்பாடல் **'ரமிஞ்சுவா'** என்ற கீர்த்தனை நோட் போல பாடி அமைத்தார். அவரது துவாதசி பூஜை அன்று **'அம்மவாரம்மா'** கல்யாணி ராக பாடலை பாடும்போதும் மிகுந்த ரசனையாக இருக்கும் என்று பல குறிப்புகளை பார்த்தேன். மேலும் கல்யாணியில் **'ஏதாவுநரா.'** **'ஸ்வராகஸுதா'**, **'நன்னுபாலிம்பா'** இந்த பாடல்களை மனம் உருகப் பாடினார் என்று என் தாயாருக்கு அவர் குரு கற்றுத் தந்திருந்ததை எனக்கு என் தாயார் கற்று தந்திருக்கிறார்கள். அதில் உள்ள ராகச் சிறப்புகளை கமகங்களை கவனிக்கையில் எனக்கே மெய்சிலிர்க்கும். மேலும் **'ஈவஸுத நீ வண்டி'** என்ற சஹான பாடலில் நடை மிக அழகாக அமையப் பெற்றது. இது எனது தாயார் வீணையில் மாணவியருக்கு போதித்த பாடல். அவரது விக்ரகங்களை அவரது சகோதரன் காவிரியில் வீசி எறிந்தபோது அது கிடைத்தபின் மிகவும் சந்தோஷத்தோடு **'ராராம இண்டிதாக'** என்ற அஸாவேரி ராகப் பாடலை பாடி ஸ்ரீராகவனை வரவேற்றார். அதன்பின் **'கலிகியுண்டே'** என்ற கீரவாணி பாடலை பாடினார். அது மிகவும் ரம்யமான பாடல். ஆனந்தபைரவியில் மூன்று பாடலை மட்டுமே பாடினார். அந்த மூன்று கீர்த்தனைகள் ராம ராமநீவாரமு, க்ஷீரசாகரவிஹார, நீகே தெலிய மூன்று கீர்த்தனைகளையும் பாடி மேலே, எந்த கீர்த்தனையும் பாடவில்லை. அவருடைய மூன்று ஜென்மத்திலும் க்ருதயுகம் - த்ரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகத்தில் ராமாவதார வர்னணை த்வாபரயுகத்தின் க்ருஷ்ணா அவதார வர்னணை, த்ரேதாயுகத்தில் ராமர், ரங்கநாதர், க்ருதயுகம் ஆரம்பமாக இருப்பதால் (நாலிலும்) பரவாஸு தேவரை பற்றி கூறி வாஸுதேவ ஸர்வம் என்று கூறி நாராயணனை பற்றி கூறி அவனே அரங்கன் என்று கூறி ஸ்ரீரங்கத்தை கூறி ஸ்ரீ ரங்க விமானத்தை கூறி தன்னை வால்மீகி என்று கூறி கல்கி அவதாரமான வெங்கடேச பெருமாளை பாடி நம்மை பரவசப்படுத்தியுள்ளார். அவருடைய கீர்த்தனையில் வந்த சங்கதியே திரும்பத் திரும்ப வராமல் அமைத்து பாடியுள்ளார். மேலும் ஆஞ்ஜனேயர் மேல் கீர்த்தனையை பாடியுள்ளார். இவருடைய பாடல்கள் கருத்து பொருத்தியாக சில கீர்த்தனைகள் நீதியை போதிப்பதாக மனஸுநில்ப, த்யானமே வந்தனை செலுத்தவது எல்லா குருவையும் நமஸ்கரிக்க வேண்டி எந்தரோ மஹானுபாவுலு, முறையீடாக ஏபாபமு, பக்தி மார்க்கத்தை ராமநீயெட திலீபகம் ராகத்தில் சிறப்பாக பாடியுள்ளார். ராமநாம மஹிமை எவரநி கீர்த்தனை ஸுகியெவ்வரோ. மேலும் ராமகதாஸுதா, இந்த ஸௌக்யமநிந்நே, ஸ்ரீராம<u>பாதமா</u> இங்கு கவனிக்க வேண்டும். பாதமா ஸ்வராக்ஷரக் குறிப்பில் இந்த ராகத்தின் சூட்க்ஷமத்தை தெளிவாகக் காட்டுகிறார். தவதாஸோகம், பண்டுரீதி, ஏதாவுநர, ஏடிஜன்மமிதி, ராமாபிராமா, இந்த கீர்த்தனைகள் எல்லாம் நீதி, வந்தனை, கடவுளிடம் முறையிடுதல் பக்தி மார்க்கத்தை, நாமத்தின் மஹிமையை வந்தனத்திற்கு ராராமாயின்டி, வந்தனமு, ஆத்மநிவேதனமாக அனேக பாடல்கள்) மேற்சொன்னவைகள் சிகரம் போன்றது. இவருடைய பிரஹலாத பக்தி விஜயத்தில் 'ஸ்ரீகணபதி ஸௌராஷ்டிரம் க்ருதி' எடுப்பிலேயே கீர்த்தனையில் ராக ப்ரஸ்தார கிரமத்தை காட்டுகிறார். வாஸுதேவயனி, வந்தனமுரகுநந்தன சஹானாவின், விஸ்தார அழகு, நாரத முனிவெட, ஏடிஜென்ம, நன்னுவிடசி ரீதிகௌளை, இதுபோல் எந்தவாக்கேயகாரர்களாலும் அனுபவித்துப் பாட முடியது. ராராமாயின்டி, சல்லரேராமாவில் ஹரியை எப்படி பலவிதமான மலர்களால் அர்ச்சிக்க வேண்டும் என்கிறார். இங்கு ஒரு திருஷ்டாந்தம். க்ருதயுகத்தில் த்யானித்து த்ரேதாயுகத்தில் - யாகம் செய்து, த்வாபரயுகத்தில் அர்ச்சித்து சல்லரேராமாவில்

ஹரியை எப்படி பலவிதமான மலர்களால் அர்ச்சிக்க வேண்டும் என்கிறார். இது த்வாபரயுகத்தில் அர்ச்சித்து என்ற இடத்திற்கு ஒற்றுமைப்படுத்தப்படுகிறது. உத்ஸவசம்பிரதாயத்தில் க்ருதி ஹெச்சரிககரராராஹோ ராமசந்திரா இந்த பாடலை திருவரங்கத்தில் புறப்பாட்டில் வீணையில் வாசிக்கிறார்கள். இது கலியில் கேசவ கீர்த்தனைக்கு ஒற்றுமைப்படுத்தப்படுகிறது. இந்த விதமான தொகுப்புகளிலிருந்து ஸ்ரீத்யாகப்ரும்மம் வால்மீகி என்பது உறுதியாகிறது. சீதா கல்யாண வைபோகமே என்ற உத்ஸவ ஸம்பிரதாயமே உலக சம்பிரதாயத்திற்கு பாடும் பாடலாக பாடப்படுகிறது. சோபானே உய்யாலலூகவய்ய கீர்த்தனைகளில் சோபானை பந்துவராளி எடுப்பு எவ்வளவு விதமான வகையில் எடுத்தால் களைகட்டும் என்ற வண்ணமும் நீலாம்பரி ராகத்தின் சாயல் மிளிரும் வண்ணமும் பாடியுள்ளார். மேலு கோவய்ய, மேலுகோதயாநிதி கீர்த்தனைகள் இவ்வளவு பாடியும் திருப்தியடையாது போல் அவரது சிந்தனை சதா ராமநாமத்தில் இருந்தது என்றால் மிகையாகாது. பாட எளிமையான கீர்த்தனைகள் இவருடையது. இவர் 72 மேள ராகத்தில் பாட்டுகளை பாடியுள்ளார். இதற்கான குறிப்புரை தொடரப்படும்.

ஸ்ரீத்யாகராஜருடைய கீர்த்தனை விசேஷலயக் கோர்வை கொண்டதையடுத்து பஞ்சரத்னம் கீர்த்தனை எப்படியோ அப்படி ஸ்ரீரங்க பஞ்சரத்னம் பற்றி ஒரு கண்ணோட்டம்.

பஞ்சரத்னம் - 'ஜகதாநந்தகா' இதில் கோவிந்தா என்பது 24வது ஸ்ருதி என்பதை அவரது பஞ்சரத்ன கீர்த்தனத்தில் உரைக்கிறார்.

**க்ருதிப்ருந்தாவனலோலா கோவிந்தார:-** கண்ணனின் குழல்தான் இசையின் தத்துவத்தை கூறும் கருவி. அதனை குழல் ஊதி இந்த உலகை ஆட்டிவைத்தான், கோபியரை மயங்கச் செய்தான். கோவிந்தா ஸ்ருதி ஸ-பஸ் என்றதனால் ஓம்காரநாதத்தை குழலூதி தெளிவுபடுத்தினவன் கோவிந்தன் அந்த கோவிந்தாவே முதலும் முடிவான ஸ்வரம் என்று கண்ணன் தெளிவு படுத்தியதை ஸ்ரீத்யாகப்ரும்மம் எடுத்துரைக்கிறார். இதுவே எனது ஆய்வின் முடிவு. இங்கே ஒரு விசேஷத்தைக் காணலாம். திருவரங்க பெருமானின் மற்றொரு பெயர் கோவிந்தா என்று பெயர். இதனை சித்திரை பெருவிழாவில் அரங்கனை தொழும் அடியார்கள் கோவிந்தா என்று வான்முட்ட ஒலியெழுப்பி தொழும் காட்சியை காணலாம்.

<u>அஸாவேரி:</u> கீர்த்தனையில் ராமனை பார்த்து வால்மீகி முதலிய முனிவர்களும், பிற மனிதர்களும் உன்னை வருணித்தால் என் ஆசை தீருமா? என்பதிலிருந்து தன் மறுபிறவியை நினைத்து பாடுவதாக நினைக்கத் தோன்றுகிறது (ஒபநிகோ) பாடல்.

<u>ஸ்ரீநாரத நாரத குருஸ்வாமி, வரநாரத:</u> முதலிய கீர்த்தனங்களை பாடி நாரதர் தனக்கு உதவி செய்த (ஸ்வர நுணுக்கம் கொண்ட இசைநூல்) தற்காக நன்றி நிறைவோடு பாடுகிறார். இவரது கீர்த்தனைகள் ஒவ்வொன்றுக்கு ஒவ்வொரு சிறப்பு கூறப்படுகிறது. பெருநாரை, பெருங்குருகு முதலிய நூல்கள் (இசை) சங்கப் புலவர்கள் செய்தனர். <u>நாரதராகிய தேவவிருடியாரால் செய்யப்பட்டது 'பஞ்சபாரதீயம்'</u> இதுவே ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு அளிக்கப்பட்ட 'ஸ்வரார்ணவம்' என்பது எனது ஆய்வின்படி இசை நுணுக்கம் கொண்ட <u>தமிழ் நூல் ஆகும்.</u> எப்படி எனில் ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடலிலிருந்து <u>24, 48, 96</u> நுட்ப ஸ்ருதியினால் <u>72 மேளங்களிலும் ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடியுள்ளார்.</u> ஆனால் அவற்றில் பல கீர்த்தனைகள் இல்லாததால் அவர் மேளராகம் பூர்த்தியாக பாடவில்லை என்று பல புத்தகங்களில் எழுதப்பட்டுள்ளது. ஆனால் எனது தாயாரின் குறிப்பில் 70வது மேளம் நாஸிகாபூஷினி பாடியுள்ளார் என்பதிலிருந்து 72 மேளமும் பாடினார். ஆனால் அவற்றில் பல ராகங்கள் இல்லாதது நமது துரதிர்ஷ்டமானது. மேள வரிசையில் க்ருதிகளை கீழே தரப்பட்டுள்ளது. இல்லாதவைகளுக்கு தரப்படவில்லை.

| மேள வரிசை | 72 மேள ராகங்களிலும் ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடியுள்ளார் | | |
|---|---|---|---|
| எண் | ராகம் | தாளம் | கீர்த்தனை |
| 1. | கனகாங்கி | ஆதி தாளம் | ஸ்ரீகணநாதம் |
| 2. | ரத்னாங்கி | ஆதி தாளம் | கலசவார்த்தி |
| 3. | கானமூர்த்தி | தேஸாதி | காநமூர்த்தே |
| 4 | வனஸ்பதி | ஆதி தாளம் | பரியாசகமா |
| 5. | மானவதி | ஆதி தாளம் | எவரிதோநே |
| 6. | தானரூபீ | - | - |
| 7. | ஸேனாவதி | - | - |
| 8. | ஹனுமத்தோடி | ரூபக தாளம் | நினுவிநாஸ~கமு |
| 9. | தேனுக | ஆதி | தெலியலேரு |
| 10. | நாடகப்பிரியா | - | - |
| 11. | கோகிலப்ரியா | தேசாதி | தாஸரதே |
| 12. | ரூபவதி | த்ரிபுடதாளம் | நேமொறபெட்டிதே |
| 13. | காயகப்ரியா | - | - |
| 14. | வகுளாபரணம் | த்ரிபுடை | ஏராமுநி |
| 15. | மாயாமாளவகௌள | ஆதி தாளம் | விதுலகு |
| 16. | சக்ரவாஹம் | தாளம் த்ரிபுடை | எடுலப்நீராது |
| 17. | சூர்யகாந்தம் | ஆதி தாளம் | முத்து மோமு |
| 18. | ஷாடகாம்பரி | - | - |
| 19. | ஜங்காரத்வனி | ஆதி தாளம் | பணிபதிஸாயி |
| 20. | நட பைரவி | ஆதி தளம் | சேதுலார |
| 21. | கீர வாணி | ஆதி தாளம் | கலிகியுண்டே |
| 22. | கரகரப்ரியா | ஆதி தாளம் | சக்கனிராஜ |
| 23. | கௌரி மனோகரி | தாளம் ஜம்ப | குருலேக எடுவண்டி |
| 24. | வருணப்ரியா | ஆதி தாளம் | ஏமநிபொகடுது |
| 25. | மாரரஞ்சனி | ஆதி தாளம் | மனஸா |
| 26 | சாருகேசி | ஆதி தாளம் | ஆட மோடி |
| 27. | ஸரஸாங்கி | ஆதி தாளம் | மேனு ஜ~ஸி |
| 28. | ஹரிகாம்போதி | தாளம் ரூபகம் | ராமநன்னு |
| 29. | தீரசங்கராபரணம் | ஆதி தாளம் | ஸ்வரராகசுதா |
| 30. | நாகநந்தினி | ஆதி தாளம் | ஸத்தலேநி |
| 31. | யாகப்ரியா | ஆதி தாளம் | ஓகபாரிஜீடக |
| 32. | ராகவர்த்தினி | - | - |
| 33. | காங்கேயபூஷினி | தேசாதி | எவ்வரே |
| 34. | வாகதீஸ்வரி | ஆதி தாளம் | பரமாத்முடு |
| 35. | சூலினி | தேசாதி | ப்ராணநாத |
| 36. | சலநாட்டை | ஆதிதாளம் | ஜகதாநந்தக |

| மேள வரிசை | 72 மேள ராகங்களிலும் ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடியுள்ளார் | | |
|---|---|---|---|
| எண் | ராகம் | தாளம் | கீர்த்தனை |
| 37. | சாலகம் | - | - |
| 38. | ஜலார்ணவம் | - | - |
| 39. | ஜாலவராளி | - | - |
| 40. | நவநீதம் | ஆதி தாளம் | நாயெடபஞ்ஜன |
| 41. | பாவநி | ஆதி தாளம் | லேமி தெல்ப |
| 42. | ரகுப்ரியா | - | - |
| 43. | கவாம்போதி | - | - |
| 44. | பவப்ரியா | தேசாதி | ஸ்ரீகாந்தநீயெட |
| 45. | சுபபந்துவராளி | மிஸ்ரசாபு | எந்நாள்ளு |
| 46. | ஷட்விதமார்கினி | ரூபகம் | ஜ்ஞானமொஸத |
| 47. | ஸவர்ணாங்கி | - | - |
| 48. | திவ்யமணி | தேசாதி தாளம் | லீலகாநு |
| 49. | தவளாம்பரி | - | - |
| 50. | நாமநாறாயனி | - | - |
| 51. | காமவர்த்தினி | ஆதி திஸ்ரநடை | நாரதமுனி |
| 52. | ராமப்ரியா | தேசாதி | ஸந்தேவரமுநு |
| 53. | விஸ்வாம்பரி | - | - |
| 54. | கமனச்ரம | ஆதி தாளம் | பரலோக சாதனமே |
| 55. | ஸ்யாமளாங்கி | - | - |
| 56. | ஷண்முகப்பிரியா | ஆதி தாளம் | வத்தநேவாரு |
| 57. | ஸிம்மேந்தரமத்யமம் | ரூபகம் | நீதுசரணமுலே நதஜன |
| 58. | ஹேமவதி | ஆதி தாளம் | நீஸரிஸாடி |
| 59. | தர்மவதி | ஆதி தாளம் | தாடவுநி |
| 60. | நீதிமதி | ஆதி தாளம் | வாசாமகோசரமே |
| 61. | காந்தாமணி | தேசாதி | பாலிந்துவோ |
| 62. | ரிஷபப்ரியா | ஆதி தாளம் | மஹிமத்கிஞ்சு |
| 63. | லதாங்கி | தேசாதி | கண்டஜூடுமி |
| 64. | வாசஸ்பதி | ரூபகம் | அநுராகமுலே |
| 65. | மேசகல்யாணி | ஆதிதாளம் | ஏதாவுநரா |
| 66. | சித்ராம்பரி | - | - |
| 67. | ஸுசரித்ர | - | - |
| 68. | ஜோதிஸ்வரூபணி | - | - |
| 69. | தாதுவர்த்தினி | - | - |
| 70. | நாஸிகாபூஷணி | ரூபகம் | மாரவைரி |
| 71. | கோஸல | - | - |
| 72. | ரஸிகப்ரியா | - | - |

## ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடிய கீர்த்தனைகளில் சிகரத்தை எட்டியவை

ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமிகள் 'குருலேக எடுவண்டி' என்கிறார். குரு ஆசிரியன் இல்லாமல் செய்யும் காரியம் பயனளிக்காது. மூன்று நாட்கள் முடிய கங்கை ஆற்றின் கரையில் இருந்து கொண்டு அந்நீரில் மூழ்கி வருவதால் மரணத் தருவாய்வரை செய்யப்படும் பாவங்கள் கரைந்து போகும் என்று பாடுகிறார். ஐந்து பகலும் இரவும் சேர்ந்த நாட்கள் முடிய யமுனை யாற்றில் மூழ்கி வந்தால், எமதூதுவர் கையில் சிக்கும்வரை பாவங்கள் அனைத்தும் நீங்கி போகும் என்பர் என்று பாடுகிறார். ஆனால் காவிரியாற்றில் கரையினையடைந்து அந்நன்னீரில் அன்பு எழ நின்று மூழ்கியெழுந்த அக்கணமே ஒருவர் தம் ஆவி நீங்கும் காலம் வரை செய்யப்பட்ட பாவங்களினின்றும் விடுபடுவர் என்பர். இதனை ஒட்டியே ஸ்ரீத்யாகப்ரும்மம் கங்கை, யமுனை, காவேரி சிறப்பை பாடுகிறார். நாரதர் பிரம்மாவினால் சபிக்கப்பட்டு திருவண்வண்டூர் வந்து ஸ்ரீமன் நாராயணனை பூஜித்து பகவானிடமிருந்து தத்வஞானம் உபதேசிப்பதை தொழிலாக வேண்டுமென்று வரத்தைப் பெற்ற ஸ்தலம், நாரதர் இங்கே நாரதீய புராணத்தை இயற்றியதாகவும் ஸ்ரீமஹாவிஷ்ணுவே பரதத்வம் என்று ஸ்தாபித்து அவரைப் பூஜிக்கும் முறை, துதி முதலியன அடங்கிய பெருநூலை இருபத்தையாயிரம் க்ரந்தங்களில் செய்து முடித்ததாக ஸ்தலப் புராணம் கூறுகிறது. இந்த ஆதாரம் எதைக் காட்டுகிறது என்பது தெளிவாகப் புலப்படுகிறது நாரதரை புகழ் அஞ்சலியாக பாடியுள்ளார். நாரத குருஸ்வாமி ஸ்ரீநாரத வரநாரத என்று பாடியுள்ளார் 24 ஸ்ருதிகள் காயத்ரீயின் எழுத்துக்கள், 25 ஸ்வரம் அக்ஷரம் மஹாவிஷ்ணு 24 ஸ்ருதிகளால் இசைத்து 25வது இடமான ஸ்ரீமந்நாராயணனை (நாராயணனே பரத் தத்துவம் என்பதைக் காட்டி நாராயணனையடைய சுத்த ஸ்வரத்தால் இசைப்பாடி அவன் அடிபணிவோம் என்று தெளிவுபடுத்தி உள்ளார். 'நாரதீயம்' நாராயணனின் திருவடி சரணம் பற்றுதல் கேசவனை துதித்தல் பூஜிக்கும் முறை துதி முதலியன அடங்கிய நூல் எனக் கூறுகிறது ஸ்தலப் புராணம். இங்கு முக்கியமான ஆய்வுக்கான விவரம் அளிக்கின்றேன்.

க்ருதயுகத்தில் யோக நிஷ்டையிலிருந்து தியானம் செய்தும் த்ரேதாயுகத்தில் யாகம், த்வாபரயுகத்தில் அர்ச்சனாதி பூஜைகள் செய்தும் எந்த புண்ணியம், மோக்ஷம் கிடைக்குமோ, கலியுகத்தில் கேசவனுடைய ஸங்கீர்த்தனம் செய்வதாலேயே கிடைக்கிறது என்ற மேற்சொன்ன குறிப்பிலுள்ளபடி மூன்று யுகத்திலும் வால்மீகியானவர் கலியுகத்தில் ஸ்ரீத்யாகப்ரும்மம் அவதரித்து நாரதருடைய நாரதீயம் பெற்று 24,000 பாடல்களை பாடினார் என்று தெளிவாகிறது மேலும் ஸ்ரீ வால்மீகி க்ருதயுகத்தில் புற்றிலிருந்து வெளிவந்து த்ரேதாயுகத்தில் யாகங்கள் பல செய்து த்வாபரத்தில் ஸ்ரீமஹாவிஷ்ணுவை அர்ச்சித்தும் ப்ரும்மா, நாரதர் முதலியோரானா தனக்கு ஸ்ரீமத்ராமாயணம் எழுத அநுக்ரஹித்ததற்காக துதித்து ஸ்ரீமத்ராமாயணத்தை எழுதினார் அதை கலியில் ஸ்ரீவால்மீகியானவர் மறு அவதாரமாக ஸ்ரீத்யாகப்ரும்மமாகப் பிறந்து ஸ்ரீமஹாவிஷ்ணுவின் மறு அவதாரமான ஸ்ரீராமனை கேசவ கீர்த்தனை பாடி மோக்ஷோபாயம் அடையவும் துதி பூஜை செய்யும் முறைகளையும் ஸ்ரீமஹாவிஷ்ணுவே பரதத்வம் என்றும் நாரதீயம் கொண்டு விளக்கிய மஹாபுருஷர் ஸ்ரீத்யாகப்ரும்மம், நாரதம் நாராதீயத்தை 25,000 க்ரந்தங்களால் அமைத்தவர். அதனாலேயே ஸ்ரீத்யாகப்ரும்மம் 24,000 பாடினார் என்பது ஏற்புடையது. இவருடைய பாடலில் விஷ்ணு கீர்த்தனை உத்ஸவ சம்பிரதாயம், திவ்யநாமம், ப்ரஹலாத பக்தி விஜயம் (விஷ்ணுவைப் ப்ரஹலாதன் எப்படி துதித்தான்). நௌகா சரித்ரம் பாடி தனக்கு அத்தகைய அரிய நூலை தந்தருளிய ஸ்ரீநாரதரை நாரதகுருஸ்வாமி ஸ்ரீநாரத வரநாரத, நாரதமுனி, நாரதகான என்று மனமுருகிப் பாடுகிறார். இந்த ஐந்து கீர்த்தனைகளும் பஞ்சரத்னமான கீர்த்தனைகள் ஸ்ரீமத்ராமாயணத்தை பாடலாக நமக்கு தந்து சிகரத்தை எட்டியது ராமாயண பாடல்கள் எனலாம். இந்த நாரதீயம் பற்றிய விவரம், பஞ்சபாரதீயம் பற்றிய விவரங்கள், வால்மீகி பற்றி விவரம், ஸ்ரீத்யாகப்ரும்மம் வீணை வாசிப்பார் என்ற விவரம், சுருதி 24, பாடல் 24,000 என்பது குறிப்பு அளித்து விளக்குவது கடமை என்று எனது தாயார் குறிப்பிட்டார். அதனை வெளிப்படுத்தவே இங்கு ஏனைய விவரங்களையும் அளித்துள்ளேன். மேலும் அவர் இதுவரை வால்மீகி பற்றி யாரும் விவரமாகக் கூறவில்லை, அதை விளக்க உரையாக காட்ட வேண்டும் என்றார். அவருடைய குரு ஸ்ரீத்யாகப்ரும்மம் வீணை வாசிப்பார் என்று கூறுவார் என்று என்னிடம் அடிக்கடி கூறுவார். அவருடைய தந்தை வழி பாட்டனார் ஆச்சாரிய புருஷர் ஆதலால் எனது தாயாருக்கு இளவயதில் ஸ்ரீமத்ராமாயணம் ஸ்ரீமத்பாகவதம் இன்னும் பல புராணங்களையும் குருகுலமாக போதிந்திருந்தார் என்றும் கூறியுள்ளார். அவர் தந்தை என்னுடைய தாயாருக்கு இருக்கும் இசையாற்றலைக் கண்டு அவருக்கு பல நூல்களை கற்க செய்தார், இசை பயில செய்தார். என் தாயார் நூல்களை கற்று பல அறிய விஷயங்களை அறிந்திருந்தார். எனது ஆய்வுக்கு ஒரு வழிகாட்டி என் தாயார் மட்டுமே என்று பெருமை கொள்கிறேன்.

**வீணையும், ஸ்ரீத்யாகப்ரும்மமும் ஸ்ருதியும் விளக்கமும்**

*வீணையில் ஸரிகமபதநி - என்ற 7 ஸ்வரத்திற்கான மெட்டு உள்ளது. ஆனால் வர்ணமோ, கீர்த்தனைகளோ வாசிக்கும் பொழுது பின்னால் உள்ள ஸ்வரமெட்டுகளில், அதற்கு முன் உள்ள சுரத்தை பிடிக்கவேண்டும். அப்போதுதான் ஸ்வரஸ்தானம் சுத்தமாகக் கேட்கும், உதாரணமாக சுத்தகாந்தாரம் வராளிக்கு பிடிக்கும் போது சுத்தரிஷபத்தில்தான் பிடிக்க வேண்டும். அப்போது தெளிவான சுத்தகாந்தாரம் பேசும். ஆனால் சதுஸ்ருதிரிஷபமும் சுத்தகாந்தாரமும் ஒரே ஸ்வரஸ்தானம் என்று விளக்கியுள்ளார்கள். மேலும் ஷட்ஸ்ருதிரிஷபமும், ஸாதாரண காந்தாரமும் ஒன்று என்றாலும் ஷட்ஸ்ருதி ரிஷபத்தை சதுஸ்ருதிரிஷபத்தில் பிடிக்க வேண்டியிருக்கும். இதேபோல் சுத்தநிஷாதமும், ஸதுஸ்ருதி தைவதமும் ஒன்றுதானே என்று சொல்லி சுத்த நிஷாதத்தை, சதுஸ்ருதி தைவதமாக வாசிக்காமல் சுத்ததைவதத்தில் வாசிக்க வேண்டும். (இழுத்துப் பிடித்து வாசித்து காட்ட வேண்டும்) இதேபோல் ஷட்ஸ்ருதி தைவதமும், கைசிக நிஷாதமும் ஒன்றுதான் என்றாலும் ஸதுஸ்ருதி தைவதத்தில் ஷட்ஸ்ருதி தைவதத்தை பிடித்து வாசிக்க வேண்டும். மேலும் தாரஸட்ஜத்தை சதுஸ்ருதி தைவதத்தில் பிடிக்கும் படியும் வரும். ஆகவேதான் 2 அலகுகள் குறைத்துகானம் செய்ததானது 22 ஸ்ருதி என்று கூறிவிட்டார்கள். ஒவ்வொரு ச்ருதியும் அதன் முன் சுரத்தில் பிடிக்கும்படி வருமாதலால் சுருதி நிர்ணயிக்க யாழைத்தவிர வேறு வாத்யம் தகுதியில்லாதது என்பதால் யாழை (வீணையை)க் கொண்டே ஸ்ரீத்யாகப்ரும்மம் மாணவர்களுக்கு ராகங்களை புரிய ஸ்ருதி நிர்ணயித்துப்பாட பாடங்களை போதித்தார் என்று எனது தாயார் குறிப்பு கூறியதோடல்லாமல் என்னுடைய இசை கச்சேரியில் எனக்கு பக்கவாத்யமாக வீணையையே வாசித்தார் எனது குருநாதர் என்று கூறிகொள்ள விரும்புகிறேன். மேலும் சுத்த ப்ரக்ருதி, விக்ருதி ஸ்வரங்களின் ஸ்வர மதிப்புக் கூட, சற்று கூடியோ குறைத்தோ பேசவாய்ப்புள்ளதால் (ஸ்ருதி வால்யூ) திட்டவட்டமாக இருக்க வீணையில் மட்டும் தான் தெளிவு பெற முடியும் என்பது என் கருத்து. ஆகவேதான் ராகத்தின் நுட்ப ஸ்ருதி அறிந்து குருகுலமாக பாடவேண்டும் என்பதனால் ஸ்ரீத்யாகப்ரும்மம் கீர்த்தனைக்கு ஸ்வரக் குறிப்பை எழுதிவைக்காமல் வீணையோடு வாசித்து நிரூபித்து சங்கீதம் தெய்வாம்சமானது என்று நிரூபித்துள்ளார். வீணையைக் கொண்டு பஜனையில் மாணாக்கர்களுக்கு கீர்த்தனைகளை பாடச்செய்தார் என்று தெளிவாகிறது. ராகம், முற்றுபெற அந்த ராகத்தின் சுரத்தைவிட நுட்பஸ்ருதியால் சற்று வித்யாசமாக வரும் ஸ்வரத்தின் மதிப்பை கண்டுபிடித்து பாடமுற்படுவோமானால் ராகங்களின் சுயரூபத்தை நாம் திட்டவட்டமாக அறியலாம் என்று நமக்கு நடைமுறை பயிற்சியை காட்டுவித்து விட்டு சென்ற மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதப்ரும்மமாகிறார். நாதோபாஸனையால் இந்த உலகிலிருந்து ஆன்மாவிடுபட மோக்ஷோபாயம் பெற இனிமையான சங்கீதம்தான் காரணமாகும் என்று நமக்கு அவரது பாடல்கள் உரைக்கின்றன. இவருடைய கீர்த்தனைகளில் அதிவேக அதிவிசேஷமான அம்சத்தைப் பார்ப்போம். பஞ்சகதி பேதங்கள் என்ற விசேஷமான அம்சத்தை ஸ்ரீத்யாகராஜர் க்ருதியில் காணலாம் அதாவது உதாரணம்.*

1. *சதுஸ்ரஜாதி, சதுஸ்ரகதி ரூபகம்*
2. *சதுஸ்ரஜாதி திஸ்ரகதி ரூபகம்*
3. *சதுஸ்ரஜாதி கண்டகதி ரூபகம்*
4. *சதுஸ்ரஜாதி மிஸ்ரகதி ரூபகம்*
5. *சதுஸ்ரஜாதி சங்கீர்ணகதி ரூபகம்*

*... இவ்வாறாக (35 அலங்காரங்களும்)*

*மேற்சொன்ன உதாரணப்படி மாறுதல் அடைகிறது. 35 தாளங்களில் 175 பேதமாக்கப்பட்டது.*

***ஸ்ரீத்யாகராஜ கீர்த்தனை - விசேஷாம்சங்கள்:-***

1. *எந்த தாகிநாடோ ஸ்ரீராமுடு - தோடி சதுஸ்ரஜாதி மிஸ்ரகதி ஏகதாளம்*
2. *நிநுவினா சுகமுகாந - தோடி - சதுஸ்ரஜாதி, திஸ்ரகதி ஏக தாளத்தில்*
3. *ரகுபதேராமாராக்ஷஸபீமா - ஸஹானா - சதுஸ்ரஜாதி திஸ்ரகதி, த்ரிபுடை தாளத்தில்*
4. *தொலிஜென்ம - பிலஹரி - சதுஸ்ரஜாதி, கண்டகதி, ஏகதாளத்திலும்*
5. *லாவண்யராமகநுலாரஜூடவே ஆதி, பூர்ணஷட்ஜம் - சதுஸ்ரஜாதி திஸ்ரகதி, த்ரிபுட தாளத்திலும்*
6. *நீவாடனேகான - சாரங்கா - சதுஸ்ரஜாதி, கண்ட, ஏகதாளம்.*
7. *நாஜீவாதார நாநோமுபலமு - பிலஹரி - சதுஸ்ரஜாதி, சதுஸ்ரகதி, த்ரிபுடதாளத்திலும்*

மேற்சொன்ன வகையில் கீர்த்தனைகளை எனக்கு என் தாயார் விசேஷ குறிப்பாக தந்துள்ளார்.

மேலும் தேஸாதிதாளம் என்பது தற்போது போடுவதில்லை, 'கிரிராஜஸுதாதனயா' தேஸாதிதாளம் ஆகும். இதைப்பற்றி பின்னால் விளக்கப்படும். இதே போல் ரூபகம் திஸ்ரலகுவாக போடப்படுவதில்லை. மிஸ்ர ஏகத்தை, மிஸ்ரசாபுவாக போடுகிறார்கள். ஜம்பதாளத்தை முறையோடு போடாமல் கண்டகதியாகப் போடுகிறார்கள். மிஸ்ரகதியை மிஸ்ரசாபுவாக போட்டுக்கொள்கிறார்கள். மேற்சொன்ன வகையில் கஷ்டமான வகை தாளங்களை ஸ்ரீத்யாகப்ரும்மம் எப்படி கையாண்டுள்ளார் என்பதை கவனிக்க வேண்டும்.

<u>நாராயண - நமசிவாய - ராமநாமதாரக மந்த்ரம் - ஸ்ரீத்யாகப்ரும்மம் ராமநாமம் தாரகமந்த்ரம் என்கிறார்</u>

ஸ்ரீகாஞ்சிமஹா பெரியவாள் ராமநாமஜெபம் செய்யுங்கள் என்றார். ராமநாமம் தாரகநாமம் தாரகமந்த்ரம் என்கிறார். காலையில் எழுந்தவுடன், பல்துலக்கிய பின், ஆகாரம் அருந்தும் போதும், மருந்து உண்ணும்போதும், அச்சுதா, அனந்தா, கோவிந்தா என்னும் சொற்களை மூன்றுதரம் அவசியம் சொல்லுங்கள் என்றார். இதே <u>கோவிந்தாதான்</u> எனது ஆய்வில் 24 வது ஸ்ருதி என்று எழுதியுள்ளேன். கோவிந்தா என்பது ஸ்ரீமன் நாராயணனின் மற்றொரு பெயர். அஷ்டாக்ஷரத்தை கோபுரம் உச்சி மீது இருந்து ராமானுஜர் உலகுக்கு கூறினார். ஸ்ரீமத்பரமஹம் ஸமபரிவ்ராஜகாச்சார்ய வர்ய ஸ்ரீகாஞ்சிகாமகோடி பீடாதிபதி ஸ்ரீமத்சந்த்ரசேகரேந்திர ஸரஸ்வதிஸ்வாமிகள் இவரை நான் ஒரு முறை நேரில் சந்தித்த போது என் தாயாரிடம் எனக்கும் சங்கீதகலாநிதி உமையாள்புரம் ஸ்வாமிநாத அய்யர்தான் சங்கீதத்திற்கு குரு, இது உனக்கு தெரியுமா என்று என் தாயாரிடம் சொன்னபோது என்னுடைய குருவும் உமையாள்புரம் ஸ்வாமிநாத அய்யர்தான் என்று என் தாயார் கூறி எனக்கு அவரே இசையைக் கற்று தருவதாகவும் கூறினார். அவர் முன்னிலையில் பலமுறை பாடியிருக்கிறேன். அவர் ராமராம என்றுசொல், ராம நாமத்தை ஜபி அது உனக்கு நற்பயன் அளிக்கும் என்று ஆசீர்வதித்தார். இன்றைக்கும் என்னிடம் உள்ள இசைஞானம் அவரால் அளிக்கப்பட்ட அறிவுரையால்தான் என்று பெருமையுடன் கூறிக்கொள்கிறேன். இதனை தொடர்ந்து ''நாராயணார்யாய, க்ரியதே நாராயணஸ்மிருதி'' என்கிறார்.

''யாஸத்ஸ்தாஸ்யந்திகிரிய: ஸரிதஸ்சமஹீதலே தாவத்ராமாயணகதாலோகேஷுப்ரசரியதி'' இப்பூவுலகில் மலைகளும் நதிகளும் உள்ளளவும் ஸ்ரீமத்ராமாயண கதைப்ரஸித்தியுடன் விளங்கி வரும் என்பது ஸ்ரீவால்மீகியின் திருவாக்கு. ராம, ராம என்று நாமத்தை ஸ்மரித்து சித்தி பெறலாம் என்பது ஸ்ரீத்யாகப்ரும்மம் வாக்கு. ஸ்ரீநாமநாமம் இனியவற்றிலும் இனியது. அது சாந்தமென்னும் ஆவியாகும். அதுதான் சுத்தாத்மாக்களின் உயிர், பரிசுத்தத்திற்கும், பரிசுத்தமளிக்கக் கூடியது 'ராம' என்னும் பதத்திலுள் 'ராம' என்னும் இவ்விரு எழுத்துக்களும் முறையே ''நமோநாராயணாய'' ''நமச்சிவாய'' என்ற மஹாமந்த்ரங்களுடைய பீஜாக்ஷரங்களின் சேர்க்கையால் ஆனது. ''ராம'' என்னும் இரண்டு மனோகரமான எழுத்துக்களும் நெடுங்கணக்கிற்கே. இருநேத்திரங்கள் பக்தர்களின் ப்ராணநிலை நினைவிருக்க, சுலபமானவை. பல நன்மைகளை தருபவை. மூலாதாரத்தில் இருக்கும் அக்னியானது 'ரா' பீஜத்தைக் குறிக்கிறது. சஹஸ்ராரத்திலிருக்கும் பிராணன் 'மா' பீஜத்தை குறிககிறது. மூலாதாரத்திலிருக்கும் அக்னி பிராணனை சந்திக்க மேலெழும்பிச்சென்று அதனுடன் கலத்தல்தான் 'ராம' என்னும் தாரகமந்த்ரம் பிறப்பதாகும். இதனால் ஜீவாத்மா பயமற்ற தன்மை, சாவாத்தன்மை, எல்லையற்ற ஆனந்தம், முடிவில் பகவானிடம் ஐக்கியமாக சாதகமாகிறது சமயம் கிடைக்கும் போதெல்லாம் 'ராமராம' என்று சொல்லவேண்டும். என்பது பெரியோர் வாக்கு, இதனையே ஸ்ரீத்யாகப்ரும்மம் 'ராமநாமமு ஜென்மரக்ஷகமந்த்ரம்' என்கிறார் நம்முடைய புராதன மரபுகளை காக்க எல்லோரிடத்திலும் அன்புடன் இருக்கவேண்டும் என்று காஞ்சிமஹா பெரியவர் கூறுகிறார். ஸ்ரீத்யாகப்ரும்மம் தன் சிஷ்யகோடிகளுடன் அன்புடன், ஆதரவு தந்தும் வாழ்ந்த மஹான். உஞ்ஜவிருத்தியில் கொண்டுவரும் பொருள்களைக் கொண்டு ராமநாமபஜனை செய்து, சிஷ்யர்களையும் குடும்பத்தையும் அன்புடன் ரக்ஷித்து வாழ்ந்துகாட்டிய மஹான், ராமனுடைய தாரக மந்த்ரமே ஸ்ரீத்யாகராஜருடைய மூல மந்த்ர ரஹஸ்யம் மற்ற காவியங்களைப்போல் படிப்பதற்கு மாத்திரம் ஏற்பட்டதல்ல, பாடிக்கேட்கவும் ஏற்பட்டதாகும். இதையே ஸ்ரீத்யாகப்ரும்மம் தினம்தினம் புதுப்புது ராமநாம ஸாகித்யத்தை புனைந்து அதனை ஏகாதசி பஜனையில் வீணையுடன் வாசிப்பார் என்று அவருடைய வாழ்க்கை சரிதம் கூறுகிறது. தினம் தினம் சிஷ்யகோடிகளுக்கு உபதேசித்தார் வீணையுடன் என்றும் என் குருஸ்ரீத்யாகப்ரும்ம சிஷ்ய பரம்பரையில் வந்த கும்பகோணம் திருமதிஜெயம்மாள் விவரம் தந்துள்ளார்கள். ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு சகல சங்கீத லக்ஷணங்களும் அமைந்த சாகித்யங்கள் நினைத்தமாத்திரத்திலேயே செய்யும் பழக்கமிருந்தது. அது ராமநாமதாரக மந்த்ரத்தாலேயே அமைந்த கீர்த்தனைகள் எனலாம். இராமாயணம் படிப்பதற்கு மட்டும் அல்ல. பாடிக்கேட்பதற்கும் ஆனது என்கின்றபடிக்கு ஸ்ரீத்யாகப்ரும்மம் ராமாயணத்தை பாடல்களாக அமைத்துகாட்டிய விதத்திலிருந்து நமக்கு வால்மீகி இவரே என்ற நினைப்பு, ஏற்படுகிறது. ராம, ராம என்று ஸ்ரீமத்ராமாயணத்தை ஒவ்வொரு நாளும் 20

ஸர்க்கங்களை பாடவேண்டும். ஒவ்வொரு நாளும் நடந்த விஷயங்களை தனது ஞானக்கண்ணால் பார்த்து வால்மீகி மஹரிஷி வர்ணிக்க வேண்டும். அப்படியே வர்ணித்துள்ளார். இதேபோல் ஸ்ரீத்யாகப்ரும்மமும் தனது ஞானக்கண்ணால் த்யானித்து ஸ்ரீராமபிரானை தினம்தினம் ஸ்ரீமத்ராமாயணத்தின் அடிச்சுவடாக (வால்மீகி ஸர்க்கங்களைப் பாடியதுபோல்) 20க்கு மேல் குறையாது ராமகீர்த்தனைகளைப் புனைந்து பாடினார். (ஸ்ரீராமர் சன்னதியிலேயே புனைந்து பாடினார்) என்பது எனது குருகுலத்தில் என் தாயாரால் கூறப்பட்டது. மேலும் வால்மீகி ராமாயணத்தை மோக்ஷோபாயமென்றும், வேதாந்தத்தின் முக்கிய பாகமென்றும், சரணாகதிக்ரந்த என்றும் கூறப்படுகிறது. அது வெறும் காவியம் என்றோ, இதிஹாஸமென்றோ நினைக்காமல் அது உபதேச க்ரந்தமென்றும், குருவால் அநுக்கிரஉறிக்கப்பட்டு ரஹஸ்யார்த்தங்களுடன் சிஷ்யனுக்கு விதிப்படி உபதேசிக்க வேண்டும்மென்று உபதேசிக்கிறார்கள் சான்றோர்கள். அப்படி உபதேசம் பெற்றவர்களே அதை படித்து பிறர்க்கு அர்த்தம் சொல்லத்தகுந்தவர்கள். மேலும் கிரந்தங்களில் எழுதி வெளிப்படுத்தாத பல ரஹஸ்யமான உபதேசங்களும் ராமாயணத் தத்வார்த்தங்களும், குருசிஷ்ய பரம்பரையாய் வந்து கொண்டிருக்கின்றன. இதனையே கொண்டு ஸ்ரீத்யாகப்ரும்மமும் அனுசரித்து குருசிஷ்ய பரம்பரையாய் பல ரஹசியமான உபதேசங்களையும், ராமாயண தத்வார்த்தங்களையும் குருசிஷ்ய பரம்பரையாய் மாணவர்களுக்கு கீர்த்தனைகள் மூலம் உபதேசித்தார். இதனையே ஸ்ரீத்யாகப்ரும்மம் வேத, சாஸ்த்ர, புராணம் என்று கீர்த்தனைகளில் கூறுகிறார். நாலுவித புருஷார்த்தங்களைக் கூறுகிறார். ராமாயணத்தை மோக்ஷோபாயமென்கிறார். மோக்ஷமுகலதா, ராமநாமமு ஜன்மரக்ஷகமந்த்ரம் என்கிறார். ராமாயணம் காவ்யமில்லை, இதிஹாஸமில்லை, மேலானமோக்ஷத்தை கொடுக்கக்கூடிய க்ரந்தம் என்றும் கூறும் ஸ்ரீத்யாகப்ரும்மம் வால்மீகியே என்று நிரூபிப்பதாகிறது. வால்மீகியின் உரை, ஞானக்கண்ணால் பார்த்து கூறும் காட்சிகள், அவரது கொள்கை சொல், செயல் அனைத்தும் ஒத்து நோக்கியிருக்கும் ஸ்ரீத்யாகப்ரும்மம் கொள்கை சித்தாந்தம், சொல், செயல், அறிவுரை கோட்பாடுகள், ஞானமார்க்கம் தெய்வவழிபாடு, மோக்ஷமார்க்கம் எல்லாம் ஒன்றாகவே உள்ளது. இந்த ஆராய்ச்சியில் தி டிவைன் பவர் ஆப் ம்யூசிக் என்று கூறும் உள்நோக்கம் என்னவென்றால் இசையில் ஒரு மஹான் என்னென்ன விதத்தில் எப்படி, எப்படியெல்லாம் சங்கீதத்தின் தெய்வாம்ஸம் பெற்று மஹான் ஞானி ஆனார் என்று உணர முடிகிறது. இவருடைய தெய்வாம்ஸம் இசையில் எத்தகையது என்று வெளிப்படுத்தினார். நமக்கு புரிய வைக்க இவருடைய சாதனம் இசையே என்பதை பற்றிய விளக்கம் இதற்கு இவருடைய காவியநாயகன் யார், தெய்வம் யார், இசையால் தெய்வாம்ஸம் அடைய உதவிய ஊன்றுகோல் எது, மோக்ஷோபாயத்திற்கு உதவிய இசைக்கு ஆதாரமான இடம் எது, அது எப்படி இவருக்கு புரிந்தது என்பதே <u>தி டிவைன் பவர் ஆப் ம்யூசிக்</u> தெய்வாம்ஸம் பெற சங்கீதம்தான் என்ற இவரது கோட்பாடால் சங்கீதத்தில் தெய்வாம்ஸம், தெய்வாம்ஸத்தால் சங்கீதம், சங்கீதத்தில் தெய்வீகசக்தி, சங்கீதத்தின் இருப்பிடம் இசைக்கு ஆதாரமான இடம் எது என்று இப்படியாக இந்த ஆய்வு முற்று பெற்று விட்டது இதனை தொடர்ந்து <u>உத்ஸவஸம்ப்ரதாய கீர்த்தனைகளில்</u> இவரது இசை வடிவம் எப்படி பளிச்சிடுகிறது என்பதை பார்ப்போம். ஸ்ரீத்யாகராஜ கீர்த்தனைகளில் உத்ஸவஸம்ப்ரதாயம் மிகப்பெரிய சிறப்பம்சம். இந்த உத்ஸவஸம்ப்ரதாய கீர்த்தனைகளில் மிகப்பெரிய தாத்பர்யம் அடங்கியுள்ளது. சங்கீதத்தின் சாராம்சம் லய, யதி, கதி, ப்ரஸ்தாரங்கள், நடைகள் முதலியன பொதிந்த இவரது கீர்த்தனைகள் பலவாக்கேயகாரர்களை விட சிறப்பம்சம் கொண்டது. ஸ்ரீத்யாகப்ரும்மம் ஆனந்த பைரவியில் அதிகமாகப் பாடவில்லை. ஆனால் பாடிய ஒரு கீர்த்தனையில் உத்ஸவஸம்ப்ரதாயக் கீர்த்தனையில் ஆனந்த பைரவிக்கு முத்திரை குத்தி உள்ளார். 'க்ஷீரசாகரவிகாரவில்' பொதுவாக மந்த்ரஸ்தாயி நிஷாதத்திற்குக் கீழே சஞ்சாரம் இல்லாத போது இந்த பாட்டில் மந்த்ரபஞ்சமம் பிரயோகம் காணப்படுகிறது. இந்த மந்த்ரபஞ்சமம் ரீதிகௌளை ராகத்திற்கு பிரயோகமாக வரக்கூடியது. ஆனால் இவருடைய ப்ரயோகத்தில் ரீதிகௌளைசாயலேயில்லாமல் வெகு லாவகமாக ஸநி ப, நிஸா என்ற ப்ரயோகத்தால் ஆனந்த பைரவி சாயலைக் கொண்டு வந்துள்ளார். இதையே ஸ நிப நிநி ஸ என்றால் ரீதிகௌளையாகிவிடும். ஆனால் ஒரு ஸ்வரப்ரஸ்த்தாரத்தைக் கொண்டே ஆனந்த பைரவியை நிலைநாட்டிவிட்டார். சாதாரணமாக <u>ஸநிதநி</u>ஸரீஸ என்றுலாலியில் பாடுவார்கள். இந்தப்ராசீனத்திற்கு முன்னேயே ஸ்ரீத்யாகப்ரும்மம் <u>ஸநிபநி</u>ஸா என்று பாடியுள்ளது வியக்காமல் இருக்க முடியாது. இவரது இசை தத்துவம் சிறப்பு பற்றி ஓர் விளக்கம். ஸ்ரீத்யாகப்ரும்மம் கீர்த்தனைகளிலேயே அவரைப் பற்றிய விவரங்களையே நாம் சேகரிக்க முடியும். <u>விதுலகும்எராக்கேதலில்</u> வேதஸ்வரூபரான ஸ்ரீசங்கரரால் தோற்றுவிக்கப்பட்ட ஸப்தஸ்வராத்மகமான ஸங்கீதவித்யை பரமசிவன், பார்வதி, லக்ஷ்மி, ஸரஸ்வதி அறிந்து ப்ரும்மாந்த கடலில் மூழ்கிய ப்ரும்ஹா, விஷ்ணு, நாரதர், இந்த்ரன், பரதர், காஸ்யபர், சண்டீசர், ஆஞ்ஜனேயர், குகன், விநாயகர், மார்கண்டேயர், அகஸ்தியர், தும்புரு, ஸோமேஸ்வரர், சார்ங்கதேவர், நந்தி முதலான, ப்ரும்மானந்தரஸிகர்களான, பெரியோர்களை நான் வணங்குகிறேன் என்பதிலிருந்து <u>ஸ்ரீவால்மீகி பகவானை</u> குறிப்பிடாததிலிருந்து ஸ்ரீத்யாகப்ரும்மம் வால்மீகி என்று நமக்கு புலப்படுகிறது. <u>**ஸ்ரீத்யாகப்ரும்மம் வீணை வாசித்தார்:-**</u> ஸ்ரீதீக்ஷிதர் வீணை வாசிப்பார் என்பதை கூறுகின்ற இசைகலைஞர்களுக்கு ஸ்ரீத்யாகப்ரும்மம் வீணை வாசிப்பதை இதுவரை யாரும் குறிப்பிட்டதாக தெரியவில்லை. இதனை நிரூபிக்க கீர்த்தனை

**ஸாவேரியில் ஸம்ஸாருலைதே நேமய்யவில்** கடைசி சரணத்தில் பாகவதுலகூடி போகமுலெல்லஹரி - கேகாவிம்புகுநு வீணாகாநமுல தோ ஆகமசருநி ஸ்ரீராகமுற பாடுசு - த்யாகராஜ நுதுநிபாகுக நம்முவாரு - இந்த சரணத்தில் தான் அநுபவித்த அத்தனையையும் ஹரிக்கே அர்ப்பணம் செய்து, வீணை இன்னிசையுடன், ஸ்ரீராகத்தில் பகவானைப்பாடித் துதிசெய்து, ஸ்ரீத்யாகராஜன் தொழும் தெய்வத்தை நம்புவோர் என்கிறார். இதிலிருந்து ஸ்ரீத்யாக ப்ரும்மம் வீணையுடன் சிஷ்யகோடிகளுடன் வீணை வாசித்து பாடினார் என்பது **பதிவாக்கப்படுகிறது** நான் எடுத்துக் கொண்ட ஆய்வின் மெய்பிக்கவேண்டிய அனைத்தையும் இங்கு அளித்துள்ளேன். **மோக்ஷமுகலதாவில்** வீணாவாதன லோடுடைசிவமனோர் வீணை நாதத்தின் இன்பத்தை பாமர ஜனங்கள் அறியார். ஆகவே வீணையுடன் பாட்டு பாமரரும் ரசிக்கும்படி இருக்க வேண்டும் என்பது இவரது கருத்து, சித்தாந்தம். இதனாலேயே பாமரரும் ரசிக்க வீணையுடனும் மாணாக்கர்களுடனும் பஜனை செய்தார் என்று கூறுவேன்.

**'எவரநி நிர்ணயிஞ்சிரா:- தேவதாம்ருதவர்ஷிணியில் -** மஹான்கள் உன்னை யார் என்று நிச்சயித்திருக்கிறார்கள் விஷ்ணு என்றா? சிவன் என்றா? நாராயணாய என்ற மந்த்ரத்தில் 'ரா' என்ற எழுத்தும் 'நமச்சிவாய' என்ற மந்த்ரத்தில் 'ம' என்ற எழுத்தும் உயிர் இவை இரண்டின் கூட்டெழுத்தே 'ராம' என்ற மந்த்ரம் இந்த உண்மை கூறின பெரியோர்களை வணங்குகிறேன் என்று ஸ்ரீத்யாகப்ரும்மம் கூறுகிறார், தன்னை வால்மீகி என்று உணர்ந்து கூறுகிறார். மரா என்று தன்னை கூறுச்சொன்ன ஸப்தரிஷிகளாக வந்த நாரத முனிவரோடு எல்லோரையும் வணங்குகிறேன், மேலும் நூறுகோடி ராமஜெபம் செய்து பின் நாரதரை தரிசித்து ஸ்வரார்ணவம் பெற்றதிலிருந்து பிறகு தன்னை உணர்த்திய மஹானாக ஸ்ரீநாரதரை வணங்குகிறேன் என்கிறார்.

**''ராமரகுகுல''** காபி க்ருதியில் ஒன்பது பேருக்கு ஞானக்கண் அளித்தாய் சிவன், பார்வதி, ஸீதை பரதன் லக்ஷ்மணன், சத்ருக்னன், ஆஞ்ஜநேயன், ஸுக்ரீவன், விபீஷணன் ஆகிய 9 பேருக்கு உன் திவ்யரூபத்தை காணும் வண்ணம், ஞானக்கண் அளித்தாய் என்று ராமனை புகழும் ஸ்ரீத்யாகப்ரும்மம், அதன்முன் பிறவியில் (வால்மீகியாக இருந்தபோது ஞானக்கண் பெற்று ராமாயணத்தை முழுமையாக அனுபவித்து எழுதினதாகவும் புராணவரலாறு) இந்த காவியத்தில் வர்ணிக்கப்பட்ட விஷயம் நிர்மலமான ஞானத்திருஷ்டியால் பார்க்கப்பட்டது என்றும், லோகோத்தமனை நான்கு புருஷார்த்தங்களையும் தெளிவாக விளக்கும் ராமசரிதத்தை வால்மீகி நாரதரிடமிருந்து கேட்டு கீர்த்தனைகளை ராமாயணமாக படைத்தார். இந்த ஜென்மத்தில் நாரதரின் அருளைப் பெற்று ஞானக்கண்ணால் ராமனின் காவியத்தைப் படைத்தார். ஞானக்கண் பெற்ற 9 பேரில் 10 ஆவதானவராக ஸ்ரீத்யாகப்ரும்மம் ஆகிறார் என்றால் மிகையாகாது. மேலும் **'தலசிந்தனே'** முகாரி கீர்த்தனையில் ஆஞ்ஜநேருக்கு பிரிய மாணவனே தேவர்களால் தொழப்பட்ட உனது ஸௌஸீல்யத்துடன் உனது கல்யாண குணங்களையும் கோடி மன்மதாகாரத்தையும் ஸம்ஸாரத்தில் உண்டான துக்கங்களைத் தீர்க்கும், உனது சக்தியை விவரிக்கும் ராமாயணம் சரித்திரத்தை நினைத்த அளவில் எனது தேகம் புளகாங்கிதமாகிறது என்னும்போது (நமக்கு புளகாங்கிதமாகிறது) அவரது மறுபிறப்பான வால்மீகி என்பதின் மறைமுகமான எடுத்துக்காட்டு எப்படி நிரூபிக்கப்படுகிறது என்பதால் ஆகும்.

எட்டு அக்ஷரமும், ஸ்ரீத்யாகப்ரும்மமும், 108 திவ்யதேசம் பற்றிய குறிப்பு ராமதாரகமந்த்ரத்தின் நாராயண மந்த்ரமான அஷ்டாக்ஷரமும், பரமசிவமந்திரமான பஞ்சாட்க்ஷரமும் கலந்திருக்கின்றன. ''ர்'' என்ற மெய்யெழுத்து உபாதி சம்பந்தமில்லாத ப்ரும்மத்தையும் ''அ'' என்ற உயிரெழுத்து மாயையும், இவ்விரண்டின் சேர்க்கை சுத்ததேஜோ மயமான ஆத்மாவிற்கு மாயா சம்பந்தம் நேர்ந்ததையும் காட்டுகிறது ''ர'' என்றது அக்னிபீஜம். பிரகாசமென்ற அர்த்தமுள்ளது. ஸச்சிதானந்தஸ்வரூபியும் தேஜோ மயமான பரமாத்மாவை குறிக்கிறது. அதை உச்சரிப்பதால் ஸகலதர்மங்களும் ஸகல வாசனைகளும் ஸகல உபாதிகளும் அழிகின்றன. 'ம' என்ற அக்ஷரம் அம்ருதபீஜம். காமக்ரோதமோஹங்கள் சாம்பலாய் எரிந்து கிடக்கும் ஹிருதயவனத்தில் ப்ரும்மானந்த மென்ற அமிருத வர்ஷம் தொழிலாகிறது. க்ஷேமமும், முக்தியும் கிடைக்கும் மஹாபாக்யத்திலுள்ள 'தத்' என்பது 'ர' என்றதாலும் 'தவம்' என்பதும் என்றதாலும் 'அஸி'யென்பது இவ்விரண்டின் சேர்க்கையாலும் உபதேசிக்கப்படுகிறது. ஆனால் இந்த மஹா வாக்யம் மோக்ஷத்தை மட்டும் கொடுக்கும். இதில் எல்லோர்க்கும் அதிகாரமில்லை ராமதாரகமந்த்ரமோ இஹபரங்களில் உத்தம பலனைக் கொடுக்கும். எல்லோருக்கும் அதில் அதிகாரமுண்டு. ஆகையால் மஹாவாக்யத்திற்கு மேலானது என்கிறது (ராமராபிந் உபநிஷத், ராமரஹஸ்யோபநிஷத்) ஆதலால் ராம நாமம் ஜபித்து ஸ்ரீமத்ராமாயணம் ஸேவித்து அனைவருக்கும் புரியும்படி இசை வடிவமாய்பாடி அனைவருக்கும் மோக்ஷோபாயத்தை எடுத்துச் சொன்ன மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம். இவர் மஹான்களில் தலைசிறந்தவர் ஆகிறார். இவரது கீர்த்தனைகள் அனைத்தும் அமரகாவியங்கள். அப்பேர்ப்பட்ட ஸ்ரீமத்ராமகாவியத்தை, ராமநாமத்தை, நமக்கு எளிய முறையில் தெரிய வைத்துள்ளார்.

<u>திருப்பாற்கடல்:- அஷ்டாங்க விமானம்</u>

<u>திருபாமபதம் ஸ்ரீவைகுண்டம்:-</u> இது பூலோகத்தில் இல்லை, இது வைஷ்ணவர்களுக்கு லஷ்யமான மோக்ஷ நிலையாகும். எம்பெருமான் பரத்வம் விளங்கும் இடம். இங்கு ஜீவாத்மாக்கள் பகவானை போலவே ஸ்வரூபம் பெற்று ஆனால் அவனுடன் இரண்டரக்கலவாமல் அவனுக்கு கைங்கர்யம் செய்வார்கள். இந்த பரமபதத்தில் பெருமாள் பரமபதநாதன் தீர்த்தம் விரஜாநதி, அயிரமத புஷ்கரணி, அநந்தாங்கவிமானம் அநந்த கருடவிஷ்வக்ஸேனாதி, நித்யசூரிகள் முக்தர்களுக்குப் ரத்யக்ஷம் இங்கே சென்றவர்கள் யாரும் திரும்புவதில்லை. <u>தெளிவிசும்புதிருநாடு</u> நலமத்தமில்லதோர் நாடு சுடரொளியாய் நின்று, தன்னுடைய சோதி என்றெல்லாம் ஆழ்வார்கள் வர்ணித்த இந்த திருநாடே ஸ்ரீவைகுண்டம் - இதுவே திருவரங்கம் என்று ஆழ்வாராதிகளும், பாசுரங்களாகப் பாடிப் பரவசித்து எம்பெருமானுடன் திருவரங்கத்திலேயே தங்கிவிட்டதாக புராணம் கூறுகிறது. அப்படிப்பட்ட திருவரங்கத்தை ஐந்து பஞ்சரத்னமாகப் பாடுகிறார் ஸ்ரீத்யாகப்ரும்மம். ஓரங்கசாயி என்ற கீர்த்தனையில் பூலோக வைகுண்டம் என்று கூறுகிறார். திருவரங்கத்தை இந்த பூலோக வைகுண்டமான திருவரங்கம் ஸேவித்து, தெளிவிசும்பு திருநாடு சென்றடைந்த மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம் புஷ்யபகுள பஞ்சமி நன்னாளில் எம்பெருமான் திருவடியடைந்தார். ஆனாலும் இன்றும் அவரது ராமநாமம் நம் காதுகளில் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது. எனது ஆய்வின் முன்னுரை துவங்கி முடிவுரையாக முடிகிறது.

<u>ஸ்ரீத்யாகராஜர் மற்ற வாக்கேயகாரர்களைவிட சிறப்புற்றார்:</u>

<u>கீர்த்தனைகளால் சிறப்புற்றார்.</u> மற்ற வாக்கேயகாரர்களை விட சிறப்படைந்தது அவரது கீர்த்தனைகளில் இருந்த எளிமையான வழிமற்ற வாக்கேயகாரர்கள் கீர்த்தனைகளை செப்பனிட்டு சீர்ப்படுத்தியதுபோல் (நொட்டேஷன் எழுதி) சீர்படுத்தியதாகும். ஆனால் இவரது கீர்த்தனைகளை சரிவர பாதுகாக்காமற் போனாலும் அவரது பாடல்கள் (கீர்த்தனைகள்) அமரத்வம் அடைந்து விட்டன. பலரும் குருகுலமாகப்பாடி அக்கீர்த்தனைகளை உயிர்ப்பித்து நிலைத்து நிற்க செய்து விட்டார்கள் காரணம் பாட எளிமையானதால், அவரது கீர்த்தனைகளில் சங்கதிகளை கவனித்தால் அதில் இசைக்கான நுட்பஸ்ருதிப்ரயோகம் உள்ளதை தெரிந்துக்கொள்ளலாம். ராகத்தின் ஜீவன் எங்கு உள்ளது. ஜீவஸ்வரம் எங்குள்ளது, என்பதனை எளிதில் கண்டுகொண்டு குருகுலமாக பாடுவோரிடம் கற்றால் பாட இராகத்திற்குத் தனி விளக்கமோ, ராக முத்திரையாக பெயர் வைக்கவோ அவசியமில்லை. சங்கதிகளில் நவரஸம் மட்டும் சித்தரிக்காமல் பக்தி, வந்தனையாசிப்பு, முறையீடு, ஆக்ரோஷம், தெளிவடைதல், சாந்தி, ஆத்மநிவேதனம் இப்படியாகும். பல்லவி அனுபல்லவி, சரணத்தில் கூறி முடிந்த தருணத்தில் மோக்ஷயாசிப்பது, பக்தி, பிக்ஷை கேட்பது இதுவே ஸ்ரீத்யாகப்ரும்மம் கீர்த்தனைகளின் மற்றவர்களைக் காட்டிலும் சிறப்பாக அமைத்துள்ளார் என்றுமேற்சொன்னவற்றிலிருந்து புரியும். இளம்சிரார்கள் இவரது கீர்த்தனைகள் எளிதாக பாடிவிடுவார்கள். ஆனால் ஸ்ரீதீக்ஷிதர், ஸ்ரீஸ்யாமசாஸ்திரிகள் கீர்த்தனைகளுக்கு கொஞ்சம் இசையில் முதிர்ச்சியுள்ளவர்களால் ஞானம் பெற்றவர்கள் மட்டுமே எளிதில் பாடாந்தரம் செய்யமுடியும். இதுவே ஸ்ரீத்யாகப்ரும்மக் கீர்த்தனைகளில் சிறப்பம்சம். மும்மூர்த்திகளில் ஸ்ரீதீக்ஷிதர் கீர்த்தனைகளில் கீர்த்தனை ராகத்தில் முத்திரைபதித்தும் மத்யமகாலமும் இருக்கும், ரஞ்ஜகத்தை குருசிஷ்ய பரம்பரையாக பெற்றால் ரம்யமாக இருக்கும்.

நிறைய சௌக்க காலம் (அதாவது) விளம்பித காலம் நிறைய உண்டு. ஸ்ரீஸ்யாமாசாஸ்திரிகள் கீர்த்தனைகளில் அம்பாள் கீர்த்தனைகள் பெரும் தொகுப்பாக பாடியுள்ளார். தெய்வாம்ஸம் கொண்டதான வழிகள், பாடினால் கிடைக்கும் தெய்வீகத்தை உணரலாம். இவ்வளவிலும் ஸ்ரீத்யாகப்ரும்ம கீர்த்தனை உச்சக்கட்டத்தை 12, 24, 48, 96 நுட்பஸ்ருதியின் ப்ரயோகத்தாலும், ஸ்வராட்க்ஷர மூலத்தாலும் அடைந்ததாகும். ராகவடிவத்தை ஸ்வராக்ஷரத்திலேயே வைத்துள்ளார். ராகபாவம் சொட்ட கீர்த்தனைகளின் அமைப்பை சிலவற்றை காண்போம்.

| கீர்த்தனை | தாளம் | ராகம் | எதற்கான பாடல் |
|---|---|---|---|
| 1. கிரிராஜ | ஆதி | பங்காள | வினாயகர் போற்றி |
| 2. ஏலநிதயராது | ஆதி | அடாணா | ராமனை முதல் தரிசனத்தில் பாடியது- நவரஸத்தைப் பாடுகிறார். |
| 3. (i)ப்ருந்தாவன | ரூபகம் | தோடி | கோவிந்தா 24வது ஸ்வரம் என்பதை குறிப்பிடும் பாடல் |
| (ii)பஞ்சரத்னம் ஜகதாநந்தக | ஆதி | நாட | பஞ்சரத்தினத்தில் முத்திரை குத்தியுள்ளார். 'கோவிந்தா'தான் 24வது அக்ஷரம் |
| 4. மோக்ஷமுகலதா | ஆதி | சாரமதி | மோக்ஷம் பற்றி |
| 5. ராமபக்தி | ஆதி | சுத்தபங்காள | ராமபக்திக்கு |
| 6. தாரினிதெலுஸு | ஆதி | சுத்தஸாவேரி | அதிநுட்பமான ஸ்வரஸாகித்யம் கடினமான க்ருதி பாடினார் வேறு எந்த கீர்த்தனையும் எடுபடாது அமிழ்ந்துபோகும் அமைப்பு |
| 7. நாதோபாஸனா | ஆதி | பேகட | நாதோபாஸனைக்கு |
| 8. மனஸீநில்ப | ஆதி | ஆபோகி | நீதிவிளக்க |
| 9. நிதிசால | மிஸ்ரசாபு | கல்யாணி | நிதிவேண்டாம் என்று கூறுதல் |
| 10. வந்தனமு | ஆதி | சஹானா | வந்தனம் |
| 11. சல்லரேராம | மிஸ்ரசாபு | ஆஹரி | மலர்தூவி ஆராதனை |
| 12. சூர்ணிகை | ஜய துஜயது | | வைகுண்டவர்ணனை |

மேலே குறிப்பிட்ட ஒன்பது கீர்த்தனைகளும் எனது வெளியீடான ஸ்ரீத்யாகராஜக்ருதிமாலாவில் உள்ளதை பாடி மகிழும் படி கேட்டுக்கொள்கிறேன்.

<u>ஸ்ரீராமனை பாடிய ஸ்ரீத்யாகப்ரும்மம் கிருஷ்ணனை பாடுகிறார்:-</u>

ஏனைய விஷயங்களையும் கற்றறிந்தவர் ஸ்ரீத்யாகப்ரும்மம், ஸ்ரீராமாயணத்திற்கு ஸ்ரீராமனே கேட்ட சிறப்பை போல ஸஹஸ்ரநாமத்திற்கு ஸ்ரீக்ருஷ்ணனே உடனிருந்து கேட்ட தனிச்சிறப்புண்டு. கீதை என்று அடைமொழியில்லாமல் சொன்னால் பகவத்கீதையே என்று கொள்ளப்படுவதுபோல, ஸஹஸ்ரநாமம் என்று சொன்னால் அது விஷ்ணு சகஸ்ரநாமம் என்று கொள்ளப்படுவதாலும் இதன் பெருமை விளங்கும்.

''ஒ கேயம் கிதா நாமஸஹஸ்ரம்'' மஹாபாரதம் இதிஹாஸம், சரித்ரம் என்றும், நீதி சாஸ்த்ரம் என்று கூறப்பட்டபோதிலும் ஆதியிலும் நடுவிலும் முடிவிலும் முக்யமாக அது பகவானுடைய பெருமையை கூறுவதாகும். ஸஹஸ்ரநாமத்திற்கு மஹாபாரதமே கதை வடிவாகும். அதுபோல ராமாயணத்தை விட்ட குறையை முடிப்பதற்காக ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடத் தொடங்கினாலும் நடுவிலும் முடிவிலும் கீதையின் நாயகனான கண்ணனை நௌகாசரித்ரத்தை கூறுவது மூலம் கீர்த்தனைகளில் கண்ணனின் திவ்ய சரித்ரம் கூறி ஸஹஸ்ர நாமத்திற்கு மஹாபாரதமே கதை வடிவானது போல ஸ்ரீராமனே ஸஹஸ்ர நாமத்தின் தலைவன் என்பதனை கருத்தில் கொண்டும், ப்ரஹலாத சரித்ரம் எழுதி, ஏனைய விஷயங்களை ஒன்றுபடுத்தி, உலகளவு உயர்ந்து விட்ட மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம். இதன் அடையாளமாகவே கண்ணனுக்கு திருவரங்ககோயிலில் இரண்டாவது திருச்சுற்றில் கண்ணன் கோயிலை காணலாம். இங்கே தேவகி, வாஸுதேவர், ரோஹினி எல்லோரையும் தரிசிக்கலாம்.

**''ஸ்ரீத்யாகப்ரும்ம கீர்த்தனைகளை மனனம் செய்வதில், ஸ்ரீமத்ராமாயணம் படித்த புண்யம் ஸ்ரீபகவத்பாராயணம் செய்த பெருமை**

*ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் ஸேவித்த புண்யம் கிடைக்கிறது. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம், பகவத்கீதை, ஸநத்ஸுஜாதீயம் என்ற மூன்றும் மஹாபாரதத்தின் ஸாரமாய் அமைந்தவை என்ற கருத்தில் தான் ஸ்ரீஆதிசங்கரர் இம்மூன்றிற்கும் ஸ்ரீபாஷ்யம் எழுதினார் முக்குணங்களையும் கடந்து நிலை முக்தி.*

*__'த்ரைகுண்ய விஷயாவேதாநிஸ்த்ரை'__ - குன்யோ பவார்ஜுன என்று கீதை கூறகிறது. முக்குணங்களையும் கடக்க வழிகாட்டும் நூல்களாக இம்மூன்றும் அமைந்தவை, முக்குணங்களையும் கடக்க இசைபொக்கிஷமாக நமக்குக் கிடைத்தது ஸ்ரீத்யாகப்ரும்ம கீர்த்தனைகள் ஆகும்.*

*'பிறவியிலேயே புறக்கண்ணை இழந்திருந்தது மட்டுமன்றி*

*''தமோ'' குணத்தில் ஆழ்ந்து ''நான்'' எனது என்னும் செருக்கால் அகக்கண்ணையும்*

*இழந்திருந்த த்ருதராஷ்டிரனுக்கு நைத்ஸுஜாதரால் உபதேசிக்கப்பட்டது.*

*__நைத்ஸுஜாதீயம்.__*

*''ரஜோகுணம்'' மேலிட்ட கர்மவீரனாகிய அர்ஜுனனுக்கு க்ருஷ்ணபகவானால் உபதேசிக்கப்பட்டது.*

*__பகவத்கீதை.__*

*''ஸத்வகுணம்'' மிக்க தருமபுத்திரருக்கு பீஷ்மாசாரியாரால் உபதேசிக்கப்பட்டது __''விஷ்ணு ஸஹஸ்ரநாமம்.''__*

*அனைத்தும் சேர்த்து முக்குணங்களையும் கடக்க வழிகாட்டும் நூலாக அமைந்தது ஸ்ரீத்யாகப்பிரும்ம கீர்த்தனை என்பது வரலாற்று சிறப்புக் கொண்டதாகும்.*

*__நாரதர் இயற்றிய நாரதீயம்:-__*

*ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு ஸ்ரீநாரதரால் நாரதீயம் அளிக்கப்பட்டது __திருவமுண்டூர் மலைநாட்டுத்திருப்பதியில் நாரதருக்கு நாராயணன் ப்ரத்யக்ஷம்__ நாரதர் ப்ரம்மாவினால் சபிக்கப்பட்டு இவ்விடம் வந்து ஸ்ரீமந்நாராயணனை பூஜித்து பகவானிடமிருந்து தத்துவக்ஞானம் உபதேசிப்பதே தொழிலாக வேண்டும் என்ற வரத்தைப் பெற்றார். அவ்வரத்தில் நாரதீய புராணத்தை இயற்றினார் என்றும் ஸ்ரீமஹாவிஷ்ணுவே __'பரதத்வம்'__ என்றும் ஸ்தாபித்து அவரை பூஜிக்கும் முறை, துதி முதலியன அடங்கிய பெருநூல் இருபத்தையாயிரம் க்ரந்தங்களில் செய்து முடித்ததாக ஸ்தலப்புராணம். இதை ஸ்ரீநாரதர் ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு அளித்தார் என்பது வரலாறு. இதனைப் பெற்றபின் __'பரதத்வம்'__ என்பதனை உணர்த்த பல பாடல்களில் (கீர்த்தனைகளில்) கூறியுள்ளார். நாரதீயம் ஸ்ரீமஹாவிஷ்ணுவே __'பரதத்வம்'__ என்று ஸ்தாபித்து அவரை பூஜிக்கும்முறை துதி முதலியவை அடங்கிய நூலாகும். இந்த முறையை தெளிவித்தப்பாடல் __'பரிபாலய'__ மேற்படி நாரதீயத்தினால் ஸ்ரீராமபிரானை பூஜிக்கும் முறையை பரிபாலய கீர்த்தனையில் விளக்குகிறார். மேலும் ஸ்துதி, ஆராதனை முதலியவைகளை உத்ஸவ ஸம்ப்ரதாயத்தில் சூர்ணிக்கை, ஹெச்சரிகை, நலங்கு, ஊஞ்சல், மங்களம், ஹாரதி, சோபானை, லாலிஊஞ்சல், பவ்வளிம்பு, தொகுத்து உதவியது நாரதீயம் தான் என்பது எனது கருத்து. பகவானை எப்படி எப்படியெல்லாம் பூஜிப்பது என்பதனை எல்லாம் கீர்த்தனை வடிவமாக்கியது இந்த நாரதீயத்தினாலேயே, இதனாலேயே ஸ்ரீத்யாகப்ரும்மம் 24,000 கீர்த்தனைகளை பாடினார் என்ற வரலாறு உண்மையாக இருக்கலாம் என்பது என் ஆய்வின் கருத்து. இந்த நாரதீயத்தால் தத்வஞானம் பெற்று நமக்கும் அளித்த மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம் நாராயணனுடைய பரதத்வம் என்பதை அறிந்து தத்வமெறுக என்ற கீர்த்தனை மூலம் தெரிவிக்கிறார். இராம-தத்வமஸி என்ற வேதவாக்யத்தின் பொருள் நீயேயென்றும் பரதத்வத்தை மேலான உண்மையை பல கீர்த்தனைகளில் காட்டியுள்ளார். ப்ரஹலாதசரித்ரம் பண்ணியுள்ளார்.*

*வேத, ஸ்ாஸ்த்ர புராணம் - வேதம் நான்கு, ஸாஸ்திரம் 6 - இங்கு*

*சாஸ்திரீய சங்கீதமும் - புராணம் ஸ்ரீரங்கபுராணமும், சொல்லப்பட்டிருக்கிறது. அவரது கீர்த்தனைக்ள் மனதைத்தொடும் கவிதை நயம் கொண்டது அவரது கீர்த்தனை செய்யுள் நடை (பத்யமாகவும்)*

*வசன நடை (கத்யமாகவும்)*

*இரண்டாகப் பிரிக்கலாம்.*

*ஒருவகையானது செய்யுள்நடை (மோனை, யதுகை, வெண்பா கொண்ட அமைப்பை காணலாம்.*

*தமோகுணம் - தான் என்ற அகந்தைகுணம்*

*ரஜோகுணம் - எடுத்த தர்மத்தை முடிக்கும் குணம்*

*ஸத்வகுணம் - சத்தான தெய்வீக விஷயத்தை விரும்பி கேட்பவர்*

*எல்லாவற்றிற்கும் பாடியுள்ளார்.*

*வால்மீகிராமாயணமேயன்றி மற்றும் அத்யாத்மக ராமாயணம் முதலிய நூல்களில் காணப்படும் சம்பவங்கங்களை அடிப்படையாகக்கொண்டு நவரசம் கொண்டு க்ருதிகளை அமைத்துள்ளார். உபநிடதம், கீதை, இராமாயணம் இவற்றில் கணக்கிலடங்கா தத்வார்த்தங்களை எளிய தெலுங்கில் இசையுடன் உலகுக்கு அளித்தவர். இவருடைய கீர்த்தனைகள் __த்யாகப்ரும்மோபநிஷத்__ என்று கூறப்படுகிறது. ஓர் உபநிஷத்தின் பொருளை ஓர் கீர்த்தனையிலும் ஓர் அனுவாதத்தின் சாரத்தை ஒரு சரணத்திலும் அடக்கிவிடக் கூடியவர். ஸ்ரீராமனை (ச்ரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்மநிவேதனம் ஆகிய ஒன்பது வித பக்தியாக வழிபட்டிருக்கிறார்.*

*__நாரதருக்கு அஞ்சலி செய்கிறார்__*

*தத்வக்ஞானத்திற்கு '**நாரதமுனிவெடலின**'வில் பேதம், அபேதம் (வேற்றுமை வேற்றுமையின்மை) இரண்டு மற்ற வேதாந்தசாரத்தில் திளைப்பவரான (தத்துவஞானத்தின்) நாரதர் மகிழ்ச்சி நிரம்பியவராகப்ரஹ்லாதனுக்கு சுபவார்த்தைகளை தெரிவிக்க வெண்ணிறங்கொண்ட தன் தேகத்தின் மீது பொன்மயமான வீணைப்ரகாசிக்க வந்தும் பகவானுடைய மர்மங்களை, கூறி இவ்வுலகில் கேட்பவருக்கும் வெற்றி என்கிறார். பேதம், அபேதம் அற்றநிலையே தத்துவஞானம் என்கிறார். நம் மனம் பேத, பேதமின்மையைக் கடந்து முக்திநிலையை அடைய தியானம் ஒரு சாதனம் என்கிறார். அதன்மூலமே பேத அபேதங்களை தவிர்க்கமுடியும் என்பது அவரது சித்தாந்தம். அந்த த்யானத்தை பெற இசை ஒரு ''**ஊன்றுகோல்**'' என்கிறார்.*

*__வரநாராயண:-__ ''தேவரி ஷீணம்சநாரத'' தேவரிஷிகளுள் நான் நாரதன் - என்று கண்ணன் கீதையில் கூறியுள்ளது இங்கு குறிப்பிடப்படுகிறது. ஆதலால் ஸ்ரீமந்நாராயணனே ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு நாரதீயம், நாரத மகரந்தம், ஸ்வரார்ணவம் முதலிய இசைநூல்களை தந்திருக்க வேண்டும். ஆகவேதான் ஸ்ரீரங்கத்தை பல பாடல்களில் பாடியுள்ளார். அந்த நாராயணனே தானே புவியில் ராமனாக அவதரித்து வாழ்ந்தவர் என்பதனை பூர்வஜென்மத்தில் வால்மீகியாக இருந்த ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு உணர்த்தவே நாரதர் துறவி வடிவில் வந்து நாரதீயம், ஸ்வரார்ணவம் முதலிய நூல்களை அருளியிருக்கிறார். அந்த நாரதீயத்தில் பரதத்வம் (தன்னைப்பற்றி கூறும்படியாகத் தானே உள்ளது). என்பதனை நாரதர் கூற அருளியது நாராயணன் அல்லவா? மேலும் ஸ்வரார்ணவம் என்னும் க்ரந்தம் தமிழ்நாட்டில் பிறந்த ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு அருளப்பட்டது இது சரித்ரம். ஆனால் அந்தஸ்வரார்ணம் வடமொழி சொல்லாக மாற்றப்பட்டுவிட்டது. அது நம் தமிழ்நாட்டில் இருந்த பூர்வதமிழ்நூல் '**பஞ்சபாரதீயம்**' என்று எனது ஆழமான கருத்து. எனது ஆய்வின் முடிவு அந்த நூல் சங்கீத சாஸ்த்ரம் மட்டுமல்லாது ஆறுசாஸ்திரங்கள் கொண்டதாக இருந்திருந்ததால் 24 ஸ்ருதி 48, 96 நுட்பஸ்ருதியை ஸ்ரீத்யாகப்ரும்மம் உணர்ந்திருந்தார் என்று தெளிவாக அறியலாம். ஆதலால் தமிழிசை நம்மை விட்டு போகாத வண்ணம் தமிழிசையை காப்பாற்றிய மஹான் என்று தெரிகிறது. இகபரதத்துவம் அனைத்தும் அடங்கிய நூல் ஸ்வரார்ணவம் என்ற பஞ்சபாரதீயம் என்பது ஆய்வின் முடிவும், முதலும் முடிவும், தத்வக்ஞானம் வழங்ககோரும்பாடல் மனிதன் எவ்வளவு பெருமை புகழ் அடைந்தாலும் மோக்ஷமடைய அவன அருள் வேண்டும் என்பதே முடிவு. ஒருவன் தத்வக்ஞானம் இல்லாது பரம்பொருள் அடைவது கடினம் என்பதையே இந்தப் பாடல் உணர்த்துகிறது. எல்லாம் நானே என்று கண்ணன் கீதையில் கூறுகின்றார். நாம் என்னும் அகந்தையை விட்டு எல்லாவற்றிற்கும் மேலானவன் அவனே என்பதே தத்வக்ஞானம் ஆகும் என்ற கருத்துபட பாடியுள்ள பாடல் '**வரநாரத**' '**நாராயண ஸ்மரணாநந்தானுபவமுகல**' என்று பாடுகிறார். சங்கீதத்தில் தெய்வாம்சம் கண்ட மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம் தெய்வாம்சத்தில் சங்கீதம் உள்ளது என்பது எனது ஆய்வின் கருத்து **தி டிவைன் அண்டு தி டிவினிடி ஈஸ் வித்தின் ம்யூசிக்.***

*__இந்த பாரத புண்ய பூமியில் சங்கீதத்திற்காக எவ்வளவோ மகனீயர்கள் அவதரித்தாலும்__*

*குறிப்பாக ஸ்ரீத்யாகப்ரும்மம் என்று உன்னத நிலையை உலகளவு பெருமையடைந்து நிலை பெற்ற மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம். இசைக்கென்று ஓர் தனித்தன்மை நீரோட்டம் போன்ற நடை சலசலக்கும்நாதம், நாதத்தில் பரமானந்தம், பரமானந்தத்தால் ஜீவாத்மா பரமாத்மாவிடம் செல்லும் மார்க்கம். இத்தனையும் ஒருங்கே கொண்ட கீர்த்தனைகளை வடித்து அமைத்துத்தந்த பெருமை ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு சாரும். ஸ்ரீத்யாகராஜர் என்ற பெயருடன் பிறந்து ஸ்ரீத்யாகப்ரும்மம் என்ற பெயர் பெற்ற ஒரே மஹான் ஸ்ரீத்யாகராஜர்.*

பலமஹான்கள் அவதரித்தபோதிலும் ஏனையோருடைய பூர்வஜென்மம் பற்றி தெரிந்துகொள்ள முடியாதபோது, இவருடைய பூர்வஜென்மம் பற்றி தெளிவாக பேசப்பட்ட மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம். ஸ்ரீத்யாகப்ரும்மம் தெலுங்குதேசத்திலிருந்து தமிழ் மண்ணுக்கு வந்து தமிழ் மண்ணுக்குரிய தமிழிசை இலக்கணம் படித்து இசையை வளர்த்து தமிழ் மண்ணிலேயே சமாதியடைந்தார் என்பது வரலாற்றுசிறப்பாகும். நிறைய ஆண்டுகள் வாழ்ந்த இவர் ஸங்கீதத்திற்கு ஒரு வரையறை செய்தார் என்றால் மிகையாகாது. அவர் தன் மாணாக்கர்களுக்கு ஸ்வரஸாஹித்யம் கூறி பாடாந்ரம் (கீர்த்தனைகளை) சொன்னார். சில சமயம் சிலேட்டுப் பலகையில் எழுதியும் காட்டுவார். அதை மாணவர்கள் ஓலைசுவடியில் எழுதிவைத்துக் கொள்வார்கள் என்று சரித்திரம் கூறினாலும் அதுவே உண்மை என்று தில்லைஸ்தானம் ராகவ அய்யங்காரிடம் ஓலைச்சுவடிகள் இருந்து அது அழிந்து போயின என்று அவருடைய தலைமுறையினரால் கேட்டிருக்கிறேன். இவரது கொள்கை, சித்தாந்தம் பல்வேறு மதக்கொள்கைகளை ஒன்றாக பாவிக்க கருத்து வேற்றுமையில்லாமல் வாழ வைத்த மஹான் காலங்கடந்த தத்துவ உண்மைகளை எளிய பாடல்கள் மூலம் விளக்கம் செய்தார். அவரது பாடல்களில் தத்துவஞானமும், மனதை கவரும் கவிதைநயமும் உடையதாக அமைந்திருந்தது. நாதத்தின் தீர்க்கத்தையும், தனித்தன்மையையும் ஒவ்வொரு சொல்லாலும் சொல் நயத்தாலும் இலக்கிய நடைநயத்தாலும் செயலாலும் தெளிவுபடுத்தினார். சங்கீதத்தின் மூலத் சாயுஜ்ய பதவி அடைவது எப்படி என்பதை அவரது கீர்த்தனை மூலம் அறியலாம்.

<u>ஸ்ரீத்யாகப்ரும்மத்தைப்பற்றிய ஆய்வின் முடிவுப்பக்கமாக, ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் பஞ்சரத்ன கீர்த்தனை இடம் பெறுகிறது.</u>

**''எந்தரோமஹாநுபாவுலு''**:- தாத்பர்யம் ஸ்ரீமத்பாகவதம், இராமாயணம், கீதை முதலியஸ்ருதி ஸாஸ்த்ரபுராணங்கள் ஆகியவற்றின் மர்மங்களையும் சைவம் முதலிய ஆறுமத இரகசியங்களையும் முப்பத்து முக்கோடி தேவர்களின் உள்ளக்கருத்துகளையும் அறிந்து ராக, தாள, பாவம் ஆகியவற்றின் இன்பத்துடன் நீண்ட ஆயுளை பெற்று, எல்லையற்ற இன்பத்தை அநுபவிப்பவரும் ஸ்ரீத்யாக ராஜரின் நேயர்களுமான பெரியவர்களுக்கு நமஸ்காரம் என்கிறார் ஸ்ரீத்யாகப்ரும்மம். முக்குணங்களையும் கடந்த நிலை முக்தி - த்ரை குண்ய - விஷயா வேதா நிஸ்த்ரை - குண்யோ பவார்ஜுன என்று கீதை கூறுகிறது. முக்குணங்களையும் கடக்க அதாவது (தமோ, ரஜோ, ஸத்வகுணம்) வழிகாட்டு நூல்களாக ஸ்ரீமத்பாகவதம், இராமாயணம், கீதை, மூன்றும் அமைகின்றது. இதனை நன்று கற்றறிந்த மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம் அந்த மஹானை நமஸ்கரிப்போம். தமோ, ரஜோ, ஸத்வ முக்குணங்களையும் கடக்க வழிகாட்டும் நூலாக இருப்பது ஸ்ரீமத்ராமாயணம், பாகவதம், கீதை.

<u>ஸ்தோத்திரத்தை ஆறுவகை என்பர்:-</u> நமஸ்கரித்தல் ஆசிகூறுதல், ஸித்தாந்தத்தை எடுத்துரைத்தல், ப்ராக்ரமத்தை புகழ்தல், பெருமைகளை பேசுதல், பிரார்த்தனை என ஸ்தோத்ரத்தின் லக்ஷணம் 6 வகைப்படும்.

ஆயிரம் நாமாக்களில் ஓம்காரம் முதலும் நம: முடிவிலும் பதம் சேர்க்கப்படுவதால் ஒவ்வொன்றும் சிறந்த மந்த்ரமாக அர்ச்சனையிலும் ஜபத்திலும் உபயோகப்படுவதால் விஷ்ணு சகஸ்ர நாமத்தில் முதல் லக்ஷணம் முற்றும் பொருந்தியிருக்கிறது. ஸ்ரீத்யாகப்ரும்மம் வாஸுதேவமயம் என்பதனை அறிந்து கொண்டேன் என்று கூறுகிறார். இந்திரியங்கள், மனம், புத்தி, சித்தம், கூர்மை, பலம், தைரியம், தேகம், ஜீவன் எல்லாம் வாசுதேவமயம் என்று கூறப்படுகிறது. இதிலிருந்து அனைத்தையும் கட்டுப்படுத்தினால் மோக்ஷம்நிச்சயம் கிட்டும் என்பதாகிறது. சாஸ்திரங்கள் அனைத்துக்கும் ஆசாரமே முதலாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அந்த ஆசாரத்தில் பிறப்பது தர்மத்திற்கு பிரவு அச்சுதர் என்று கூறப்படுகிறது. வேதங்கள், சாஸ்த்ரங்கள், உபநிஷதங்கள் தான் நன்கு கற்றறிந்ததாகக் கூறுகிறார் அடுகாராதனி மனோரஞ்சனி ராகம் வேதப்புராணம், ஆகமசாஸ்திரங்கள் இவற்றிற்கு ஆதாரம் நாதம் என்றும், அமுதரஸமே இவ்வுலகில் மானிட உருவத்துடன் அவதாரமெடுத்தது என்று புராணம் கூறுகிறது. இங்கு என்னுடைய ஆய்வின் முற்றுப்பெற்ற முடிவினை அளிக்கின்றேன். வேதாகம சாஸ்திரம்படி திருவாராதனம் நடக்கும் கோயில் திருவரங்கம். புராண காலத்திலிருந்து பாஞ்சராத்ர ஆகமப்படி இங்கு காலை முதல் இரவு வரை பூஜைகள் நடக்கின்றன. 5 காலமாக பிரித்து பூஜை செய்யவேண்டும் மேலும் பாஞ்சராத்ர ஆகமத்தில் சொன்னபடி ப்ராணப்ரதிஷ்டையை பகவத்சாஸ்திரம் ஸ்ரீபாஞ்சராத்ர ஆகமத்தில் விஸ்தாரமாகச் சொன்னபடி பகவத்பிம்பம் ஆவாஹனம் செய்யப்பட்டுள்ளது. மேலே குறிப்பிட்டபடி வேத, புராணம், ஆகமசாஸ்திரங்கள் இவற்றிற்கு ஆதாரம், நாதம் என்றும், <u>இங்கு ஓர் விளக்கம் தருகிறேன்.</u> இந்த வேத, புராண ஆகமசாஸ்திரத்திற்கு ஆதாரமானகோயில் திருவரங்கம். இவற்றிக்கு ஆதாரம் நாதம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த நாதம் திருவரங்கம் கோயிலின் உள்ள கர்ப்பக்கிஹத்தை அடுத்த காயத்ரீ மண்டபம் (24 ஸ்ருதிகள் 24) தூண்களும் உள்ளன. இங்கு காயத்ரீ வாஸம் செய்கிறாள். இங்கு இசையின் நாதம் மிக நுண்ணிய அலை ஓசைகளால் சதா

*காலமும் கேட்கப்படுகிறது. ஊசிவிழுந்தால் சப்தம் கேட்கும் என்று சான்றோர்கள் கூறி உள்ளனர். இங்கு இசையை பாடினால் (ஞானமானவர்கக்கு) அந்தந்த ஸ்வரங்கள் மிகத் துல்யமாகக் கேட்கும் இதனை உணரலாம். மேலும் இந்த அமுத ரஸத்தை பருகவே இஷ்வாகு குலதனமாக இந்த அமுத ரஸமே மானிட உருவமான ஸ்ரீராமர் அவதாரம் எடுத்து அரங்களை பூஜித்து வழிப்பட்டதாகப் புராணம் கூறுகிறது. ஆகவே வேதம், புராணம், ஆகமஸாஸ்த்ரம் இவற்றிற்கு ஆதாரம் நாதம் என்றும் அமுதரஸமே இவ்வுலகில் மானிட உருவத்துடன் அவதாரம் எடுத்தது என்று கூறும் புராணத்தோடு நிறைவு செய்கிறேன். எனது குருபரம்பரைக்கு அஞ்சலி செய்கிறேன். ஏனைய சங்கீத மூர்த்திகளையும் சிரம்தாழ்த்தி வணங்குகிறேன். அணி அரங்களை என் நெஞ்சுநெகிழ அவளது திருவடியை பணிகின்றேன். என் குல தெய்வங்களை துதித்தலோடு இந்த ஆய்வுதனை முடிக்கின்றேன்.*

*இந்த ஆய்வுதனை முடிக்கும் தருணத்தில் இப்பகுதிக்கு ஒரு முக்கிய குறிப்பேட்டை தருகின்றேன். காய்த்ரீ என்றும் மந்த்ரத்திற்கே ஸாவித்ரீ என்றும் ஸரஸ்வதி என்றும் பெயர்கள் உண்டு. காலையில் காயத்ரீ, மாத்யாஹ்னிகத்தில் ஸாவித்ரீ, மாலையில் ஸரஸ்வதி என்று பெயர். இம்மூவரும் ஒருங்கே உள்ள கோயில் திருவரங்கம் ஆகும். எப்படியெனில் 1.இங்கு காயத்ரீ என்று திருவரங்ககர்ப்பக்ரஹத்தில் 24 தூண்கள் கொண்ட மண்டபம் உள்ளது அது காயத்ரீ மண்டபம் ஆகும். ஸூர்ய பகவானிடம் விளங்குபவளாகையால் இந்த காயத்ரீக்கே ஸாவித்ரீ என்று பொருள்.*

*2. உலகைப்படைத்ததாலும், வாக்ருபமாக இருப்பதாலும் இந்த மந்த்ரத்திற்கே ஸரஸ்வதி என்று பெயர். 3.காயத்ரீ மோக்ஷத்திற்கு காரணமானவள் ஆகவேதான் எங்கும் இல்லாதது இந்த திருவரங்கத்தில் காயத்ரீயின் 24 அக்ஷரமும் (சங்கீதத்தின் 24 அக்ஷரம் என்று சொல்லப்படுகிறது) ஜபிக்க மோக்ஷோபாயத்திற்கு இசை, ஜபம் மூலம் கிட்டுகிறது என்ற தத்துவம் திருவரங்கக் கோயிலில் உள்ளது என்ற குறிப்பை அளிக்கின்றேன். எனது தாயார் இசைக்கு சிறப்புக்குறிப்பாக அளித்துள்ளார். திருவரங்கத்தை சயபர்வதமடுவு என்றும் அதன் மேல் அரங்கன் பள்ளிக்கொள்ள, காவேரி, கொள்ளிடம் மாலையாக போட்டுக்கொண்டுள்ளார் என்றும் என்தாயார் குறிப்பை கூறியுள்ளார் - இதையே அருணாச்சலகவிராயர் பாடியுள்ளார் ஆம்பல் பூத்தசய பருவதமடுவிலே அவதரித்த இரண்டாற்றுக்கு நடுவிலே என்று கும்பகோணம் திருமதி. ஜெயம்மாள்.*

***ஸ்ரீகாயத்ரீ மந்த்ரத்தின் 24 அக்ஷரத்தில் 24 கீர்த்தனைகள் பாடிய மகான் ஸ்ரீத்யாகப்ரும்மம்***

*ஓம் பூர்புவஸ்ஸுவ: தத்ஸவிதுர்வரேண்யம் பர்க்கோ தேவஸ்யதீமஹிதியோயோன்னப்ரசோதயாத்.*

| வ்யாஹ்ருதி | கீர்த்தனை | ராகம் | தாளம் |
|---|---|---|---|
| ஓம் | ஓரங்கசாயி | காம்போதி | ஆதி |
| பூர் | பூலபாந்பு | ஆஹிரி | திஸ்ரலகு |
| புவ | புவினிதாஸுட | ஸ்ரீரஞ்ஜனி | தேசாதி |
| ஸ்ஸுவ: | ஸ்வரராக | சங்கராபரணம் | ஆதி |

| | | | |
|---|---|---|---|
| 1. தத் | தத்வமெறுக | கருடத்வனி | ரூபகம் |
| 2. ஸ | ஸரஸஸாமதான | காபிநாராயணி | ஆதி |
| 3. வி | விதுலகு | மாயாமாளவகௌளை | ஆதி |
| 4. துர் | துன்மார்க்க | ரஞ்சனி | ரூபகம் |
| 5. வ | வரராகலய | செஞ்சுகாம்போதி | ஆதி |
| 6. ரே | ரேமானஸ | தோடி | ரூபகம் |
| 7. நி | நிதிசால | கல்யாணி | மிஸ்ரசாபு |
| 8. யம் | யக்யாதுலு | ஜயமநோஹரி | ஆதி |
| 9. பர்க் | பரமாத்முடு | வாகதீச்வரி | ஆதி |
| 10.கோ | கோடினதுலு | தோடி | ஆதி |
| 11.தே | தேவிஸ்ரீ துளஸம்ம | மாயாமாளவகௌளை | ஆதி |

| | | | |
|---|---|---|---|
| 12. வ | வந்தனமு | சஹானா | ஆதி |
| 13. ஸ்ய | ஸ்யாமசுந்தராங்க | தன்யாஸி | ரூபகம் |
| 14. தீ | தீநஜநாவந | பூபாளம் | சாபு |
| 15. ம | மனஸுலோநி | ஹிந்தோளம் | ஆதி |
| 16. ஹி | ஹரிதாஸுலு | யமுநாகல்யாணி | ஆதி |
| 17. தி | திநமணிவம்ஸ | ஹரிகாம்போதி | ஆதி |
| 18. யோ | யோசனா | தர்பார் | ஆதி |
| 19. யோன் | யோசனா | தர்பார் | ஆதி |
| 20. ன | நந்நுபரோவநீ | ஆபோகி | தேசாதி |
| 21. ப்ர | ப்ராணநாத | சூலினி | தேசாதி |
| 22. சோ | சோபில்லு | ஜகந்மோஹினி | ரூபகம் |
| 23. த | தவதாஸோஹம் | புந்நாகவராளி | ஆதி |
| 24 யாத் | யக்யாதுலு | ஜயமனோஹரி | ஆதி |

**ஸ்ரீ காயத்ரீமந்த்ரத்தின் 24 அக்ஷரத்தில் 24 கீர்த்தனைகளை பாடிய மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம் சங்கீதத்தின் தெய்வாம்சத்தால் நாதப்ரும்மம் நாதயோகி என்ற பெருமையை அடைகிறார்**

ஸ்ரீத்யாகப்ரும்மம் இசையின் பெருமையை உலகுக்கு வெகு (லய, நயத்துடன்) எடுத்துக் கொடுத்தவர். இசையின் பெருமையை மும்மூர்த்திகளும் உலகுக்கு உணர்த்தினார்கள் மும்மூர்த்திகளும் பாடிய கீர்த்தனைகள் தெய்வாம்சத்தை உடையதாக அமைந்தது. லய, ரசம், நயம், ஏனைய அனைத்திலும் ஒன்றாகவே இருந்தாலும் இசையில் எளிமையைக் கைக்கொண்டவர் ஸ்ரீத்யாகப்ரும்மம். கீர்த்தனையின் அமைப்பு அப்படிப்பட்டதாக உள்ளது. அவரது இசையின் இலக்கு இசையின் சிகரத்தை அடைய பரம ரகசியமான கோட்பாடுகளால் கட்டிக்காத்து வைத்திருந்தார் என்றால் மிகையாகாது விந்தையானதும் கூட, ஸப்தஸ்வரங்கள் என்பது இசையின் கோட்பாடு, ''ஸரிகமபதநிஸ'' சப்தஸ்வரம் என்கிறார். ஆனாலும் அஷ்டகத்தை வலிறுத்தியே இசையின் தத்துவத்தை நமக்கு வடித்துத் தந்துள்ளார். தமிழிசையே தரணிபோற்றும். இசை என்பதற்கு 24 அக்ஷரமே ஆதாரம் என்கிறார் 7, 8, 12, 24 (48, 96 நுட்பஸ்ருதிதான்) ஆதாரம் என்பது அவரது கோட்பாடு, 7 -ஸப்தஸ்வரம் 8-மேளராகம், பூர்ணமானராகவடிவுக்கு 8, 12, ஸ்தானங்கள், 24 ஸ்ருதி 48, 96 நுட்பஸ்ருதிகள் இவையாவும் அவருக்கு நாரதபகவானால் உபதேசமானது என்பதனை ஆதாரமாகக் கூற நாரதர் தமிழநாட்டில் யாழாசிரியனாக இருந்தார் என்பதேயாகும். அந்த நாரதரே ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு ஸ்வரார்ணவம் என்ற இசை இலக்கண நூலை அளித்தார். அது ஒரு தமிழ் இசை இலக்கண நூல் பஞ்சபாரதீயம் என்பது (எனது ஆய்வின் முடிவு) ஆகும். அதன் விளைவாக பஞ்சரத்னம் பாடியிருக்கவேண்டும் என்பதும் எனது ஆய்வின் கருத்துரை. மேலும் நாரதீயம் என்னும் க்ரந்தத்தை அளித்தார் ஸ்ரீநாரதர் என்பது கூற்று. அந்த க்ரந்தம் 24,000 ஸ்லோகங்களை கொண்டுள்ளது என்றும் கூறப்படுகிறது. ஆகவேதான் ஸ்ரீத்யாகப்ரும்மம் 24,000 பாடலை பாடியிருக்க வேண்டும் என்பதும் (எனது ஆய்வின் முடிவு) இதனிடையில் தமிழிசை போற்றும் தமிழகத்தின் பழைய நூல்களில் 24 ஸ்ருதிதான் என்று கூறப்படுகிறது. அப்படிப்பட்ட ஆதாரத்தைக் கொண்டும், 24 ஸ்ருதிகளை நிர்தாரணம் செய்தார் என்பதும், 24 ஸ்ருதி 48, 96 நுட்பஸ்ருதிகளை அவரது கீர்த்தனையின் ராகங்களில் அமைத்து பாடினார் என்பதும் எனது ஆய்வின் கருத்து. மேலும் ஸ்ரீரங்கம் வந்து கோயிலின் அமைப்புப்படி அச்சுதன், அனந்தன், கோவிந்தன், வாஸுதேவன் என்பதை அறிந்து 24 ஸ்ருதியின் முடிவான பெயர் கோவிந்தா என்றும் அதையே தனது கீர்த்தனையிலும் பாடியுள்ளார். ''ப்ருந்தாவனலோல கோவிந்தா ரவிந்தநயனா'' இதில் 'கோவிந்தா என்பதனை கூறியுள்ளார் (இது எனது ஆய்வின் கருத்துரை).

<u>எனக்கு கிடைத்த மஹாபாக்கியம்</u>

<u>எனக்கிட்ட பணி ஸ்ரீத்யாகப்ரும்மம் பற்றிய விரிவான ஆய்வு</u>

நடத்தும்படி என் தாயார் கூறியதுடன் நில்லாமல் அனேக விவரங்களை அளித்தார். அதன் பின் இந்த ஆய்வை தொடங்கி பல காலம் ஆகிவிட்டது. பல வருடங்களாக ஆழ்நிலை பயிற்சியை மேற்கொண்டேன். அதில் முக்யமான ஒன்று சுவடியியலை பயில தஞ்சை சரஸ்வதி மஹாலில் (மன்னர் சரபோஜி வழிவந்த அரசர்களாலும்) (பல்கலைக் கழகத்தாரும்) இணைந்து நடத்தப்பட்ட சுவடியியலை பயின்றேன். ஏனெனில் இசையின் விவரங்கள் பல சுவடிகளில் எழுதப்பட்டிருக்கும் என்ற குறிப்பின்படி சுவடியியலில் தேறி சுவடி படிக்கும் அறிவு பெற்றேன். அப்பொழுது ஸ்ரீத்யாகப்ரும்மம் அவரது கீர்த்தனைகளை சுவடிகளில் எழுதி வைத்ததாக ஆதாரம் இல்லாவிட்டாலும் அவர் மாணாக்கர்கள் சுவடியில் அவர் கூறியதை எழுதி கொண்டார்கள் என்ற விவரம் கிடைத்தது. தில்லைஸ்தானம் ராமய்யங்கார் வம்சத்தை சேர்ந்தவர்கள் என்னிடம் இசை பயில வந்தபோது நான் ஏதேனும் சுவடி இருக்குமா என்ற போது எல்லாம் தீக்கிரையாயிற்று என்றனர். மேலும் 1990 சுவடியியலை படிக்கும்போது ஸ்ரீத்யாகப்ரும்மம் சிலேட்டு பலகையில் சிலசமயம் எழுதிக்காட்டுவார் என்ற விவரத்தை சுவடிக்கு பாடம் நடத்த வந்தவர் கூறினார். மேலும் தஞ்சையில் உள்ள ஸரஸ்வதி மஹாலில் <u>**ஸ்வரார்ணவம்**</u> உள்ளது என்றும் தஞ்சை ஸரஸ்வதி மஹாலில் உள்ளவர் கூறினார். ஆனால் அதைப்பற்றி விவரம் கூற இயலவில்லை என்று மறுத்தனர். பலவிதமான இடையூருக்கும் மத்தியில் எனது விடா முயற்சியாலும் மனோதிடத்தாலும் என் தாயார் கொடுத்த விவரம் அனைத்தையும் (ரிக்கார்டு) பதிவு செய்து கொண்டேன். எனக்கு என் தாயார் வைத்திருந்து காப்பாற்றி அளித்த ரகசியங்களை இந்த ஆய்வில் வெளியிட்டுள்ளேன். அவர் ஸ்ரீத்யாகப்ரும்மம் வால்மீகியின் மறு அவதாரம் என்பதனையும், வீணை வாசிப்பார், வீணையோடு பாட்டுபாடுவார், ஒவ்வொரு பஜனையிலும் பாடுவார் என்ற விவரத்தை என் தாயார் எனக்கு அளித்ததோடு அல்லாமல் எனக்கு வீணை இசையோடேயே கீர்த்தனங்களை கற்றுத்தந்தார். அவரே 1960 முதல் 1975 வரை எனது மேடை கச்சேரிக்கு வீணை பக்க வாத்யமாக வாசித்தார். (இதற்காகவே வானொலியில் எனக்கு சந்தர்பம் இல்லை என்று சொல்லிவிட்டார்கள். அதற்காக நான் வருந்தாமல் எனது குரு பரம்பரை பழக்கமாக வீணையோடேயே வாய்பாட்டு இசையைப்பாடி வெற்றி கண்டேன்). மேலும் என் தாயார் ஸ்ரீத்யாகப்ரும்மம் அவரது கீர்த்தனையில் ராகத்தில் நுட்பஸ்ருதிகள் வருவதையும் அது எங்கு ப்ரகாசிக்கிறது என்பதனையும் விளக்கிக்காட்டுவார் வீணையில். மேலும் அவர் 24 ஸ்ருதி தான் என்றும் 8ன் கூட்டமே 24 ஸ்ருதி விவரமே இசைக்கு ஆதாரம் என்றார். நான் ஸப்தஸ்வரம் விவரம் பற்றி கேட்பதுண்டு. ஸப்தஸ்வரம் சம்பூர்ணமானதுதான், ஜன்யங்களும் வரும். ஆனால் எட்டு அக்ஷரம்தான் மேளராகமாகும். ஒரு ராகம் பூரத்தியானதாக இருக்குமானால் அது 8ன் கூட்டமாகத்தான் இருக்கும் என்று விவரமாக கூறுவார். அவர் ஸ்ரீத்யாகப் பிரும்மம் 72 மேளராகத்தில் பாடியுள்ளார் என்றும் அதற்காகவே எனது குருபரம்பரையை தழுவி நானும் 72 மேளராகத்தில் பாசுரப்படி ராமாயணம் பாடி அமைத்துள்ளேன் என்று கூறினார். இந்த உயர்வினாலேயே ''பாசுரமாலா'', ஸ்ரீத்யாகராஜக்ருதிமாலா'' இரண்டிற்கும் திருமலை - திருப்பதி தேவஸ்தானம் நிதி உதவியுள்ளது. 72 மேளம்தான் முடிவானது என்றும் எட்டின் வர்க்கமும் தான் முடிவானது என்றும் நிரூபித்துள்ளார் 72 மேளத்தில் எல்லாவற்றையும் பாடவில்லை என்று சிலர் எழுதி பேசியுள்ளார்கள். ஆனால் எனது தாயார் **'நாஸிகாபூஷணி'** 70வது மேளம். **'மாரவைரீ ரமணி'** என்ற கீர்த்தனம் பாடியுள்ளார் என்றும், 72 மேளத்தையும் கீர்த்தனம் பாடியுள்ளார் ஸ்ரீத்யாகப்ரும்மம் என்றும் எனக்கு கூறியுள்ளார். மேலும் த்யாகப்ரும்மம் பாடிய பஞ்சரத்தினத்தில் அவரது வழியே எனக்கு பாடம் போதித்துள்ளார். ஸ்ரீத்யாகப்ரும்மம் சில ராகங்களில் பல பாடல்கள் பாடியுள்ளார். அவற்றின் சங்கதிகளை ஒவ்வொரு கீர்த்தனைகளிலும் பல விதமாக கையாண்டிருப்பதை சுட்டிக்காட்டியுள்ளார். அதையும் இந்த ஆய்வில் விளக்கமாக கூறி உள்ளேன். மோனை, யதுகை, யதிப்ரஸ்தாரம், டாலுஸ்புரிதம், கோபுச்ச, ஸ்ரோதோவக அணி, ஸ்வராட்க்ஷரம், ப்ரயோகங்கள் ஒரு ராகத்தில் ஸ்வராட்க்ஷர குறிப்பால் எந்த விவரத்தை குறிப்பிட்டுள்ளார் என்பதின் ரகசியத்தை அளித்துள்ளார். அந்த காலத்தில் ஒருவருடைய திறமையை லேசில் வெளிக்கொணரமாட்டார்கள். அந்த வகையில் என் தாயாரை பற்றிய பெருமையை வெளிக்கொணராமலேயே விட்டுவிட்டார்கள். என் தாயார் கொடுத்த குறிப்பால் ஸ்ரீத்யாகப்ரும்ம கீர்த்தனையின் ராகங்களை தங்கள் சௌகரியப்படி மாற்றுகிறார்கள். கீர்த்தனையின் பெயரை மாற்றுகிறார்கள். பாடும் முறையை மாற்றுகிறார்கள். அப்படி செய்யக்கூடாது என்று எனக்கு கூறுவார். முக்கியமாக திலீபகம் - ராமாநீயெட, எவரனிக்கு - மாற்று பெயரும் உதயரவிசந்திரிகாவை பெயர் மாற்றியும் நடபைரவியை பைரவி என்றும் அனுமத்தோடியை தோடி என்றும் பெயரை மாற்றியுள்ளார்கள். இந்த பாடல்களை (கீர்த்தனைகளை) அந்தந்த ராகத்திலேயே பாடும்படி என்னை பணித்துள்ளார். ஜெயம்மாள் அவர்களின் குறிப்புப்படி சேதுலார கீர்த்தனையை நடபைரவி ராகம் **'கோடினதுலு'** - ஹனுமத்தோடி, எவரனி - தேவாம்ருதவர்ஷினி, **'ராமநீயெட'** - திலீபகம், எந்த நேச்சினா - உதய ரவி சந்த்ரிகா என்ற குறிப்பை எனக்கு அளித்து எனக்கு குருகுலத்தில் பாடம் நடத்தியுள்ளார்.

இவ்வளவையும் செயல்படுத்தி ஸ்ரீத்யாகப்ரும்மம் பற்றிய ஆய்வுதனை எழுதிமுடித்துள்ளேன். ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதோபாஸனை செய்து மோக்ஷம் அடையலாம் என்றார். அவரது பாடல்கள் இன்னும் நிலைத்து நிற்க காரணம் தெளிவடைந்த ஸ்வர நிர்ணயம், ராகப்ரஸ்தாரக்ரமம், நுட்பஸ்ருதிப்ரயோகம், ஆரோஹண அவரோஹணத்தில் ஒரு ராகத்தில் எப்படி சஞ்சாரம் போய்வரவேண்டுமென விதரணமாக ஸ்வரசஞ்சாரம் ஆகும். மேலும் அன்னியஸ்வரம் ப்ரவேசத்தால் அது பாஷாங்க ராகமோ, தேசியமோ என்று எண்ணிவிடக்கூடாது. அது பழம் பெரும் பண்பாடுவதற்கான விதிமுறை என்று அறியவேண்டும். மேலும் நமது உடல் வீணையோடு ஒத்தது. அதில் 24 மெட்டுகள் அமைப்பு எப்படியோ அப்படி நமக்கும் உள்ளது. ஸ்ரீத்யாகராஜர் காயத்ரீயின் 24 அக்ஷரமும் 24 ஸ்வரம் என்றார். நாமும் காயத்ரீ மந்திரம் ஜெப்பிப்பதால் 24 அக்ஷரம் நமது உடலிலிருந்து சரியான ஸ்ருதி லயப்பட்டு பாடமுடியும் என்ற நிலை நமக்கு ஏற்படுகிறது. இந்த சூட்சுமத்தை ஸ்ரீத்யாகப்ரும்மம் வெளியிடாமல் மாணாக்கர்களுக்கு குருகுல பயிற்சி மூலமே வெளியிட்டார். மேலும் 24 ஸ்ருதி நிர்ணயமும் 48, 96 நுட்பமானஸ்ருதிகள் ப்ரயோகமாகும் விதத்தையும் பாடி காண்பித்து படிய வைத்தார். ஓம்காரம் என்பதுதான் ஓம் ப்ரணவம் தான் மூலதாரம் என்பதை அவரது ராமநாம ஒருகோடி ஜபத்தால் அறியவைத்தார். இந்த ஓம் காரம் தான் அச்சுத மத்யமம் ஸ்ருதியை எடுத்து ஸட்ஜம் - பஞ்சமம் முறை - ஸட்ஜம்மத்யம முறை முதலியவற்றை பஞ்சமம் ஸ்ருதி, மத்யமஸ்ருதி முதலியவற்றை செய்து காட்டி உணர்த்தியுள்ளார். மேலும் நொட்டேஷன் எழுதாமலே போனதால் பல விஷயங்கள் தெரியாமல் போய்விட்டது என்பது தேவையற்ற பேச்சு. ஏகாதசி பஜனை மூலம் மாணாக்கர்களுடன் பாடியதிலிருந்து மாணாக்கர்களுக்கு (24 ஸ்ருதி விவரம் 48, 96 நுட்பஸ்ருதிவரும் இடம், ஸ்வராட்க்ஷரம் மூலம் ராக முத்திரை முதலிய ரகசியார்த்தங்களை) மனதில் ஆழப்பதியச் செய்துவிட்டார். அது அழியாமல் இன்றும் நிலைத்து நிற்கிறது. மேலும் வீணையோடு பஜனை செய்து ஸ்வர நிர்ணயம் செய்து பாடாந்தரத்தை கூறி, போதித்த மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம் உலக அளவு சிறப்புறுகிறார்.

<u>என் தாயாருடைய அமைப்புகளான கண்டகதி, மிஸ்ரகதி, திஸ்ரகதி</u>

என்னுடைய தாயார் கும்பகோணம் ஜெயம்மாள் அவர்களிடம் நான் குருகுலம் பயின்று 2 புஸ்தக வெளியீடும் முடித்து, ஒரு ஆய்வுதனை நடத்தி முடித்துள்ளேன்.

1. முதல் புத்தகம் <u>பாசுரமாலா</u> தமிழ் ஸ்வர தாளக்குறிப்புடன் நாலாயிரத் திவ்யப்பிரபந்த பாசுரங்கள்.

2. 2-ம் புத்தகம் <u>ஸ்ரீத்யாகராஜக்ருதிமாலா</u> தெலுங்கு சாகித்யத்தின் தமிழாக்கமான கீர்த்தனை வடிவம் ஸ்வரதாளகுறிப்புடன்.

3. எனது தமிழிசை பற்றிய விரிவான ஆய்வுக்கட்டுரை - ஜெயம்மாள் அவர்களால் மேற்பார்வை செய்யப்பட்டது. ஸ்ரீத்யாகப்ரும்மம் முதல் திருவரங்கம் வரை இதனை அவர்களிடம் 1999 -ம் வருடத்தின் முடிவு-2000 -ம் ஆண்டு பிறந்த நேரத்தில் இந்த ஆய்வு கட்டுரைக்கான ப்ரதியை ஜெயம்மாள் அவர்களிடம் என்னால் சமர்ப்பிக்கப்பட்டது. என் தாயார் நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்தின் பாசுரங்களை ஆதிதாளத்தில் அமைத்துள்ளார். இதன் சிறப்பு என்னவென்றால் அழகிய மணவாளன் அஷ்டாக்ஷரன் என்பதாகும். ஆகவே அதனை குறிக்க தாளவகையை (ஆதி தாளத்தில் பாசுங்களை) அமைத்துள்ளார். மேலும் ஐவருக்கு அருள் செய்த பெருமாள் என்று ஆதாரபூர்வமாக அரையர் சுவாமியார் துலுக்க நாச்சியார் படியேற்றத்தில் கூறுகிறார். என்னுடைய தாயார் திருச்சந்தவிருத்தத்தை ஏற்கனவே ஜெம்பத் தாளம், மிஸ்ரசாபு தாளம், திஸ்ரநடையிலும் காவடி சிந்துமெட்டில் பாடியுள்ளார். ஐவருக்கு அருள் காத்தபெருமாள் என்பதற்கு ஜெம்பை தாளமாகவும் (1) பாசுரம் அங்கமாறும் வேதம் நான்குமாகி நின்றவற்றுள்ளே என்பதாகும் (2) ஏகமூர்த்தி, மூன்று மூர்த்தி நாலுமூர்த்தி, நன்மை சேர் பாசுரம் மிஸ்ரசாபு தாளத்திலும் (3) பண்டுமிண்டுபாசுரம் திஸ்ர நடையாகவும் அமைத்துள்ளார். இந்த மூன்று பாசுரங்களும் திருச்சந்தவிருத்தமாகும். இதனை சந்தம் ஆதலால் அஷ்டாக்ஷரனுக்காக ஆதி தாளத்திலும் அமைத்து எனக்கு பாடாந்தரம் அளித்துள்ளார். இதில் முக்யமாக விசேஷமான முறையில் இருப்பதற்காக மேற்சொன்ன தாளங்களில் அமைத்துள்ளார். ஆனால் இவரது பண் சம்பந்தமான ப்ரபந்த சம்பந்தமான பாசுரங்களை எட்டின் வடிவமாகத்தான் அமைக்கவேண்டும் என்பது இவரது ஆழ்ந்த அனுபவக் கருத்தாகும். ஏனைய எல்லோரும் பண் ஆராய்ச்சி நிமித்தம் தேவார திருவாசக பண்களின் மெட்டுக்களை ஒத்து திவ்யப்பிரபந்த இசையை அமைக்க ஆய்வு எடுத்து நடத்தி வருகிறார்கள். எனக்கு இந்த விதமான விஷயம் பற்றி ஒரு கண்ணோட்டம் என்னவென்றால் - தேவாரம், திருவாசகம் படைப்புக்கு வேண்டிய தாள வகைகள், திவ்யப்பிரபந்தத்திற்கு தேவையற்றது என்பதாகும். ஏனெனில் திவ்ய ப்ரபந்த பாசுரங்கள் ஆழ்வார்கள் பாடியது அஷ்டாக்ஷரனுக்காக. மேலும் எட்டின் வர்க்கமே திருவரங்கக் கோட்பாடு. ஆகவே எனவே தாயார் எடுத்த முடிவுப்படி ஆதிதாளமே ப்ரபந்த இசைக்கு முதன்மையானது என்பதாகும். ப்ரபந்தப்பண்கள் ஆதிதாளம், ஜெம்பதாளம் அமைப்புகளில்தான் அமைக்கவேண்டும் என்பது என் ஆய்வின் கருத்து. மேலும் ஆதிதாளத்தில் திருப்பாவையில் ஆனந்த பைரவி

ராகம் ஆர்ஷப்ரயோகம் செய்திருக்கிறார். இது தன் குருநாதர் ஸ்ரீத்யாகப் பிரும்மத்திற்கு அஞ்சலி செய்வதற்காக, அவர் ஆனந்தபைரவியில் ஒரு கீர்த்தனை மட்டும் பாடினார் என்று கூறப்படுகிறது. தம் குருநாதர் வழியே தன் இசையை வழிநடத்தி எனக்கும் போதித்து தன் குருநாதர் பற்றிய இந்த ஆய்வுதனை எழுத பணித்தார். அவர் விருப்பப்படியே அவர் குருநாதர் பற்றிய ஆய்வுதனை சிறப்பாக முடித்துள்ளேன்.

## வேதம் பற்றிய அறிமுகம்

### வேதங்களே ரங்கநாதன் சரீரம் என்று பிரம்மா ஸ்ரீரங்கமஹாத்மியத்தில் கூறுகிறார்:-

வேதம் பற்றி அதுவும் ஸாம வேதம் இசை சம்பந்தப்பட்டது என்று கூற வேண்டும் என்ற நோக்கம் இருந்ததால் இதுபற்றி மட்டும் உரைத்திடல் அவசியம் என்று எனக்கு இருந்தது. இருந்தாலும் நாம் வெகு காலமாகவே வேதத்தை பல மேதாவிலாசம் கொண்டவர்களுடைய உரையை நான் படித்து படித்து அதில் என்ன கூறப்பட்டிருக்கிறது, இசைக்கு ஆதாரம் வேதமே, என்னும் போது அது பற்றி நாம் விரிவுரையாக கூறவேண்டும் என்ற அவா எழுந்தது. இது பற்றி முக்கியமாகக் கூறவேண்டும் என்று எங்கள் ஊர் சாமவேத வாத்தியார் அவர்களிடம் நான் சாமவேதம் பற்றி அறிந்து கொள்ள நினைத்ததில் அவர் அது சம்பந்தமான புத்தகங்களிலிருந்து பல விவரங்களை கூறினாலும் அவரே புத்தகத்திலிருந்து சாமகானம் பற்றி எனக்கு என்ன தேவையோ அந்த குறிப்பை எடுத்துக்கொள்ளுங்கள் என்றார். நான் அந்த புத்தகங்களிலிருந்து பிராசீனமாக விஷயங்களை இசை சம்பந்தப்பட்டதை எடுத்து இங்கு கூறியுள்ளேன். வேதம் சம்பந்தத்துக்கு உரிய இசை பகுதிகளையும் இத்துடன் இசை ஒத்து வருகிறது. இந்த வேதம் பற்றிய தலைப்பு அவ்வளவு முக்கியமானது என்று சொல்லமுடியாது. இருந்தாலும் சாம வேதம் பற்றி நான் சிறிதளவு கூற விரும்புகிறேன். இசைக்கு மூலாதாரம் காயத்ரீ மந்த்ரம் என்பதால் அது பற்றி வெகு நாட்களாக எனது ஆய்வு செய்து வைக்கப்பட்டிருந்தது. ஆனால் இவ்வேதத்திற்கும் காயத்ரீ மந்த்ரத்திற்கும் சம்பந்தத்தை தெளிவுபடுத்தவே இந்த தலைப்பை தேர்ந்தெடுத்து தொகுத்துள்ளேன். இந்த விவரங்களை உங்கள் முன் வைக்கின்றேன். சில குறிப்புகளை சாம வேத சங்கிதை மற்றும் பல புத்தகங்களிலிருந்து எடுத்துக் கொண்டுள்ளேன்.

### வேதம் பற்றிய சிறுகுறிப்பு

வேத சாஸ்த்ர புராணம் என்பது எனது தொகுப்பு இசை ஆய்வுக்கான ஒரு சிறு பகுதி வேதம் என்பதாகும். ஆக சாமவேதம் பற்றி பார்ப்போம். காட்சியாலும் கருத்தாலும் உணரப்படாத உபாயத்தை உணர்த்துவது வேதம் என்பர். யாக்ஞவல்கியர் ஸ்ம்ருதி - சங்கீதத்தை உணர்ந்தவன் பரமபதத்தையடையமாட்டானேல் உருத்திபரமேசுவரனுடைய தொண்டனாய் அவனோடு கூடவே களிப்புறுகின்றான் என்று கூறுகிறது. இவ்வாறே சூதசங்கிதையின் ஒரு கூறாகிய பரமகீதையும் ''சங்கீத ஞானம்'' பரமேசுரனையடைவதற்கு காரணமாகும். சங்கீத உணர்ச்சியால் யோகம் உண்டாகிறது. யோகத்தினாலே சிவனோடு ஒன்றாகும் தன்மையுண்டாகும் என்று கூறுகின்றது...

<u>இது பற்றி பகவான் விஷ்ணுமூர்த்தி:-</u> ''யான் வைகுண்ட முதலான இடங்களில் இருக்கமாட்டேன் மற்றெங்கு இருப்பேன் என்றால் எனது அன்பர்கள் யாண்டும் பாடுகின்றார்களோ ஆண்டு நிலையாயிருப்பேன்'' என்றருளிச் செய்துள்ளார். மற்றும் பாகவதமும் 'பைங்குழவி' மீது கொழுந்து விட்டோங்கும் என்று கூறுகின்றது. இது கொண்டவன்றோ தெய்வத்திருவருளால் வந்த பெருவேதமும்

''பெருமவற்றுள்யா மறிவதில்லை அறிவறிந்த
மக்கட் பேறல்லயிவ என்று கூறுகின்றது.

பரம்ப்ரும்ப வடிவனுமாகிய உருத்திர பரமேசுவரனுடைய அருள் சுரக்குமாறு வேதவழக்கை பற்றிய சங்கீதத்தையேனும் இனிது பாடுவீர்களாக என்றுமேற்கூறியபாட்டின் அர்த்தமாகும்.

<u>விரிவுரை:-</u> புத்திரர்களே நீவிரும் உமக்கு வேண்டிய பயனை அடைவதற் பொருட்டு, ஆன்றோர்களால் ஆராதிக்கப்பட்டவனும், அன்பர்களை பரிபாலிக்கின்றவனும், சத்துவ குணமாகிய அருள் திருமேனியை உடையவனும், சத்துவகுணச் செயல்களை உடையவனும், பரம வித்தையை அளிக்கின்றவனும், பரம்ரும்ம வடிவனுமாகிய பரமேசுவரனுடைய அருளைப் பெற இனிது பாடுங்கள் என்று மேற்கூறிய அடிகள் கூறுகின்றன. கந்தர்வ வேதத்திற்கு காரணணாகிய உருத்திரபரமேசுவரன் ஒருவனே சங்கீதத்தின் இன்சுவையையுணர்ந்து அருள் செய்யவல்லான் என்பது வரலாறு. விலங்குகளும், குழந்தைகளும், பாம்புகளும் சங்கீத சுவையுணர்ந்து கொள்கின்றன. சங்கீதத்தின் வல்லுநத்தன்மையைச் சங்கரன் ஒருவனேயறிகின்றான். பிற நல்லன் என்றொரு பழமொழியும் கூறுகிறது. வேதம் என்பதே தமிழில் மறை என வழங்கப்படுகிறது. இதை வேய்தல், மறைதல் என்பது பற்றி மறையெனப்படுகின்றது. வேதம் ஒன்று அதை ஆதியில் ரிக், யஜுர், அதர்வம், சாமம் என நான்காய் ஸ்ரீவியாசர் வகுத்தார். ஆகவே அவர் வேத வியாசர்

எனப்பட்டார். 1. விக்ஞானமயம் - ரிக்வேதம் 2.வீரம் விளக்குவது - யஜுர்வேதம், 3.அனலையும் அறிவையும் - அதர்வம் கொடுக்கும் 4. சர்வேஸ்வரனின் துதிமந்திரச் சேர்க்கையை - ஸாமத்தில் காணலாம். ஆதியில் ஸாம வேதத்திற்கு ஆயிரம் சாகைகள். ஆனால் இந்த சாகைகளில் நாம் அதிகமாய் கௌதுமம் ராணாயணீயத்தைப்பற்றியே அறிகிறோம். கௌதுமஸாகைகள் ஆறு பிரிவு என பல நூல்கள் கூறுகின்றன. எல்லா சாகைகளுக்கும் ஏறக்குறைய மூலமந்திரங்களான வேதமொழிகள் ஒன்றே. ஸாமவேதத்தை மனதில் பதியவேண்டுமென கானங்களாக சுவரங்களுடன் ஆதியில் ரிஷிகள் அமைத்துள்ளார்கள். இக்கானங்கள் அடங்கிய நூலுக்கு ஸாமகானம் என்று பெயர். இது நான்கு பிரிவுகள். 1.வேய கானம் 2.அரண்யேகேய கானம் 3. ஊஹகானம் 4. ஊஹ்யம்.

<u>வேயகானம்:-</u> இதை ப்ரக்குதியென்று சொல்லுவதுண்டு இதில் (கள) பிர பாடங்கள் ஸாமன், வேதம், மந்திரம், தேவதை, ரிஷி, சந்தசு, சுரத்தின் ரகசியங்களை சற்று தெரிந்து கொள்ளுவது அவசியமாகும். சாந்தோகியம் சொல்லுவது எது சாதுவோ சிறப்பை அளிப்பதோ அது ஸாமன், இந்த சிறப்பை நாடுபவர்களுக்கு எல்லா சௌகரியங்களும் தோன்றும். ஸாம என்னும் மொழியில் ஸ என்பது சுகத்தைக் குறிக்கும். அம என்பது அனலைக்குறிக்கும். இவ்விரண்டும் சேர்வது ஒரு சாமன் உபநிஷத காலத்தில் சிலர் அதை நீர், நிலம், அனல் முதலியன என்றார்களாம். ஆனால் ஓர் ரிஷி அதை ஆகாசமென ஸ்தாபித்தார். அதாவது ஸாமனை அடைவதென்பது ஆகாசம் போல் விரிந்துள்ள எதையும் நாம் ஸ்வாதீனஞ்செய்து கொள்ளவேண்டும் என்பதாகும். வேதமென்றால் பலமும் சக்தியும் ஆகும் என வேத சந்திரிகை கூறுகிறது. மேலும் மந்திரமர்மம் என்ன என்பதை பார்க்கவேண்டும். மந்த்ரம் என்பது வெறும் மொழிகளில்லை. ஆதியில் ஸ்வாத்மானுபவத்தால் பெரியரிஷிகள் அனுபவித்த உணர்ச்சி சின்னங்களாகும். அம்மர்மங்களை அறிய நாமும் நமது நிலையை (அதனை அறிய மாற்றிக் கொண்டு) திடசித்தத்துடன் வேதம் அறிய முற்பட வேண்டும். அம்மர்மங்களை அறிவது கடினம். ரிஷிகள் என்பவர்கள் ஆதியில் மந்த்ரங்களின் இரகசியங்களை மானிடர்களுக்கு அறிவித்தபடியால் அவர்கள் பெயரால் அம்மந்திரங்கள் சொல்லப்படுகிறது. ரிஷிகளுக்கு அப்பால் சந்தஸை நோக்குவோம். சதபதஞ் சொல்வது சந்தஸ் என்பது நம் சரீரத்துக்கு பெயர். காயத்ரீ தலை - ப்ருஹதீ - முதுகு - திருஷ்டுப் - இடை (பலம்) பங்க்தி - முழங்கால் - சந்தஸு என்றால் உணவு முதலியவற்றுக்குப் பெயர் அவிசந்தசு - உணவு விரிசந்தசு - எதிர் உலகம் பிராமணம் சொல்வதாவது. ஸ்ரீசங்கரர் காயத்ரீ சந்தஸை பற்றி பிரஹதாரண்யகத்தில் கூறுகிறார். ''**காயத்ரீ**'' என்பது பிராணவன்மை. பிராணவன்மை என்றால் பலம், பலத்தில் சத்தியம் நிற்கும் சத்தியம் பலத்தில் நிற்பதால் பலத்தை சத்யத்தைவிட பெரிதென்பார்கள். இந்த காயத்ரீ சந்தஸிலேயே வேதம் அதிகமாய் நிற்கும். அதாவது காயத்ரீயான தேக பலம் மனோபலம், சமூகபலம், சந்தஸை அடைந்துள்ளவனே வேதத்தை தாங்கமுடியும்.

இதனிடையில் சாமவேதகானவியல் பற்றி அறியவேண்டும். ஓம் என்பதை நீட்டிக் கூறின் ஒருவிதமாக ஸ்வரம் உண்டாகும். இதை பற்றி சாந்தோக்கிய உபநிடதம் விவரித்து கூறுகின்றது. கண்ணபிரானும் ஆங்கிரஸரிடத்தில் சங்கித வித்தயை பயின்றார் என்றும், கண்ணபிரான் சாலிக்யம் என்பதோர் சங்கீதத்தை வெளிப்படுத்தியுள்ளார் என்றும் தெரிகிறது. அது யாதவர்களுக்கு இனிது தெரியும் என்று கூறப்படுகிறது. ஈண்டு ''**வேத மந்த்ரங்கள்**'' கானத்துடன் கூடியே துதிக்கப்படுகின்றன என்று சைமினிமுனிவர் தெளிவாகக் கூறுயுள்ளார். சங்கிதம் வேள்வி அநுட்டானத்திற்கு வலிவையுண்டாக்குவதால் கீதத்தால் சமத்காரஞ்செய்ய பெற்று இருக்கும் வேத மந்திரங்களாலேயே துதி செய்தல் இனிது அமையும் என்று இருக்கும் வேத மந்திரங்கள் சுரங்களுடன் கூடியவைகளாகச் செய்து வேத ஒதப்பட்டது. அப்படி செய்ததால் சங்கீதத்தால் பிரத்யக்ஷ பயன் ஆகிறது. ஆதலால் சங்கீதமும் ஒருவகையான சமத்காரகருமமே என்று உணரமுடிகிறது. இநத பொருளே சாமம் என்று சொல்லாலும் நன்று விளங்குகிறது என்று சைமுனிமுனிவர் கூறுகிறார். இவர் பெயர் பெற்ற சாமம் பெயரே மருவி ஜெமினி சாமம் என்று சொல்லப்படுகிறது. சாத்தோக்கிய உபநிடதமும் சாமத்திற்கு எது சுதி, சுரம் என்றத் தொடக்கத்து மந்திரங்களாலும் இதை கூறுகின்றது. அங்ஙனமே ''அர்த்தத்தை கத்வாத்விகல்ப:'' என்னும் சைமினியின் சுந்தரபாடியத்தில் சபரஸ்வாமிகளும், சாம வேதத்தில் சுகத்திரம் கீதியுபாயங்கள் என்று கூறி உள்ளார். இனி மார்பு, கழுத்து, தலை என்னும் மூன்று இடத்திலிருந்து ஒலியெழுகின்றது. இம்மூன்றையும்தான் காலைதீயோம்பல், கடும்பகற்றீயோம்பல், மாலைதீயோம்பல் போன்றே எண்ணல் வேண்டும். <u>இந்த மூன்று இடங்களில்</u> ஏழுவகை தோன்றுகின்றன. <u>மார்பு, கழுத்து, தலை:-</u> இந்த மூன்று இடங்களில் ஏழு சுரங்கள் ஏழு வகை தோன்றுகின்றன. சுரங்கள் ஏழு. கிராமங்கள் மூன்று மூர்ச்சனை 21 இருபத்தி ஒன்று, தானங்கள் 49 நாற்பத்தி ஒன்பது இவை ஒன்று கூடி ஒரு சுர மண்டலம் எனப்படுகின்றன. இவற்றுள் ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம். இவைகளே ஏழுவகை சுரங்கள். ஷட்ஜம், மத்யமம், காந்தாரம் என்னும் இவைகள் கிராமங்களெனப்படுகின்றன. <u>1. இவற்றுள் ஷட்சக்கிராமத்தில் பதினான்கு தானங்களும் 2. மத்தியக்கிராமத்தில் இருபது தானங்களுமாகின்றன. 3. காந்தார கிராமத்தில் இருபது தானங்களும்</u>

**ஆகின்றன. 1. மூர்ச்சனையானது:-** பித்திரு, தெய்வம் என்று பேதத்தால் தனித்தனியாக ஏழு வகையாகிறது. **இதில் நந்தீ, விசாலா, சுமுகி, சித்திரா, சித்திரவதீ, சுகா, பலா** என மிவ்வேழும் வேதமூர்ச்சனைகளாகின்றன. 2. ஆப்யாயனீ, விசுவபிருதா, சந்திரா, ஹேமா, கபர்த்தினீ, மைத்திரீ, பார்ஹதீ, ஷ்ருஷ்யகா, ரசனி என்னும் இவ்வேழும் ரிஷிமூர்ச்சனைகளாகின்றன. (உலக மூர்ச்சனை) 3. தேவ பித்திருரிஷி என்னும் மூர்ச்சனைகளை கந்தருவர் வேள்வி, மனிதர் என்பவர்கள் முறையாய பின்பற்றுபவர்களாகின்றன. உலகம் பற்றி மூர்ச்சனைகள் ரிஷிமூர்ச்சனைகள் என்று வழங்கப்படுகின்றன.

1. ஷட்ஜத்தால் தேவரும் 2. ரிஷபத்தால் ரிஷிகளும்
3. காந்தாரத்தால் பித்திருக்களும் 4. மத்யமத்தால் கந்தருவரும்
5. பஞ்சமத்தால் எல்லாமக்களும் 6. நிஷாதத்தால் வேள்வியும்
7. தைவதத்தால் ஏனைய உயிர்களும் களிப்படைகின்றன.

வேதம் என்பது எப்படி வந்தது என்று பலர் பல கருத்து கூறினாலும் வேதங்களில் ரிக் வேதம் முதலாவதாக இருக்கு என்றும், யஜுர் வேதம்தான் முதலானது என்று கூறினாலும் சாயனரும் இதற்கே பாடியமியற்றியுள்ளதாலும் எசுர் வேதம் முதலானது என்று கூறினாலும் மற்ற வேதங்களில் கூறியுள்ள தேவதைகள், வேள்விகள் வேள்விக்குரிய சாதனங்கள் முதலிய அனைத்தையும் துதிப்பது சாம வேதமேயாகும் என்று போற்றி ஆராதனை முதலியவைகளை பயனுள்ளதாக்க பிறவறறினுள் இந்த சாமவேதமே முதலானதாக வைக்கப்பட்டுள்ளது. இதனையே கண்ணபிரான் **வேதாநாம் சாமவேதோஸ்மி** அதாவது வேதங்களுக்குள் சாமவேதனாகயிருக்கிறேன் என்று திருவாய் மலந்தருளியுள்ளார். மேலும் பல நூல்கள் **'பரமேஸ்வரனை'** சாமகானப்ரியன் என்றும், ராவணன் தனது நரம்புகளையே யாழ்நரம்பாகக் கொண்டு சாமகானம் செய்தான் என்று சாமகானம் புகழப்படுகிறது. தமிழுலகிற்கும், ஆரிய வேதத்திற்கும் உள்ள சம்பந்தத்தை **'தமிழும் ஆரிய மறையும்'** என்று கூறப்படுகிறது. ஆரியமும் தமிழரும் நீண்ட நாளாய் கலப்புற்றிருந்ததால் நூல்களாலும் உலக வழக்காலும் இந்த ஆரிய வேதம் பற்றி வரலாறு நம்மிடையே பரவலாக பல விதமாக உள்ளது பரவிக்கிடந்து வருகிறது. வேதம் என்பது ஒன்றேயாகும். ஆபஸ்தம்பர், மந்திரம், பிராமணம் வேதமெனப்படும் என்றருளியுள்ளார். சில உபநிடதம் மந்திரமாம் சில உபநிடதம் பிராமணமாம். ஆதலால் உபநிஷத்துகளும் இவற்றுள் அடங்கும் மந்திரபாகங்களே வேதமெனப்படும். இதனாலேயே மந்திரபாகங்கள் வெளிப்பட்டபோது வேதம் மூன்றெனக் கொள்ளப்பட்டது. பின்னர் கல்பஸூத்திரங்கள் தோன்றியது முதற்கொண்டு பிராமனை பாகங்களும் வேதமெனபெயர் பெற்றன என்று ஒருசாரார் கூறுகிறார்கள். மற்றும் வேதம், கரும பாகை, உபாசனாபாகை, ஞானபாகை என மூன்று பிரிவுகளை உடையது இவையே கரும காண்டம் பக்திகாண்டம் ஞானகாண்டம் எனப்படுகிறது. ஆரண்யம் என்பது ஞான பாகத்திற்கு சிறப்புப்பெயர். உபநிடதம் வேதத்தின் உட்பொருள் நுட்பம் என்பதாகும். வேதம் நால் வகையானது இருக்கு, எசுர், சாமம் அதர்வணம் இவற்றுள் இருக்கானது (ருக்வேதமானது) மூன்று நான்கு பாதங்களைக் கொண்ட காயத்ரீ முதலிய சந்தப்பதிகங்களாலானது என்று கூறப்படுகிறது. இந்த ருக்வேதம் 21 சாகைகளை உடையது. சாமம், கீதமாய் பாடப் பெறுவது அதாவது இருக்கு மந்திரத்தைக் கீதத்துடன் சேர்த்து பாடும் போது சாமமாகிறது. சைமினி முனிவரும் கீதத்துடன் சேர்ந்த மந்திரங்கள் சாமமென வழங்கப்படுகின்றது என கூறியுள்ளார். இச்சாமவேதம் ஆயிரம் சாகைகளை உடையது. இருக்கு, சாமம் என்று யிரண்டினும் வேறாய் பிரஸ்லிஷ்ட எழுத்துக்களாய் மந்தரத் தொகுதியே எஜுர்வேதமாம் இவ்வேதம் 101 சாகைகளை உடையது எனப்படுகிறது. இம்மூன்று வேதத்திலும் வேறாய், ''போரையும் அதற்குரிய படைகளின் மந்திரங்களையும்'' மிகுதியாய் கூறுகின்றது அதர்வண வேதமாம். இது ஒன்பது அல்லது 15 சாகைகளை உடையது. மேற்கூறியவற்றால் வேதவியாசர் வேதத்தை நான்காய் பிரித்தார் என்பர். இந்த வேத வியாசர் எழுத்தாணி கொண்ட ஓலை சுவடியோடு பிறந்தவர். (எழுத்தாணிக்கொண்டு ஓலையில் எழுதும்பொழுது எழுத்தாணி இருந்த இடத்தில் இருக்க ஓலை நகர்த்தப்படும் இது சுவடியியலின் முறை ஆனால் சுவடியில் எழுதும் விதம் பற்றி காட்டும் பொழுது சரியான முறையில் காட்டப்படவில்லை) இந்த நான்கு வேதத்திற்கும் ஏற்கனவே இருக்கு முதல் வேதம் பௌடிக என்றும், யஜுர் இரண்டாம் வேதம் தைத்திரிய என்றும், மூன்றாம் சாமம் தீதனிடை சாரும் என்றும், நான்காம் வேதம் அதர்வணமென்றும் கூறுகின்றன. ஆக இருக்கு, யஜுர், சாமம் என்னும் பெயர் வரிசையால் இனிய முறையில் வகுத்ததையே நாமும் வேதம் காத்து வேதத்தை வளர்த்து இசையை வளர்த்து, தமிழிசையை வளர்த்து, தமிழிசையே தரணிபோற்றும் இசை என்பதற்கு இயல், இசை, நாடகம், வேத, சாஸ்த்ர, புராண, கர்னாடக சாஸ்திரிய இசை மூலம் வேதம் தான் இசைக்கு ஆதாரம் என்பதனையும் காயத்ரீ மந்த்ரமே இசைக்கு ஆதாரம் என்றும் அதற்கு வேத, சாஸ்த்ர புராண ஆகம பாஞ்சராத்ரம் இவ்வளவையும் உள் அடக்கிய திருவரங்கக் கோயிலே இசைக்கு ஆதாரம் என்றும் எனது கூற்றினை தொடுத்து தந்துள்ளேன். நமது ஸநாதனமான இந்து மதத்திற்கு ஆதாரமாய் உள்ளது வேதம். அது நான்கு வகைப்படும். ருக், யஜுர், ஸாமம், அதர்வவேதம் என்று இதில் ஸாம வேதம் 1000 சாகைகளுள்ளது. தற்போது ஆயிரம் சாகைகளில் மிஞ்சி உள்ளது. சாகைகளில் ஏழுவகையாகவும், **இந்த சாகைகள் கூர்ஜரதேசத்தில் ஜைமினீய சாகையும், மஹாராஷ்டிரத்தில் ராணயநீய சாகையும், திராவிட தேசத்தில் அதிகமாக கௌதுமஸாகையும்** மூன்று சாகைகள் தான் தற்காலத்தில்

காணப்படுகின்றன. இந்த சாகைகளுக்கு அத்யாபகர்களான ஆசாரியர்கள் பதிமூன்று ஆகும். **ஸாம கான பாகத்தை சிறிது அறியவேண்டும்:-** ஸாமகானம் என்பது ஏழுஸ்வரங்களை ப்ரதானமாகக் கொண்ட ஸ்வரங்களின் ஸமுதாயம். இவ்விதம் உள்ள ஏழு ஸ்வரங்களின் மூலமாக சங்கீத சாஸ்த்ரமும் ஏற்பட்டிருக்கின்றன. சங்கீத சாஸ்திரத்திற்கு மூலமாயுள்ள காந்தர்வ வேதமும் சாமவேதத்தின் உபவேதமென்று பெரியோர்கள் கூறுவதற்கும் இதுவே காரணமாகும். ஸ்வரங்களின் விஸ்தாரத்தை நாரதசிக்ஷாவில் பார்க்கலாம். ப்ரக்ருதிஸாமாக்கள் ஆர்ச்சிகத்தை அனுஸரித்தே வருகின்றன. பூர்வாசிகத்தில் உள்ள ருக்குகளையோ கானமாய் செய்தது ப்ரக்ருதி ஸாமாக்கள் ஒரு ரிக்கில் ஒரு ஸா/மா/க/வும் கானம் செய்யப்படுகிறது. இதை ஏழு கானமாய் பிரிக்கின்றன என்று ஸாமவேத ஸர்வானுக்ரமணி என்ற க்ரந்தத்தில் சொல்லப்படுகின்றது.

**நாரதீய சிக்ஷை:-** இது த்யாகப்ரும்மத்திற்கு அளிக்கப்பட்டதாக எனக்கு தரப்பட்ட குறிப்பு நாரதீய சிக்ஷை என்பது ஸாம, ருக் இவைகளுக்கு லக்ஷணம், நாரதர் செய்தது. இதற்கு பட்ட கோபாகர் என்பவர் வ்யாக்யானம் செய்திருக்கிறார். இரண்டுப்ரபாடகமும் 16 காண்டங்களுமுள்ளன. 240 க்ரந்தங்கள் உள்ளன. ஸாமவேதத்தில் 1875 ருக்குகள் உள்ளன. ஸாமவேதத்தில் 1000 ஸாகைகள் உள்ளன என்பர் சிலர்.

**நாரத மஹரிஷி எப்பொழுதும் வீணையை** வைத்துக்கொண்டு ஸாமகானம் செய்வதாக புராணம் கூறுகிறது. நாரதமஹரிஷி ஸாமவேதத்திற்கு லக்ஷணக்ரந்தம் எழுதும்போது ஸங்கீதத்தையும் சேர்த்து எழுதுகிறார் என்று சொல்லப்படுகிறது. கடவுளையும் தர்மாதர்மங்களையும் விளக்குவது வேதம் ஆகையால்தான் வேதத்திற்கு வேதம் என்ற பெயர் மட்டுமே உள்ளது. நான்கு வேதங்களில் ஸாமவேதம் கானரூபமாக உள்ளது. இதை மூலமாகக் கொண்டே ஸங்கீத ஸாஸ்த்ரம் ஏற்பட்டது என்று சொல்லப்படுகிறது. உலகத்தை துறந்த உத்தம சன்யாஸிகளும் உண்மையான அறிவடைந்த பின் உலகை மறந்து ஆனந்த வடிவான பரம்பொருளை அனுபவிக்கும்போது ஸாமகானமே செய்திருக்கிறார்கள் என்று உபநிடதங்கள் கூறுகின்றன - ஸ்ரீக்ருஷ்ணபகவான் ராதையுடன் ராஸக்ரீடை செய்யும்போது பரமசிவன் கானம் செய்ய அந்த கானரஸத்தில் ஈடுபட்ட ராதாக்ருஷ்ணர்களுடைய உருவம் ஜலமாக உருகிவிடுகிறது. அதுவே கங்கையாகிறது என்று கூறப்படுகிறது. வாணிநீய சிக்ஷை என்பது பொதுவாக இருந்தபோதிலும் ஸாம வேத லக்ஷணக்ரந்தங்களில் ஒன்றாகக் கருதப்படுவதால் இங்கு ப்ரஸ்தாபிக்கின்றோம். இதன் ஆரம்பத்தில் உயிர்மெய் எழுத்துக்களின் எண்ணிக்கை அவை ஆத்மா, புத்தி, மனம் இதன் சேர்க்கையினால் உண்டாகும் விதம், மந்திரம், மத்யமம், தாரம் என்னும் ஸ்தாயிகள் உண்டாகும் இடம், உதாத்தம் முதலிய ஸ்வரங்களிலிருந்து நிஷாதம் முதலிய ஏழுஸ்வரங்கள் உண்டானவை. எழுத்துக்களை உச்சரிப்பதற்கு காரணமான எட்டுஸ்தானங்கள் அதன் விவரணம் எழுத்துக்களை உச்சரிக்க வேண்டிய முறை, மேலும் உச்சரிப்பதில் 6 குணங்கள் அநேக தோஷங்கள் முதலியது வேதபுருஷனுக்கு சந்தஸ் கால்கள் கல்பஸூத்திரம் கைகள், ஜ்யோதிஸ்சாத்திரம்கண், நிருக்தம் காது, சிக்ஷை மூக்கு, வ்யாகரணம் வாய், உதாத்தம் முதலிய ஸ்வரங்களின் பிரிவுகள் ஸ்வரங்களை கைரேகையில் காட்டும் முறை இவ்விதம் காண்பித்தே வேதங்களை சொல்லவேண்டும். இல்லாவிடில் தோஷம் ஏற்படும். இவ்விதம் வேதங்களை பாராயணம் செய்வதால் பாவங்கள் விலகி புண்யலோகங்கள் ஏற்படுகின்றன என்று கூறுகிறது. புராணங்கள், மற்றும் ஸரிகமபதநி என்னும் ஏழு சுரங்களும் சாம வேதத்தில் மகரிஸ தநிப என வழங்கப்படுகிறது. இவை நாரத சிட்க்ஷையில் கூறப்பட்டிருப்பதை காணலாம். ரிக்கில் சொல்லக்கூடிய ஒரு மந்திரத்தை சாமவேதத்தில் வரும்போது சந்தங்களை ஏற்றே உச்சரிப்புக்கள் மாறி வருகின்றன. ஈண்டு சாமவேதத்தில் 1-2-3 என்றும் எண்கள் முறையே உதாத்தம், அநுதாத்தம், சுரித்ரம் என்றும் சுரங்களை குறிக்கின்றன. மற்றும் இந்த சுர பேதங்களை சாம வேதகீதத்தை உணர்ந்து பெரியோர் பால் கேட்டுணர்ந்து ஜபிக்கவேண்டும். ஆகவே ருக் வேதத்தில் சொல்லும் மந்திரமே ஸாமவேதத்தில் சொல்லும்போது உச்சரிப்பால் மாறுகிறது என்பதை கவனிக்கவேண்டும். ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு நாரதரால் அருளப்பட்டது நாரதருடைய கிரந்தங்கள் என்றும் நாரதசிக்ஷா, நாரதீய புராணம், நாரத மகரந்தம் போன்ற நூல்களை தந்தார் என்பதிலிருந்து அவை சங்கீத ஸாஸ்த்ரம், வேத சாஸ்த்ரம் கொண்ட நூல் என்று இந்த வேதம் சம்பந்தமான திரட்டுகளிலிருந்து புரிகிறது. முக்கியமான ருக்கின் சொல்லக் கூடிய ஒரு மந்திரத்தைச் சாம வேதத்தில் வரும் போது சந்தங்களை ஏற்றே உச்சரிப்புக்கள் மாறிவிடுகின்றன. ஆகவே வேதத்தில் சங்கீதப்ரயோகம் உள்ளது என்பது வேதத்தை சொல்லும் வழிமுறைக்காகத்தான் என்று உணரமுடிகிறது. ஆனால் இசைக்குரிய மூர்ச்சனைகள், ஸப்தஸ்வரங்கள், கிரமங்கள் இவைகளே தான் வேதத்திற்கும் உள்ளது என்பதுதான் நமக்கு வேண்டிய முக்கிய குறிப்பாகும். ஆகவேதான் ஸாமவேதம் சொல்லமுடியாதவர்கள், காயத்ரீ மந்த்ரம் சொல்ல முடியாதவர்கள் ஸ்ரீத்யாகப்ரும்ம கீர்த்தனைகளைப்பாடி சங்கீதத்தின் மூலம் தெய்வாம்ஸம் பெறலாம் என்ற வழியினை நமக்கு தந்த ஸ்ரீத்யாகப்ரும்மத்தை நமஸ்கரிப்போமாக என்ற இந்த ஆய்வினை முடிவாக கொணருகிறேன்.

இந்த வேதம் பற்றிய தொகுப்பிற்காக பல க்ரந்த நூல்களை படித்து ஆராய்ந்துள்ளேன். பின் எனது இ[illegible] ஆய்வுக்கு தக்க ஆதாரம் என்னிடம் உள்ளதையும் கொண்டு இந்த வேதம் பற்றிய கட்டுரை[illegible] தொகுத்துள்ளேன். சாமவேதம் பற்றிய விவரங்களை அந்த வேதம் கற்றறிந்த அறிஞரின் அறிவுரைய[illegible] பெற்றுள்ளேன்.

# சாஸ்த்ரீய சங்கீதம்

## தமிழிசை

### ஸ்வரம் பற்றிய விளக்கம்

இந்த சார்ட் ஜெயம்மாளுக்குரியது:

ப்ரக்ருதி ஸ்வரம் - ஸ - ப - வும்

விக்ருதி ஸ்வரம் - ரிகமதநியாகும். ஆனால்

குருகுலபாடாந்தரம் - ஸரிகமபதநிஸ் என்கிற சுத்த ரிஷபம், அந்த்ர காந்தாரம், சுத்த மத்யமம், பஞ்சமம், சுத்ததைவதம், காகலிநிஷாதம், ப்ரக்ருதி என்றும் ஸரிகமபதநிஸ் என்கிற சதுஸ்ருதிரிஷபம், சாதாரண காந்தாரம், பிரதிமத்யமம், பஞ்சமம் சதுஸ்ருதி தைவதம், கைசிகநிஷாதம், விக்ருதிஸ்வரங்கள் என்று சொல்லப்படுகிறது.

கல்லூரி பாடதிட்டத்தில் - ஸ - ப ப்ரக்ருதி என்றும் ரிகமதநி விக்ருதி என்றும் (மாறும் ஸ்வரம் என்றும்) கற்றுத்தரப்படுகிறது.

ஸ்வராக்ஷரம் என்பது - ஒரு ஸ்வரத்தின் முதல்ஸ்வரமும்: சாகித்யத்தின் முதல் ஸ்வரம் ஒன்றாக இருப்பது.

இந்த ஸ்வராக்ஷரம் ஸ்ரீத்யாகராஜகீர்த்தனையில் அனேக இடங்களில் வருகிறது. அந்த இடங்களே 24 ஸ்ருதியின் விஷயத்தை வலியுறுத்திக் காட்டப்பட்டுள்ளது.

(உ.ம்.நீபஜன கான நாயகி ராகம்) ஸ்வராக்ஷர நீ ஆரம்பம், ஸாகித்யமும் நீ பஜன கான ஆகும். இந்த நிஷாதம் கைசிகிநிஷாதத்தைவிட சற்றுகூடுதலாக பிடிக்க வேண்டும்.

ப்ரக்ருதி விக்ருதி - நிலையான ஸ்வரத்தையும் பேதப்படுத்தினதையும் குறிப்பதே ப்ரக்ருதி - விக்ருதியாகும்.

ஸ - ப - நிலையான ஸ்வரம்

மற்றஸ்வரங்கள்

ரிகமதநி - பேத மடைந்தது ஆகும்.

இந்த சார்ட் ஜெயம்மாளுக்குரியது:

#### சாஸ்த்ரீய சங்கீதம்

#### ஸ்வரம் பற்றிய நிலை

| முதல் 36 மேளத்திற்கு வரும் ஸ்வரங்கள் | ரிஷபம் | சுத்தமத்யமம் |
|---|---|---|
| சுத்தரிஷபம் | 18 | |
| சதுஸ்ருதி ரிஷபம் | 12 | |
| ஷட்ஸ்ருதி ரிஷபம் | 6 | |
| மொத்தம் | 36 | |

| 2 வது 36 மேளத்திற்கு வரும் ஸ்வரங்கள் | ரிஷபம் | பிரதி மத்யமம் |
|---|---|---|
| சுத்தரிஷபம் | 18 | |
| சதுஸ்ருதி ரிஷபம் | 12 | |
| ஷட்ஸ்ருதி ரிஷபம் | 6 | |
| மொத்தம் | 36 | |

<u>முதல் 36 மேளத்தில் காந்தாரஸ்வர நிலைமை</u> <u>சுத்தமத்யமத்திற்கு</u>

| | | |
|---|---|---|
| சுத்த காந்தாரம் | 6 | |
| சாதாரண காந்தாரம் | 6 | |
| அந்த்ர காந்தாரம் | 6 | |
| | 18 | |

<u>முதல் 18க்கு காந்தார நிலை</u>

2வது 18க்கு

| | | |
|---|---|---|
| சாதாரண காந்தாரம் | 6 | |
| அந்த்ர காந்தாரம் | 12 | |
| | 18 | |

<u>2வது 18க்கு காந்தார நிலை</u>

<u>பிரதிமத்யமத்திற்கு 36 மேளத்திற்கு காந்தார நிலை</u>

முதல் 18ன் நிலைமை

| | | |
|---|---|---|
| சுத்த காந்தாரம் | 6 | |
| சாதாரண காந்தாரம் | 6 | |
| அந்த்ர காந்தாரம் | 6 | |
| | 18 | |

<u>2ம் 18ன் காந்தார நிலை</u>

| | | |
|---|---|---|
| சாதாரண காந்தாரம் | 6 | |
| அந்த்ர காந்தாரம் | 12 | |
| | 18 | |

<u>முதல் 36 மேளத்திற்கு வரும் தைவதஸ்வரங்கள்</u>

| | | |
|---|---|---|
| சுத்தம் தைவதம் | 3 | |
| சதுஸ்ருதி தைவதம் | 2 | 6 |
| ஷட்ஸ்ருதி தைவதம் | 1 | |
| | 6 | |
| சுத்த தைவதம் | 3 | |
| சதுஸ்ருதி தைவதம் | 2 | 6 |
| ஷட்ஸ்ருதி தைவதம் | 1 | |
| | 6 | |

இவ்விதமாக 6 ஸ்தானத்திற்கு ஒருமுறை சுத்த, சதுஸ்ருதி, ஷட்ஸ்ருதியாக 36 மேளத்திற்கும் மாறி மாறி வரும் 6, 6, 6, 6, 6, 6

பிரதி 36 மேளத்திற்கும் மேற்சொன்ன விதமே தைவத நிலை வரும்.

**முதல் 36 மேளத்திற்கு வரும் நிஷாத நிலை**

| | | | |
|---|---|---|---|
| சுத்த நிஷாதம் | 1 | | |
| கைசிக நிஷாதம் | 1 | 3 | |
| காகலி நிஷாதம் | 1 | | |
| கைசிகம் | 1 | | |
| காகலி நிஷாதம் | 2 | 3 | ஆக 6 |

இம்மாதிரியாக 36க்கும், சுத்தநிஷாத 1, கைசிகநிஷாதம் 1, காகலி நிஷாதம் 1, கைசகம் 1, காகலி நிஷாதம் 2 என்று (6ம்) (6 சர்கில்) மாறி மாறி வரும். 6,6,6,6,6,6 ஆக (6 வட்டம்) மாறி வரும்.

**இம்மாதிரி பிரதி 36 மேளத்திற்கும்**

| | | | |
|---|---|---|---|
| சுத்த நிஷாதம் | 1 | | |
| கைசிக நிஷாதம் | 1 | 3 | |
| காகலி நிஷாதம் | 1 | | ஆக 6 |
| கைசிகம் | 1 | | |
| காகலி நிஷாதம் | 2 | 3 | |

என்று ஆறு (6) ஆறாக மாறி மாறி சுத்த நிஷாதம் 1 கைசிக நிஷாதம் 1 காகலி நிஷாதம் 1 கைசிக நிஷாதம் 1 காகலி நிஷாதம் 2 இப்படி 6 நிஷாதங்கள் 6,6,6,6,6,6, ஆக மாறி, மாறி வரும்.

இந்த குறிப்பை எனது குருகுல ஆசிரியை ஜெயம்மாள் அவர்களால் தயாரிக்கப்பட்டது இந்த 72 மேள சக்ரம் அவர்களால் கணிக்கப்பட்டது.

## தமிழிசை

### சாஸ்த்ரீய சங்கீதம்

சங்கீதம் லலிதகலைகளுள் மிகவும் ஸூக்ஷ்மமானது, எப்படி ஓவியம், சிற்பம், இலக்கியம் மனித உணர்ச்சியை வெளியிடும் ஸாதனமாகிறதோ ஸங்கீதமும் மனிதமனத்தின் தெய்வாம்ச உணர்ச்சியை வெளியிடும் மூலவித்தாகிறது. இசைக்குவசப்படாதவர் இல்லை எனலாம் இந்த இசை 5000 ஆண்டுகளுக்கு முன்னமேயே நமது நாட்டின் அபூர்வகலையாக தமிழிசையாகப் பரவிகிடந்தது எனலாம். புராதன காலத்திலிருந்தே நம் முன்னோர்கள் பண்பாட்டின் சிகரத்தை அடைந்ததற்கு இந்த இசையே ஒரு சான்றாகும். இந்நாட்டின் சங்கீதம் பழங்காலம் தொட்டு இக்காலம் வரை எங்கும் நிறைந்த **பிரணவநாதத்தின் பரிணாமமே ஸங்கீதமென்பது கொள்ளப்பட்டது. அது ஈஸ்வரனின் ஸாக்ஷாத்காரம் என்பதையே இலட்சியமாகவும் ஆதாரமாகவும் கொண்டது என்பது பண்டையக் கருத்து.** இப்படிப்பட்ட ஸங்கீதத்திற்கு இலக்கண இலக்கிய விதிகளை நமக்கு வித்திட்டு தந்தவர்கள், **நாரதர், பரதர், சார்ங்கதேவர் வேங்கடமகி, புரந்தரதாஸர்** மகான்கள் ஆவார்கள். சாஸ்த்ரீய சங்கீதத்திற்கு சங்கீத சாஸ்த்ரத்தை விளக்கிச் சொன்னவர்கள் நாரதர், பரதர், சார்ங்கதேவர், வேங்கடமகி ஆவார். **ராகம், மேளம், கமகம் ராகபேதங்கள், மேளகராதி, ராகநிர்ணயத்திற்கான சூக்ஷ்மத்தத்துவங்கள்** போன்றவற்றை நூல்கள் மூலம் தந்தனர். இப்படிப்பட்ட சாஸ்த்ரீய சங்கீதத்திற்கான நூல்கள் மக்களுக்கு கிடைத்ததற்கரியதாகியது. சுவடிகள் அழிந்தன. இப்படிப்பட்ட சூழ்நிலையில் வழிவழியாக சங்கீத உபாசகர்கள் மூலம் இசையின் **இலக்கண, இலக்கிய, ராகம், தாள, பாவங்கள்** மககளிடையே கிடைக்க வழியாயிற்று. **அதில் ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதயோகி, சிவயோகி, ப்ரும்மயோகி என்ற பெருமையோடு நமக்கு இசையை அளித்தார்.** இதனையே சங்கீத சாஸ்த்ரக்ஞானமு, சாரூப்யஸௌக்யத்தமே மனஸா என்றும் சங்கீத சாஸ்திரத்தின் பெருமையை கூறி உள்ளார். இந்த வழியில் குருகுலமாக இசையானது மறையாமல் நம்மிடையே பரவிக்கிடக்கிறதை இன்றும் காணலாம். சாஸ்த்ரீய சங்கீதம் ராக, பாவ, தாளம் நமது நாட்டின் ஸங்கீதத்தின் முக்கியமான அம்சம், ராகம் ரஞ்சனை, இனிமை என்பதை ஆதாரமாகக் கொண்டது. ராகம் (ராகத்தின்ஸ்வரூபத்தை) வாக்கேயகாரர்களின் அமைப்பிலிருந்தும், பாடும் இசைகலைஞர்கள் மூலமும் உருவாக்கப்பட்டு வெளிவருவதை உணர்கின்றோம். நமது புலன்களில் செவியாறல் மூலம் ராகங்களின் தத்துவங்களை நாம் உணர்கிறோம். ராக, ஞானம் பெற ஸங்கீத அப்யாஸம் மூலம் பெறுகிறோம். ராக ஞானத்தால் ராகங்களை பாடவும், இசை கருவிகளை இசைக்கவும் மட்டுமே முடியும். சங்கீதசாஸ்திரத்தை நன்கு அறிந்தவர்களாலேயே மட்டும், ராகங்கள் வித்யாசத்தை நன்கு உணரவும், புதியதோர் பாட்டையோ, ஆலாபனையையோ கேட்டவுடன், அதன் ராகம் இன்னதென்று கூறவோ இயலும் ஞானத்தை பெறுகின்றனர். ஆகவே ஸாஸ்திரீய சங்கீதம் கற்றுணர வேண்டிய அவசியம் இசை கலைஞருக்கு ஏற்படுகிறது. அதன் நுட்பத்தை உணர்ந்து கலைஞானம் பெற்றுவிட்டால் இசையின் மூலம் நாதயோகி ஆகலாம் என்ற தத்துவத்தை நமக்கு அளித்தவர் ஸ்ரீத்யாகப்ரும்மம்.

***ராகம்:-*** எந்த த்வனி விசேஷஸ்வரங்களினாலும், வர்னங்களினாலும், வர்ணிக்கப்பட்டு செவிக்கு இன்பத்தை அளிக்கிறதோ அதுவே ***ராகம்*** எனப்படுகிறது.

''யோ ஸௌ த்வனி விசேஷஸ்துஸ்வரவர்ணவிபூஷித:

ரஞ்சகோஜனசித்தானாம் ஸராக: கதிதோபுதை:''

(ஸங்கீத ரத்னாகரம்) ஸார்ங்கதேவர்

''ரஞ்சக: ஸ்வரசுந்தர்ப்போ ராக இத்யபிதியதே

ரஞ்ஜயதி இதிராக:''

(என்று அஹோபலர் தனது ஸங்கீத பாரிஜாதத்தில் கூறுகிறார்). எந்த ஸ்வரசேர்க்கைகள் காதுக்கு ரஞ்ஜகத்தைக் கொடுக்கின்றதோ அவைகளே ராகங்களின் உருவங்களை நிலை நாட்டுகின்றன. எது இன்பத்தை கொடுக்கின்றதோ அதுவே ராகமாகும். இசை கணிதம் கொண்டது, அதை கண்டபடி பாடிவிடமுடியாது, கட்டுப்பாடு கொண்ட லயவின்யாஸம் ஒன்றாலேயே சங்கீதத்தைக் கட்டுப்படுத்த முடியும். லயசுத்தம், தாளசுத்தம், மனக்கணக்கு, மனோதர்மம், ஸ்வரப்ரஸ்தாரம், லயக்கோர்வை, ஸ்வரக்கோர்வை, தாளப்ரகரணம், ஆலாபனம், கல்பனாஸ்வரக்கோர்வை, இவை அனைத்தும் கொண்டதே ***சாஸ்த்ரீயசங்கீதம்*** எனப்படும். இதனை ஏனோ தானோ என்ற வகையில் பாடி சீர்கேடு அடையச் செய்யாது பேணிக்காக்கவே ஏனைய பெரியோர்கள் சங்கீத சாஸ்த்ரம் பற்றிய பல அறிய நூல்களை தொகுத்துள்ளார்கள். ***சங்கீத சாஸ்த்ரம்*** மூன்று ப்ரகரணங்களை கொண்டதாகிறது. அவை ***ஸ்வரப்ரகரணம், தாளப்ரகரணம், பாடப்ரகரணம். இசையின் பிரிவுகள்:-*** ராகங்களில் ஜனக, ஜன்யராகங்கள் என்ற பிரிவுகள் உள்ளன. ***ஜனகராகத்திற்கு:-*** மேளகர்த்தாராகம், கர்த்தா ராகம், ஸம்பூர்ணராகம், தாய்ராகம் என்று பெயர்கள் ஆகும்.

ஜனகராகத்திற்கு ஸப்தஸ்வரங்கள் ஆரோஹணத்திலும், அவரோஹணத்திலும் வரிசைக்கிரமமாக இருக்கும் ஆரோஹணத்தில் வரும் ஸ்வரமே, அவரோஹணத்திலும் இருக்கும். ***இதில் குறிப்பிடும் விசேஷமான ஓர் அம்சம்*** என்னவெனில்.

***'ஸரிகமபதநி'*** என்ற ஸப்தஸ்வரம் மேளராகமாகாது. ஆரோஹணமும், அவரோஹணமும் ***அஷ்டகம்*** என்னும் லக்ஷணத்துடன் ***(தாரஸட்ஜத்துடன்)*** வரும். உ.ம்.ஸரிகமபதநிஸ் அ:- ஸ்நிதபமகரிஸ 'ஸப்தஸ்வரம் இசையின் ஆதாரம் ஸரிகமபதநி' வரசப்தஸ்வர என்று ஸ்ரீத்யாகப்பிரும்மம் பாடுகிறார். (உம்) ஸரிகமபதநி, நிதபமகரிஸ - நாதநாமக்ரியா - ஆனால் மேள ராகம் என்று சொல்லப்படுவோமானால் அதற்கு எட்டு அக்ஷரங்கள் வரவேண்டியது நியமமாகும்.

செல்வி:அ.சூடாமணி

ஆகவேஜனக ராகத்திற்கு நாலு லக்ஷணங்கள் உண்டு அவை

1. ஸம்பூர்ண ஆரோஹண அவரோஹணம்

2. கிரமமான ஸம்பூர்ண ஆரோஹண அவரோஹணம்

3. அஷ்டக ஆரோஹண - அவரோஹண

4. ஆரோஹண, அவரோஹணத்தில் ஸ்வரங்கள் ஒன்றாக இருத்தல். இதன்படி ஜனகராகங்கள் அதாவது மேளராகங்கள் 72 கனகாங்கி, ரத்னாங்கி என்று தொடங்கி ரஸிகப்ரியா முடிய இந்த மேள வரிசையை தனி அட்டவனையிட்டு காட்டப்படும். இனி ஜன்ய ராகங்கள் பற்றி அறிய வேண்டும். ஜன்யராகமென்பது தாய் ராகத்திலிருந்து பிறந்த ராகம் என்று பொருள். ஒவ்வொரு ஜனக ராகத்திற்கும் (அல்லது) மேளராகத்திற்கு அனேக ஜன்யராகங்கள் உள்ளன. அவை ஜனக ராகத்தின் ஸ்வரங்களை அனுசரித்தே இருக்கும். சில ஜன்யராகங்களில், ரஞ்ஜகம் பொருட்டு அன்னியஸ்வரங்கள் அதாவது தாய் ராகங்களுக்கு புறம்பான வேறு ஸ்வரங்கள் வரும்.

| | | |
|---|---|---|
| உ.ம். | ஆனந்த பைரவியில் | ***அந்த்ர காந்தாரம்*** |
| | காம்போஜியில் | ***காகலி நிஷாதம்*** |
| | பைரவியில் | ***திஸ்ருதிதைவதம்*** |
| | | (சதுஸ்ருதி தைவதத்திற்கு சற்று குறைவான நுட்பஸ்ருதி தைவதம் வருகிறது.) |

ஆகவே இந்த ராகங்கள் பாஷாங்கராகம் எனப்படுகிறது. பாஷாங்கராகத்தில் தோன்றும் அன்னிய ஸ்வரம் அந்த ராகத்தில் ஜீவகளையை பலப்படுத்துவதற்காகவே வருகிறது. மேலும் பாஷாங்க ராகத்தில் இன்னொரு ராகத்தின் சாயை தோன்ற வேண்டுமென்கிற அவசியமில்லை. மேலும் ஜன்ய ராகத்தில் ஆரோஹணத்திலாவது அவரோஹணத்திலாவது ஒருஸ்வரம், அல்லது இரண்டு ஸ்வரம் குறைந்து வருமாகில் அந்த ஸ்வரங்களுக்கு வர்ஜஸ்வரங்கள் என்று பெயர். உ.ம். மோஹனத்தில் மத்ய நிஷாதம், ஸாவேரியில் காந்தார நிஷாதம் ஓர் முக்கியமான குறிப்பு என்னவென்றால் ஸட்ஜம் ஆதாரஸ்வரம் என்பதனால் அதை விலக்கவே முடியாது. அது போல தாரஸட்ஜத்தையும், விலக்க முடியாது. மேளராகத்தில் அஷ்டகத்தில் ஆரோஹண, அவரோஹணம் ஸம்பூர்ணமாயுள்ள ஜன்யராகங்களும் உள்ளது. ஹனுமத்தோடியில், தோடி, நட பைரவியில், பைரவி - மாஞ்ஜி இம்மாதிரியான ஸம்பூர்ண ஜன்ய ராகங்களுக்கும், மேளராகத்திற்கும், அன்னிய ஸவரக்கலப்பினாலோ, வக்ர ஆரோஹண, அவரோஹண கதிகளினாலோ, விசேஷகமகங்களினாலோ விசேஷ பிடிப்பினாலோ வித்யாசமடைகிறது. தற்போது ஜனக ஜன்ய பிரிவை தவிர வேறுசிலவற்றையும் அறிவோம்.

கன, நய, தேசிய ராகங்கள்

எந்த ஒரு ராகம் தானம் வாசிப்பதனால் எளிதாக விளக்கமளிக்கப்படுகிறதோ அது கன ராகமாகும். உ.ம் கனராகபஞ்சகமாகிய நாட, கௌள, ஆரபி, வராளி, ஸ்ரீராகம்.

மேலும்-

கேதாரம், நாராயண கௌளை, ரீதி கௌளை, ஸாரங்க நாட, பௌளி, இவைகளும் சாஸ்திரியமான கனராகத்தை சேர்ந்தவை. இவைகளை இரண்டாவது கனபஞ்சகமாக கொள்ளப்படுகிறது. ஒரு ராகம் ஸ்வரூகத்தை ஆலாபனை, தானம் இவற்றால் விளக்கப்பட்டால் அந்த ராகம் நயராகம் ரக்தி ராகம் எனப்படுகிறது.

உ.ம்.காம்போதி, சங்கராபரணம், பைரவி. எந்த ஒரு ராகம், அதன் ஸ்வரூபம் ஆலாபனையினால் விசேஷமாக விளங்குகிறதோ அந்த ராகம் தேசியராகம் எனப்படுகிறது.

உ.ம்.ஹிந்துஸ்தான் காபி, கானடா, ஹமீர் கல்யாணி.

ரௌத்ர, வீர ரசங்களுக்கு உண்டாக்கும் ராகம் கனராகம் என்று பூர்வ நூல்கள் கூறுகின்றன. கருணாரஸத்தை உண்டாக்கும் ராகங்களை ரக்தி ராகம் என்கிறார்கள்.

சுத்த சாயாலக ஸங்கீர்ணராகங்கள் இதில் சாஸ்த்ரீயமாக ஏற்பட்ட லக்ஷணத்துடன் விளங்கும் ராகம் சுத்த ராகம் ஆகும். அதில் வரும் ஸ்வரம் கோமள, தீவிரம் இரண்டு பேதத்துடன் வாரா. (உதாரணம்) மத்யமாவதி, மாளவமாளவகௌளை ராக ரஞ்ஜகத்தின் பொருட்டு வேறொரு ராகத்தின் சாயையுடன் அமையும் ராகம் சாயாலக ராகம் இதனையே ஸாலங்க ராகமென்றும் அழைப்பர்.

உதாரணம்:- ஸாரங்க (குறிப்பாக பாஷாங்கராகத்திற்கு இன்னொரு ராகச்சாயல் ஏற்படவேண்டிய அவசியம் இல்லை. அந்த ராகத்தின் களையை ஜீவகளையாக்கவே வருகிறது. அன்னியஸ்வரம்) ஆனால் சாயாலக ராகத்திற்கு வேறொரு ராகத்தின் சாயை தோற்றுவிக்க வேண்டிய அவசியமேற்படுகிறது. ஸாரங்க - ஹமீர்கல்யாணி - மேலும் மாஞ்சியில், பைரவி, முஹாரி ராகச் சாயல் வரும். பைரவி தோற்றம் முஹாரி தோற்றம் காணப்படும். ஸ்வஸ்தான விசத ராகங்கள்:- எந்த ராகத்தின் ஸ்வரஸ்தானங்களை சப்திப்த உடனேயே அந்த ராகத்தின் உருவம் புலப்படுகிறதோ அதுவே ஸ்வஸ்தான விசதராகம் எனப்படும்.

உதாரணம்:- ஸ்ரீரஞ்சனி, காபி

சில ராகங்கள் அவற்றின் ஸ்வரஸ்தானத்தை கமக, நுட்பஸ்ருதியாலும் ரத்தி பிரயோகத்தாலும் மட்டுமே அந்த ராகம் புலப்படும். அப்படிப்பட்ட ராகங்கள் கமக - சுருதி - பிரயோக விசத ராகங்கள் எனப்படும், கானடா, பேகட,

## நிஷாதாந்திய, தைவதாந்திய, பஞ்சமாந்திய ராகங்கள்

| | | |
|---|---|---|
| **1. நிஷாதாந்தராகம்:** | மத்யஸ்தாயி நிஷாதத்திற்கு மேல் | போகாத ராகம் |
| உதாரணம்:- | நாதநாமக்ரிய | (ஸரிகமபதநி) |
| | (மேளம் 15) | நிதபமகரிஸ நி |
| | புன்னாகவராளி | நிஸரிகமபதநி |
| | (மேளம் 8) | நிதபமகரிஸ நி |
| | சித்தரஞ்சனி | ஸரிகமபதநி |
| | (22வது மேளம் ஜன்யம்) | |
| **2. தைவதாந்திய ராகம்:** | மத்யஸ்தாயி தைவதத்திற்கு மேல் ஸஞ்சாரம் இல்லை | |
| | குறிஞ்சி | ஸநிஸரிகமபத |
| | (29வது மேள ஜன்யம்) | தபமகரிஸநிஸ |
| **3. பஞ்சமாந்திய ராகம்:** | மத்யஸ்தாயி பஞ்சமத்திற்கு மேல் ஸஞ்சாரம் இல்லாது ராகம் | |
| உதாரணம்:- | நவரோஜ் | பதநிஸரிகமப |
| | (29 மேள ஜன்யம்) | மகரிஸநிதப |

மகரிஸநிதப என்னும் ஸ்வரங்களை தழுவியே ஸாமகானம் பாடப்படுவதால் ஸாமகானத்தின் ராகத்தை 'மத்யமாந்திய' ராகம் என்று சொல்லப்படுகிறது. பின்னால் ஸாமவேதியலில் இதுபற்றி கூறப்படும்.

இன்னும் ராகங்கள் பல அம்சங்களில் பிரிக்கப்படுகிறது அதாவது விடியற்காலம் பூபாளம், மலயமாருதம், ரேவகுப்தி, பௌளி, கல்கட, வலஜி, தேசாக்ஷி இந்த ராகங்களை பூர்வ ஸூர்யோதய ராகங்களென்றும் உதயராகமென்றும் பிரபாத் (அல்லது) ஸப்தபிரபாத்ராகங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன.

| | |
|---|---|
| **காலையில் பாடும் ராகங்கள்:-** | பிலஹரி, கேதாரம், தன்யாஸி நாதஸ்வரக்காரர்கள் மங்கள இசைபாடும் பொழுது கவனிக்கலாம். |
| **முற்பகலில் பாடும் ராகங்கள்:-** | அஸாவேரி, ஸாவேரி, தேவ மனோஹரி |
| **மத்யானத்தில் பாடும் ராகங்கள்:-** | ஸ்ரீராகம், மத்யமாவதி, மணிரங்கு, ப்ருந்தாவன ஸாரங்க, புஷ்பவதிக. |
| **பிற்பகலில் பாடும் ராகங்கள்:-** | முகாரி, பேகட |
| **மாலையில் பாடும் ராகங்கள்:-** | கல்யாணி, வஸந்தா |
| **அஸ்தமனத்தில் பாடும் ராகங்கள்:-** | நாட குரம்சி, பூர்வகல்யாணி |

இரவில் பாடவேண்டிய ராகங்கள் கேதார கௌளம், நீலாம்பரி எல்லா காலங்களிலும் பாடும் ராகங்களை ஸர்வகாலிக ராகங்கள் என அழைக்கப்படுகிறது.

பைரவி, காம்போஜி, சங்கராபரணம், ஆரபி

(இதைப்போன்று இசைத்தமிழில் 'பண் என்பது மேளராகத்தையும் திறம் என்பது ஜன்ய ராகத்தையும் குறிக்கும் என்றும், 'பண்' என்னும் பதத்திற்கு ராகமென்றும் பாசுரம் என்றும் பொருளாகிறது என்று தமிழிசை கூறுகிறது. இந்த பண்ணே தேவார இசையில் பகல்பண், இராப்பண், பொதுப்பண் எனப் பிரிக்கப்படுகிறது).

*இனி ரஸம் என்பதனை அறிவோம். ரஸம் நவரஸங்கள் 9*

| | | |
|---|---|---|
| கருணை ரஸம் | :- | ஸஹான, புன்னாகவராளி, நாதநாமக்ரிய |
| ஸ்ருங்கார | :- | கமாஸ், ஹுஸேனி |
| ரௌத்ர ரஸம் | :- | அடாண, ஆரபி, பைரவி |
| வீர ரஸம் | :- | தேவகாந்தாரி, நாட |
| அத்புத ரஸம் | :- | ஹிந்துஸ்தான் பெஹாக் |
| சாந்த ரஸம் | :- | ஸாரங்க, ஸாம |
| ஹாஸ்ய | :- | வஸந்த |
| பய ரஸம் | :- | மாளவி |
| துக்க ரஸம் | :- | ஸ்ரீராகம். |

*சில ராகம் ஒன்றுக்கு மேற்பட்ட ரஸங்களை உணர்த்தும் அப்படிப்பட்ட இராகங்களில் தேவையான ஸஞ்சாரங்களை உபயோகித்து குறிப்பிட்ட ரஸங்களை உணர்த்துவது பிராசினம். அவ்வகையில் ஸ்ரீத்யாகப்ரும்மம் அடாணா ராகத்தில் 'ஏவநிதயராது' என்ற கீர்த்தனையில் தேவையான ஸஞ்சாரங்களை உபயோகித்து பல சங்கதிகளிலும், பல்லவி, அநுபல்லவி, சரணத்திலும் நவரஸத்தை புகுத்தி பாடியுள்ளார். இந்த பாடலை ஸ்ரீராமரை முதல் முதலில் தரிசித்தவுடன் பாடப்பட்டது என்று சரித்திரம் கூறுகிறது. ராமருடைய அழகை, குணத்தை, தெய்வாம்சத்தை நவரஸத்தில் பாடி த்யாகப்ரும்மம், நாதபோகி என்று சிறப்புற்றிருக்கிறார். இது ஆய்வின் முதல் கட்டம்.*

*கம்பிதஸ்வரம்:-* ராகத்தில் தோன்றும் கம்பித ஸ்வரங்கள் எந்த ஒரு ராகத்தில் எல்லா ஸ்வரங்களையும் கம்பித கமகத்துடன், அசைவுடன் பாடலாமோ அதை ஸர்வஸ்வர கமகவரிகராகம் என்றும், ஸம்பூர்ண கம்பிதராகமென்றும், முக்தாங்க கம்பித ராகமென்றும் கூறுவர்.

1. தோடி, கல்யாணி

எந்த ராகத்தில் சில ஸ்வரங்களை மட்டும் கம்பிதமாக பாட இயலுமோ அது அர்த கம்பித ராகமென்றும் எந்த ராகத்தில் எல்லா ஸ்வரங்களையும் ராகபாவத்துடன் சிதையாமல் பாட இயலுமோ அதை கம்பவிஹீன ராகமென்றும் அழைக்கப்படுகிறது. கம்பித கமகத்தை வரிசை எனப்படும்.

*நியாஸ ஸ்வரங்கள்* என்பது ஒரு ராகத்தின் நின்று சாயலை பூர்ணமாக ஒலிக்க கேட்கும் ஸ்வரம் கேதாரகௌளையில் ரிஷபம் ரிஷப, காந்தார, மத்யம பஞ்சம, தைவத, நிஷாத நியாஸ ஸ்வரங்கள் என்று பிரிக்கப்படுகிறது. ஸட்ஜமோ எல்லா ராகங்களுக்கு நியாஸ ஸ்வரமாக வருகிறது. கிரஹஸ்வரம்:- ஒரு கீர்த்தனைக்கு துவங்கக்கூடிய ஸ்வரம் (உ.ம்) மோஹனத்தில் தா நன்னுபாலிம்ப தா தபதாரீஸா, தா கிரஹஸ்வரம் ஆகும். ஒரு ராகத்திற்கு களைகட்டும் ஸ்வரம் ஜீவஸ்வரம் ஹமீர் கல்யாணியில் மா, ரீ களை கட்டும் ஸ்வரம். ஒரு ராகத்திற்கு களைகாட்டும் ஸ்வரத்தோடு அல்லாமல் நின்று ஸஞ்சாரம் செய்யலாம். அவை *அம்சஸ்வரமாகும்* ஆனந்த பைரவியில் பஞ்சமம், ஆரோஹண, அவரோஹணத்தின் கதியை தழுவி வரும் ஸஞ்சாரம் *கிரமமான ஸஞ்சாரம்* ராக ரக்தியின் பொருட்டு ஆரோஹன அவரோஹன கதிக்கு புறம்பாக வரும் ஸஞ்சாரம் *விசேஷ ஸஞ்சாரம்* ஆகிறது. ஆனந்த பைரவி ரிகமபதா என்பதாகும். ஜனக ஜன்ய ராகத்தை ஜன்ய ராகம் என்பது மேளத்தின் ஜன்யராகம் ஆகிறது. தவிர இவை பூர்வ தமிழ் நூல்களிலேயே மேள ஏற்படுவதற்கு முன் பல ஜன்ய ராகங்கள் (பண்களின் பெயரில்) இருந்தன என்று தெரிய வருகிறது. *பூபாளம், காம்போதி, யதுகுல காம்போஜி குறஞ்சி, நவரோஜ், நீலாம்பரி, நாதநாம ப்ரியா* இவைகளின் பண்கள் பாடப்பட்டுள்ளது என்பது பற்றி பல ஆதாரங்கள் உள்ளது. மேலும் ஜன்ய ராகங்கள் *வர்ஜம் 8 வகையாகவும் வக்ரராகங்கள் மூன்று வகையாகவும்* ஆகும். ஆரோஹணம் மட்டிலாவது அவரோஹண மட்டிலாவது, ஆரோஹண, அவரோஹண இரண்டிலும் வக்ரமாக வரும்.

| | | |
|---|---|---|
| உதாரணம் | ஆரோஹண மட்டும் பேகட | ஸகரிகமபதநீதபஸ் |
| | | ஸ்நீதபமாகரிஸ |
| உதாரணம் | அவரோஹண மட்டும் ஸாரங்கா | ஸரிகமபதநிஸ் |
| | | ஸ்நிதபமரிகமரிஸ |
| உதாரணம் | ஆரோஹண அவரோஹண | இரண்டிலும் ஸஹான ஸரிகமபமதாநிஸ் ஸ்நிதபமகாமரீகரிஸ |

**இது தவிர ஆரோஹண, அவரோஹணத்தில் ஏகஸ்வர வக்ரம், த்விஸ்வரவக்ரம், த்ரிஸ்வரவக்ரம், சதுஸ் வரவக்ரம் என்று பிரிக்கப்படுகிறது.**

***வக்ர ராகம்:- உபயவக்ர ராகம்*** இரு பிரிவுகளாகிறது.

**1. *உபயவக்ர ராகம் ஒன்று -* ஆரோஹண, அவரோஹணத்தில் வக்ரஸ்வரங்களின் எண்ணிக்கை ஒன்றாக இருத்தல்.**

**2. *உபயவக்ர ராகம் இரண்டு -*** ஆரோஹண, அவரோஹணத்தில் வக்ரஸ்வரங்களின் எண்ணிக்கை இரண்டாக இருத்தல், இதிலிருந்து வக்ர ராகம் என்றாலேயே எந்தஸ்வரத்தில் ஆரோஹண கதிக்கு அல்லது அவரோஹண கதிக்கு பங்கமோ (அல்லது) தடையோ ஏற்பட்டால் அந்த ஸ்வரம் வக்ர ஸ்வரமாகிறது. மேலும் வக்ர ராகங்களிலும் ஸ்வரங்கள் வர்ஜமாயிருக்கலாம், அவைகள், ஸம்பூர்ணஷாடவ, ஔடவ பேதங்கள் என்று கூறப்படுகிறது.

*வக்ர ராகங்களிலும் உபாங்க, பாஷாங்க* பேதங்கள் உள்ளது.

*1. தாய் ராகத்தில் வரும் ஸ்வரத்தையே ஜன்யராகமும் எடுத்துகொள்ளும் இது உபாங்கராகம்.*

*2. அன்னிய ஸ்வரங்கள் வரும் ஜன்ய ராகங்களுக்கு பாஷாங்க ராகம் என்று பெயராகிறது. உபாங்க ராகத்திற்கு தாய்ராகத்தின் ஸ்வரமே வரும். அதற்கு ஸ்வகிய ஸ்வரம் என்றும், பாஷாங்க ராகத்திற்கு வரும் ஸ்வரம் அன்னிய ஸ்வரம் எனப்படுகிறது.*

| | | |
|---|---|---|
| *உபாங்க* | *உதாரணங்கள்* | மோஹனம் |
| *பாஷாங்க* | *உதாரணங்கள்* | *அடாண* |

*இதில் ஒரே ராகம் உபாங்க, வக்ர, வர்ஜமாகவும் இருக்கும். உதாரணம் ஸ்ரீராகம் மூன்றும் உள்ள ஒரே ராகம்.*

*பாஷாங்க ராகம் பல வகைப்படுகிறது. ஏகான்ய ஸ்வர பாஷாங்க ராகம் திவி அன்ய பாஷாங்க ராகம். த்ரி அன்ய பாஷாங்க ராகம் குறைந்து வரும் ஸ்வரங்கள் கொண்ட ராகம் மட்டுமே ராகஸ்வரூபம் குலையாது இருக்கும் - அன்னிய ஸ்வரங்கள் 2-க்கு மேற்பட்டாலே ராகத்தின் அழகு பரிணமிக்காது. ராகங்களின் ஆலாபனைக்காக ராகங்கள் நான்கு வகைகளாக பிரிக்கப்படுகிறது.*

*1. பெரியராகம், சிறியராகம், அல்பமானராகங்கள் மித்ர ராகங்கள் என வகைபடுகிறது.*

***விஸ்தாரமான*** *ஆலாபனைக்கு வழி கொடுக்கும், பைரவி, தோடி, கல்யாணி பெரிய ராக வகை.*

***சிறிய ராகம்,*** **நீண்ட நேர ஆலாபனை செய்ய இடம் இல்லாதுபோனாலும் சிறிது நேரம் செய்யலாம் ஹம்ஸத்வனி, சுருட்டி,**

***சுலபமான ராகங்கள்*** *- மிகச்சிறிது நேரம் ஆலாபனை செய்ய இடம் கொடுக்கும் ராகம் செஞ்சுருட்டி, கதன குதூகலம்.*

*ஆலாபனைக்கு சிரமஸாத்யமான ராகங்கள்:- சித்த ரஞ்சனி, ஸ்ரீரஞ்சனி*

***ஸ்ரீரஞ்சனி*** *ஆலாபனை செய்யுங்கால் அதன் நெருங்கின ராகம் ஆபோகியின் தோற்றம் வராமல் பாடுவது சிரமம். கவனித்து பாட வேண்டும். ஸஞ்சாரங்களில்* ***மித்ர ராகங்கள் என்பது:-*** *மாயாமாளவ கௌள, ரீதி கௌளை, கேதார கௌளை, நாடகப்ரியா, கோகிலப்ரியா, ராமப்ரியா, ஷண்முகப்ரியா. தேவமனோஹரி மாதவமனோஹரி, புன்னகவராளி, பந்துவராளி குந்தலவராளி, காம்போஜி, ஹரிகாம்போஜி, செஞ்சுகாம்போஜி - இந்த ராகங்களின் பெயர்கள் இருதியில் ஒற்றுமை உள்ளது.*

*முன்னால் பெயர் ஒற்றுமை உள்ள ராகம், புன்னாகவராளி*

***புன்னாகதோடி - (ராகமாலிகைகளில் இந்த மித்ர ராகங்கள் வருவதை காணலாம். அதுவே ஒரு லக்ஷண சம்பந்தமாகும் சங்கித சாஸ்த்ரத்திற்கு வேண்டிய ஓரளவு வழிமுறைகளை கண்டோம். இனி சாஸ்த்ரீய சங்கீதத்திற்கு வேண்டிய பாக்கி விஷயங்களை ஆராய்வோம்.***

***சாஸ்த்ரீய சங்கீதம் பற்றி என்னவென்பதையும் சங்கீத சாஸ்த்ரம் முக்கிய அம்சங்கள் என்னென்ன? என்பதனை அறிய வேண்டியது அவசியமாகும். அவற்றில் ஸ்வரங்கள்*** *என்றால் என்னவென்பதையும்*

| | | |
|---|---|---|
| *ஷோடச ஷோடச ஸ்வரசம்* | *யோகங்கள்* | ***16*** *என்னவென்பதையும்* |
| ***த்வாதசஸ்வரஸ் தாளங்கள்*** | | ***12*** *என்னவென்பதையும்* |
| ***சப்தஸ்வரங்கள் என்றால்*** | | ***7*** *என்னவென்பதையும்* |
| ***அஷ்டஸ்வரங்கள் என்பது*** | | ***8*** *என்னவென்பதையும் (முக்யமாக)* |

***சப்தஸ்வரங்களுக்கு*** *காரணம் என்ன?*

***அஷ்டஸ்வரங்களின்*** *கருத்தென்ன*

***ஷோடசஸ்வரங்களுக்கு*** *காரணம் யாது என்றும் (16)*

***த்வாதசஸ்வரங்களுக்கு*** *காரணம் யாது என்றும் (12)*

***ஷோடசஸ்வரங்களின்*** *வரிசை கிரமம் பற்றி அறிவது (16)*

***ஸப்தஸ்வரங்களின்*** *பேத முறையை தெளிவடைவது*

***ஸ்தாயிகள் பற்றிய குறிப்புகள்*** *ஸ்ருதியை பற்றி அறிவது.*

***22 சுருதியாகிய த்வாவிம்சதி சுருதிகள்*** *அறிவது முக்யம் என்றால்*

***24 ஸ்ருதிகள் பற்றி அறிவது இசைக்கு, தமிழிசைக்கு மிகவும் அவசியமாகும்.***

***22 ஸ்ருதியாகிய*** *த்வாவிம்சதி சுருதிகளின் படி அறிவது*

***24 ஸ்ருதி பற்றி*** *தெளிவடைவது (பல அங்கங்கள்)*

***தசவிதகமகங்கள்*** *என்ன வென்று அறிய*

***மூர்ச்சனை பற்றி*** *உணர்வதும், ஸ்வரப்ரஸ்தாரம் பற்றி விளக்கமாக அறிவதும், ஏற்கனவே தரப்பட்டுள்ளது, மீண்டும் எழுதுகிறேன்.*

***இசை கணிதம் கொண்டது, இலக்கிய இலக்கணம் கொண்டது*** *கட்டுபாடு கொண்ட* ***ராக, தாள, பாவ, லயவின்யாஸம் ஒன்றாலேயே இசையை கட்டுபடுத்துவது*** *முக்கியமாக* ***12, 24, 48, 96 நுட்பஸ்ருதிகளை*** *அறிந்து, உணர்ந்து, இசையை பாடும்போது* ***ராகதீர்க்கம்*** *ஏற்படுகிறது.* ***லய சுத்தம், தாளசுத்தம்*** *முக்கியமாக* ***மனக்கணக்கு ஸ்ருதிக்கும் நுட்பஸ்ருதிக்கும் கற்பனைஸ்வரத்திற்கும் மனோதர்மம், ஸ்வரப்ரஸ்தாரம், லயக்கோர்வை, ஸ்வரக்கோர்வை, தாளப்ரகரணம், ஆலாபனம், கல்பனாஸ்வரம்*** *இவை அனைத்துமே சாஸ்த்ரீய இசையின் முக்கிய அம்சம்களாகும். இதனை அறிந்து தெளிவடைவதுதான் சங்கீதம், இசை. மேலும் இதனை ஏனோ தானோ என்று பாடி விடக்கூடாது என்பதற்காகவே இத்துணை (ஆராய்ச்சிதனை) ஆய்வுதனை மேற்கொண்டுள்ளேன். பலர் பல காலமாக கூறிவரும் இசை கர்னாடக இசை, சாஸ்த்ரீய சங்கீதம் தமிழிசைதான் இதற்கு முன்னோடியான ஆதியும் அந்தமுமானது என்பதனை இனி பல விஷயங்களில் எடுத்துக்காட்டுவேன். இந்த சங்கீத சாஸ்த்ரம் நம்மிடையே நூல்கள் மூலம் பரவிக் கிடந்தாலும், ஆதாரப்பூர்வமாக குருகுலமாக பயிலச் செய்வது என்ற முறைப்படி நான் கற்றவைகளை (குருகுலத்தில்) குருகுலத்தில் 36 ஆண்டுகளாக கூறியுள்ளேன். அதனையே அந்த அனுபவத்தையே ஆய்வு கண்டு புத்தக வடிவத்தில் வடித்துள்ளேன். இந்த கர்னாடக இசை, சாஸ்திரீய சங்கீதம், நம் தமிழ்நாட்டின் தரணி போற்றும் தமிழிசைதான் என்பதனை ஆணித்தரமாக உணர்த்தி உள்ளேன். இந்த ஆய்வுதனில் இனிவரப்போகும் இளம் தலைமுறைகள் தானாகவே தமிழிசையை கற்றுணர சரியான வாய்ப்பாக இந்த ஆய்வு முடியும் என்பதனை வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த ஆய்வுக்கும், எனது குருகுலத்திற்கும் எனக்கு துணையாக உதவியவர் எனது தாயார் கும்பகோணம் ஜெயம்மாள், வீணை, வாய்ப்பாட்டு ஆசிரியை, ஸ்ரீத்யாகப்ரும்மம் தலைமுறை வழி வந்தவர். அவரது கருத்து, அறிவுரைப்படி இந்த ஆய்வுதனை துவங்கியும், முடித்தும் உள்ளேன். இதில் குறைகள் இருந்தால் ஏற்பதோடு, அதனையும் விளக்கித்தர தங்களுக்கு உதவியாக இருப்பேன். இனி இசையின் வடிவம் என்ன என்பது பற்றி பல கோணங்களில் ஆராய்ந்து, தமிழிசைப் பற்றி கூறி, இயல், இசை, நாடகம் பற்றி கூறி, வரலாற்றுச் சிறப்பால் இசை எவ்விதம் நம்மிடை பரவியது, இசைதத்துவம் கொண்ட இடங்கள் உள்ளனவா அது எது, அங்கு எப்படி இசை பரவிக்கிடந்தது, நாம் உணராதது எங்ஙனம். அதன் ரகசியம் என்னவென்பதெல்லாம் கூறி விளக்க உள்ளேன். இதனை அனைவரும் அறிய மிக பணிவன்போடு கேட்டுக் கொள்கிறேன்.*

## சங்கீதசாஸ்த்ரம்

### சாஸ்த்ரீய சங்கீதம் - விரிவான விளக்கம்

வேத சாஸ்த்ர புராண மூலம் சங்கீதம் தெளிவடைகிறது. ருக் மற்றும் சாமவேதத்தில் சங்கீதம் பற்றி உள்ளது. சாஸ்திரம், சங்கீத சாஸ்த்ரம், சங்கீதப்ரகரணம், சங்கீத லயவின்யாஸம், சங்கீத கலை பற்றிய ஆதி வரலாற்றுக் குறிப்புகள் சாஸ்த்ரீய சங்கீதம் என்பது பற்றிய விவரங்கள், விளக்கங்கள் கூறப்பட உள்ளது. இந்த அத்யாயத்தில் சங்கீதசாஸ்திரம் என்ன கூறுகிறது என்பதை பார்ப்போமானால்.

1. ஸ்வரங்கள் என்றால் என்ன?

2. ஷோடச ஸ்வரசம் யோகங்கள் எவ்வளவு? அவை 16 எப்படி என்ற விளக்கம் ஷோடச என்றால் 16 ஆகும் என்ற விளக்கம்.

3. த்வாதச ஸ்வரஸ்தானங்கள் எவ்வளவு? 12 அவை பற்றி விளக்கம்

4.சப்தஸ்வரங்கள் என்ன? 7 அவைகளின் த்வனி பற்றிய குறிப்பு

5. சப்தஸ்வரங்களுக்கு காரணம்

6. 16 ஸ்வரங்களுக்கு (ஷோடச) காரணம் யாது

7. 12 ஸ்வரங்களுக்கு (த்வாதச) காரணம் யாது

8. ஷோடச 16 ஸ்வரஸம் யோகத்தால் வரிசைக்கிரமத்திற்கு காரணம்? ஷோடஸ்வர வரிசை

9. ஸப்தஸ்வரங்கள் எங்ஙனம் பேதமடைகிறது.

10.ஸ்வரசஞ்சாரபேதங்கள் எப்படி வருகிறது.

11. ஸ்தாயிகள் பற்றிய முக்கிய குறிப்பு

12. ஸ்ருதிகளை பற்றிய விவரம்.

### 72 மேளகர்த்தா ராகங்களும் - வேங்கடமகி வழங்கிய 72 மேள ராக பெயர்களும்

| தற்போது வழங்கும் பெயர்கள் | வேங்கடமகியின் பெயர்கள் |
|---|---|
| 1. கனகாங்கி | கனகாம்பரி |
| 2. ரத்னாங்கி | பேனத்யுதி |
| 3. கானமூர்த்தி | கானசாமவராளி |
| 4. வனஸ்பதி | பானுமதி |
| 5. மானவதி | மனோரஞ்சனி |
| 6. தானரூபி | தனுக்கீர்த்தி |
| 7.ஸேனாவதி | சேனாக்கிரணி |
| 8. ஹனுமத்தோடி | ஜனத்தோடி |
| 9. தேனுக | தொனிபின்னஸட்ஜம் |
| 10.நாடகப்ரியா | நாடாபரணம் |
| 11. கோகிலப்ரியா | கோகிலாரபம் |
| 12. ரூபவதி | ரூபவதி |
| 13. காயகப்ரிய | கேயகெச்சச்சீ |
| 14. வகுளாபரணம் | வாடிவஸந்தபைரவி |
| 15. மாயாமாளவகௌள | மாயாமாளவகௌள |
| 16. சக்ரவாகம் | தோயவேகவாகினி |
| 17. சூரிய காந்தம் | சாபாவதி |
| 18. ஹாடகாம்பரி | ஜயசுத்தமாளவி |
| 19. ஜங்காரத்வனி | ஜங்காரப்ரமரி |

| | |
|---|---|
| 20. நடபைரவி | நாரி ரீதிகௌளா |
| 21. கீரவாணி | கிரணாவளி |
| 22. கரகரப்ரியா | ஸ்ரீராகம் |
| 23. கௌரிமனோஹரி | கௌரிவேளாவளி |
| 24. வருணப்ரியா | வீரவசந்தம் |
| 25. மாரரஞ்சனி | சராவளி |
| 26. சாருகேசி | தரங்கிணி |
| 27. சரசாங்கி | சௌரசேனா |
| 28. ஹரிகாம்போதி | ஹரிகேதாரகௌளா |
| 29. தீரசங்கராபரணம் | தீரசங்கராபரணம் |
| 30. நாகா நந்தினி | நாகாபரணம் |
| 31. யாகப்ரியா | கலாவதி |
| 32. ராகவர்த்தனி | ராகசூடாமணி |
| 33. காங்கேய பூஷணி | கங்காதரங்கிணி |
| 34. வாகதீஸ்வரி | போக்தசயாநாட்ட (கர்ணாமிர்தஸாகரம் குறிப்பு) |
| 35. சூலினி | சைலத்தேசாட்சி |
| 36.சலநாட | சலநாட்டா |
| 37. சாலகம் | சௌகந்தினி |
| 38. ஜலார்நவம் | ஜகன்மோஹனம் |
| 39. ஜாலவராளி | தாளவராளி |
| 40. நவநீதம் | நபோமணி |
| 41. பாவனி | கும்பினி |
| 42. ரகுப்ரியா | ரவிக்ரியா |
| 43. கவாம்போதி | கீர்வாணி |
| 44. பவப்ரியா | பவானி |
| 45. சுபபந்துவராளி | சிவபந்துவராளி |
| 46. ஷட்விதமார்க்கிணி | ஸ்தவராஜமு |
| 47. சுவர்ணாங்கி | சௌவீரம் |
| 48. திவ்யமணி | ஜீவந்தினி |
| 49. தவளாம்பரி | தபளாங்கம் |
| 50. நாமநாராயணி | நாம தேசி |
| 51. காமவர்த்தனி | காசிராமக்ரியா |
| 52. ராமப்ரியா | ரமாமனோஹரி |
| 53. கமனச்ரம | கமகக்கிரியா |
| 54. விஸ்வம்பரி | வம்சவதி |
| 55. ஸ்யாமளாங்கி | சாமளா |
| 56. ஷண்முகப்ரியா | சாமரா |
| 57. ஸிம்மேந்த்ர மத்யமம் | சுமத்துதி |
| 58. ஹேமவதி | தேசிசிம்காரவம் |
| 59. தர்மவதி | தர்மவதி |
| 60. நீதி மதி | நிஷதம் |
| 61. காந்தாமணி | குந்தளம் |

| | |
|---|---|
| 62. ரிஷபப்ரியா | ரெதிப்ரியா |
| 63. லதாங்கி | கீதப்ரியா |
| 64. வாசஸ்பதி | பௌசாவதி |
| 65. மேசகல்யாணி | சாந்தகல்யாணி |
| 66. சித்ராம்பரி | சதுரங்கணி |
| 67. சுசரித்ர | சந்தானமஞ்சரி |
| 68. ஜ்யோதிஸ்வரூபினி | ஜோதிராகம் |
| 69. தாதுவர்த்தனி | தௌதபஞ்சமம் |
| 70. நாசிகா பூஷனி | நாசாமணி |
| 71. கோசல | குசுமிகரம் |
| 72. ரசிகப்ரியா | ரசமஞ்சரி |

தற்போது வழங்கும் 72 மேளகர்த்தா ராகங்கள்

1. கனகாங்கி
2. ரத்னாங்கி
3. கானமூர்த்தி
4. வனஸ்பதி
5. மானவதி
6. தானரூபி
7. ஸேனாவதி
8. ஹனுமத்தோடி
9. தேனுக
10. நாடகப்ரியா
11. கோகிலப்ரியா
12. ரூபவதி
13. காயகப்ரிய
14. வகுளாபரணம்
15. மாயாமாளவகௌள
16. சக்ரவாகம்
17. சூரிய காந்தம்
18. ஹாடகாம்பரி
19. ஜங்காரத்வனி
20. நடபைரவி
21. கீரவாணி
22. கரகரப்ரியா
23. கௌரிமனோஹரி
24. வருணப்ரியா
25. மாரரஞ்சனி
26. சாருகேசி
27. சரசாங்கி
28. ஹரிகாம்போதி
29. தீரசங்கராபரணம்
30. நாகா நந்தினி
31. யாகப்ரியா
32. ராகவர்த்தனி
33. காங்கேய பூஷணி
34. வாகதீஸ்வரி
35. சூலினி
36. சலநாட
37. சாலகம்
38. ஜலார்நவம்
39. ஜாலவராளி
40. நவநீதம்
41. பாவனி
42. ரகுப்ரியா
43. கவாம்போதி
44. பவப்ரியா
45. கபபந்துவராளி
46. ஷட்விதமார்க்கிணி
47. சுவர்ணாங்கி
48. திவ்யமணி
49. தவளாம்பரி
50. நாமநாராயணி
51. காமவர்த்தனி
52. ராமப்ரியா
53. கமனச்ரம
54. விஸ்வம்பரி
55. ஸ்யாமளாங்கி
56. ஷண்முகப்ரியா
57. ஸிம்மேந்த்ர மத்யமம்
58. ஹேமவதி
59. தர்மவதி
60. நீதி மதி
61. காந்தாமணி
62. ரிஷபப்ரியா
63. லதாங்கி
64. வாசஸ்பதி
65. மேசகல்யாணி
66. சித்ராம்பரி
67. சுசரித்ர
68. ஜ்யோதிஸ்வரூபிணி
69. தாதுவர்த்தனி
70. நாசிகா பூஷனி
71. கோசல
72. ரசிகப்ரியா

(72 மேளங்களில் பாசுரப்படி ராமாயணம்; ஜெயம்மாள் அவர்களால் தொகுக்கப்பட்டுள்ளது. பாசுரமாலா பதிப்பு)

## 72 மேளகர்த்தா ராகங்கள்

எல்லா மேளகர்த்தா ராகங்களிலும் ஆரோஹண அவரோஹணங்கள் சுத்த மேளங்களாக இருந்து சுத்த விக்ருதிஸ்வரங்கள் மட்டும் வித்யாசமாக மாறி வரும் ராகங்களாகிய மேளங்கள் மற்ற ஜன்யராகங்களுக்கு தாய்ராகமாக, கர்த்தாராகமாக, மேளராகமாக வருவதால் இந்த 72 ராகங்களும் மேளராகங்கள் என்று பெயர் பெறுகிறது. இதனை மேளம், மேளகர்த்தா, தாய் ராகம் என்று பலவாறாக கூறுவார்கள். சுத்தவிக்ருதிஸ்வரம் என்றால் ரிகமதநி என்று உள்ள 5 ஸ்வரங்களும் பேதமடைவதால் அது சுத்த விக்ருதிஸ்வரம் எனப்படுகிறது. இவற்றில் ரிஷபம் 3 காந்தாரம் 3 மானது அவை ஸம்யோகப்பட்டு வரும்பொழுது, இப்படி பேதங்கள்,

*சங்கேத சங்கேதை குறிப்பு*

| | |
|---|---|
| *1. சுத்த ரிஷபம்,* | *சுத்தகாந்தாரம்* |
| *2. சுத்த ரிஷபம்* | *சாதாரண காந்தாரம்* |
| *3. சுத்த ரிஷபம்* | *அந்த்ர காந்தாரம்* |
| *4. சதுஸ்ருதிரிஷபம்* | *சாதாரண காந்தாரம்* |
| *5. சதுஸ்ருதி ரிஷபம்* | *அந்த்ர காந்தாரம்* |
| *6. ஷட்ஸ்ருதிரிஷபம்* | *அந்த்ரகாந்தாரம்* |

<u>இப்படி 6 பேதங்கள்</u>

*தைவதநிஷாத ஸம்யோகங்கள்*

| | |
|---|---|
| *1. சுத்த தைவதம்* | *சுத்த நிஷாதம்* |
| *2. சுத்த தைவதம்* | *கைசிக நிஷாதம்* |
| *3. சுத்த தைவதம்* | *காகலி நிஷாதம்* |
| *4. சதுஸ்ருதி தைவதம்* | *கைசிக நிஷாதம்* |
| *5. சதுஸ்ருதி தைவதம்* | *காகலி நிஷாதம்* |
| *6. ஷட்ஸ்ருதி தைவதம்* | *காகலி நிஷாதம்* |

ஆக ரிஷப காந்தார தைவத, நிஷாத பேதத்தால் 6 ★ 6 - 36 பேதமுண்டாகிறது. இதில் சுத்த மத்யம, பிரதி மத்யம சம்யோகத்தால் 72 அதாவது 36 ★ 2 - 72 ஆகிறது. இப்படி பட்ட விஷயத்திற்கு, ஜெயம்மாள் விளக்கம் தனியாக தரப்பட்டுள்ளது. இசை கணிதம் கொண்டது. இசைதானே என்று கண்டபடி பாடிவிட முடியாது. இசைஞானம் உள்ளவர்களால் மட்டுமே இந்த கணித கோட்பாடுகளை நன்கு புரிந்து கொண்டு பாட முடியும். ஆகவே இதன் கணிதமுறையான இசைக்கு உண்டான விவரங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

<u>ஸப்தஸ்வரங்கள் என்பது:-</u>

ஸ, ரி, க, ம, ப, த, நி -

<u>ச. சட்ஜம், ரி. ரிஷபம், க.சாந்தாரம், ம.மத்யமம், ப.பஞ்சமம், த.தைவதம், நி.நிஷாதம்</u> ஸரிகமபதநி வரஸப்தஸ்வரம் என்று நாததநுமநிசம் கீர்த்தனையில் ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடுகிறார்.

மேற்சொன்ன ஸப்தஸ்வரத்தை <u>குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்</u> என்னும் பெயரில் தமிழிசையில் பூர்வ மக்கள் பாடி வந்தனர். (கருணாமிர்த சாகரம்)

<u>ஷோடச எனப்படும் 16 ஸ்வரபேதங்கள் ஷோடச என்றால் 16 ஸ்வரங்கள்</u>

| | | |
|---|---|---|
| ஸ்வரசமிக்கை | - | ஸ்வர விவரம் |
| *1. ச* | | ஷட்ஜம் |
| *2. 1.சு.ரிஷபம்* | - | சுத்தரிஷபம் அல்லது 1வது ரிஷபம் |
| *2.ச.ரிஷபம்* | - | சதுஸ்ருதிரிஷபம் அல்லது 2 வது ரிஷபம் |
| *3.ஷ.ரிஷபம்* | - | ஷட்ஸ்ருதி ரிஷபம் அல்லது 3வது ரிஷபம் |

| | | |
|---|---|---|
| 3. 1.சு.காந்தாரம் | - | சுத்தகாந்தாரம் அல்லது 1வது காந்தாரம் |
| 2.சா.காந்தாரம் | - | சாதாரண காந்தாரம் அல்லது 2 வது காந்தாரம் |
| 3.அ.காந்தாரம் | - | அந்த்ர காந்தாரம் அல்லது 3வது காந்தாரம் |
| 4. 1.சு.ம | - | சுத்தமத்யமம் அல்லது 1வது மத்யமம் |
| 2.பி.ம | - | பிரதி மத்யமம் அல்லது 2 வது மத்யமம் |
| 5. பஞ்சமம் | - | பஞ்சமம் |
| 6. 1.சு.தைவதம் | - | சுத்ததைவதம் அல்லது 1வது தைவதம் |
| 2.ச.தைவதம் | - | சதுஸ்ருதி தைவதம் அல்லது 2 வது தைவதம் |
| 3.ஷ.தைவதம் | - | ஷட்ஸ்ருதி தைவதம் அல்லது 3வது தைவதம் |
| 7. 1.சு.நிஷாதம் | - | சுத்தநிஷாதம் அல்லது 1வது நிஷாதம் |
| 2.கை.நிஷாதம் | - | கைசிக நிஷாதம் அல்லது 2 வது நிஷாதம் |
| 3.கா.நிஷாதம் | - | காகலி நிஷாதம் அல்லது 3வது நிஷாதம் |

ஆக 16 ஸ்வரங்கள் என்னும் இந்த ஸ்வரங்கள் ஷோடச ஸ்வரங்கள் எனப்படும்.

<u>ஆக 16 ஸ்வரங்களைத்தவிர இந்த ஸ்வரங்கள் உள்ளன.</u>

| | | |
|---|---|---|
| அச்சுத ஸட்ஜம் | - | சுத ஸட்ஜம் ஒன்றானது |
| அச்சுத மத்யமம் | - | சுத்த மத்யமம் ஒன்றாகும் |
| விக்ருத ரிஷபம் | - | சுத்த ரிஷபம் ஒன்றாகும் |
| விக்ருத தைவதம் | - | சுத்த தைவதம் ஒன்றாகும் |
| விக்ருத பஞ்சமம் | - | மத்யமஸ்ருதியிலிருந்து எடுக்கப்பட்டது. |

இதுபோல் ஸட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம், தாரஸட்ஜம் இவைகளும் பிரிவுகள் கொண்டது.

ஸட்ஜம் என்னும் ஸ்வரம் நேதஸட்ஜம் என்பது அச்சுத ஸட்ஜமாகும். இதேபோல் மத்யமம், அச்சுத மத்யமம், - பஞ்சமம், அச்சுத பஞ்சமம், தார ஸட்ஜம் என்பது

| | | |
|---|---|---|
| சுத்த ஸட்ஜமே ஸட்ஜம் | அச்சுத ஸட்ஜம் (ஆர்) | என்பது வாஸுதேவன் |
| 24வது ஸ்ருதி<br>கோவிந்தா | நேத சட்ஜம்<br>ஸட்ஜம் | 25வது ஸ்தானம்<br>பரம் பொருள் |

இதுவே ஸ்ரீரங்கம் கோயில் விமானலட்க்ஷணம் - எனக்கு என் தாயார் அளித்த ஆதார விவரம் ரெக்கார்டு ஃபார் ஸ்ருதி வால்யூ - விமானத்தில் மூன்று புரம்




ஆக அச்சுதன், அனந்தன், கோவிந்தன், வாஸுதேவன் 8+8+8+1=25

| 8 | 8 | 8 |
|---|---|---|
| அச்சுதன் (ட்டு) அனந்தன் - | அனந்தன் (ட்டு) கோவிந்தன் - | கோவிந்தன் (ட்டு) அச்சுதன் |

இதே வீணையில் தட்டு 1 ஸ்தானம் - ஸ என்பது

தற்காலத்தில் வழங்கும் ஸ்ருதிகள், 24 ஸ்ருதிகளுக்கான விவரம். இது எனது குறிப்பு.

ஸட்ஜம் - அச்சுத ஸட்ஜம்

இதுவே திருவரங்கம் கோயிலில் விமானத்தில் நான் இந்த ஆய்வில் கூறப்போகும், அச்சுத ஸட்ஜம் - முதல் அச்சுதமத்யமம், அச்சுதபஞ்சமம், நேத ஸட்ஜம் (ஆர்) அச்சுத ஸட்ஜ கோவிந்தா விமானத்தில் அச்சுத ஸட்ஜம், அச்சுத மத்யமம், அச்சுத பஞ்சமம், (அச்சுத ஆர்) நேத ஸட்ஜம், தாரஸட்ஜம் கோவிந்தா இடமான 24 வது ஸ்ருதி. அச்சுதா, அனந்தா, கோவிந்தா.

8<------------->8 <-------------->8 24+1 = 25

16

25------- பரம்பொருள் - பர - வாஸுதேவர்

இந்த 16, 25க்கான விவரத்தை ஓம் ப்ரணவ விமான படத்தில் (3) ல் காட்டப்பட்டுள்ளது.

வரப்போகும் விவரங்கள் எனது ஆய்வில் நான் எடுத்துக்கொண்டபடி விளக்கியுள்ளேன்.

ஜெயம்மாளால் கைடு செய்யப்பட்டது.

சட்ஜம் - அச்சுத ஸட்ஜம்

சட்ஜம் - குரல்

| <u>ரிஷபம்</u> | <u>6 ரிஷபங்கள்</u> | <u>துத்தம் எனப்படும்</u> |
|---|---|---|
| 1. ஏகஸ்ருதி ரிஷபம் | 1 | |
| 2. சுத்த ரிஷபம் | 2 | |
| 3. திஸ்ருதி ரிஷபம் | 3 | |
| 4. சதுஸ்ருதி ரிஷபம் | 4 | வீணையில் சுத்த, சதுஸ்ருதி |
| 5. பஞ்சஸ்ருதி ரிஷபம் | 5 | <u>2 ஸ்ருதிகள்</u> |
| 6. ஷட்ஸ்ருதி ரிஷபம் | 6 | <u>2 ஸ்தானம்</u> |

| <u>காந்தாரம்</u> | <u>6 காந்தாரங்கள்</u> | <u>கைக்கிளை எனப்படும்</u> |
|---|---|---|
| 1. சுதகாந்தாரம் (ஆர்) ஏகஸ்ருதிகாந்தாரம் | 1 | |
| 2. சுத்தகாந்தாரம் | 2 | வீணையில் ஸாதாரண |
| 3. திஸ்ருதிகாந்தாரம் | 3 | காந்தாரம், அந்த்காந்தாரம் |
| 4. சாதாரண காந்தாரம் | 4 | <u>2 ஸ்ருதிகள்</u> |
| 5. பஞ்சஸ்ருதி காந்தாரம் | 5 | <u>2 ஸ்தானம்</u> |
| 6. அந்த்ர காந்தாரம் | 6 | |

| <u>மத்யமம்</u> | <u>6 மத்யமங்கள்</u> | <u>உழை எனப்படும்</u> |
|---|---|---|
| 1. சுதமத்யமம் | 1 | |
| 2. சுத்த மத்யமம் | 2 | வீணையில் சுத்தமத்யமம் |
| 3. அச்சுதமத்யமம் | 3 | பிரதி மத்யமம் |
| 4. திஸ்ருதிமத்யமம் (ஆர்) அப்பிரதிமத்யமம் | 4 | <u>2 ஸ்ருதிகள்</u> |
| 5. பிரதிமத்யமம் | 5 | <u>2 ஸ்தானம்</u> |
| 6. சுதபஞ்சம மத்யமம் | 6 | |

| பஞ்சமம் | பஞ்சமம் 2 | இளி எனப்படும் |
|---|---|---|
| 1. சுத பஞ்சமம் | 1 | வீணையில் பஞ்சமம் |
| 2. பஞ்சமம் (ஆர்) அச்சுத பஞ்சமம் | 2 | 1 ஸ்ருதி 1 ஸ்தானம் |

| தைவதம் | தைவதங்கள் 6 | விளரி எனப்படும் |
|---|---|---|
| 1. ஏகஸ்ருதி தைவதம் | 1 | |
| 2. சுத்த தைவதம் | 2 | |
| 3. திஸ்ருதி தைவதம் | 3 | |
| 4. சதுஸ்ருதி தைவதம் | 4 | வீணையில் தைவதம் |
| 5. பஞ்சஸ்ருதி தைவதம் | 5 | 2 ஸ்ருதி 2 ஸ்தானம் |
| 6. ஷட்ஸ்ருதி தைவதம் | 6 | |
| 7. சுத நிஷாத தைவதம் | 7 | |

| நிஷாதம் | நிஷாதங்கள் | தாரம் எனப்படும் |
|---|---|---|
| 1. ஏகஸ்ருதி நிஷாதம் | 1 | |
| 2. சுத்த நிஷாதம் | 2 | |
| 3. திஸ்ருதி நிஷாதம் | 3 | |
| 4. கைசிக நிஷாதம் | 4 | வீணையில் நிஷாதம் |
| 5. பஞ்சஸ்ருதி நிஷாதம் | 5 | 2 ஸ்ருதி 2 ஸ்தானம் |
| 6. காகலி நிஷாதம் | 6 | |
| 7. சுத ஷட்ஜ நிஷாதம் | 7 | |

**சுத ஸட்ஜம்**    **சட்ஜம் 2**

சுத ஸட்ஜம் — வீணையில் ஸட்ஜம்

ஸட்ஜம் — 1 ஸ்ருதி 1 ஸ்தானம்

ஆக வீணையில் தட்டும் ஸ்ருதி ஸ - 1 - ரி2 - க2 - ம2 - ப1 - த2 - நி2 - ஸ்

12 ஸ்தானங்கள் ஸ்ருதி 12 ஆகும்.

இதேபோல் வீணையில் அதிதாரஸ்தாயி 12 ஸ்ருதி 12 ஸ்தானமாகும். ஆக வீணையில் 24 மெட்டுகள் 24 ஸ்ருதிகள். இதேபோல் அனுமந்த்ர, மந்த்ர ஸ்தாயிகள். மந்த்ர, மத்ய, தார, அதிதார ஸ்தாயிகள், அனுமந்த்ர, மந்த்ர, மத்ய, தாரஸ்தாயிகள் வீணைக்கு உண்டு. இதுவரை சொன்ன ஸ்வரங்கள் பிரித்துக்காட்டப்படாமல் அனுபவத்தில் ராகங்களில் ப்ரயோகங்கள் செய்யும்போது மட்டும் கூறி வந்துள்ளார்கள். ஆகவே ராகங்கள் குறிப்பிட்ட ஸ்வரங்களை விட ஸ்ருதி வால்யூ என்ன என்பதை திட்டவட்டமாக கூறும் விதம் ஏற்படுமானால் நமது பாரம்பரிய மிக்க கர்னாடக இசை அழியாது நிலைக்கும். மேலும் ஒரு ராகத்திற்கு வரும் ஸ்வரமே எத்தனை அலகு கொண்டதுஎன்பதை இளம் தலைமுறையினருக்கு புரியும்படி கூறினால் பாடாந்தரம் போது ராச்சகச் சாயல் மாறாது இருக்கும்.

**வீணைக்கு 24 ஸ்ருதி**

**த்வாதச என்னும் 12 ஸ்வரஸ்தானங்கள் வீணையில்**

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சட் சு ஜம் ரி | ச.ரி ----- சு.கா | சா.கா ----- ஷட்ரி | அந்க | சு.ம | பி.ம | ப | சு.தை | ச.தை ----- சு.நி | கை.நி ----- ஷ.தை | கா.நி | ச் | 1/12 |

வீணையில் தட்டு ஸவாக உள்ளதால் மெட்டில் முதல் மெட்டு

| சு.ரி. | ச.ரி. | ஸா.கா. | அம்.கா. | சு.ம. | பி.ம. | ப. | சு.தை. | ச.தை. | கை.நி. | கா.நி. | ஸ் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |

வீணையில் ஆதாரஸட்ஜ முதல் தாரஸட்ஜம் வரை 12 ஸ்தானங்கள் தார ஸட்ஜமுதல் அதிதார ஸட்ஜம் வரை 12 ஸ்தானங்கள் மானுடன் உடலில் இதே போன்ற வடிவமைப்பை கொண்டதால் மனிதன் இசையை தன்னுள் பிறக்கச் செய்யும் சக்தி கொண்டவனாக இருக்கிறான். தசவித கமகங்கள் அவனுள்ளே அடங்கி உள்ளது. பஞ்சபூதங்கள் அவனுக்கு ஆதாரம். பஞ்சபூதங்கள் தமக்குள் ஒன்றுபடும்போது உண்டாவது சப்தம் அந்த ஒலியை பிரித்தால் தனியோஸைவரும் அதுவே த்வனி யாகும். த்வனியை கோவையாக ஒலிக்கப் பெற்றால் சங்கீதமாகிறது. ஆகவே மனிதன் தன்னுள் இசையை பிறக்கச் செய்யும் சக்தி உள்ளவன் ஆகிறான். மேலும் மனிதனின் உடலில் 72,000 நரம்புகள் உள்ளன. அவை அனைத்தும் 10 நாடிகளில் அடங்குகிறது. அந்த 10 நாடிகளும், 3 நாடிகளில் ஒடுங்குகின்றன. 72,000 நரம்புகள் என்பது தான் நம்மால் 72 ராகத்தின் ராகப்ரவோகத்தை உணரச்செய்து பாடவைக்கிறது. இசையின் தத்துவத்தை உணர முடிகிறது. கடவுள் இந்த நரம்பு, தசை, நாடி, மூச்சு மற்ற இந்திரியங்களினால் 10 நாடிகளில் 72,000 நரம்புகளை அடக்குகின்றார். 10 நாடி என்பது நமக்கு தசவித கமகத்தை உணர்த்துகிறது. வீணையிலும், த்வாதச ஸ்வரங்களும், 72 மேளத்திற்கான ஸ்வரங்களும், தசவித கமகங்களும், ஸப்தஸ்வரங்களின் ஒலியின் 8ன் ஸவரஸ்தானங்களும் உள்ளதால், மானுடைய உடல் வீணையை ஒத்தது என்று வரலாறு குறிப்பிடுகிறது. உலகில் உள்ள எந்த வாத்யத்தையும் விட வீணை வாத்யம் மட்டுமே சிறந்த வாத்யம் என்று பெயர் பெற்றுள்ளது இதன்படிதான். ஆக 16 ஸ்வரங்களில் 12 தனித்து நிற்பவை, 4 ஸ்வரங்களை சார்ட்டில் (வீணை வடிவத்தில்) காட்டப்பட்டுள்ளது. இப்பொழுது தெளிவுரையாக.

1. சதுஸ்ருதி ரிஷபமும், சுத்த காந்தாரமும் ஒன்று

2. ஷட்ருதி ரிஷபமும் ஸாதாரண காந்தாரமும் ஒன்று.

3. சதுஸ்ருதி தைவதமும், சுத்த நிஷாதமும் ஒன்று

4. ஷட்ஸ்ருதி தைவதமும், கைசிக நிஷாதமும் ஒன்று ஆகும்.

★ ஸ் ஹெச்சுஸட்ஜம் (ஆர்) தாரஸட்ஜம் (ஆர்) உபரிஷட்ஜம் (ஆர்) மேள ஷட்ஜம் (8வது ஸ்தானம் என்பதால்) என்றும் குறிப்பிடுவதுண்டு. மேளஸட்ஜம் என்பது எனது குருகுல பாடாந்தரம் ஏனெனில் சம்பூர்ணம் என்பது மேளமாகாது. ஆகவே மேளராகத்தைப்பற்றி கூறும் போது தாரஸட்ஜம் 8 ஆனது மேள ஸட்ஜம் என்று கூறுவதுண்டு. மொத்தத்தில் வாத்யத்தால் அன்றி மேற்படி ஸ்வரங்களை பிரித்து காட்டுவது சாத்யமன்று, சுலபமில்லை என்பதனாலும் வீணை வாத்யம் வாத்யங்களில் சிறந்தது என்பதனாலும் முதன்மையானது என்பதனாலும் வீணையின் படி விரிவுரை அளிக்கப்பட்டுள்ளது. வீணையின் தந்தியின் தட்டே ஆதாரஸட்ஜம் (ஆர்) தக்கு ஸட்ஜ ஸ்ருதியாய் இருப்பதால் அதற்கு ஸ்வரஸ்தானம் இல்லை. ஆகவே சுத்தரிஷபம் முதல் தாரஸ்தாயி தாரஸட்ஜம் (ஆர்) ஹெச்சுஸட்ஜம் வரையில் 16 ஸ்வரங்களுக்கு 12 ஸ்வரங்களின் கணிதத்தை மேலே கூறப்பட்டுள்ளது. ஆகவே வாய்பாட்டுக்கலைஞர்கள் வீணையை கற்கவேண்டியது மிகவும் அவசியம் என்று கல்லூரி பாடதிட்டத்தில் வைக்கவேண்டும். அப்படி வைக்கப்படுமானால் அவர்களால் திட்டவட்டமான (ஸ்ருதி வால்யூ) கண்டுபிடிப்பதோடு எங்கெங்கு 12 ன் (16) ஸ்தானங்கள் 24 ஸ்தானங்கள் 48, 96ன் நுட்பஸ்ருதியின் (ஸ்ருதி வால்யூ) வைக் கணக்கிடுவது சாத்யமாகும் என்பது என் கருத்து. ஸப்தஸ்வரங்கள் யாது? அவற்றின் பெயர் என்ன என்பது முதலில் அறியவேண்டும். ஸட்ஜம் - நீர்வீழ்ச்சியின் ஸ் என்ற ஓசையிலிருந்து பிறக்கிறது. அந்த நீர் வீழ்ச்சியின் ஓசையிலிருந்தே ஓசை கேட்கிறது. ஸ என்ற ஒலி.

இந்த ஸட்ஜம் ஆறாக ஆகி (நமது உடலில் பிறக்கிறது) அது நாசி, கண்டம், ஹ்ருதயம், தாடை) நாக்கு, பல் ஆகிய இந்த ஆறு இடங்களிலிருந்து பிறக்கிறது. ஸட்ஜத்திற்கு பின் வரும் இந்த ரிகமபதநி ஆறு ஸ்வரங்கள் ஸட்ஜம் என்று பெயர் பெற்றது.

2. ரிஷபத்தின் கத்தும் ஓசையை போன்றுள்ளதால் ரிஷபம் என்றும்

3. காந்தாரம் ஸ்ருதியை அடைகிறது. கா என்ற இடத்திற்குரிய பெயரை அடைவது.

4. மத்யமம் - மத்யஸ்தானத்தை அடைவதால் - மத்யமமாகிறது. சப்தஸ்வரங்களின் மத்யஸ்வரம்.

வக்ஷஸையும், கண்டத்தையும் அடைந்து (மத்ய அவயமான நாபியிலிருந்து பிறக்கிறது) மத்யமம் என்றாகிறது. இப்படிப்பட்ட மத்யமம், இந்த மத்யமம் ஓம் என்று ப்ரணவ மந்திரத்தின் ஒலியை நாபியிலிருந்து கிளம்பி வக்ஷஸ்தலத்தை தொட்டு (லக்ஷ்மியிருப்பிடம்) பின் கண்டத்தின் வழியாக வந்து வாயில் வெளிவருகிறபோது ஓம் ஓம் ஓம்... என்ற தீர்க்கமான ஒலி வெளிவருகிறது. இதுவே ஞானிகளின் மந்த்ரம் சங்கீதத்தின் வேத, சாஸ்த்ரத்திற்கு மந்திரம், இந்த மந்த்ரத்தின் தீட்க்ஷண்யத்தால் யோகிகள் ஆத்மத்யானம் பெற்று சித்தியடைகிறார்கள். இசைமூலம் இதனை ஆதாரப்பூர்வமாக நிரூபித்துள்ளார்கள். மத்யமத்தின் ஒலி வேறுபாட்டால் 72 மேளத்தில் 36 பேதமடைகிறது.

5. பஞ்சமம் என்பது ஐந்தாவது ஸ்தானம் ஆகிறது. ஐந்து இடத்திலிருந்து பிறக்கிறது. நாபி, உரசு, ஹ்ருத்யம் கண்டம், சிரசு ஆகும். குயில் கூவுவது பஞ்சம ஒலியை ஒத்ததாக இருக்கும்.

<u>தைவதம்:-</u> என்பது நாபி முதலியஸ்தானங்களை தழுவிக்கொண்டு வருவது, தைவதத்தை ஞானமுடையோர் திறம்பட பாடுவதாலும், தைவதம் ஆகும்.

<u>நிஷாதம்:-</u> ஸரிகமபத என்ற ஆறுஸ்வரங்களையும் ஒரு சேரப்பெற்றதால் நிஷாதம் என்று பெயர் பெற்றது.

<u>ஸட்ஜம்:-</u> தாரஸட்ஜம்:- ஏழு ஸ்வரங்களின் ஆதார முதல் 7 ஸ்தானங்களையும் ஒன்றாக சேர்த்து முடிவு பெற்று தார ஸட்ஜம் என்றானது.

<u>ஸப்தஸ்வரங்களின் த்வனிகள்:-</u>

| | | | |
|---|---|---|---|
| 1. ஸட்ஜத்திற்கு | - | மயில் | |
| 2. ரிஷபத்திற்கு | - | ரிஷபம் | ஸ்வரங்கள் ஏழாக இருக்கக் காரணம் |
| 3. காந்தாரம் | - | மேஷம் | |
| 4. மத்யமம் | - | க்ரௌஞ்சபக்ஷி | |
| 5. பஞ்சமம் | - | கோகிலம் | |
| 6. தைவதம் | - | குதிரை | |
| 7. நிஷாதம் | - | யானை | குறிக்கிறது. |

16 ஸ்வரங்களுக்கு காரணம் 16 ஸ்வரங்கள் ஷோடசஸ்வரம் என்பது அமைத்தது. அ.சூடாமணி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மயிலின் த்வனிக்கு | ஸவுக்கு | - | 1ம் | 3 | |
| ரிஷபத்வனிக்கு | ரிக்கு | - | 3ம் | 3 | |
| மேஷத்வனிக்கு | கவுக்கு | - | 3ம் | 3 | |
| க்ரௌஞ்சபக்ஷியின் த்வனிக்கு | மவுக்கு | - | 2ம் | 3 | |
| கோகிலத்வனிக்கு | பவுக்கு | - | 1ம் | 3 | |
| குதிரையின் த்வனிக்கு | தவுக்கு | - | 3ம் | 3 | |
| யானை த்வனிக்கு | நிக்கு | - | 3ம் | 3 | அடங்கியிருப்பதால் |
| | ஸ்க்கு | | | 3 | |
| | | | 16 | 24 | |

16, 24 ஸ்வரங்கள் இருக்கக் காரணம் ஆகிறது. பனிரெண்டு ஸ்வரங்களில் பதினாறு ஸ்வரங்கள் ஏற்படுவதால் இந்த 12 என்ற ஸ்வரஸ்தானங்கள்தான் பதினாறு 16 ஆனதை புரிந்து கொள்ள வேண்டும். 12 ஸ்வரதானங்கள்தான் 16க்கு காரணமாயின் ஆகும். திருவெண் ஆழி பிரகாரத்தில் 12 தூண்கள் இதையே குறிப்பிடுகிறது.

<u>பதினாறு ஸ்வரஸ்தானங்களுக்கு ஏற்படும் ஸ்வரஸ்தானங்கள்</u>

| | | |
|---|---|---|
| சுத்த காந்தாரமும், சதுஸ்ருதிரிஷபமும் | - | ஒரு வீடு |
| சாதாரண காந்தாரமும், ஷட்ஸ்ருதி ரிஷபமும் | - | ஒரு வீடு |
| சுத்த நிஷாதமும், சதுஸ்ருதிதைவதமும் | - | ஒரு வீடு |
| கைசித நிஷாதமும், ஷட்ஸ்ருதி தைவதமும் | - | ஒரு வீடு ஆக |

16 ஸ்தானங்கள்.

72 மேளகர்த்தா ராகங்களுக்கு க்ரமப்படி வரவேண்டிய ஸ்வரவரிசை

1. சுத்த காந்தாரத்துக்கு பின், சதுஸ்ருதிரிஷபம்

2. சாதாரண காந்தாரத்துக்குப்பின், ஷட்ஸ்ருதிரிஷபம்

3. சுத்த நிஷாதத்துக்குப்பின் சதுஸ்ருதி தைவதம்

4. கைசிக நிஷாதத்துக்குப்பின், ஷட்ஸ்ருதி ''தைவதமும்'' என்று வரிசை கிரமம் ஏற்படுகிறது. வீணையில் சுத்த ரிஷபத்திலேயே சுத்த காந்தாரம் பிடிக்கவேண்டும், இதுபோல், ஒரே வீடு சுரங்களை அந்த வீட்டிற்குமுன் உள்ள ஸ்வரத்தில் பிடிப்பதாலேயே அந்த சுரத்திற்கான சரியான ஒலி கிடைக்கும். இதை வீணையில் மட்டுமே நிரூபிக்க முடியும் 'யாழொலிக்க பண்' என்பது வரலாறு.

| <u>ஸ்ருதி</u> | <u>ஸ்வரங்களின்</u> | <u>ஸ்வரங்களின் பெயர்</u> | <u>எண் வரிசை</u> |
|---|---|---|---|
| 1 | ச | ஷட்ஜம் | 1 |
| 2 | சு.ரி | சுத்த ரிஷபம் | 2 |
| 3 | சு.க | சுத்த காந்தாரம் | 3 |
| 4 | ச.ரி | சதுஸ்ருதி ரிஷபம் | 4 |
| 5 | சா.கா | சாதாரண காந்தாரம் | 5 |
| 6 | ஷ.ரி | ஷட்ஸ்ருதி ரிஷபம் | 6 |
| 7 | அம்.கா | அந்த்ர காந்தாரம் | 7 |
| 1 | சு.ம | சுத்த மத்யமம் | 8 |
| 2 | பி.ம | பிரதி மத்யமம் | 9 |
| 1 | பஞ்சமம் | பஞ்சமம் | 10 |
| 2 | சு.தை | சுத்த தைவதம் | 11 |
| 3 | சு.நி | சுத்த நிஷாதம் | 12 |
| 4 | ச.தை | சதுஸ்ருதிதைவதம் | 13 |
| 5 | கை நி | கைசிக நிஷாதம் | 14 |
| 6 | ஷ.தை | ஷட்ஸ்ருதி தைவதம் | 15 |
| 7 | கா.நி | காகலி நிஷாதம் | 16 |

முன் குறிப்பிட்ட அட்டவணையில் ஷட்ஜம், மத்யமம், பஞ்சமம் ஸ்ருதி ஸ்வரங்கள், ஆகவே அவை முதலாக வைத்து ஸ்ருதிக்ரமமாக தொகுக்கப்பட்டுள்ளது.

**16 ஸ்வரங்களின் இடம் பெயர்:**

| | | |
|---|---|---|
| 1. ஷட்ஜம் | :- | நாசி, கண்டம், ஹ்ருதயம், தாடை, நாக்கு, பல் இந்த ஆறு இடங்களின் மொத்த கூட்டு த்வனி ஆகிறது. |
| 2. சு.ரிஷபம் சுத்த ரிஷபம் | :- | ரிஷபத்தில், ஆறு ரிஷபத்தில் முதல் ஸ்வரம் சுத்தஸ்வரம் என்பதால் சுத்தரிஷபம் ஆகிறது. |
| 3. சு.காந்தாரம் (சுத்த காந்தாரம்) | :- | சுத்த ஸ்வரங்களே ப்ரக்ருதிஸ்வரங்கள் என்பதால் சுத்த காந்தாரம் என்பது முதலான காந்தாரத்தால் யெர் பெற்றது. |
| 4. ச.ரிஷபம் சதுஸ்ருதி ரிஷபம் | :- | ரிஷபம் 4 ஆகவே ஸதுஸ்ருதி ரிஷபம் என்று பெயர் பெறவாகிற்று நான்கு ஸ்ருதி ரிஷபத்தின் மாத்திரை கொண்டது. |
| 5. சாதாரண காந்தாரம் சதுஸ்ருதி ரிஷபம் | :- | இது தனித்து நிற்காமல் ரிஷபத்தோடு ஸாதாரணமாக லயவசப்படுவதால் சாதாரண காந்தாரம். |
| 6. ஷட்ஸ்ருதி ரிஷபம் | :- | ஆறாவது ஸ்ருதி என்பதால் ஷட்ஸ்ருதி என்று பெயர் ஷட்ஸ்ருதி ரிஷபம் என்று பெயர். |
| 7. அந்த்ரகாந்தாரம் | :- | காந்தாரம் என்ற ஸ்ருதிக்கு தீவிரமாக தனித்து நிற்பது அந்த்ர காந்தாரம். எந்த சுரமும் கலக்காது ஸ்ருதி வால்யூ நிர்தாரணமாக பேசும் சுரம். |
| 8. சுத்த மத்யம் | :- | பெயர் காரணம் ஒன்று, சுத்தஸ்வரங்கள் என்று சொல்லும் சுரங்களுக்கு மத்யமாக வந்து சுத்த மத்யமம் என்று (முதல் மத்யமத்தால்) பெயர் பெற்றது. |
| 9. பிரதி மத்யமம் | :- | சுத்த மத்யமத்திற்கு எதிர் மத்யமும் 36 மேளங்களுக்கு பிரதி 36 மேளத்திற்கு வருவதால் பிரதிமத்யமம் என்றானது. |
| 10. பஞ்சமம் | :- | ஸப்தஸ்வரத்தில் 5ம் இடம் பெற்ற காரணத்தால் பஞ்சமம் என்று பெயர் பெற்றது. ஸட்ஜஸ்ருதி, மத்யமஸ்ருதி என்பது போல் பஞ்சம ஸ்ருதி என்பதோடு முக்கியமாக மத்யஸ் தாயிக்கு 5ம் இடமானதால் பஞ்சமமானது. நாபி, உரசு, ஹ்ருதயம், கண்டம், சிரஸ் ஆகியவற்றிலும் பஞ்சமம் ஆயிற்று. |
| 11. சுத்த தைவதம் | :- | சுத்த சுரங்கள் வரிசைப்படி முதல் தைவதமான இஃது சுத்த தைவதமாயிற்று. |
| 12. சுத்த நிஷாதம் | :- | இதுவும் நிஷாதத்தில் முதல் ஸ்வரத்தால் சுத்த நிஷாதம் என்று பெயர் பெற்றது. |
| 13. சதுஸ்ருதிதைவதம் | :- | நான்காவது ஸ்ருதி என்பதால் சதுஸ்ருதியானது. |
| 14. கைசிக நிஷாதம் | :- | ஷட்ஸ்ருதிதைவதத்தின் ஸ்தானமும் இந்த ஸ்வரஸ்தானமும் ஒரே வீடு என்பதால் கைசிகம். |
| 15. ஷட்ஸ்ருதி தைவதம் | :- | ஆறாம் ஸ்ருதி தைவதமாக கொள்ளப்பட்டுள்ளது. தைவத ஆறு ஸ்ருதிக்கு இது ஆறாவது ஸ்ருதி என்பதால் ஷட்ஸ்ருதி என்ற பெயர் வந்தது எனலாம். |
| 16. காகலி நிஷாதம் | :- | மதுரமான ஸ்ருதி தீர்க்கம் கொண்டது கேட்க ரம்யமானதால் காகலி நிஷாதம் என்று பெயர் பெற்றது. |

| ஸப்தஸ்வரங்கள் | அக்ஷரம் 7 | உதாரணம் ஸரிகமபதநி | அக்ஷரம் 7 |
|---|---|---|---|
| 1. மேளம் | 8 | ஸரிகமபதநிஸ் | 8 |
| 2. சம்பூர்ணம் | 7 | ஸரிகமபதநி | 7 |
| 3. ஷாடவம் | 6 | ஸரிகமபத | 6 |
| 4. ஔடவம் | 5 | ஸரிகமப | 5 |
| 5. ஸ்வராந்தம் | 4 | ஸரிகம | 4 |
| 6. சாமிகம் | 3 | ஸரிக | 3 |
| 7. காதிகம் | 2 | ஸரி | 2 |
| 8. ஆர்ச்சிகம் | 1 | ஸ | 1 |

ஸ்வர ஸஞ்சாரம் எப்படி வேறுபடுகிறது என்று பார்க்கலாம். கல்பனாஸ்வரம் போட இவைகளை பழகினால் கற்பனை ஸ்வரம் அழகாக இருக்கும்.

1. வாதி - ஸரிகமபதநிஸ், ரிகமபதநிஸ், கமபதநிஸ், மபதநிஸ், பதநிஸ், தநிச், நிச், ஸ்

2. சம்வாதி - ஸ்நிதபமகரிஸ, நிதபமகரிஸ, தபமகரிஸ, பமகரிஸ, மகரிஸ, கரிஸ, ரிஸ, ஸ

3. விவாதி - சமகரி ஸரிகம, ரிபமகரிகமப கதபமகமபத, மநிதபமபதநி

4. அனுவாதி - சரிகா, ரிகமாகமபா, மபதா, பதநி, தநிஸா ஸநிதா, நிதபா, தபமா, பமகா, மகரிகரிசா

இதை பழகிவிட்டு கற்பனஸ்வரம் போட்டால் நல்ல பெயர் கிடைக்கும் பாராட்டு கிடைக்கும். ஸ்தாயி என்பது ஷட்ஜம், பஞ்சமம், தாரம் என்று கர்னாடக இசையில் சொல்லப்படும் முக்கியமான ஸ்தாயிகள். முதலாவதாக மந்த்ர ஸ்தாயி என்றும், மத்யஸ்தாயி என்று தாரம் என்றும் கூறுப்படுகிறது. இதில்

| | | |
|---|---|---|
| மந்த்ரம் | - | தக்கு ஸ்தாயி |
| மத்யத்தை | - | மத்ய ஸ்தாயி |
| தாரத்தை | - | ஹெச்சுஸ்தாயி |

என்றும் கூறப்படுகிறது. இதை முக்கியமாக வாத்யங்கள் வாசிப்பவர்கள் தக்கு, ஹெச்சு, என்று கூறுவார்கள்.

இசைக்கலைஞர்கள் மந்த்ர, மத்ய, தாரம் என்று கூறுவார்கள்.

1. ஹ்ருதயத்திலிருந்து பேசுவது மந்த்ரஸ்தாயி என்றும்

2. கண்டத்திலிருந்து பேசுவது மத்ய ஸ்தாயி என்றும்

3. மூர்த்தத்திலிருந்து பேசுவது தாரஸ் ஸ்தாயி என்றும் கூறப்படுகிறது. ஆனால் வீணைக்கு அனுமந்த்ர ஸ்தாயி உண்டு. ஸ்ருதி மாதா, லயம் பிதா என்பர். ஸ்தாயி வகைக்கு ஸ்ருதி என்று பெயர்.

<u>தம்புராஸ்ருதியைப் பார்ப்போம்:-</u> வாய்பாட்டு கலைஞர்கள் சுருதி சேர்க்க உதவும்.

தம்புராவில் நான்கு தந்திகள் உண்டு. அவற்றில்,

| | | |
|---|---|---|
| 1. ஆரம்ப தந்தி பஞ்சமம் | - | ஸட்ஜத்தின் கீழே மந்த்ர பஞ்சமம் பிடிக்க |
| 2. அடுத்து இரண்டு தந்திகளும் சாரனை, அனுசாரனை | - | இவை இரண்டும் ஷட்ஜஸ்ருதியை ஆதார ஸ்ருதி சேர்ந்து கேட்கும் படி இருக்க வேண்டும். |

சாரனை - அனுசாரனை - ஆதாரஸட்ஜத்தை குறிப்பதாகும். 4 1/2 கட்டைஸ்ருதி என்றால் பிச்சுபைப்பால் ஊதி 4 1/2 ஸ்ருதியை இரண்டு தந்திக்கும் வைக்கவேண்டும்.

மந்த்ரம் - மந்த்ரதந்தி

ஆதார ஸட்ஜம் (ஆர்) தக்கு ஷட்ஜமாக
இணைந்து இருக்கும்படி
சேர்க்கவேண்டும் ஸ்ருதியை.

***வீணை பற்றி ஸ்ருதியை பார்ப்போம்:-***

*வீணைக்கு 7 தந்திகள் உண்டு. முதல் நாலு தந்திகள் விவரம்*

| | | |
|---|---|---|
| 1. முதல் தந்தி | - | சாரணை |
| 2. இரண்டாம் தந்தி | | பஞ்சமம் என்றும் |
| 3. மூன்றாம் தந்தி | | மந்த்ர மென்றும் |
| 4. நான்காம தந்தி | | அனுமந்த்ரம் என்றும் குறிப்பிடபட்டுள்ளது. |
| வீணை கிரமம் படி தாள வரிசை | | வாசிப்பதில் தாளத்தில் வரிசை கிரமம் |
| 5. 5ம் தந்தி | | முதல் தந்தி - அனுசாரணை - ஆதார ஷட்ஜஸ்ருதி |
| 6. 6ம் தந்தி | | இரண்டாம்தந்தி பஞ்சமம் மத்யஸ்தாயி பஞ்சம ஸ்ருதி |
| 7. 7ம் தந்தி | | மூன்றாம் தந்தி ஹெச்சு (ஆர்) தாரஷட்ஜ - தார ஷட்ஜ ஸ்ருதி வைக்கவேண்டும். |

இந்த மேற்படி விவரங்கள் என்னால் கூறப்பட்டவை. மேற்பார்வை (பை) ஜெயம்மாள்.

<u>ஸ்தாயி</u> பற்றிய முழு விளக்கம்

ஸ்தாயி என்பது ஸ்தானம் என்று நாங்கள் எங்கள் குருகுலத்தில் குறிப்பிடுவோம். இதிஹாஸ புராணமான ராமாயணத்தில் ஸ்தானம் என்று குறிப்பிடுகிறது. ஸ்தாயி என்பது ஸரிகமபதநி என்றும், இரட்டை வீடுகளோடு கூடிய 12 ஸ்வரஸ் தானங்களும் ஸ்தாயி ஆகும் என்று இங்கு நான் குறிப்பிட விரும்புகின்றேன். ஸ்தாயி மந்த்ர, மத்ய, தாரஸ்தாயி என்றும் இதனையே தக்கு, மத்ய, ஹெச்சு, ஸ்தாயி என்றும் ஸரிகமபதநிஸ் என்ற அஷ்ட ஸ்தானங்களும் அஷ்டகம் என்ற பெயரோடு ஸ்தாயியிலே இடம் பெற்றுள்ளது. இந்த அஷ்டகம்தான் என் ஆய்வின் முக்கிய ஆய்வுக்கான விஷயம். மேளராகம் (ஒருஸ்தாயியின் எட்டு ஸ்தானங்கள்தான்) ஆகும் என்பதனை இந்த ஆய்வில் கூறி உள்ளேன். மேலும் எட்டின் வடிவம் விமானமான ஓம்ப்ரணவ விமானம்தான் என் ஆய்வின் மூலக்கருத்து என்று கூறியுள்ளேன். ஆகவேதான் ப்ரபந்தங்களில் முதலான நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்திற்கு அஷ்டகக் கணக்கான 8ன் வடிவமான ஆதி தாளத்திலேயே பாசுரங்களை அமைத்துள்ளார் எனது தாயார். பாட்டுக்களெல்லாம் பெரும்பாலும் மூன்றுஸ்தாயிகளுக் குள்ளேயே அடங்கியிருக்கும். இந்த மூன்று ஸ்தாயிகளும் மந்த்ர மத்ய தாரஸ்தாயி பஞ்சமம் வரை இருக்கும். இதுபோலவே ஸங்கீத ஸாஸ்த்ரம் அறிந்த குசலவன் ஸ்ரீவால்மீகியிடம் ஸ்ரீமத்ராமாயணத்தை வீணையோடு கற்றார்கள் என்றும் மந்த்ர, மத்ய தாரமென்ற ஸ்வரங்களின் உற்பத்தி ஸ்தானங்களை அறிந்து த்ருத, மத்ய விளம்பித காலப் பிரமாணங்களை, ஷட்ஜம் முதலிய ஏழுஜாதி (ராகமுறை) களால் அமைக்கப்பட்டதாக தந்த்ரீ வாத்யங்களுக்கு ஒத்ததாக சிருங்கார, கருணை, ஹாஸ்ய, வீரபயானக, ரெளத்ர, பீபத்ஸம், அத்புதம், சாந்தம் என்ற நவரஸங்களால் அலங்கரிக்கப்பட்ட ராமாயணம் என்ற காவியத்தை கற்றார்கள் என்று வால்மீகி ராமாயணம் கூறுகிறது. ராமனுடைய ஆக்ஞைபடி மாக்கமென்னும் ஸங்கீதத்தை குச, லவன் பாடினார்கள் என்றும் வால்மீகி ராமாயணம் கூறுகிறது. ஆகவே இந்த ஸ்தாயியை பற்றி மேலும் பார்ப்போம். வீணையின் ஸ்வரம்.

| | | |
|---|---|---|
| 1. மந்த்ர ஸ்தாயி | அல்லது தக்குஸ்தாயி | |
| 2. மத்ய ஸ்தாயி | அல்லது மத்யமத்தை ஸட்ஜமாக வைப்பதாலும் மத்திமஸ்தாயி | |
| 3. தார ஸ்தாயி | அல்லது ஹெச்சு ஸ்தாயி என்றும் | |
| மந்த்ர ஸ்தாயி ஸட்ஜம் முதல் | <u>ஸ</u>ரிகமபதநி | கீழ் ஸ்தாயி மந்த்ர ஸட்ஜம் ஆரம்பித்து |
| மத்ய ஸ்தாயி ஸட்ஜம் முதல் | <u>ஸ</u>ரிகமபதநி (ஸவை) | ஆதார ஸட்ஜம் என்றும் |
| தாரஸ்தாயி | <u>ஸ்</u>ரிக்ம்ப்த்நி (ஸ்வை) | தாரஸ் ஸ்தாயி ஸட்ஜமென்றும் |
| அதிதாரஸ்தாயி | ஸ்வை | அதிதாரஸ்தாயி ஸட்ஜம் என்றும் கூறுகிறார்கள். |

இது போல் தமிழிசையில் இம்மூன்று ஸ்தாயிகளையும் <u>மெலிவு</u>, <u>ஸமன்</u>, <u>வலிவு</u> என்றும், <u>மந்தலிசை,</u> <u>சமலிசை, வல்லிசை</u> என்பதாக (அப்ரஹாம் பண்டிதர் கூறுகிறார்).

| | | | |
|---|---|---|---|
| ஸரிகமபதநி | ஸரிகமபதநி | ஸ்ரிக்மப்தநி | ஸ் |
| மந்த்ரஸ்தாயி | மத்யஸ்தாயி | தாரஸ்தாயி | அதிதாரஸ்தாயி |

தாரஸ்தாயிக்கு மேலுள்ள ஸ்தாயிக்கு அதிதாரஸ்தாயி என்று பெயர்.

தற்போது - ஸ்தாயியில் வகைகளை பார்ப்போம்.

வீணையில் அனுமந்த்ர ஸ்தாயி உள்ளது. என்பதில்,

அனுமந்த்ர பஞ்சமும், பஞ்சம தந்தி ஸ்ருதியும் ஒன்று, இதே போல் மந்த்ர ஸ்தாயி உள்ளதில் மந்த்ர தந்தி ஸ்ருதியும் மத்யஸ்தாயி ஸ்ருதியும் ஒன்று, இதே போல் மந்த்ர ஸட்ஜமும் மத்ய ஸட்ஜஸ்ருதியும் ஒன்றாகப் பேசும்.

சரிபார்க்கப்பட்டது
(பை)
ஜெயம்மாள்.

மேலும் ஷட்ஜஸ்ருதி நான்கு ஏற்படும் வீணையில்

| | | | |
|---|---|---|---|
| 1. | மந்த்ர ஸ்தாயி ஸட்ஜம் | 1 | ஸ |
| | மத்ய ஸ்தாயி ஸட்ஜம் | 2 | ஸ |
| | தாரஸ் ஸ்தாயி ஸட்ஜம் | 3 | ஸ |
| | அதி தாரஸ்தாயி ஸட்ஜம் | 4 | ஸ் |
| 2. | அனுமந்த்ர ஸ்தாயி பஞ்சமம் | 1 | ப |
| | மந்த்ர ஸ்தாயி பஞ்சமம் | 2 | ப |
| | மத்யஸ்தாயி பஞ்சமம் | 3 | ப |
| | தாரஸ்தாயி பஞ்சமம் | 4 | ப் |
| 3. | <u>பஞ்சமத்தை ஸவாகக் கொண்டு ஏற்படும் நாலு மத்யமம் ஸ-ப</u> | | |
| | அனுமந்த்ர ஸ்தாயி மத்யமம் | 1 | ம |
| | மந்த்ர ஸ்தாயி மத்யமம் | 2 | ம |
| | மத்யம ஸ்தாயி மத்யமம் | 3 | ம |
| | தாரஸ்தாயி மத்யமம் | 4 | ம் |
| 4. | <u>மத்யமத்தை ஸவாகக் கொண்டு ஏற்படும் நாலு பஞ்சமம் ஸ-ம</u> | | |
| | அனுமந்த்ர ஸ்தாயி பஞ்சமம் | 1 | ப |
| | மந்த்ர ஸ்தாயி பஞ்சமம் | 2 | ப |
| | மத்ய ஸ்தாயி பஞ்சமம் | 3 | ப |
| | தார ஸ்தாயி | 4 | ப் |

ஸ - ப - ஸம முறையானது ஸிந்து பைரவி, செஞ்சுருட்டி, புன்னாகவராளி, நாதநாமப்ரியா மத்யம ஸ்ருதி கொண்டு பாடுவது சம்ப்ரதாயம்.

சரிபார்க்கப்பட்டது (பை) ஜெயம்மாள்

***<u>தசவித கமகங்கள் 10 வித கமகங்கள் வீணை வாயில் பாடும் முறையை, விளக்கி உள்ளேன்.</u>***

*(ஜெயம்மாள் அவர்கள் ஸரதுதுளி முதல் கீதம் முடிய வீணை வாசிப்பைத் தொகுத்துள்ளார்) குருகுல பாடாந்தரம்.*

*1. <u>ஆரோஹண</u> க்ரமத்தில் ஸரிகமபதநிஸ் என்று ஏறுவது*

*<u>அவரோஹண</u> க்ரமத்தில் ஸ்நிதபமகரிஸ என்று இறங்குவது இம்மாதிரி ஏறி இறங்கும் போது கமகத்தோடு செயல்படுவது பிர்க்கா எனப்படுகிறது.*

*2. <u>டாலு</u> என்பது <u>சகா சமாசபா</u> என்று விட்டு விட்டு அடிப்பதாகும். வீணையில் தந்தியை மீட்டிய மிக அல்பமான காலத்திற்கு பின் ஒரு சுரத்தை பேச வைப்பது <u>ஷுகா,</u> அதேபோல் ஒரு ஸ்வரத்தை முதலில் உள்ளுக்கு இழுத்து மற்றொரு ஸ்வரத்தை அடுத்து பேச வைப்பது <u>ஸ்ரீ,</u> என்பது போல் செய்வதை <u>டாலு</u> எனப்படும்.*

*3. <u>ஸ்புரிதம்:-</u> சசரிரிககமம - ச்சநிநிததபப துரிதமாகப்பாடுவது. இரட்டைஸ்வரங்களை இரட்டை வரிசை பேசுவிப்பதற்கு ஒரு சவை பேசி அடுத்த சவை தட்டி இரண்டையும் பேசி தட்டி ஏறுவரிசை இறங்குவரிசையாக பாடுவது, வீணையில் வாசிப்பது ஸ்புரிதமாகும்.*

*4. <u>கம்பிதம்:-</u> மமமம, பபபப, தததத - ஒரே ஸ்வரத்தை அந்தஸ்வரத்தின் ஸ்ருதி விட்டு நகராமல் சலனமாக சில வினாடி நிற்பதற்கு கம்பிதமென்று பெயர்.*

*5. <u>ஆஹதம்:-</u> சரிரிககமமபபத - ஒன்றுக்கொண்டு தட்டிக்கொண்டு ஏறும் வரிசை இறங்கும் வரிசையாகப் பாடுவது வாசிப்பது, மேலும் விரிவாகக் கூற வேண்டும் என்றால் ஒரு ஜோடி சுரத்தால் அடுத்த ஜோடி சுரத்தை, அடித்துக் கொண்டு ஆரோஹத்தில் ஏறுவது ஆஹதம்.*

*6. <u>பிரதியாஹதம்:-</u> அம்மாதிரி அவரோஹத்தில் ச்நிநிததபபம என்று தட்டி அடித்து (அடுத்து அடுத்து ஜோடி ஸ்வரங்களால்) கொண்டு இறங்குவது பிரத்யாஹதம் எனப்படும்.*

*<u>திரிபுச்ச:-</u> சசச, ரிரிரி, ககக, மமம மூன்று மூன்று ஸ்வரங்களாக சேர்ந்த கூட்டம், (இவையெல்லாம் அலங்காரங்களில் வருவதை பார்க்கலாம்) திரிபுச்சம் எனப்படும்.*

*<u>ஆந்தோளம்:-</u> சரி சபாப, சரிச, மாம, சுரத்தை (ஆட்டி வைத்து பேசவைப்பது) உதாரணம் எந்த பாக்யமுமா, சாரங்காராகம், த்யாகராகீர்த்தனை, ஆந்தோளம் முன்னும் பின்னும்மாக பேசுவது முதலில் முன்னும் அடுத்து பின்னும் (சரிச, பாம) இப்படியாக.*

*எந்த பாக்ய*

*<u>மூர்ச்சனை:-</u> ராகத்தின் ஸ்வரூபம் ராகத்தின் ஆரோஹண, அவரோஹண க்ரமத்தில் ராகத்தின் ஜீவகளையை காண்பிப்பது மூர்ச்சனை, இது பொது விதி. வீணை, வாய்பாட்டு கலைஞர்கள் இந்த தசவித கமகங்களை அறிந்தாலேயே போதும். கர்னாடக சாஸ்த்ரீய சங்கீதத்தில் தேர்ச்சி பெற, மூச்சை அடக்கி ஸ்வரம் மூலம் ராகத்தை உண்டு பண்ணச் செய்ய ராக ஸ்வருபத்தை காட்ட, மூர்ச்சனை தசவிதகமகங்களும் நம் உடலிலேயே அமையப் பெற்றுள்ளோம். இந்த அமைப்பாலேயே இசையை பாட முடிகிறது. மேலும் நமது உடலில் 108 வர்மபுள்ளி 1008 வர்மஸ்தானங்கள் 72,000 நரம்புகள் இப்படியிருப்பதாக வர்மகலை நிபுணர்கள் கூறுகிறார்கள். ஆகவே இந்த வர்மபுள்ளியை சரியாக இயக்கினாலேயே நோய் இல்லாது வாழலாம் என்று வர்மகலை நிபுணர்கள் கூறுகிறார்கள். இந்த 108, 1008, 72,000த்தாலேயே இசையை பயில நமது உடலில் கடவுள் அமைத்ததை எண்ணி இறைவனுக்கு நன்றி கூறவேண்டும். 108 தாளங்கள், 1008 ராகங்கள், 72 மேளங்கள், இவற்றை நாம் இயக்குகிறோம் என்றால் அதற்குரிய சக்தி நம் உடலிலேயே உள்ளது என்பதை மறக்கக்கூடாது. சாஸ்த்ரீய சங்கீதத்திற்கு நமது உடலே முன்னோடியாக உள்ளது எனலாம்.*

*<u>ஸ்ருதி மாதா லயம் பிதா</u>*

*ச்ருதி மாதா லய: பிதா என்பதற்கு ஒப்பாக ஸ்ருதி தாய்க்கு சமமாகவும், லயத்தை தந்தைக்குச் சமமாகவும் கூறப்படுகிறது. கீதையில் கண்ணன்தான் தந்தையாக, ஆசானாக, சகோரதனாக இருப்பதாக கூறுகிறார். நான் லயமாக இருக்கிறேன் என்று கண்ணன் கூறுகிறார் லயப்பிதாவாக. ஆகவே சங்கீதத்திற்கு ச்ருதி சுத்தமாகவும் லயசுத்தமாக பாடுவது முக்கியமானது. மேலும் ப்ரக்ருதி விக்ருதியாக கூறும் ஸ்தோத்திரத்தில் லக்ஷ்மி ப்ரக்ருதியானவள் என்று ஸ்ரோத்தரிக்கப்படுகிறார் ஸ - ப ப்ரக்ருதிஸ்வரம் ஆகிறது. ரிகமதநி விக்ருத்யை ஆகும் ஸ்ருதிக்கு மாதாவானவர் ப்ரக்ருதியில் இருக்கும் நமக்கு ஞானத்தை அளித்து மோக்ஷமடைய நாராயணனை வேண்டி அனுக்ரஹிக்கிறார். ஆகவே சங்கீதத்திற்கு ச்ருதி சுத்தமாகப் பாடுவது ச்ருதிமாதாவான தாயார் லஷ்மியாலும் ப்ரக்ருதி என்ற பெயருடனும், லயம் சுத்தமாக பாடுவது லயப்பிதாவான மஹாவிஷ்ணுவாயும் என்று கொள்ள வேண்டும். இங்கு கவனிக்க வேண்டியது சக்தி மாதா ஸரஸ்வதியும் லயப்பிதா ப்ரும்மாகவாகவும் கொள்ள வேண்டும். பிரும்மா நம்மை லயமாக பாட படைக்காவிட்டால் எங்ஙனம் ஞானம் பெறுவது என்று கொள்ளவேண்டும். மேலும் இந்த ப்ரக்ருதிவிக்ருதி ஸ்வர பேதம். ப்ரக்ருதி ஸ - ப என்றும் விக்ருதி ரிகமதநி என்று கூறப்படுகிறது.*

*1. பேத மற்ற ஸ்வரங்களான ஸ - ப - ப்ரக்ருதி என்றும் பேதங்களுடைய ஸ்வரங்களான ரிகமதநி விக்ருதி என்றும் கூறப்பட்ட போதிலும் பூர்வ நூல்கள் சுத்த ஸ்வரங்களான ஸரிகமபதநி ப்ரக்ருதி என்றும், அதற்கு எதிரிடையாக வரும் ஸ்வரங்கள் விக்ருதி என்றும் கூறப்படுகிறது. இந்த சுத்த ஸ்வரங்களான ஷட்ஜம், சுத்தரிஷபம், சுத்த காந்தாரம், சுத்ததைவதம், சுத்த நிஷாதம் இவையெல்லாம் பூர்வகாலத்தில் ஷட்ஜகிராம மண்டலத்தில் வழங்கின ஸ்வரங்களே சுத்தஸ்வரங்களான ப்ரக்ருதிஸ்வரம் என்றும், மற்றய ஸ்வரங்கள் விக்ருதியாகக் கொள்ளப்பட்டது. ஆனால் இந்த ஸ்வரங்களில் ஸ்ருதி மதிப்பு தற்போதயதைவிட சற்று கூட ஆனது என்று சான்றோர் கூறுகிறார்கள். ஆனால் ஸ - ப - ரிகமதநி என்ற பாட திட்டம் தான் தற்போது இசை கல்லூரியில் ப்ரக்ருதி விக்ருதியாகக் கூறப்படுகிறது. ஆனால் எனது குருகுல பாடத்தில் ப்ரக்ருதி ஸ்வரம் என்பது எந்தவிதமான ஸ்வரபேதமடையாத ஸ்வரங்களான சுத்தரிஷபம், அந்த்ர காந்தாரம், சுத்த மத்யமம், சுத்த தைவதம், காகலி நிஷாதம் கொண்ட மாயாமாளவகௌளை ராகம் ப்ரக்ருதிக்கு உதாரணமாகவும் ஸரிகமபதநிஸ் என்ற ஹேமவதி ராகம் விக்ருதிக்கு உதாரணமாகவும் கற்பிக்கப்பட்டு வருகிறது. மேலும் பூர்வ நூல்கள், கிரந்தங்கள் மாயாமாளவ ராகம் தெய்வீகத்தை பரப்ப பாடும் ராகம் என்றும், அதன் ஜன்யம் நாதநாமப்ரியா, பௌளி, பூபாளம், சாவேரி, கௌளை போன்ற ராகங்களில் தெய்வதுதிக்கான ராகமாகப் பாடப்படுகிறது என்றும் கூறுகிறது. இந்த ராகத்தை சுபமான, மங்களமான ராகம் என்று பாராட்டப்பட்டுள்ளது. மேலும் உத்தமோத்தம ராகம் என்றும் அழைக்கப்படுகிறது. மேலும் இந்த ராக்த்தில் ஸரி, ரிக, கம, மப, பத, தநி, நிஸ் அடுத்தடுத்த ஸ்தானங்கள் சேர்ந்து ஒலிக்கும் ராகம் ஆக உள்ளது. சுத்த ஸட்ஜ ரிஷப, அந்த்ர காந்தார, சுத்த மத்யம, சுத்த பஞ்சம, சுத்த தைவதம், காகலி நிஷாத, தாரஸட்ஜம், இந்த ராகத்திற்கு இரட்டை வீடு ஸ்வரங்கள் கிடையாது என்பதால் எனது தாயார் இந்த ராகத்தை ப்ரக்ருதிக்கு உதாரணமாக தேர்ந்து பாடி உள்ளார்.*

*இரட்டை வீடு என்பது சுத்த காந்தாரமும் சுத்த நிஷாதமும் - இரட்டை வீடு*

*ஸதுஸ்ருதி ரிஷமும், சுத்த காந்தாரம் - ஒரு வீடு ஆக*

*ஸதுஸ்ருதி தைவதம் சுத்த நிஷாதம் - ஒரு வீடு ஆக*

*ஷட்ஜக்ராமம் என்று வழங்கிவந்த ராகங்களின் சுத்த ஸ்வரங்கள் 1 ஸ்ருதி கூட இருந்த போதிலும் அதைவிட ஸ்வரபேதமில்லாத மாயாமாளவகௌள ராகம் தான் ப்ரக்ருதிக்கு என்று என் குருகுலத்தில் கூறப்பட்டது சிறப்புடையது என்று நிரூபித்துள்ளேன். மாயாமாளவகௌள ராகத்தில் ஸங்கீத வித்தயை பயில ஆரம்பிப்பது என்னும் சம்பிரதாயம் புரந்தரதாஸர் காலத்தில்தான் ஏற்பட்டது. த்ருவமட்யதாளங்கள் இவர் காலத்தில் பிரசித்திக்கும் வந்தது. ஆரம்பப்பாடமே இவருடையதாக இசை உலகுக்கு ஏற்பட்டது. கர்னாடக சங்கீத பிதாமஹர் என்று பெரியோர்களால் கொடுக்கப்பட்டது. புரந்தரதாஸர் கலி 4665 ரக்தாக்ஷி வருஷத்தில் புஷ்யமாதம் அமாவாசை அன்று 2.1.1564 இம்மண்ணுலகை நீத்தார் ஸ்ரீத்யாகராஜர் கலி 4868 சாலி வாகன வருஷம் 1689க்கு சரியான ஸர்வஜித் வருஷம் சித்திரை மாதம் 4.5.1767 அவதரித்தார். 6.1.1847 புஷ்ய பகுள பஞ்சமியாக அவரது மறைவை கொண்டாடப்பட்டு வருகிறது. புரந்தரதாஸர் மறைவு 2.1.1564 புஷ்யமாதம் அமாவாசை, இதை தொடர்ந்து மூர்ச்சனை என்பதனை பார்ப்போம். மூர்ச்சனை 21 ஆகும் இதற்கான குறிப்பேடு தனியாகத் தரப்படும்.*

*1. முதல் 7 மூர்ச்சனைகளும் மந்த்ரஸ்தாயி ஆரம்பமானதால் அவைகள் ஷட்ஜக்ராம மண்டல என்றும்,*

*2. இரண்டாவது ஏழு மூர்ச்சனைகளும் மத்ய ஸ்தாயி ஆரம்பமாகையால் அவைகளுக்கு மத்யகிராம மண்டல என்றும்,*

*3. மூன்றாவது ஏழு மூர்ச்சனைகளும் தேவலோகத்துக்கு பொருத்தமாகையால் அவைகளுக்கு காந்தாரக்ராம மண்டலம் என்று பெயர். இந்த மூன்று கிராம மண்டலங்களும் முறையே நந்த்யாவர்த்தமென்றும், ஜீவதமென்றும், சுபத்ரமென்றும் பெயர் கொண்டது. மேலே சொன்ன இந்த லோகத்துக்கு சம்பந்தமான பதினான்கு மூர்ச்சனைகளில் ஒவ்வொன்றும் சுத்தமென்றும், காகலி என்றும் காந்தாரமென்றும், த்வயோ பேதமென்றும், நான்கு பேதங்களையடைகிறது. மூன்றாவது ஏழு மூர்ச்சனைகளும் அதிதாரஸட்ஜத்துக்கு மேற்பட்டதால் (15 வது மூர்ச்சனையிலிருந்து 21 வது மூர்ச்சனை வரை) காந்தார க்ராம மண்டலமானது. தேவலோகத்துக்குப் பொருந்தினவை. ஆகையால் அவைகளுக்கு காந்தார கிராம மண்டலமென்று பெயர்.*

**21 மூர்ச்சனைகள் அடங்கிய அட்டவணை**

| | | |
|---|---|---|
| 1. உத்தர மந்த்ரம் | சரிகமபதநிச | சநிதபமகரிச |
| 2. ரஜனி | ரிகமபதநிசரி | ரிசநிதபமகரி |
| 3. உத்தராயதம் | கமபதநிஸரிக | கரிசநிதபமக |
| 4. சுத்த ஸட்ஜம் | மபதநிசரிகம | மகரிஸநிதபம |
| 5. மத்ஸரிக்ருத்து | பதநிஸரிகமப | பமகரிசநிதப |
| 6. அஸ்வக்ராந்தம் | தநிசரிகமபத | தபமகரிஸநித |
| 7. ஹிருக்கதம் | நிசரிகமபதநி | நிதபமகரிசநி |
| 8. சௌவீரி | சரிகமபதநிச | சநிதபமகரிச |
| 9. ஹரினஸ்வரம் | ரிகமபதநிசரி | ரிஸநிதபமகரி |
| 10. கலோ பகதம் | கமபதநிஸரிக | கரிஸநிதபமக |
| 11. சுத்தமத்யமம் | மபதநிசரிகம | மகரிசநிதபம |
| 12. மார்க்கம் | பதநிசரிகமப | பமகரிசநிதப |
| 13. கௌரவி | தநிசரிகமபத | தபமகரிசநித |
| 14. ஹிருஷ்யகம் | நிசரிகமபதநி | நிதபமகரிசநி |
| 15. நந்தம் | ஸரிகமபதநிச | ஸநிதபமகரிஸ |
| 16. விசாலம் | ரிகமபதநிசரி | ரிஸநிதபமகரி |
| 17. சுமுகி | கமபதநிஸரிக | கரிஸநிதபமக |
| 18. சித்ரம் | மபதநிசரிகம | மகரிஸநிதபம |
| 19. சித்ரவதி | பதநிசரிகமப | பமகரிஸநிதப |
| 20. சுகம் | தநிசரிகமபத | தபமகரிசநித |
| 21. ஆலாபம் | நிசரிகமபதநி | நிதபமகரிசநி |

15 ட்டு 21 ஸ்வர்க்க லோகத்துக்கு சம்பந்தபட்டவை.

சாஸ்தீரிய சங்கீதம் பற்றிய ஒரு சிறுகுறிப்பு : வேதம், புராணம் ஆகம சாஸ்திரங்கள் இவற்றிற்கு ஆதாரம் நாதமென்றும், அமுதரசமே இவ்வுலகில் மானிட உருவத்துடன் அவதாரமெடுத்ததாக புராணம் கூறுகிறது. ஏழு சுரங்களும் (வில்லில் கட்டப்பட்ட சிறு மணிகளாகும். சிறப்புள்ள கோதண்டம் என்ற வில், கனம், நயம் தேசியம் ஆகிய மூவகை வேறுபாடுகள் அவ்வில்லின் நாண்கையிறாகவும் தாளகதிகள் அம்புகளாகவும் ரசம் நிறைந்த சங்கதிகள் சமயத்திற்கு உசிதமான மொழிகளாவும் அமைகின்றது என்று ஸ்ரீத்யாகப்ரும்மம் ராம அவதாரத்தை புகழ்ந்து பாடுகிறார். இதிலிருந்து எந்த விஷயம் கூறப்பட்டாலும் அது சங்கீத சாஸ்த்ரமே, வால்மீகி குசலவர்களுக்கு மார்க்க சங்கீதத்தை போதித்ததாக வால்மீகி ராமாயணம் கூறுகிறது. சங்கீதகலையில் இரண்டு பிரிவுகள் ஆன மார்க்கம், தேசீ. இதில் மார்க்கம் என்பது ப்ரும்மா பரதமுனிக்கு உபதேசித்த மொழி. தேசீ என்பது பல நாடுகளிலும் ஜனங்கள் சுவைக்கேற்ப மாறியவை. இது போன்ற பிராசின சம்ப்ரதாயங்களை சாஸ்தீரிய சங்கீதத்திலுள்ள அனைத்து விஷயங்களை இளம் சிரார்களுக்கு போதிக்கவேண்டியது அவசியம். மேலும் கீத், வாத்யம், நிருத்யம் இம்மூன்றும் முக்கியமான குணம். இவை ஒன்றோடொன்று லயித்து ஆனந்தத்தை அளித்தலாகும். உதாரணமாக ஸ்ரீரகுவர காம்போதி ராக க்ருதியில் நாட்டிய பாடலாக அமைந்த கீதம், வாத்யத்திற்கான நடையழகு, முக்கியமாக கூறவேண்டுமானால் வீணை வாத்தியத்திற்கான நடையழகு நிருத்தியத்திற்கான கான ரச அடங்கிய க்ருதி. இதில் அதி முக்கியமான விஷயம் என்னவென்றால் சாஸ்தீரிய சங்கீதத்திற்கும், சங்கீத சாஸ்த்ரிரத்திற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஸ்ரீத்யாகப்ரும்மம் கீர்த்தனையில் அனேக இடங்களில் பிரதிபலிக்கச் செய்திருக்கிறார். வாத்தியத்திற்கான நடையழகு அவரது பாடலில் பல இடங்களில் பளிச்சிட செய்திருக்கிறார். எந்த கீர்த்தனை எடுத்தாலும் அதில் கீதம் வாத்யம் நிருத்தியத்திற்கான அடிப்படை அடங்கி இருக்கும். முக்கியமாக அவரது கீர்த்தனையில் நடையழகு வாத்யதியத்திற்கான நடையழகு வீணை வாத்தியத்திற்கு மட்டுமே என்பது போல் அமைந்திருக்கும், அவரது கீர்த்தனைகள் வீணைக்கென்று வழி அமைத்தாற்போல் காணப்படுகிறது. ஆகவே ஸ்ரீத்யாகப்ரும்மம் வீணை வாசிப்பதில் கைதேர்ந்தவர் என்று என்னால் கூறப்படுகிறது. நிற்க ராகம் உண்டாவதற்கான அங்கங்கள் சிலவற்றை பார்ப்போம். 1. குரல் 2. நாதஉற்பத்தி 3. சரீரத்தில் உண்டாகும் மூன்று ஸ்தாயிகள் 4. சுத்தஸ்வரங்கள் 5.விக்ருதஸ்வரங்கள் 6. நான்கு வித வாத்யங்கள் 7. ஸ்வரங்களின் குலம் அதாவது சுத்த மத்ய மேளராகஜன்யம் அல்லது ப்ரதிமேளராக ஜன்யங்கள் சாதி, நிறம், தீவு, ரிஷி, தேவதை, சந்தம், பிரயோகங்கள் 8. சுருதிகளும் அவைகள் ஸ்வரங்களில் ஒலிக்கும் விவரமும் 9. கிராமங்கள் அல்லது ஸ்வரங்களின் குடும்பங்கள் போன்ற தொகுதிகள் 10. மூர்ச்சனைகள் அல்லது ராகங்களின் ஆதாரச்சக்கரங்கள் 11.தாளங்கள் அல்லது பிடிகள் 12. ஸ்வரங்களை பல வகையாக தொகுத்து தானங்களை கற்பனை செய்யும் வழி 13. தாளங்களின் தொகையை கணக்குப்பார்க்கும் சுலபமான வழி 14. தானங்களின் வரிசை கிரமத்தை கண்டுபிடித்தல் 15.சாதிகள் என்னும் தாய்ராகங்களின் சேர்க்கை உண்டாகும் சாதாரண சாதிகள் 16.ஸட்ஜம் பஞ்சமம், 2 ஸ்வரங்களை குறைத்து பிடிப்பதனால் ஏற்படும் புதிய ஸ்வரங்கள் காகலி நிஷாதம், அந்த்ரகாந்தாரம் 17. சாதிகள் என்றும் தாய்ராகங்களின் ரஞ்ஜகத்திற்காக முக்யஸ்வரங்கள் - கிரஹம் அம்சம் முதலியன இப்படியாக ராகம் உண்டாவதற்கான அம்சங்களை கூர்ந்து கவனித்து அப்யஸித்தோமானால் இசையை சாஸ்த்ரிய சங்கீதத்தை சங்கீத சாஸ்த்ரத்தை நன்கு உணர்ந்து பாடுவதோடு இசையில் ஒரு நல்ல பெயரை பெறலாம் என்பதே எனது ஆய்வின் முக்கிய கருத்தாகும். இப்படிப்பட்ட அனைத்து விஷயங்களையும் பெற ஸ்ரீத்யாகராஜ கீர்த்தனைகள் மூலம் நாம் பெறலாம். சங்கீதத்தில் நுட்பஸ்ருதி பற்றி அறிய யாழே முதன்மையானது ஆகும். வாய்பாட்டு இசையை பயிலுவதற்கு முன் வீணை இசையை பயில்வார்களேயானால் இசையில் இருக்கும் ஸ்ருதிகள் மற்றும் நுட்பஸ்ருதிகள் அனைத்தையும் திட்டவட்டமாக கண்டுகொண்டு அனைவரும் ரசிக்கும்படி பாடலாம். ஜாதி பேதங்கள் லகுவிற்கு மட்டும் ஏற்படுகிறது. ஆகவே சங்கீத சாஸ்த்ரத்திற்கு முக்கியமானது லயகோர்வையாகும். அதை தாள வகைகளில் அமைத்துக்கொண்டு பாடி பழகவேண்டும். சாதாரணமாக கர்பனாஸ்வரங்கள் போடுவதற்கு ஜண்டை வரிசையாகவும் ஸரளி வரிசையாகவும் பழகுகிறார்கள். அது அவ்வளவாக சரிபட்டு அமையும் என்று சொல்ல முடியாது. இதில் சங்கீதம் இரண்டு வகையாக உள்ளது. அவை கல்பிதம் மனோ தர்மம் கல்பிதம் வாக்கேயகாரர்களால் பாடப்பட்ட கீர்த்தனைகளை பாடப்படுவது. மனோ தர்மம் என்பது பாடுபவர்கள் தங்கள் மனோ தர்மத்தை உபயோகித்து ராக ஆலாபனை செய்து பல்லவி நிரவல் கல்பனாவரம் பாடுவது மனோ தர்மமாகும். இந்த முறையைக் கொண்டு இளம் சிரார்கள் சங்கீதத்தை பயிலுவார்களேயானால் நமது சங்கீதம் எந்த காலத்திலும் அழியாது நிலைத்து நிற்கும். இதற்கு ஏற்ற சரியான இடம் குருகுல பாடாந்தரமேயாகும். குருகுலத்திலுள்ள ஆசிரியர்கள் அனுபவத்தாலேயே சிறந்தவர்களாக இருப்பார்கள். அவர்கள் போதிக்கும் சம்ப்ரதாய இசை சாஸ்த்ரிய சங்கீதம் கர்னாடக சங்கீதத்தை தழுவியே இருக்கும். ஆகவே சாஸ்த்ரிய சங்கீதத்தை பயிலுவோமாக.



ஓம் ப்ரணவாகார திவ்ய விமானம்

இந்த விமானத்தில் ஸரஸ்வதி அந்தர்வாஹினியாக இருக்கிறாள்.

## ஸ்ரீரங்க புராணம்

## இசைக்கு ஆதாரமான கோயில் திருவரங்கமே வேத, ஸாஸ்த்ர புராணத்தில் ஆய்வுக்காக எடுத்து கொண்டுள்ளேன்

*திருச்சி மாவட்டம் திருவரங்கத்தில் அமைந்துள்ளது அருள்மிகு அரங்கநாதர் ஆலயம் 108 ஆலயங்களில் மிகவும் தொன்மையானது ஆகும். இக்கோயில் திருவரங்கம் பெரிய கோவில் என்று அழைக்கப்படுகிறது. பூலோக வைகுண்டம் என்று அழைக்கப்பெற்று சீரும் சிறப்புடையதான இந்த கோயில் 'கங்கையின் புனிதமான காவிரி நடுவுபட்டு' என்ற தொண்டரடிப்பொடியாழ்வாரின் பாசுரத்திற்கு பெயர் பெற்ற இத்திருவரங்கம் கோயில் காவிரி, கொள்ளிடத்தை மாலையாக அணிந்து 'ஆம்பல்பூத்த சயபரூவதமடுவிலே' அவதரித்த இரண்டாற்றுக்கு நடுவிலே ஏன் பள்ளி கொண்டிரையா' என்ற அருணாசலகவிராயர் பாடலுக்கு ஒப்பாக அமைந்த இந்த பெரிய கோவில் சயபருவதமடுவிலே அரங்கனுக்கு அமைந்ததாகும். காவிரியின் விருப்பப்படி மாலையாக அணிந்ததாக ஸ்தல புராணம். ஆழ்வார்கள் பதின்மராலும் மங்களாசாசனம் செய்யப்பெற்றதும் மிகுதியான பாசுரங்கள் பாடல் பெற்ற ஸ்தலம் இஃதென்றே எனலாம். இஷ்வாகு ராஜனுடைய தவத்துக்கு கிரங்கி அருளிய, இஷ்வாகு முதல் ஸ்ரீராமன் வரையில் சூரியகுலதெய்வமாய் பூசிக்கப்பெற்றப்பின் இராமபிரானால் விபீஷணாழ்வானுக்கு மனமுவந்து அளித்த ஸ்ரீரங்கப்ரணவாக்ருதி விமானத்துடன் அயோத்தியிலிருந்து இலங்கை செல்லும் வழியில் உபயக்காவேரி மத்தியில் பெருமான் ப்ரணவாகாரதிவ்ய விமானத்துடன் மனமுவந்து தங்கிய இடமே திருவரங்கம் எனப்படும். வைகுந்தம் பாற்கடல் முதலியவற்றில் சிறந்ததென்று திருமால் விரும்பியபடியாலும் திருமாலுக்கு ந்ருத்ரங்கமாக இருத்தலாலும் இஃது திருவரங்கமென பெயர்பெற்றது எனலாம். இத்திருவரங்கத்தில் ரங்கநாதன் பள்ளிகொண்டு பெரிய பெருமாள் என்றும், நம் பெருமாள் அழகியமணவாளன் என்றும் தாயார் ஸ்ரீரங்கநாச்சியார் என்றும் அழைக்கப்படுகிறார்கள். தாயார் ப்ரக்ருத்யை, விக்ருத்யை என்று அர்ச்சிக்கப்படுகிறார். இந்தப் ப்ரக்ருத்யை விக்ருத்யைலிருந்துதான் ப்ரக்ருதிஸ்வரம் - விக்ருதிஸ்வரம் என்று பெயர் வந்தது. ஆதலால் திருவரங்கமே இசைக்கு ஆதாரம் என்பது ஸ்ரீரங்க நாச்சியாரின் அஷ்டோத்தர நாமா வளியின் ஆரம்பத்திலிருந்து தெளிவடைகிறது. இந்த விளக்கவுரை இந்த நூலாசிரியைக்கு உரிய கருத்தாகும். ஜெயம்மாள் அவர்களின் அறிவுரைபடி, ப்ரக்ருதியை தாயார் விக்ருத்யை இதர மக்களாகிய நம்மை பெருமானிடம் அழைத்துச் செல்கிறார். ஜீவாத்மா பரமாத்மாவிடம் செல்ல அவர் உதவுகிறார். ஆதாரஸ்வரமாக ஸ - ப என்ற ஜீவஸ்வரம் ரிகமதநி என்ற விக்ருதி ஸ்வரத்தால் ராக உற்பத்தியை செய்து பல ராகங்களாக உருவெடுக்கச் செய்கிறது. ராகங்கள் பிறக்கிறது. அதனைக்கொண்டு ஜீவன் பரமாத்மாவை பாடி துதிக்கிறது. மோக்ஷம் செல்கிறது இப்படியாக திருவரங்க நாயகி பெயர் பெறுகிறார் இசைநாயகியாக. பல்லாயிரம் வருஷங்களுக்கு முன் இராமாயண காலத்திலிருந்தே இத்திருக்கோயில் ஏற்பட்டிருந்த போதிலும், அதற்கு பின்பு ஏற்பட்ட நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்திலிருந்தும், சிலப்பதிகார பாடலிலிருந்தும் இக்கோயில் சுமார் <u>5000</u> வருடங்களுக்கு முற்பட்டது எனலாம்.*

*இக்கோயிலில் பல்வேறு காலங்களில் சோழ அரசர்கள் பாண்டிய ஹொய்சால மன்னர்களால் முக்கியமாக விஜயநகர அரசர்களால் கட்டப்பட்டு விருத்தி செய்யப்பட்டது. விஜயநகர மன்னர் அரசவையில் இருந்த ராஜகுரு என்று சொல்லப்படும்என் தாயார் ஜெம்மாளின் பாட்டனார் (தந்தைவழி) திருவரங்ககோயில் விஜயநகர சார்பாக திருவரங்கத்தில் இருந்து கோயில் பொருப்பை நிர்வகித்தார் என்று என் தாயார் எனக்கு கூறி பின் - இத்திருவரங்கத்தின் இசை சம்பந்தமான, கோயில் சம்பந்தமான அனைத்து விஷயத்தையும் எனக்கு அளித்தார். அதன் பின் நான் என் ஆய்வுக்கு அதனை கொண்டு தொகுத்தேன். பல கோயிலில் இசை தூண்கள் உள்ளது என்று பல ஆதாரங்கள் இருந்தபோதிலும் திருவரங்கத்தில் இசை சம்பந்தமான விஷயம் இருந்ததாக இதுவரையாரும் கூறியதாக தெரியவில்லை. அந்த ரகசியம் பேணி பாதுகாக்கப்பட்ட என் தாய் தலைமுறையினரால் என் தாயாருக்கு கிடைத்ததை நான் எழுதி உள்ளேன். இந்த கோயிலில் பேரீதாடனத்தின்போது கொடியேற்றம் பொழுது ப்ரம்மோத்ஸவ காலங்களில் வாசிக்கப்படும் தாளங்கள் விக்னேஸ்வரஸ்ய, ஜயதாளம், பிர்மதாளம், விஷ்ணுதாளம், திமிரதாளம், மேகதாளம், மல்லதாளம், ப்ரேததாளம், மங்களதாளம், பிருங்கிணிதாளம், மத்ஸீயாதிதாளம், பின் அரையர்ஸ்வாமிகளால் - ராகத்தாளம் போட்டு பாட்டிசைக்கப்படுகிறது.*

| | | | |
|---|---|---|---|
| <u>*சமதாளம்*</u> | - | *காந்தாரராகம்* | <u>*ஷட்ஜமஸ்ஸ்வரம்*</u> |
| <u>*பத்தாவதாளம்*</u> | - | கௌஸல்யராகம் | <u>*நிஷிதஸ்வரம்*</u> |
| <u>*ப்ருங்கிணீதாளம்*</u> | - | கைசிகராகம் | <u>*தாந்தகாரஸ்வரம்*</u> |

| | | | |
|---|---|---|---|
| _மல்லதாளம்_ | - | நட்டபாறாராகம் | _மத்யமஸ்வரம்_ |
| _ஜயதாளம்_ | - | கௌசிகராகம் | _தைவதஸ்வரம்_ |
| _பத்ரதாளம்_ | - | தகாராகம் | _நிஷாதஸ்வரம்_ |
| _டக்ரி தாளம்_ | | | |
| _நாளபாணிராகம்_ | - | தைவதஸ்வரம் | |
| _மல்லதாளம்_ | - | பஞ்சமராகம் | _பஞ்சமஸ்வரம்_ |
| _ப்ரம்மானந்தத்தாளம்_ | - | மேகராகம் | _மத்யமஸ்வரம்_ |
| _அநந்ததாளம்_ | | | |
| _கருடஸ்சக்கணிதாளம்_ | - | கருடராகம் | _மத்யமஸ்வரம்_ |
| _விக்னேஸ்வரஸ்ய_ | - | ஜயதாளம் | |
| _நராபு ராகம்_ | - | விருஷ்பஸ்ஸவிரம் இப்படிப்பட்ட குறிப்பு பேரீதாடனத்தில் உள்ளது. | |

பேரீதாடனம் குறிப்பு ஸ்ரீ சுந்தர் பட்டரிடமிருந்து பெறப்பட்டது.

**_அரையர்களுக்கு உரிய தாளம்:-_** ஆதிதாளம் - அக்ஷ்டாக்ஷரனுக்காக, ஜம்பதாளம் ஆர்வமுடன் ஐவருக்காக அருள்காத்த பெருமாள் என்பதற்காகப் போடப்படுகிறது'' எனது கருத்துக்கணிப்பு.

''யஸ்மின்யுக்தம் வாஸுதேவனே சாக்ஷாத்
ஞானம்யோக கர்மபக்திர் விபுக்தி''
ஏதத்ஞாத்வாப்ரம்மபூதோமஹாந்த:
தத்தத்ஸாஸ்த்ரம் பாஞ்சராத்ரம் ப்ரபத்யே
அன்யேஹாம் சர்வதேவானாம்தாஸோ பத்ரப்ரஸஸ்யதே
ஹரி: ஓம்

என்று ராகதாளத்தோடு கொடியேற்றப்படுகிறது. இது இன்று ஏற்பட்டது அல்ல ராகதாளங்கள் 5000 வருடங்களாக நம்பாரத மண்ணில் இசைவேறுன்றியது என்பது வரலாற்று குறிப்பு மேற்சொன்ன பேரீதாடனத்திலிருந்து புரிகிறது. தமிழிசையைபாடி அரங்கனை மகிழ்வித்த அரையர்கள் ஸ்தலத்தார் என்று போற்றப்படுகிற இவர்களால் இந்த பேரீதாடனத்தின் போது ராகதாளமாக சொல்லி பேரீதாடனம் ஆகிறதை இன்றும் காணலாம். இந்த அரங்கனின் கோயிலில்தான் கோதைநாச்சியார் தமிழிசையாக திருப்பாவையை பாடி அரங்கனை அடைந்தாள். இந்த கோவிலில் பேரீதாடனம் முடிந்த பின் கொடியேற்றம் உத்சவம் முடிவடைகிறது. இதுபோல ஆலயங்களில் ப்ரம்மோத்ஸவ காலஙகளில் ப்ரம்மா, இந்த்ர, அக்னி, யம, நிருதி, வருண, வாயு, குபேர, ஈசான என்றும் ஒன்பது ஸந்திகளில் வாசிக்கப்படுகிறது. தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகிய எல்லாவகைகளிலும் பிரசித்து பெற்ற அரங்கனை நவக்கிரஹங்களில் ஒருவரான சுக்ரனால் பூஜிக்கப்பட்டார். ஆகவே வெள்ளிக்கிழமை மிகவும் விசேஷமான நாளாக விஸ்வரூப தரிசனம் ஸேவிக்கிறார்கள். மேலும் இங்கு விஸ்வரூப தரிசனத்தை விராடவிஸ்வரூபமாக ஸேவித்தல் அவசியம் என்று கூறுகிறேன். ஏனெனில் இங்கு வாசுதேவமந்த்ரத்தை கூறிதான் திருவாராதனம் செய்யப்படுகிறது. பாஞ்சராத்ர ஆகமப்படி இந்த கோயிலில் முதல் திருசுற்றிலேயே கண்ணபிரானுக்கு கோயில் உள்ளது. இதில் தேவகி வசுதேவர், ரோகினி இருப்பதை காணலாம். இரண்டாம் திருச்சுற்றில் கிருஷ்ணனுக்கு கோயில் உள்ளது ஏன் என்று பலருக்கும் வினாவாக உள்ளது. இது முதல் சுற்றிலேயே விமானத்தில் பரவாசுதேவனுக்கு இடம் பெற்றுள்ளதை கவனித்தால் இது பற்றிய வினா எழாது. வாசுதேவன் தான் ஸர்வஜகத்காரணன் என்று விஷ்ணுபுராணம் கூறுகிறது. 'வாசு தேவசர்வம்' என்று ஸ்ரீத்யாகப்ரும்மம் கூறுகிறார். வாசுதேவன்தான் இசைக்கு ஆதாரமானவன். கோவிந்தன் குழலே இசை தத்துவம் கொண்டது. இந்த வாசுதேவன் முதல் சுற்றாகிய விமானப்ரதக்ஷன சுற்றிலேயே இருக்கிறார். இவரது இரண்டு கால்களும் முதல் சுற்றில் உள்ளது திருமனத்தூண்கள் ஆகும். இந்த விமானத்தில் மேல் தங்ககவசம் போற்றப்பட்டுள்ளது. இதில் மூன்று பக்கங்களிலும் அச்சுதன், அனந்தன், கோவிந்தன் வடிவம் உள்ளது. நான்காவதாக வாசுதேவன் காலை விஸ்வரூபத்தில் இந்த வாஸுதேவனை விராட விஸ்வரூபனாக நினைவில் கொண்டு அரங்கனை விஸ்வரூப தரிசனம் செய்ய வேண்டும். எல்லா தெய்வங்களுக்கு ஆதியானதால் 1ம், 2ம், 4ம் திருச்சுற்றிலும் முதல் திருச்சுற்று வாசுதேவன் கண்ணனுக்கு சன்னதி உள்ளது. இசைக்கு ஆதாரம் ஆன கோயில் என்பதற்கு மூல ஆதாரம் வாசுதேவ பெருமாள் விமானத்தில் உள்ளதால் ஆகும். இதன் பரப்பளவு **_156 ஏக்கர் 22_**

***கோபுரங்களை*** கொண்ட கோயில். இத்திருவரங்கத்தில் எம்பெருமானாருக்கு (ராமானுஜருக்கு) தனி சன்னதி உள்ளது. இங்கு ஒரு விசேஷம் என்னவென்றால் ராமானுஜருடைய சன்னதியில் காயத்ரீ மண்டபம் உள்ளது. இதன் வெளிப்புற வாசலில் நின்று இசைத்தால் உடையவர் காதில் இசைவிழும்படி அமைப்பு உள்ளது. இங்கு காயத்ரீ மண்டபத்தில் உள்ள தூண்கள் இசை தூண்களாக காணப்படுகிறது. இது ஒரு தனிச்சிறப்பு திருவரங்கத்தை பற்றி என்னால் திட்டவட்டமாக கூற முடிந்ததன் காரணம் என் தாய் கூறிய வரலாற்றுச் சிறப்பேயாகும். ஏனெனில் அவரது பாட்டனார் (தந்தை வழி) விஜயநகர நரபதிகுரு நல்லாஞ்சக்ரவர்த்தி என்ற பெயரை விஜயநகர அரசால் கொடுத்து கௌரவிக்கப்பட்டவர்கள். அவர்கள் திருவரங்கம் பற்றிய பூரா விவரமும் நன்கு அறிந்தவர்கள், இப்படிப்பட்ட திருவரங்கம் பெரிய கோவிலை பற்றிய திட்டவட்டமான குறிப்புகளை ஆதாரத்துடன் கூறுகிறேன். அங்கு உள்ள காயத்ரீ மண்டபத்தில் உள்ள 24 தூண்களும் இசை தூண்கள். திருவெண் ஆழியில் 12 தூண்கள் ஆக 36 தூண்களே இசைக்கு ஆதாரம். 36 சுத்தபிரதிமத்யம ஸ்வரத்தால் 72 மேளங்கள் உற்பத்தியாகின்றன. இங்கு ஒரு ராகம் பாடினால் அதன் ஸ்வரஸ்தானங்கள் துல்யமாகக் கேட்கும். அதன் உண்மைஸ்வரூபம் ஒலிப்பதை கேட்கலாம். ஊசி விழுந்தால் சப்தம் கேட்கும் என்று என் தாயார் எனக்கு கூறியுள்ளார். இங்கு ஒலி அதிர்வு (வைப்ரேஷன்) இருப்பதை அறியலாம். ஆகவேதான் இந்த க்ஷேத்ரத்தில் இசை மகத்துவத்தால் (சுக்ர தோக்ஷம் நீங்கியும் ராகு, கேது, தோஷம் நீங்கவும்) தீராத பல நோய்கள் தீர்ந்துவிடும் என்பதும் வாழ்க்கையிலே நடக்க முடியாததை செயல்பட முடியாததை முடித்தும் வைக்கப்படுகிறது என்ற ரசகசியாத்தத்தை பலரும் அறிவர். இதேபோல் இந்த திருவரங்க கோயிலைப்பற்றி எனக்கு அளித்த விவரப்படி த்ரேதாயுகம், த்வாபரயுகத்தின் சந்தயாம்ஸத்தில் ராமர் பிறந்தார். இந்த ராமருடைய வம்சம் இக்ஷ்வாகுவம்ஸம். இந்த இஷ்வாகுகுலதனமான அரங்கன் கோயில் இந்த விவரப்படி <u>5000</u> ஆண்டுகளாக உள்ளது என்று தெரிகிறது. இங்கு பல செப்பேடுகள் உள்ளன. இவைகளில் பெரும்பாலானவை விஜயநகர மன்னர்கள் காலத்தவை. ராமர் லக்ஷ்மணன், பரத, சத்ருக்னர் அரங்கனை தோளில் வைத்து நடைபோடுவர் என்ற குறிப்பும் தரப்பட்டது அது போல் இன்றும்,

<u>சிம்மகதி, ரிஷபகதி, கஜகதி, அஸ்வகதி ஸர்பகதி</u>

<u>சிங்கம், காளை, யானை, குதிரை, பாம்பு</u> என ஐந்து வகை கதி. இதேபோல இசை ஐந்து வகை கதி திஸ்ரகதி, சதுஸ்ரகதி, கண்டகதி, மிஸ்ரகதி, சங்கீர்ணகதி என்றும் தாள வகையில் பாடப்படுகிறது. இசைத்தத்துவம் கொண்ட கோயில் என்று இதனின்று அறியலாம் சிம்மகதி காலையிலும், ஸர்பகதி மாலையிலும் நடத்தப்படுகிறது. வைகுண்டக் கதவு அதிகாலையில் திறக்கும்பொழுது புறப்பாடு சிம்மகதியாக இருக்கும். குகைக்குள் இருந்து சிங்கம் வெளிவருவதுபோல அரங்கன் வெளிவருவான். 'மாரிமலைமுழஞ்சில் என்ற அதிகாலை பாசுரத்துக்கு உகப்ப பாய்ந்து வெளிவந்து திரும்பி ஓர் நடைபோட்டு நிறுத்துவார்கள் ரிஷபகதியாக, மீண்டும் சாயங்காலம் புறப்பாடு செய்து உள்ளே செல்லும்போது சர்ப்பம் எப்பொழுது உடனே உள்ளே சென்று விடாது. புற்றில் தன் தலையை (சற்று பெரிதாக இருப்பதால்) சாவதானமாக நிதானித்து உள்ளே நுழைத்த அடுத்த வினாடியே பூரா உடம்பையும் புற்றின் உள்ளே நுழைத்துக்கொள்ளும் (நிதானித்து என்பது தலையை சுருக்கிக்கொள்ளும்) இதே போல அரங்கனை அணைத்துச் செல்லும் (ஸ்ரீமான் தாங்குபவர்கள்) வாயிற்படியில் சற்று நிதானித்து முதலில் உள்ளவர்கள் உள்ளே நுழைய பின்னே இருப்பவர்கள் <u>சரக்</u> என்று உள்ளே நுழைவார்கள். இதே போன்று திருவிழா காலத்தில் கோபுர வாசலிலிருந்து மண்டபம் வரை யானை ஓடிவருவதுபோல் நடந்து ஓடி வருவார்கள். இதே போன்று ***அஸ்வகதியை*** வையாளி என்று சொல்லி தேரடியில் குதிரை வாகனத்தில் ஆரோஹனித்து வரும் அரங்கனை நடைபோட்டு கோணவையாளி முடித்து உள்ளே எழுந்தருள பண்ணுவார்கள். இயலாக பேசி இசைபாடி நாடகமாக பாசுரங்களுக்கு அரையர் அபிநயித்துக் காட்டுவார்கள். திரளான மக்கள் கூடி ரசிப்பர். இது தனுர் மாஸம் எனப்படும் மார்கழி மாதம் நடைபெறும். இந்த (அபிநயம் நடனபாணி) ஸ்ரீரங்கத்தில் வசித்து வந்த திருமங்கையாழ்வார் கார்த்திகையில் அரங்கன் திருமுன்பு தாம் இயற்றிய திரு நெடுந்தாண்டகத்திக்கு (பாசுரத்திற்கு) அபிநயித்ததாக சொல்லப்படுகிறது. இதேபோல் அவர் விருப்பப்படி நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கு வேதத்திற்கு சமமான மதிப்பை தந்து மார்கழி சுக்ல ஏகாதசி அன்று வேதங்களோடு, திருவாய்மொழியையும் கேட்க விரும்பியபடி அரங்கன், நம்மாழ்வார் விக்ரகத்தை எழுந்தருளச் செய்து 'மதுரகவி வம்ஸத்ததாரால் திருவாய்மொழி இசைக்க' **'பைந்தமிழ் பின் சென்ற பசுங்கொண்டல்'** ஆன நம்பெருமான் கேட்டு ரசித்தான் என்பது ஸ்தலப்புராணம் இங்கு ஓர் விளக்கம். தமிழிசையே தரணி போற்றும் இசை என்ற என் தலைப்புக்கு நான் எடுத்துக்கொண்டதற்கு என் தாயின் அறிவுரையே முக்யமானது. அவர் எங்கெங்கோ இசை பற்றி உள்ளது என்றாலும் திருவரங்கத்தில் உன் தலைப்பையே பூர்த்தி செய்ய உள்ளது என்றார். எனக்கு இதனை ஆய்வுக்கு தேர்ந்தெடுத்த பின் ஆதாரங்களை திரட்டி நிரூபிக்க வேண்டும் என்னும் போது மிகுந்த சிரமம் ஏற்பட்டாலும் ஐந்து ஆண்டுகள் விவரம்

சேகரித்து பின் முடிக்கும் நிலைக்கு வர முடிந்தது. அத்தனை ஆதாரங்கள் இசை பற்றி எனக்கு என் தாயார் குறிப்பை சரி செய்து பார்க்க நானே தீவிர முயற்சியை எடுத்துக்கொண்டேன். அரங்கனும் ஸ்ரீரங்கநாச்சியாரும் எனது ஆசாரியன் ராமானுஜரும், தேசிகன், ஆழ்வாராதிகள், கோதைநாச்சியார் அனைவரும் உதவினார்கள் என்று பெருமகிழ்ச்சியடைகிறேன். நான் எனது குரு ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு நன்றி கூறுகிறேன். இந்த ஆய்வினால்தான் எனக்கு இத்துணை பாக்யம் கிடைத்தது. திருவரங்கம் இசைக்கு ஆதாரமான கோயில் என்று எழுத என் தாயாருக்கு என் மனப்பூர்வமான நன்றியறிதலை கூறுகிறேன். இன்னும் பல ஆதாரங்கள் திருவரங்கத்தை பற்றி கூறவேண்டும் என்றாலும் சுருக்கி இசைப்பற்றிய குறிப்பை மட்டும் நான் பிரித்து எடுத்துக் கொண்டுள்ளேன். இத்தகை ஸ்ரீரங்கம் பூலோக வைகுண்டமாக, வைணவக்குரவர்களான ஆழ்வார் ஆச்சாரியர்கள் இந்த ஸ்ரீரங்கத்தை தலைநகராகக் கொண்டு வைணவ சமயத்தை இயல், இசை நாடகத்தால், பரப்பி வந்தார்கள் என்றால் மிகையாகாது, சைவ சமயத்தை (தேவாரம், திருவாசகம்) போன்ற எல்லாவற்றையும் தமிழ் நாட்டை ஆண்ட மன்னர்கள் ஆதரித்து உலகபுகழ் ஆக ஓங்கி நிற்கச் செய்தார்கள். சைவம் தழைத்தது. வைணவம் தழைக்கவில்லை என்ற கூற்றை நான் ஏற்கவில்லை. (தமிழிசையாகிய தமிழ் பாசுரமாகிய நாலாயிரத்திவ்யப் பிரபந்தத்தை) தமிழிசையாக அரங்கன் கேட்டு மகிழ்ந்தான். அரங்கனே அரசன் என்று ஸ்தலப்புராணம் கூறுகிறது. ரங்கராஜா என்று. இந்த திருவரங்கக் கோயிலே தமிழ் சபை. இந்த தமிழ் சபையே கோயில் கிளிமண்டபம். ஆயிரங்கால் மண்டபம். இங்கு அழகாக ஆழ்வார்கள் புடைசூழ இன்றும் அரங்கனின் தமிழ்சபை நடைபெறுகிறது. சம்ப்ரதாயங்கள் படி தமிழ்பாடும் ஆழ்வார்களுக்கு அரங்கனால் மாலை மரியாதை, பெருமாள் சந்தனம், தாம்பூலம் ப்ரஸாதம் தரப்படுகிறது. இந்த தமிழ்சபையில் இயல், இசை, நாடகத்தை பாமரரும் ரசிக்கின்றனர். அரசபையில் உட்கார அனுமதி கிடைக்காத மக்கள் அரங்கனின் சபையில் சாதி, மதபேதமில்லாமல் உட்கார்ந்து தமிழ் சபை நடத்தும் அரங்கனையும் தமிழ்பாடல்களையும் (பாசுரங்களை) கேட்டு, இயல்பேசி, நாட்டிய நாடகமாடும் காட்சி கண்டு நெஞ்சுருக மகிழ்கிறார்கள். அரங்கனும் சாதி மதபேதமில்லாமல் அனைவரையும் ஆதரித்து அனைத்து அன்புடன் ஏற்றுகொள்கிறான்.

கோதை, பீபிநாச்சியார் மற்றும் மக்கள் எல்லோரையும் பக்தியின் காரணமாக இன, மத, மொழி (சாதி) பேதமில்லாமல் அனைவரையும் ராஜா என்பதனால் சமநோக்கோடு அன்புடன் நடத்திவருகிறான். இப்படிப்பட்ட திருவரங்கராஜா. அரங்கனின் அரங்கம் முன் மற்றைய அரங்கம் அரச சபைகள் அடுத்தபடிதான். இந்த திருவரங்கம் <u>5000</u> ஆண்டுகளாக இன்றும் இயல், இசை, நாடகத்தை நடத்தி வரும் தமிழ் பேரவையாகும் என்பதில் ஐயமில்லை. அரங்கனே அரசன் என்று போற்றப்பட்டவர். ரங்கராஜா என்ற புகழ்நாமத்தால் அரசர் என்பதனால் காடாறுமாதம் நாடாறுமாதம் ஆள்கின்றார் என்று ஸ்ரீரங்கபுராணம் கூறுகிறது. ஓர் அரசனான அரங்கனுக்கு **<u>விஜயநகரத்தார்</u>** ஆட்சியில் கோயிலுக்கு சொத்துகள் வந்தன, **<u>விஜய நகரமன்னர்கள் ஹரிஹர</u>** புக்கர்களிடமிருந்து **<u>17,000</u>** பொன்தானம் பெற்று கோயிலுக்கு வாங்கிய கிராமங்கள் **<u>106</u>** இதுபோன்று மற்ற எல்லாரிடமும் பொன் சேர்த்து வாங்கிய கிராமங்கள் **<u>232</u>** இப்பொழுது ஓர் விளக்கம் என் தாயின் தந்தை வழிபாட்டனார் விஜயநகர மன்னர் சபையில் ராஜகுருவாக அங்கம் வகித்து கௌரவிக்கப்பட்டவர்கள். அவர்களை திருவரங்க பொறுப்புகளை கவனிக்க நியமித்திருந்தார் என்றும், அதற்காக அவர்கள் திருவரங்கத்தில் சித்திரை தேரடியில் வாழ்ந்தார்கள் என்றும், எனது தாயார் குறிப்பு கூறுகிறது. அந்த திருவிழாவும் விருப்பண்ணன் திருவிழா ஆகும். விஜயநகர அரசால் அவர்கள் விஜயநகரநரபதி குருநல்லான் சக்கரவர்த்தி என்று கௌரவிக்கப்பட்டு 5 கிராமங்கள் அரசனால் அளிக்கப்பட்டது. அவர்கள் வீட்டு திருமணம் போன்ற நாட்களில் தவள சங்கம் ஊதப்படும் அரசனால் அளிக்கப்பட்ட கௌரவமான சீர்வரிசைகள் வரும். தற்பொழுது இந்த தவள சங்கம் கும்பகோணம் கோவிலில் உள்ளது. விஜயநகரம் அழிந்ததால் அவரால் அளிக்கப்பட்ட மானியங்கள் அதன்பின் அனுப்புவதற்கு வழியில்லாமல் போய்விட்டது. ஆனால் அவர்களால் அளிக்கப்பட்ட கிராமம் இப்பொழுதும் என் தாயின் தந்தை வழி வம்சத்தாரிடம் உள்ளது. அவர்களுக்கு அளித்த கிராமத்தின் பெயர் தோட்டம். ஆகவே தான் திருவரங்கம் சம்பந்தப்பட்ட அனைத்து விஷயங்களையும் ஆதாரத்துடன் என் தாயார் எனக்கு அளித்ததை இங்கு வெளியிட்டுள்ளேன். ஆகவே அழகிய மணவாளன் அரசசபையில் அங்கம் வகித்தவர்கள். ஆழ்வாராதிகள், அரையர்கள், ஸ்தலத்தார். இவற்றில் முக்கிய அங்கம் வகித்தவர் இராமானுஜர் ஆவர். இவரை எம்பெருமான் என்றும் பெருமாளை நம்பெருமாள் என்றும் அழைக்கிறார்கள். ஆழ்வாராதிகள் ப்ரபந்தத்தை இசையாக பாடினார்கள். மனிதனை இறைவனோடு இசைவிப்பதால்தான் அதற்கு இசை என்று பெயர் என பெரிய ஆசான் பிள்ளை கூறியுள்ளார். திராவிடவேதம் என்று போற்றப்படும் நம்மாழ்வாரின் திருவாய்மொழியின் முதற்பத்து பாசுரம் உயர்வற, மயர்வற, அயர்வறு அகார, உகார, மகார உகாரம், மகார, அகாரமாக நம்மாழ்வார் பாடினார். இவருடைய திருவாயிலிருந்து பெருமாளே பாசுரங்களை (சொன்னதால்) 'திருவாயால் மலர்ந்தருளியதால்' 'திருவாய்மொழி' என்று பெயர் பெற்றது. இறைவனே

எல்லாவற்றிற்கும் ஆதியானவன் என்று பொருள்பட துவங்கி அவனே ஓம்ப்ரணவாதிபதி என்றும் உரைக்கிறார். இப்படிப்பட்ட திருவரங்கத்தை ஐந்தமிழ் காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரத்திலே இளங்கோ அடிகள் ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தையும் ஸ்ரீரங்கநாதனையும் பாராட்டி கூறி உள்ளார்.

''நீலமேகநெடும் பொற்குன்றத்துப்
பால்விரிந்த கலாது படிந்ததுபோல
ஆயிரம் விரிந்தெழுதலையுடையருந்தி
பாயற்பள்ளிப்பலர் தொழுதேத்த
விரிதிரைக்காவிரி வியன் பெருந்துருத்தி
திருவமர்மார்பன்கிடந்த வண்ணமும்
என் கண்காட்டெனறென்னுளங்கவற்ற, வந்தேன்''

இவ்வண்ணம் பாராட்டிப்பாடுகிறார், பாரதம் பாடிய பெருந்தேவனாரும் ஸ்ரீரங்கநாதனைப் பற்றி பாடியிருக்கிறார். இந்த வகையிலே ஸ்ரீரங்கநாதனை பல கீர்த்தனைகளில் பாடி உள்ளார் ஸ்ரீத்யாகப்ரும்மம், அதனை தனியே தொகுத்தளிக்கப்படுகிறது. இந்த திருவரங்கத்தைப்பற்றி ஸ்ரீரங்க மஹாத்மியம் கூறுகிறதை பார்ப்போம்.

திருக்காவேரியின் மத்தியில் உள்ளதும், இலக்குமியால் ஸேவிக்கப்பட்டதும் நன்மைக்கு ஸ்தானமாகவும், சந்திரபுஷ்கரணிக்கு கரையில் உவமையில்லாத ஸ்ரீரங்கக்ஷேத்திரம் ஆகும். ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தில் வஸிப்பவனுக்கு மோக்ஷம் தானே கிட்டும் பாக்யம் உள்ளவனாகிறான். அவனுக்கு யம பயமில்லை. தும்மல், இடறுதல் காலத்திலும் ஸ்ரீரங்கம், ஸ்ரீரங்கம் என்றே சொல்ல வேண்டும். அப்படி கூறுவதால் அவன் பாவங்கள் நசித்து பிரஹம்லோகத்தையடைகிறான். இந்த க்ஷேத்திரத்தில் சந்திர புஷ்கரணிஸ்நானமும், ஸ்ரீரங்கக்ஷேத்திரதரிசனமும், ஏகாதசி உபவாசமும், துளஸீதளமும், பகவத் கீதாபடனமும் ஒரு ஜன்மத்திற்கிடைத்திட அவன் நாராயணனாகவே எண்ணப்படுகிறான். எவர் ஒருவர் ஸ்ரீரங்கனாதனை ஸேவிப்பதற்கும், ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தை தர்சிப்பதற்கும் இச்சைப்படுகிறார்களோ, அவர்கள் யமலோகம் செல்வதில்லை என்று யமகீதை சொல்லுகிறது. அவன் மோக்ஷம் அடைகிறான். தேவர்கள் அடிக்கடி தங்கள் இருப்பிடத்திற்கு நாசமுண்டாவதால் பயந்து முக்தி க்ஷேத்திரமான ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தில் மனுஷ்ய ஜன்மத்தை விரும்புகிறார்கள். பிதிர்களின் பித்ரு கர்மத்தை புரட்டாசி, மாசி, கிருஷ்ணபக்ஷ திரயோதசி காலங்களில் ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தில் செய்வதால் உசிதமாகும் என்று புராணம் கூறுகிறது. ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் ஒரு நிமிடம் வஸிக்கும் மனுஷ்யன் லக்ஷமஹாபாதகங்களிலிருந்து விடுபடுகிறான். ஸ்ரீரங்கநாதனை ஸேவிக்க வேண்டும், த்வாதசாக்ஷரத்தை ஜபிக்க வேண்டும் என்று புராணம் கூறுகிறது. கங்கையானது நதிகளுக்கு ஸ்ரேஷ்டமானதோ, வேதங்களுக்கு ப்ரணவாக்ஷரம் எப்படியோ அப்படி க்ஷேத்திரங்களுக்கு ஸ்ரீரங்க க்ஷேத்திரமாகும். கங்கை நதி திருமாலின் திருவடியிலிருந்து தோன்றிற்று. ஸ்ரீரங்கநாதனை தரிசித்து காவேரி நதி, ஜீவநதியாக விளங்கிற்று. திருவரங்கத்தில் இருந்து கொண்டு அஷ்டாக்ஷரமந்த்ரத்தை ஓம் நமோ நாராயணாய ஜபித்தால் எல்லாக் காரியமும் ஸித்தியாகும், இந்த அஷ்டாக்ஷரமந்த்ரத்திற்கு ஸமானமான மந்த்ரம் வேறுயில்லை. இந்த மந்த்ரம் எல்லா மந்திரங்களுக்குள் ஸாரமானதாகவும் மூலமந்திரமாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் இந்த மந்திரத்தில் ஜகத்தின் காரணத்வமும் சிருஷ்டி, ஸ்திதி, நாசங்களில் ஹேது த்வமும், மோக்ஷப் பிரதத்வமும் காண்பிவிக்கப்பட்டிருக்கிறது. இந்த மந்த்ரத்தினால் ஜீவாத்மா பரமாத்மாவிடம் தன் ஆத்மாவை நிவேதனம் செய்ய ஹேதுவாகிறது. இந்த அஷ்டாக்ஷரமந்திரத்தினால் பூமியிலுள்ள மனோரதங்களையும், ஸ்வர்க்கபோகங்களையும் அதிதுர்லபமான முத்தியையும் சாதித்து கொள்ள முடியும் என்று பகவான் சர்வேஸ்வரன் பிரம்மாவுக்கு கூறுகிறார் என்று ஸ்ரீரங்கமஹாத்மியம் கூறுகிறது. பின்பு பிரம்மாவால் ஆயிரம் வருஷம் வரை தபஸ் செய்தபோது ஸ்ரீரங்கமென்னும் ப்ரணவ விமானம் திருப்பாற்கடலிலிருந்து ஆவிர்பவித்தது என்கிறது ஸ்ரீரங்கமஹாத்மியம். அந்த சமயத்தில் ஸ்ரீவைகுண்டத்தில் வசிக்கிறவர் ஸுநந்தர் முதலானவர்களும் ஸநந்தஸநகாதிகள், நாரதர், ருத்ரன், முதலானவர்கள் காணப்பட்டார்கள். மேலும் தேவர், கந்தர்வர், யக்ஷர், ரிஷிகள், ஸித்தர்கள், சாரணர்கள் எல்லோரும் காணப்பட்டார்கள். தேவ ஸ்வரூபரான கருடாழ்வார் அந்த திவ்ய விமானத்தை சிரசால் வகித்தார். அனந்தாழ்வானவர் அந்த விமானத்திற்கு முத்து குடைபிடித்தார் விஷ்வக்ஸேனர் செங்கோலை பிடித்துக்கொண்டு அந்த விமானத்திற்குப்பின் ஸேவித்துக் கொண்டிருந்தார். சந்திர சூரியர்கள் இருபக்கங்களிலும் வெண்சாமாரம் பருமாரினார்கள், நாரதர், தும்புரு, கந்தர்வர், அமரர், கின்னரர், குஹ்யகர்களும் பாடினார்கள் ஸ்தோத்திரம் செய்தார்கள். வந்தனம் செய்தார்கள் ருத்ரன் தேவேந்திரன், தேவர்கள் ஸாதயர்கள், ஸித்தர்கள், ஸாதகர்கள் ஆகாயத்தை நிறப்பினார்கள். தேவதுந்துபி வாத்யங்கள் முழங்கின அப்ஸரஸ்திரீகள் நர்த்தனமாடினார்கள், ஸ்ரீரங்க விமானம் வந்ததென்று

எக்காள முழக்கம் கேட்கப்பட்டது. பிரும்மாவானவர் மஹத்தான ஐஸ்வர்யமுள்ளதும், தேஜோமயமாயும், ஜகத்தை வியாபித்ததும், ப்ரணவஸ்ரூபமுள்ளதும் ஸ்ரீரங்கமென்னும் ஸ்வயம் வ்யக்தமுமான அந்த திவ்யவிமானத்தை பார்த்து ஸந்தோஷம் அடைந்து பூமியில் விழுந்து தண்டன் ஸமர்ப்பிவித்தார். பிரும்மாவானவர் நான்கு முகங்களால் நான்கு வேதங்களால் ஏககாலத்தில் ஸ்தோத்ரம் செய்து விமானத்தை ஸேவித்தார். பிறகு ஸுநந்தர் என்னும் ஓர் பக்தர் கையில் பிரம்பை பிடித்துக்கொண்டு அஞ்சலி பந்தஞ்செய்தவராய் பிரும்மாவிடம் ஸர்வேஸ்வரனுக்கு இருப்பிடமாயும் ஸ்ரீரங்கமென்று பிரஸித்தி பெற்றதும் மூன்று அக்ஷரமுள்ளதும் (அகாரம், உகாரம், மகாரம்) பரப்ரும்மஸ்வரூபமாயும் சப்தாத்மாவென்று வியவஸ்தை செய்யப்பட்டதும் உம்முடைய தபஸுக்கு கிடைத்த இந்த விமானத்தில் அதற்கு பிரதிபாத்யரான ஸ்ரீரங்கநாதன் கண்வளர்கிறான் என்றார். ப்ரும்மா ரங்கநாதனை (அரங்கனை) நான்குப்ரதக்ஷிணம் செய்து நான்கு திக்குகளையும் நமஸ்கரித்து உள்ளே ப்ரவேஸித்து உபாஸித்தார். அந்த விமானத்திற்குள் பிரம்மாவானவர் வணக்கத்துடன் சென்று பார்த்தபோது ஸ்ரீரங்கநாதன் எழுந்தருளியிருக்கும். அந்த விமானத்தில் தேவாஸுரார்களுடன் கூடியிருக்கிற சராசராத்மாகமான ஜகத்தை பார்த்தார். அந்த விமானத்திற்கு மேலே ஸ்வர்க்கத்தையும் - கீழே பூமியையும் - மத்தியில் அந்தரிக்ஷத்தையும், உள்ளே ஆதிசேஷனையும் - வாசற்பக்கத்தில் ஜயவிஜயனையும் இரண்டு பக்கங்களிலும் விக்னபதியையும் - துர்க்கையையும் சிகரத்தில் ஸர்வஜகத்காரணமாயும் ஓம்காரரூபமுள்ள ஸரஸ்வதியையும் பார்த்தார். அந்த விமானத்தின் மகுடங்களில் மூன்று வேதங்களையும் நாஸாமுகத்தில் <u>ஸர்வரஹஸ்ய ஸமூகத்தையும்</u> பாதங்களில் யக்ஞங்களையும் பலகங்களில் இஷ்டிகளையும் ஹ்ருதயஸ்தானங்களில் வயுனத்தையும், குஷியில் விரவிஸ்களையும் அந்த விமானத்தின் அந்தரபாகத்தில் தேவர்களையும் அஷ்டவசுக்களையும் ருத்திரன், மற்ற தசருத்திரர்களையும் த்வாதசாதித்யர், நவக்ரஹங்கள், அச்வினீ முதலிய நக்ஷத்திரங்கள், புண்ணியகிருத்களான நக்ஷத்திரங்கள் மரீசி முதலான ஸப்தரிஷிகளையும் இந்திரன், எமன், வருணன், யக்ஷராஜன், அக்னி, நிருதி, வாயு, ஈசானன், ஸோமன், பர்ஜன்யன் எல்லோரையும் அவ்விடத்திலேயே பார்த்தார்.

பிரும்மா அந்த விமானத்தின் நான்கு திக்கையும் நமஸ்கரித்து விமானத்தின் உள்ளே ஸ்ரீரங்கநாதனை பார்த்தார். சானை பிடிக்கப்பட்ட நீலரத்னமலைக்கு ஸமானமுள்ளவரும், பிரகாசமான திருமுக மண்டலத்தையுடையவரும், தாமரை புஷ்பம் போல் நீண்டதான திருக்கண்கள் உடையவரும், கிருபாமயமாயும், தேஜஸுக்கெல்லாம் இருப்பிடமாயும், கிரீடகேயூரமகரகுண்டலராயும், தொங்கு கிரமுத்தாஹாரத்தால் அலங்கரிக்கப்பட்டவரும், விசாலமான வக்ஷஸ்தலத்தில் விளங்குகிற கௌஸ்துபமணியை உடையவரும், ஸ்ரீதேவியால் வஸிக்கப்பட்ட விசாலமுள்ள திருமார்பை உடையவரும், உருக்கிய ஸ்வர்ணம்போல் அழகான வஸ்தரத்தை தரித்தவரும், மேகலைஉடையவரும், திருச்சிலம்புகளோடு கூடிய திருவடிகளை உடையவரும், ஆகாசகங்கையிலிருந்து உண்டான தாமரை நூல்போல் வெளுப்பாயும் நல்ல காந்தியுள்ளதுமான யஞ்யோபவீதத்தை தரித்தவரும், ஒரு புஜத்தை தலையணையாக உடையவரும், மற்றொரு திருக்கையை நீட்டிக் கொண்டிருக்கிறவரும், சதுர்புஜமானவரும், ஒரு திருவடியை முடங்கிக் கொண்டும், மற்றொரு திருவடியை நீட்டிக்கொண்டும், மிகுந்த உயரமுள்ளவரும் பெருத்த நாஸிகையை உடையவரும், ஆதிசேஷன் மேல் கண்வளர்ந்து கொண்டிருக்கிறவரும், தன் திருமேனியின்ன காந்தியால் ஜகத்தை ரக்ஷிப்பவரும், மூன்று வேதங்களுக்கு ஈஸ்வரனாயும், புராண புருஷனுமாயுள்ள ஸர்வேஸ்வரனை வேதார்த்தங்களடங்கிய வசனங்களால் ஸ்தோத்ரம் செய்தார். அனேக கோடியுகங்களில் வஸிக்கிறவருமான தேவரீருக்கு நமஸ்காரம் என்று வணங்கினார். அந்த விமானத்தில் ரங்கனாதனே வாஸுதேவன் அவதாரம், ஸங்கர்ஷனன், பிரத்யுமனன், அனிருத்ரன் ஸ்வரூபரானவர் என்று கூறி நமஸ்கரிக்கிறார் பிரும்மா என்று, ஸ்ரீரங்கமஹாத்மிய புராணம் கூறுகிறது. பிரும்மாவின் தபஸுக்காக என்னுடைய பரமரூபத்தை காண்பித்ததாக ஸர்வேஸ்வரன் கூறினார். பிரும்மா அரங்கனை அர்ச்சித்தார். அவர் அர்ச்சாவதாரமூர்த்தி என்பதால் ஸர்வஸ்வரன் சொன்னபடி அர்ச்சாவதாரத்தை மோக்ஷார்த்தமாய் தினந்தோறும் அர்ச்சித்தார். மேலும் ஸர்வேஸ்வரன் தன்னை அர்ச்சிக்கிறவர்களுக்கும், ஸ்தோத்ரம் செய்கிறவர்களுக்கும், அடிக்கடி கீர்த்தனம் செய்கிறவர்களுக்கும் பக்தியால் ஸேவிப்பவர்களுக்கும் பரமமான பரமபதத்தையடையச் செய்வேன் என்கிறார். மேலும் எனது பிம்பம் மேற்பார்வையுள்ளதும், கீழ்பார்வையுள்ளதும், குற்றமற்றதுமான பிம்பத்தை செய்ய வேண்டும். மேலும் எனது சிலை அக்ருத்திரிமம் ஒருவராலும் செய்யப்படாததாக இருக்க வேண்டும் என்று (பாஞ்சராத்ர ஆகமத்தில் சொல்லப்படுகிறது) ஸர்வேஸ்வரன் பிரம்மாவுக்கு கூறினார் என்று ஸ்ரீரங்கமஹாத்மியம் உரைக்கிறது. இந்த ஸ்ரீரங்கவிமானமானது ஆதியில் உண்டான ஸ்வயம் வியக்தம், ஸ்ரீமுஷ்ணம் வேங்கடாத்திரி, ஸாளக்ராமம் நைமிசாரண்யம், தோதாத்திரி, புஷ்கரம் நரநாராயணாஸ்ரமம் என்று பூமியில் ஸ்வயம்வியக்தங்களான அஷ்டமூர்த்திஸ்தலங்கள் இருக்கின்றன என்று மஹாத்மியம் கூறுகிறது.

ஸர்வேஸ்வரன் பிரும்மாவுக்கு கூறும் வண்ணம் ஸ்ரீரங்கமஹாத்மியம் உள்ளதால் திருவரங்கம் பற்றிய குறிப்பு கூற முடிந்தது. இந்த அஷ்டகம்தான் எனது இசைக்கான வித்து 8, 12, 24, (48, 96) நுட்பஸ்ருதி, ஸப்தஸ்தானம் 7 இருந்தாலும் அஷ்டகம் என்ற 8 என்றது இசைக்கு ஆதாரம். இந்த எட்டின் முக்கிய குறிப்பின் மேளம் 8 சம்பூர்ணம் என்பது இந்த எட்டுதான் இசைக்கு ஆதாரம் என்பதால் 8 ஸ்வயம் வ்யக்தக் கோயிலில் திருவரங்கம் இசைக்கு ஆதாரம் என்று எடுக்கப்பட்டது. இந்த 8ன் வர்க்கம் 24 தான். விமானவடிவம் 32 தான், அச்சுத, அனந்த, கோவிந்தா, வாசுதேவன் 32 அக்ஷரமே ஆதிதாளம் ஆகும். இந்த ஆதிதாளம் அஷ்டாக்ஷரனுக்காக.

இந்த எட்டின் (8) தொடர்ச்சி 24 ஸ்தானங்கள் அது ஸ்ரீரங்ககோயிலில் உள்ளள காயத்ரீ மண்டபத்தின் 24 தூண்கள் 24 அக்ஷரம் 24 அக்ஷரகாயத்ரீஸ்லோகம் 7 கோடிமஹா மந்திரங்களில் மிகச் சிறியது. இசையின் நுட்பஸ்ருதி அலைகளை இந்த மண்டபத்தில் எழுவதை காணலாம். ஸ்ருதி அலைகளால் ராகத்தின் தீர்க்க ஓசை சுத்த ஓசை ஒலிப்பதை கவனிக்கலாம். பிழையாக பாடினால் நன்றாக காட்டப்படும் (எதிரொலியால்) மேலும் வீணையின் நாதம் இங்கு ஏற்புடையதாக உள்ளதின் சூட்சமம் இங்கு ஸரஸ்வதி சிகரத்தில் ஸர்வஜகத் காரணமாயும் ஓம்காரரூபமுள்ள சரஸ்வதி உள்ளதால் இந்த விமானத்திற்குள் காயத்ரீயின் 24 அக்ஷரங்கள் கொண்ட தூண்கள் இசைத்தூண்களாகவும் காயத்ரீமண்டப 24 தூண்களே என்று என் ஆய்வில் தெளிவாக்கி உள்ளேன். இது எனது தாயாரின் குறிப்பாகும். மேலும் ஸ்வயம்வக்தக்ஷேத்திரமான இந்த ஸ்ரீரங்கக்ஷேத்திரம் ப்ரும்மாவுக்கு முக்யத்வம் அளிக்கப்பட்ட க்ஷேத்திரமாகும். மேலும் ப்ரம்மா ஸர்வேஸ்வரனின் நாபியில் உள்ளார் வலமார்பில் லஷ்மி இருக்கிறார். (சிகரத்தில் ஸரஸ்வதி இருக்கிறார்) ப்ரும்மாவின் நாவில் ஸரஸ்வதி இருக்கிறார். காயத்ரீ ஸர்வேஸ்வரனின் விமானத்தின் உள்ளேயே இருக்கிறார். (லக்ஷ்மி, சாவித்ரீ, சரஸ்வதியாக ஸ்தோத்தரிக்கப்படுபவர் காயத்ரீ ஆகும்) இம்மூவரும் வீணையை கொண்டுள்ளவர்கள். இதனை பற்றி பின்பு விளக்கப்படும். ஆகவே இங்கு இசை ஒலிதான் (ஓம்காரத்திலிருந்து புறப்பட்டு) ஓங்கி நிற்கிறது. நாதத்தின் சப்தத்தை நன்றாக கேட்கலாம். அங்கு சென்று வெளியே வரும்போது நம்மிடையே புத்துணர்ச்சியை உணரலாம். ஆகவேதான் இங்கு வீணை இசைக்கு முக்யத்வம் அளிக்கப்படுகிறது. இங்கு ப்ரும்மா, விஷ்ணு, சிவன், ஸரஸ்வதி, லக்ஷ்மி, காயத்ரீ வாசம் செய்கிறார்கள். இந்த பெண் தெய்வங்கள் மூவரும் யாழை வாசிக்கிறார்கள். ஸரஸ்வதிக்கு கச்சபி வீணையும், லக்ஷ்மி ஸாரங்கி வீணையும், காயத்ரீ ருத்ரிகை வீணையும் வாசிக்கிறார்கள். ஆகவே அந்த காயத்ரீ மண்டபத்தில் துல்லியமான வெகுமெல்லிய வீணை இசையின் நாதத்தின் ஒலியையும் வீணையிலுள்ள 24 ஸ்ருதிகளின் ஸ்வரஒலியையும் மிக துல்லியமாக கேட்கிறது என்பது எனது ஆய்வின் கருத்து. ஆழ்ந்த கருத்தும்கூட. இந்த 24 அஷரமே காயத்ரீயின் 24 என்பதனால் இந்த காயத்ரீ மண்டபத்திலேயே இசையின் முழு ஆதாரமும் பிரதிபலிக்கும் வண்ணம் அளிக்கப்பட்டுள்ளது. இந்த அமைப்பை காண முடியாது. ஏனெனில் ஸ்வயம்வக்த விமானமான இந்த ஓம்கார விமானம் 108 விமானங்களில் முதலும் முடிவு ஆனதும் ஆகும். ஆகவே இங்கு ஓம் காரத்தின் ஓம் ப்ரணவத்தின் ஓசை மிக திட்டவட்டமாக ஒலிப்பதை தன் ஞானமார்க்கத்தால் உணர்ந்தவர் ஸ்ரீத்யாகப்ரும்மம் என்பதே எனது ஆய்வின் மிகத் தெளிவான கருத்து. இசையை நான் அந்த இடத்திலேயே எனது அனுபவத்தால் உணர்ந்து அனுமானித்தள்ளேன். இந்த காயத்ரீமண்டபம் மட்டுமே இசைக்கு ஆதாரம் ஆனது என்ற என் நிருபணத்தோடு ஸ்ரீத்யாகப்ரும்மம் ஸோபில்லு சப்தஸ்வர கீர்த்தனையில் காயத்ரீயைபற்றி கூறுகிறார் என்பது எனது முடிவாகிறது. இந்த அஷ்டகம்தான், அஷ்டாக்ஷரம்தான் இசைக்கு ஆதாரமானது என்பது என் ஆய்வின் கருத்து, ஆகவே அஷ்டகத்தின் ஆதாரத்தைக் கொண்டு எனது தாயார் நாலாயிரத் திவ்யப் பிரபந்த பாசுரங்களை ஆதிதாளத்திலேயே அமைத்துள்ளார். ஆகவேதான் பாசுரங்களின் ராக அமைப்பு தாளவடிவம் மிக ரம்யமான முறையில் அமைந்தது எனலாம். இந்த கோயில் இசைக்கு ஆதாரமான கோயில் என்பதனை அறிந்தே ஸ்ரீத்யாகப்ரும்மம் ஸ்ரீரங்கத்தைப்பற்றி பல கீர்த்தனைகளை பாடியுள்ளார். முக்கியமான ஸ்ரீரங்க பஞ்சரத்ன கீர்த்தனைகள் ஆகும்.

ஸ்ரீரங்கம் ஸ்வயம்வியக்தம் எனப்படுகிறது. இந்த ஸ்ரீரங்கக்ஷேத்திரத்தை சுற்றி இரண்டு யோஜனைதூரம் வரையில் மோக்ஷம் சித்தமாயிருக்கிறது. பிரம்மாவை அச்சுதன் (ஸாத்வதம் பௌஷ்கரம் என்று பாஞ்சராத்திரத்தில் சொல்லிய இரண்டு மந்திரங்களில் கூறியபடி, ஸாத்வதர்களான ஐந்து பேர்களுடன் த்வாசாக்ஷரவித்தையால் அஷ்டாங்கவிமானமாகத் தினந்தோறும் என்னை அர்ச்சியும் என்றார். த்வாதசாக்ஷரத்தை சொல்லுபவர்களுக்கு மோக்ஷம் சித்திக்கிறது என்று அச்சுதன் சொல்லுகிறார். வாஸுதேவனை அர்ச்சயிக்கிரவனும் வாஸுதேவ பாராயணம் உள்ளவனும் ஸர்வபாவங்களில் [illegible] விடுபடுகிறான் எல்லாம் வாஸுதேவன்தான் என்று கூறவேண்டும், ஸ்ரீத்யாகப்ரு[illegible] வாஸுதேவஸர்வம் என்கிறார். ஸ்ரீரங்க விமானத்தை (லக்ஷணத்தை) அறிந்து அதனை, ஸேவித்தா[illegible]

பரமபதம் எளிதில் கிட்டும். இந்த ஸ்ரீரங்க விமானம் பங்குனி மாதம் சுக்லபக்ஷத்தின் ஸப்தமியில், சனிக்கிழமையில் ரோஹிணி நக்ஷத்திரத்தையும் ரேவதியையும் சந்திரனும் குருவும் அடைந்திருக்கும்போது ஸ்தரீபுமான்களின் உபயாத்மகமாயுமுள்ள மாத்யான்ஹித அபிஜித் காலத்தில் விபீஷணரால் திருக்காவேரி தீரத்தில் ஸ்ரீரங்க விமானம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அது முதல் திருக்காவேரி தீரத்தில் ஸ்ரீரங்க விமானம் கல்பாந்தஸ் தாயியாய் இப்பொழுது மனுஷ்யர்களால் பார்க்கப்பட்டு ஸேவிக்கப்பட்டு வருகிறது. இவ்விதம் நாரதருக்கும் கூறப்பட்டது என்று ஸ்ரீரங்கமஹாத்மியம் கூறுகிறது, முக்கியமான இந்த விமானத்தில் உள்ள வாஸுதேவனை காட்டிலும் வேறுமங்களம் இல்லை, 'வாஸுதேவனை காட்டிலும் வேறு பாவனமானவஸ்துயில்லை. 'வாஸுதேவனை காட்டிலும் வேறுதெய்வமில்லை. ராமரிடம் இருந்து பெற்ற விமானத்தை விபீஷணர் மாத்தியான்ஹிக காலத்தில் சந்திரபுஷ்கரணிகரையில் ஆதி சேஷகல்பத்தில் ஸ்ரீரங்க விமானத்தை ஸ்தாபனம் செய்தார். வீபீஷணரானவர் அஷ்டாங்க விதியினால் ஸ்ரீரங்நாதனை வேதசாஸ்த்திரபுராணத்தில் சொல்லிய ஸ்தோத்திரங்களால் ஸர்வேஸ்வரனை ஸ்தோத்திரம் செய்தார். விபீஷணாழ்வார் முறைதெரிந்த பிராம்மணர்களால் தர்மவர்மா ஸம்பத்தினால் விதிப்படி உத்ஸவத்தை செய்தார். பின் விமானத்தை எடுத்துச் செல்ல பிரயத்தினித்தபோது பகவான் இரண்டு பக்கத்திலும் காவேரியால் மனோஹரமான உள்ள இந்த இடத்திலேயே வஸிப்பதற்கு இச்சைப்படுகிறேன். ஆகவே நீர் இலங்கை செல்லும் என்று கூறிவிட்டார். ஓர் சமயம் ஸர்வேஸ்வரன் காவேரிக்கு மேன்மை அளிப்பதாகவாக்கு கொடுத்ததன் பேரில் காவேரியில் மத்தியில் தான் கண்வளரப்போவதாகவும் காவேரி ஸர்வேஸ்வரனுடன் நித்யஸம்பந்தத்தால் கங்கையிலும் மேலானவள் ஆவதற்கு அனுக்ரஹித்ததாலும்தான் காவேரி கொள்ளிடம் மத்தியில் கண்வளரப்போவதாகவும் இலங்கையை நோக்கித்தான் சயனமாகியிருப்பேன் என்று விவீஷணனுக்கு ஆறுதல் கூறினதாக ஸ்ரீரங்கமஹாத்மியம் கூறுகிறது. அஷ்டதீர்த்தங்களுடன் கூடினதும் அஷ்டவிருக்ஷங்களுடன் கூடினதும் ஸ்ரீரங்கனாதனுடன் கூடினதும் புண்ணியமாயும் சுபமாயுமுள்ள சந்திரபுஷ் கரணியில் நீராடி அஷ்டாக்ஷரனை பணிந்ததால் மோக்ஷத்திற்கு வேறு உபாயம் வேண்டாம் என்கிறது ஸ்ரீரங்கபுராணம். இந்த புஷ்கரணியில் உள்ள நவதீர்த்தங்களில் ஸ்நானம் செய்து ஒரே நாளில் பிரதக்ஷணம் செய்தும் அரங்கனை ஸேவித்தவன் பத்துத் தலைமுறையைப் பரிசுத்தஞ்செய்கிறான் என்கிறது - ஸ்ரீரங்கமஹாத்மியம். எவன் ஏகாதசியில் உபவாஸமிருந்து த்வாதசியில் ஒன்பது தீர்த்தத்திலும் சந்த்ர (புஷ்கரணியில்) ஸ்நானம் செய்வானோ அவன் 21 தலை முறையை கரைதேத்துவான். இந்த ஒன்பது தீர்த்தங்களிலும் பிண்டதானஞ்செய்தல் கயாசிரார்த்தத்திற்கு ஸமமானதாகும். இந்த ஸ்ரீரங்கத்தை எவன் ஒருவன் விமானப்ரதட்க்ஷணம் செய்வானோ அவன் கஷ்டப்படாத பரமபதம் அடைவான் என்பது நிச்சயம். இந்த விமானப்ரதட்க்ஷணம் தீர்காயுள், ராஜ்ய சம்பத்து, தேகாரோக்யம், ஸந்தாளலாபம் இவையெல்லாம் அடைவார்கள். ஸ்ரீரங்கநாச்சியாரிடம் நாராயணன் யார் 12 தடவை ஸ்ரீரங்க விமானத்தை ப்ரதட்க்ஷணம் செய்வார்களோ அவர்கள் த்வாதசாக்ஷரத்தை லட்க்ஷம் தடவை பாராயணம் செய்த பலனை அடைவார்கள். 24 தடவை ப்ரதட்க்ஷணம் செய்பவர் கோடி காயத்ரீ ஜபம் செய்த பலனை அடைவார்கள். எவன் 108 தடவை விமானம் ப்ரதட்க்ஷணம் செய்வானோ அவனுக்கு உபய விபூதிகளை கொடுத்தாலும் எனக்கு திருப்தியாகாது என்று நாராயணன் கூறுகிறார். ஆகவே ஸ்ரீரங்கம்தான் இசைக்கு ஆதாரமான கோயில், காயத்ரீயின் 24 அக்ஷரம்தான் 24 ஸ்ருதி, திருவரங்ககோயிலில் உள்ளஅனைத்து கோபுரம் தூண்கள் ஆழ்வாராதிகள் ஸ்தலப்புராணமே இசைக்கு ஆதாரம் என்பதனை கூறி இந்த ஆய்வை முடிக்கின்றேன். எனக்கு இவ்விதம் எழுத ஞானம் அளித்த அரங்கனை பணிகின்றேன். எனது குருபரம்பரையை நமஸ்கரிக்கின்றேன். எனக்கு ஆதாரமான நான் கேட்ட பல விஷயத்திற்கு ஆதாரமாக புத்தகங்களை பார்வைக்கு பெற்றுத்தந்த எனது குடும்பத்தாருக்கு நன்றியறிதலை தெரிவிக்கின்றேன். வாழ்க தமிழ் வளர்க இசை.

<u>வரலாற்று சிறப்புமிக்க திருவரங்கம் கோயில் தமிழிசையை அரங்கன் போற்றினான்: ஸ்ரீரங்கபுராணம்</u>

திருவரங்கம் கோயில் 108 வைணவத்தலங்களில் தொன்மையான திருக்கோயில் ஆகும். 12 ஆழ்வார்களில் 11 ஆழ்வார்கள் இதன் புகழை கீர்த்தியை பாடியுள்ளார்கள். இத்தலத்தில் தமிழ் பாசுரமான திருப்பாவை 30 ஐயும் பாடிய ஆண்டாள் அரங்கனை அடைந்தாள். அகார, உகார, மகார, பாதாதிகேச வர்ணனை செய்த திருப்பாணழ்வார் தமிழ்பாசுரம் 10ம் பாடி ஓம்ப்ரணவத்தின் ஸ்வரூபத்தை விவரித்து அரங்கனைப் பாடி ஓம் என்ற தமிழ் எழுத்தே முத்தமிழுக்கு முதலான உயிர்மெய் எழுத்து என்று உலகுக்கு உணர்த்தினார். முத்தமிழ் என்பது இயல், இசை, நாடகம் அதனை அரங்கன் ரசித்தான், என்பதை ''அழகியமணவாளன் வெல்வர்ஸ்டு இன் ம்யூஸிக், ஆனர்ஸ் தி டெம்பிள் சிங்கர்ஸ் வித் தி டைடில் ஆப் அரையர்'' என்று ஹரிராவ் கூறுகிறார். அழகிய மணவாளன் 20 நாட்கள் திருஅத்யயன உத்சவத்தில் இயல், இசை, நாடகம் மூன்றையும் கொண்டாடி மகிழ்கிறான். அரையர்கள் என்று சொல்லப்படும் கோயில் ஸ்தலத்தாரை கௌரவித்து கொண்டாடி

மகிழ்கிறான். ஸ்வரம், ஸ்ருதி, இராகம் இம்மூன்றின் இலக்கணத்தையும் கொண்ட நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்தை அரையர்கள் இயலாக பேசி, இசைபாடி, நாடகம் செய்து, அபிநயம் செய்து, அரங்கனை குளிர்விக்கிறார்கள். இந்த பூலோக வைகுண்டம் திருவரங்கம் பெரிய நாடக அரங்கம் முத்தமிழ் கொண்ட அரங்கம் பூலோக வைகுண்டம் என்னும் இந்த திருவரங்கம் 'பெரிய கோவில்' என்று வழங்கப்படுகிறது. இங்கு மார்கழி மாத உற்சவத்தில் அலங்காரம் செய்துகொண்டு (தாளம், பாவனை, ரஸம் கொண்ட பாசுரங்களை) அரையர்கள் அபிநயத்தால் அரங்கனுக்கு பாவனை செய்து காட்டி ஜாலர்போட்டு தாளம் கொண்டு அவனது புகழை அழகிய தமிழிலில், நாடகத் தமிழில் நடித்துப் பாடி, போற்றி, வணங்கி, இயலால் வர்ணித்து அழகிய மணவாளன் மகிழும்படி ப்ரபந்தத்தை ஸேவை செய்கிறார்கள்.

அவர்களுக்கு அரங்கனிடமிருந்து டர்பன், அண்ட்சில்க், அப்பர்கார்மெண்ட் அண்டு கார்லண்ட் இவற்றை அரையர்களுக்கு கொடுத்து கௌரவிக்கப்படுகிறார்கள். பின்பு அரையர் ஸேவை அரங்கனால் கௌரவிக்கப்பட்ட மேற்சொன்ன கோயிலின் எடுத்துக்கொண்டு கடைசி நாளன்று அரையறை தமிழ் ரசித்த அரங்கன் அவர்களை ப்ரும்ம ரதத்தில் வீட்டிற்கு சேர்க்கிறார். இது ஸ்தலப்புராணம் இத்தகையான இயற்றமிழை எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்றும் ஐந்து வகை இலக்கணங்களும், இலக்கியங்களும் கொண்டதான ப்ரபந்தத்தை அரங்கன் உளமார கேட்டு, மகிழ்கிறான். இந்த அரங்கனை ஸ்ரீதேசிகர் அதிகாரசங்கிரகம் - 42

''ஆதார வளரமுதம் பொதிந்த கோயில்
அம்புயத்தோன யோத்தி மன்னற்களித்த கோயில்
தோலாததனிவீரன் எறாமுதகோயில்
துணையான வீடணற்குத் துணையாங்கோயில்
சேராத பயனெல்லாஞ்சேர்குங்கோயில்
செழுமறையின் முதலெழுத்துச் சேர்ந்தகோயில்
தீராதவினையனைத்துந்தீர்க்குங்கோயில்
திருவரங்கமெனத் திகழுங்கோயில் தானே''

என்று கூறுகிறார்.

திருவரங்கத்து மாலை 4 - ல்

''பூங்கா விரிப்புனற்கோயிலுள்ளே மிக்க போகமெல்லாம்
யாங்காணயோகத்துயில் கொணவாறெள்ளு மென்னெயும்போல்
நீங்காதுலகத்துயிர்க்குயிராகி நியாமகனாய்
ஓங்காமையாதன் உட்பொருளாய் நின்ற ஒண் சுடரே
என்று தமிழ் மணக்கபாடப்பெறும் அரங்கனை''

''அணியார் பொழில்சூழ் அரங்கநகரப்பா
துணையேன் இனிநின் அருளல்லதெனக்கு
மணியே, மணிமாணிக்கமே, மதுசூதா,
பணியா எனக்குய்யும் வகை பரஞ்சோதீ ''
- பெரிய திருமொழி

என்று திருமங்கையாழ்வார் தமிழ்மணம் கமழ பாடுகிறார். இப்படிப்பட்ட திருவரங்கம், வைகுந்தம் பாற்கடல் முதலியவற்றில் சிறந்ததென்று திருமால் விரும்பியபடியாலும் திருமகளுக்கு நிருத்த ரங்கமாயிருத்தலாலும், ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவுக்கு அரங்கமாயிருத்தலாலும் ஆற்றுக்கிளைகளின் மத்தியிலிருத்தலாலும் இதற்கு திருவரங்கமென்று பெயர் வந்தது. இப்படிப்பட்ட இந்தத்திருவரங்கமே தமிழிசைக்கு சான்றுரைக்கும் கோயில் என்பதனை திருவரங்க பேரீதாடனத்திலும் (இசைபற்றியும்) ஸ்ரீரங்கமஹாத்மியத்திலும், இசைபாடும் கோயில் என்றும் சரஸ்வதி அந்தர்வாஹியாக உள்ள கோயில் என்றும் முப்பத்து முக்கோடி தேவர்கள் ஆராதித்த கோயில் என்றும் கூறப்படுகிறது.

## திருவரங்கமே இசைக்கு ஆதாரமான கோயில்

நாதப்ரும்மம் ஸ்ரீத்யாகப்ரும்மம் என்பதனை பல்வேறு கோணங்களில் உணர்த்தப்பட்டுள்ளது. ஸ்ரீத்யாகப்ரும்மம் திருவரங்கத்தை இசைக்கு ஆதாரமான கோயில் என்று தேர்ந்தெடுத்தார் என்பது எனது ஆய்வின் கருத்து. இசைக்கு ஆதாரம் கொண்ட கோயில் திருவரங்கம்தான் என்பது எனது மூலக்கருத்து எனது ஆய்வின் கருத்து முடிவான கருத்து. அதாவது திருவரங்கத்தில் எங்கு இசைக்கு ஆதாரம் உள்ளது என்பதனை

தெளிவாக்க விரும்புகிறேன். இசைதூண்கள் திருவனந்தபுரத்தில் இருக்கிறது என்னும்போது இசைக்கு ஆதாரமான 24 ஸ்ருதிகள் தெளிவாக கொண்டது திருவரங்கம் கோயில் காயத்ரீ மண்டபம் 24 தூண்களும் இசை ஒலியை வாங்கிவிடும் சக்தியை கொண்டது. காயத்ரீமண்டபம் இங்கு மெல்லியதான ஒலியை எழுப்பினாலும் அது மிகப் பெரிய ஒலியாக எதிரொலிக்கக் கேட்கலாம். மேலும் இசை கணிதம் கொண்டது. அதன்படி இங்கு உள்ள பாஞ்சராத்ர ஆகம்ப படி கொண்ட அனைத்து விஷயத்திலும் இசைக்கான ஆதாரத்தை தேடிக் கணக்கிடலாம். இதனை எனது குறிப்பு பட்டியலில் கூறியுள்ளேன். மேலும் நெல்லளவில் திருவரங்கம் பெரிய கோவில் மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு மரக்கால் என்னும் போது எட்டு என்பது மேளம் எட்டின் விவரமாகக் கொள்ளலாம். பின் ஒன்பது பத்து, பதினொன்று, பனிரெண்டு முதல் 25 வரை எண்ணும் போது 24 ஸ்ருதிக்குப்பின் ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பத்தாயிரம், லட்க்ஷம், பத்து லட்க்ஷம், கோடியே கோடி என்று எண்ணி கணக்கிட்டு நெல்லளவையை முடிக்கையில் ஒரு கோடி ராமநாமம் சொல்லி ஸ்ரீராமனை தரிசித்ததாக எனது ஆய்வின் கருத்தாக கொள்கிறேன். மேலும் திருவரங்க பேரீதாடனத்தில் தாள வகைகளை பற்றி விவரங்களை புத்தகங்களில் வேண்டுமானால் காணலாம். ஆனால் மேற்படி தாள வகைகளை அதற்கு மேலும் உள்ள தாள வகைகளையும் காணும்பொழுது இஃது ராமாயண காலத்திலிருந்து இசைக்கு சம்பந்தமான இந்த அரங்கனிடம் இசையிருந்தது என்பது புரிகிறது. மேலும் வீணை கேட்கும் ரசிகனாகவும் திருப்பாணாழ்வார் வீணை இசையிலே மயங்கினான் அரங்கன். தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் (அ.உ.ம) திருபாணழ்வாரின் (அ.உ.ம) நம்மாழ்வாரின் (உ.ம.அ) என்றும் ஆழ்வாரின் பாசுரங்களை சுரத்துடன் கேட்டான் அரங்கன். அதுவே தமிழ்நாட்டில் இசைக்கு ஆதாரமான கோயில் திருவரங்கமே என்று எனது ஆய்வில் முடிவு செய்துள்ளேன்.

<u>வேத சாஸ்த்ர புராணம்: ஓம்காரம்</u>

வேத ஜனித வரவீணா வாதன தத்வக்ஞ: என்கிறார் ஸ்ரீத்யாகப்ரும்மம். சாம வேதத்திலிருந்து இசை பிறந்தது. இசைக்கு சாஸ்த்ரம் உண்டு. அதுவே சாஸ்த்ரீய சங்கீதம். இசைக்கு கணிதம் உண்டு. இசையை கணித மோடு பாடும்போது லயம் ஏற்படுகிறது. ஸ்ரீத்யாகப்ரும்மம், ஸங்கீத ஸாஸ்த்ர ஞானமு' என்கிறார். வேத, சாஸ்த்ர, புராணமானது இசை, இசைபுராதனமானது. இந்த இசைக்கு புராணமாக ஸ்ரீரங்கபுராணத்தை தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. ஸ்ரீரங்கமே இசைக்கு ஆதாரமான கோயில் என்பதே சான்றாகும். திருவரங்கம் பெரியகோவில் இங்கு இசைக்கென்று தனித்தூண்கள் இல்லையென்றாலும் இசைக்கு ஆதாரமான <u>24</u> சுருதிகளையும் தன்னுள்ளே கொண்டு இசைக்குரிய ராகத்தின் ஒலியை துல்லியமாக எழுப்பக்கூடிய காயத்ரீ மண்டபமும், மண்டபத்தில் 24 தூண்களும் உள்ளன. இவைகளே இசைக்கு ஆதாரமான தூண்கள். முன்பு காலத்தில் ஊசி விழுந்தால் சப்தம் கேட்கும் அந்த மண்டபத்தில் என்பர். இப்பொழுதும் திருவையாறு ஸ்ரீத்யாகப்ரும்ம சமாதியில் 'ராம, ராம, ராம' என்ற ஒலியை நம்மால் கேட்க முடியும் என்பது உண்மையானதும், சத்தியமானதும் ஆகும். காயத்ரீ மண்டபத்தின் இசையின் தத்துவம் அடங்கியதன் முக்கிய காரணம் ஸரஸ்வதி அந்தர்வாஹினியாக இருக்கிறாள், காயத்ரீ இருக்கிறாள், லஷ்மி வாசம் செய்கிறாள். மூவரும் இசைக்கு ஆதாரமானவர்கள் ஸரஸ்வதி இசையை இங்கு ஒலி அலையாக எழுப்புகிறார் வீணையில். காயத்ரீ இசையின் தத்துவத்தை ஓம்கார ப்ரணவம் மூலம் நமக்கு அளிக்கிறார். லக்ஷ்மி ஆனவர் பரதத்வத்தை இசைமூலம் நாராயணன் அறிவுரைப்படி நமக்கு போதிக்கிறார். ஆக இந்த காயத்ரீ மண்டபத்தில் இசையின் தத்துவத்தை உணரமுடியும். இங்கு பவித்ரோத்ஸவ மண்டபத்தில் ஸரஸ்வதிக்கான கோயில் உள்ளது. மேலும் இந்த விமானத்தில் நமக்கு இசை இலக்கண, இலக்கிய விதிகளை நமக்கு வித்திட்டுத் தந்தவர்களில் ஸ்ரீநாரதர் இருந்திருக்கிறார். ஸங்கீதசாஸ்த்ரம் கற்றறிந்தவர். தமிழ்நாட்டில் யாழாசிரியராக இருந்தவர். இந்த ஸ்ரீரங்க விமானத்தை பற்றி ருத்ரன், நாரதருக்கு தெளிவுபடுத்துகிறார் என்று ஸ்ரீரங்க புராணம் கூறுகிறது. இந்த விமானத்தில் ஸங்கீதஸாஸ்த்ரத்திற்கான அனைத்து விவரமும் உள்ளது என்பதனை எனது தாயார் குறிப்பின் படி என்னால் விளக்கப்பட்டுள்ளது. இதனை காயத்ரீ மண்டபத்தில் இன்றும் இசையின் ஒலியை கேட்கலாம் என்பதே எனது ஆய்வின் முடிவு.

<u>ஓம்ப்ரணவமே இசைக்கு ஆதாரம்:-</u> ஓம்ப்ரணவ விமானம் திருவரங்கம் கோயிலே இசைக்கு ஆதாரம் - காயத்ரியின் 24 அக்ஷரமே இசைக்கு தத்துவம். ஓம் என்பது அடிப்படையான முதல் நாதம். அகிலம் அனைத்தும் அதனின்று உற்பத்தியானது. ஓம்காரம் (அ.உ.ம.) என்னும் மூன்று பாகங்களை கொண்டது. உச்சரிக்கக்கூடிய அனைத்து ஒலிகளும் ஓம்காரத்தில் அடங்கியுள்ளது. ஏனெனில் அவையனைத்தும் 'அ'வில் தொடங்கி 'உ'வில் தொடர்ந்து 'ம'வில் முடிகின்றன. எனவே ஓம்காரமானது அனைத்து மொழிகளிலும் அனைத்துக் காலங்களிலும் இறைவனை விளக்கும் அனைத்துச் சொற்களையும் குறிக்கின்றது. ஓம் நிசப்தத்தில் முடிகின்றது. கடவுளை பற்றிய விளக்கங்களும் நிசப்தத்திலேயே முடிகின்றன. அமைதியை அடையும் வரையில் ஓம்காரத்தை ஓதும்முறை சர்வரூப, சர்வகுண, சம்பன்னனாக இறைவனைத்

தியானித்து, முடிவில் மேலானப் பரம்பொருளை தனிமுதல் அடையும் முறையாகும். இதனை பொருட்டு இந்த ஓம்காரத்தின் உள்ளே அடங்கி இருக்கும் விஷயங்களை படம்போட்டு அதனுள்ளே விவரத்தை எழுதி உள்ளேன். எனது குருபரம்பரை ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் சிஷ்ய பரம்பரையாகும். மேலும் பாரத்வாஜகோத்ரமான எனது குருவை பாரத்வாஜகோத்ரத்தில் பிறந்த என்னால் எழுத முடியும் என்பதனால் அந்த மகானை, மகரிஷியை மகோன்னதமான ஓம்காரத்தை நமக்கு தெளிவுபடுத்தியதற்காக நன்றி கூறி எழுதுகிறேன். நமஸ்காரம் செய்கின்றேன். மேலும் மானிடராய் பிறந்த நாம் அனேக, நற்குணங்களையும் நற்பண்புகளையும் பெற்றுள்ளோம். அதனை நல்வழிப்படுத்தி நற்பயனை அடைய நாம் முயற்சிக்க வேண்டும். நமது செவிப்புலன்களை இருகைவிரல்களாலும், இரு காதுகளையும் அடைத்துக் கொண்டால் நம் உடலில் கடலலையின் ஓசைபோல் ஓம்காரம் ஒலிப்பதை நாம் கேட்க முடியும். இந்த ஓம்காரத்தை நாம் ஸ்திரப்படுத்த பலவழி உபாயங்கள் இருக்கிறது. ஆகவே அதில் ஒன்றான இசைக்கு இந்த ஓம்காரம் தான் பெரிதும் உதவியாக இருப்பது. த்வனியை நம் உள்ளேயிருந்து வெளிக்கொணர ஓம்காரத்தின் மூலம் ப்ரணவ காயத்ரீ மந்த்ரத்தை ஜபித்தால் நம்மால் தெய்வீகத்தை அடைய முடியும் கட்டுபாடான தவ வலிமையால் என்று என்னால் உறுதியாக கூற முடியும்.

*அகாரார்த்தோவிஷ்ணு: ஜகதுதயரக்ஷாப்ரளயக்ருத்*
*மகாரார்த்தோ ஜீவ: ததுபகரணம் வைஷ்ணவமிதம்|*
*உகாரோ அநந்யார்ஹம் நியமதி ஸம்பந்தமநயோ:*
*த்ரயீ ஸாரஸ்த்ர்யாத்மா ப்ரணவ இமமர்த்தம் ஸமதிஸத்||*

அனைத்துப் பொருள்களிலும் வியாபித்திருப்பவனுமான ஸ்ரீமந்நாராயணன் அகாரத்தின் பொருள் ஞானமே வடிவாக உடையவன் ஜீவாத்மா 'ம' காரத்தின் பொருள் ஜீவாத்மா பரமாத்மாவுக்கு உரிய அடிமை. 'உ' காரம் இந்த இருவரையும் சேர்க்கும் சக்தியாகும். வேதங்களின் சாராமாய் மூன்று அட்க்ஷரங்களாயும் மூன்று பதமுமாயிருக்கிற (ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம்) ப்ரணவத்தைப் பற்றி புரியாமலேயே குழம்புகிறவர்களுக்கு நம்மாழ்வாரின் திருவாய்மொழி நல்ல பாடத்தை தூய தமிழ் பாசுரம் மூலம் உணர்த்துகிறது. இந்த திருவாய்மொழி என்பதற்கு பெயர் காரணம் ஸ்ரீமந்நாராயணன் நம்மாழ்வார் வாய்மொழியாலே உலகுக்கு ஜீவாத்மா, பரமாத்மா தத்துவத்தை ப்ரணவத்தின் அர்த்தத்தை புரியும் வண்ணம் உ.ம.அகாராமாக ஞான ஒளியை ஏற்றி அதனை நம்மாழ்வார் வாய்மொழியாலே உரைத்ததால் வேத சாரமான ஆயிரம் பாசுரமும் திருவாய் மொழி என்று பெயர் பெற்றது. ஸ்ரீநாரத முனிவர் தத்வார்த்தத்தையே தொழிலாக செய்ய வேண்டும் என்று ப்ரார்திக்க தத்வஞானத்தை அருளிய பரமாத்மா வால்மீகியின் மறுஅவதாரமான ஸ்ரீத்யாகப் பிரும்மத்திற்கு நாரதரால் அருளிச் செய்தார். ஸ்ரீத்யாகப்ரும்மம் ஓம்ப்ரணவ நாதத்திற்கு அதிபதி அரங்கனே என்று சொல்லி பஞ்சரத்னமாக பாடுகிறார். ஆண்டாள் வகுத்தது அர்த்தபஞ்சகம் 1.ஸ்வஸ்வரூபம் 2. பரஸ்வரூபம் 3.புருஷார்தஸ்வரூபம் 4. உபாயஸ்வரூபம் 5. விரோதிரூபம் 1. ஸ்வஸ்வரூபம் - ஆத்மஸ்வரூபத்தையாகும் - ஆத்மஸ்வரூபம் - நித்யர், முக்தர், பத்தர், கேவலர், முமூக்ஷுமுகர் (5) 2. பரஸ்வரூபம் - ஈஸ்வரஸ்வரூபத்தையாகும். ஈஸ்வரஸ்வரூபம் - பரத்வம், வியூஹம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரமென்றும் ஐந்து (5) இதில் பரத்வம் - பரவாஸுதேவர் - வியூகம் - வாஸுதேவர், சங்கர்ஷணன், ப்ரத்யுமனன், அனிருத்தன், நாராயணன் (5) விபவம் - இந்த வியூகத்தில் 5 பேருடைய விபவம் தசாவதாரம். அந்தர்யாமித்வம் - ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன், சரஸ்வதி, லக்ஷ்மி, காயத்ரீ அந்தர்யாமியாக உள்ளனர். அர்ச்சாவதாரம் ரங்கனாதன், அர்ச்சாவஸ்வரூபம், ஆகவேதான் இங்கு பாஞ்சராத்ரத்தில் சொல்லியபடி ப்ராணப்ரதிஷ்டை செய்து த்வாதாக்ஷரம் அஷ்டாக்ஷரத்தை ஜபித்து திருவாராதனம் செய்யப்படுகிறது. ஓம் நமோ நாராயணாய, ஓம் நமோ பகவதே வாஸுதேவாய என்று முற்று பெருகிறது. மேற்சொன்ன விளக்கம் எனது கருத்துக்கணிப்பு, இதனை விமானத்தில் காணலாம்.

## இந்த ஓமே தமிழில் உயிர் எழுத்து

திருவரங்கமே இசைக்கு ஆதாரமான கோயில்

| | | |
|---|---|---|
| வேதம் — | சாஸ்திரம் — | புராணம் |
| நான்கு வேதம் — | ஆறுசாஸ்திரம் | ஸ்ரீரங்கமஹாத்மியம் |
| ருக்-யஜுர்-ஸாமம்- | | |
| ஸாமவேதம் இசை | சங்கீத சாஸ்திரம் | விஷ்ணுபுராணம் |
| கர்னாடக சங்கீதம் | சாஸ்த்ரீயசங்கீதம் | சரித்ரம்-ராமசரித்ரம்-இதிஹாஸம் |
| | கர்னாடக சங்கீதம் | ஸ்ரீமத்வால்மீகி இராமாயணம் |
| கலை | ஹிந்துஸ்தானி சங்கீதம் | ராமன்-சிவன்-விஷ்ணு-பிரும்மா |
| ஆய கலை 64 | மூலக்கருத்து | சீதா-லக்ஷ்மி-ஸரஸ்வதி-காயத்ரீ |
| பாசுரம் | தமிழிசையே தரணி | ஸ்ரீத்யாகப்ரும்ம கீர்த்தனைகள் |
| ஆழ்வார்கள் தமிழிசை | போற்றும் இசை | |
| ஸ்ருதி மாதா | தமிழிசையை கையாண்டுள்ள | ராக, தாள, பாவ மார்க்க ஸங்கீதம் |
| லயம் பிதா | ஸ்ரீத்யாகப்ரும்மம் பற்றிய | |
| | குறிப்பு 24 ஸ்ருதி | |
| ஸ்ருதி மாதா | ஸ்ருதி 24 ஸ்ருதி | லயம் பிதா |
| விதரணம் | விஸ்தாரணம் | விவரித்தல் |
| குருப்ரும்மா | குருர் விஷ்ணு | குருதேவோ மஹேஸ்வர: |
| ஸரஸ்வதி | லக்ஷ்மி | காயத்ரீ |
| ப்ரணவவிமானத்தில் | கர்ப்பக்ரஹத்தில் | காயத்ரீ மண்டபத்தில் |
| அந்தர்வாஹினியாக | லக்ஷ்ஸ்தலத்தில் | 24 தூண்களில் |
| கச்சபிவீணை | ஸாரங்கி வீணை | ருத்ரிகை வீணை |

### தெய்வம்

அரங்கன் அவனை ஆராதித்த ராமன், ப்ரும்மா, விஷ்ணு, சிவன்
விமானத்தில் பரவாஸுதேவர், முப்பத்தி முக்கோடி தேவர்கள், விமானத்தை காப்பவர்கள்.

வாசுதேவ சர்வம் என்கிறார் ஸ்ரீத்யாகப்ரும்மம் — ஸ்ரீரங்கமஹாத்மியம் — ஓம் என்பதே இசைக்கு ஆதாரம்

அச்சுதன், அனந்தன், கோவிந்த வழிபாடு - வாசுதேவன் - சங்கர்ஷணன் - ப்ரத்யுமனன் - அனிருத்ரன்
ஸ ப ஸ

8 ஸ்வரம் - ஸ3, ரி3, க3, ம3, ப3, த3, நி3, ஸ்3, 24 ஸ்ருதிகோவிந்தா

| | | | | |
|---|---|---|---|---|
| 72 மேளகர்த்தா ஸ்ரீத்யாகப் பிரும்மம், நாத பிரும்மம், நாத யோகி, சிவ யோகி கீர்த்தனைகள்தத்வார்தம், புருஷார்த்தம், பரதத்வம் மூலமந்த்ரம் 1 கோடிராம நாமம். | ப்ரணவத்தை உணர்ந்தவனே வேதத்தை அறிந்தவன் ஆவான். அதை இசை மூலம் பெறலாம் என்று கூறினார். | ஸ்ரீத்யாகப்ரும்மம் 24 சுருதி, காயத்ரீயின் 24 அக்ஷரம் 24 அக்ஷரத்திலும் 24 கீர்த்தனைகள் பாடியுள்ளார். ரகசியம் 24, 48, 96 நுட்பஸ்ருதி. | மூலமந்த்ரம் நமோநாராயணாய நமோவாஸுதேவாய ப்ரணவவிமானம் திருவெண்ணாழிப்ரகாரம் தூண்கள் 12. அதுவே சுரம் 12 காயத்ரீ தூண்கள் 24 ஆக 36 மேளராகம். | யாழ் ஒலிக்க பண் அஷ்டாக்ஷ பட்சாட்க்ஷ சேர்க்கை ராமநாமம் தாரகமந்த்ரம் உபாஸித்து மோக்ஷத்வம் ஸ்ரீத்யாக ப்ரும்மம் 24,000 க்ருதிகள். |

ஸ்ருதிகளே இசைக்கு ஆதாரம் என்று தமிழிசையை விளக்கித் தந்தவர் ஸ்ரீத்யாகப்ரும்மம். இவருக்கு நாரதரால் அளிக்கப்பட்ட ஸ்வரார்ணவம் - பஞ்சபாரதீயமே என்று சொன்ன தமிழிசைக்கான ஸ்ருதிகள் மூலம் கீர்த்தனைகள் பாடி நிரூபித்தவர். இதுவே தமிழிசையின் ஓம்கார வடிவம் ஆகும்.

# ஸ்ரீ காயத்ரீ

முக்தாவித்ருமஹேம நீல தவளச்சாயையர் முகைஸ் த்ரீ க்ஷணை:
யுக்தாமிந்துநி பத்த ரத்ன மகுடாம் தத்வார்த்த வர்ணாத் மிகாம்
காயத்ரீம் வரதா பயாங்குசகசா: சுப்ரம் கபாலம்கதாம்
சங்கம் சக்ரமதாரவிந்த யுகளம் ஹஸ்தைர்வஹந்தீம்பஜே.



## ஓம்ப்ரணவ விமானத்தில் உள்ளவை

## விமானலக்ஷணம் படி

*இந்த கோயில் விமானத்தில் நாலு கலசங்கள். அவை சதுர்வேதம் என்கிறார்கள். மற்றுமுள்ள நான்கு கலசங்கள் இந்த நான்கு கலசங்களும் வாஸுதேவன், சங்கர்ஷணன் ப்ரத்யுமனன், அனிருத்தன். வாஸுதேவ வியூகம் என்பது கிருஷ்ண பலராம வம்சம் வியூகத்திலுள்ள வாஸுதேவன் - கிருஷ்ணன் வம்ச ப்ரத்யுமனன் வம்சம் அனிருத்தன் இங்கு நான்முக நாஸா முகத்தின் மேல் உள்ள கலசம். இதனையே அச்சுதன், அனந்தன், கோவிந்தன், வாஸுதேவன் என்று சொல்லப்படுகிறது. இதனையே நரன், நாராயணன், ஹரி, கிருஷ்ணன் என்று சொல்லப்படுகிறது. இதை எனது இசை ஆய்வுக்கு சம்பந்தப்படுத்தியுள்ளேன். இங்கு ராமாயண காலம் முதற்கொண்டு இஷ்வாகு ராஜாவால் சூர்யவம்சத்தால் ஆராதித்த பெருமாள் என்கிறது இதிஹாஸபுராணம். ஆகவே த்ரேதாயுகத்திற்கு முந்தியக்ருதயுகத்திற்கு முன்பான வரலாறு ஆகும். இந்த விமானத்தில் (ராமாயண காலத்தில்) யுகத்திற்கான ஆயுதம் 10,000 இருந்ததாக சான்றோர்கள் கூறுகிறார்கள். இதில் உள்ள சில ஆயுதங்கள் சக்ரம், சங்கு, கதை, பத்மம், லாங்கூரம், முசலம், சரம், சார்ங்கம், கர்கம். இவை விஷ்ணுவானவரால் ப்ரயோகிக்கப்பட்டது. இவை விமானத்தில் உள்ளன என்று புராணம் கூறுகிறது. ஆகவே பெரிய பெருமாள் இராமனாக அனுமானிக்கப்படுகிறது. கிருஷ்ண வம்சத்தால் உத்ஸவரை அழகிய மணவாளனை க்ருஷ்ணனாக அனுமானிக்கப்படுகிறது. இதன் காரணமாக ஆழ்வாராதிகள் இராமனாகவும் க்ருஷ்ணனாகவும் பெரிய பெருமாளையும், நம் பெருமாளையும் பாசுரங்களால் புகழ்ந்து பாடுகிறார்கள். த்ரேதாயுக - த்வாபர சந்த்யாம்சத்தில் இராமர் பிறந்ததாக வால்மீகி எழுதினார். த்வாபரயுகத்தில் கிருஷ்ணன் பிறந்தார். பாரதத்தை ஓலை எழுத்தாணியுடன் பிறந்த வியாஸர் எழுதினார். ஆழ்வாராதிகளில் சிலர் த்வாபரயுகம் காலம், ஆக த்ரேதாயுக இராமன், த்வாபர கிருஷ்ணன், கலியுக நாராயணன் ரங்கநாதனின் அர்ச்சாவதாரம் இவற்றை தங்கள் ஞான திருஷ்டியால் உணர்ந்து புகழ்பாடுகிறார்கள். முதல் யுகமான க்ருதயுகத்தில் பகவான் ஸ்ரீமந்நாராயணன் எல்லாமாக இருந்தார். ஆதாரம் விஷ்ணு புராணம். கலியுக புருஷனை குதிரை மேல் வருவதாக சித்தரிக்கப்படுகிறது. ஆனால் அரங்கனே கலியுக அர்ச்சாவதார மூர்த்தி அவதாரபுருஷனாக ஆகிறார். ஆண்டாள் நாச்சியார், பீபிநாச்சியார், சோழகுலவல்லி, சேரகுலவல்லி போன்ற நாச்சிமார்களை பக்திக்காக அரவணைத்துக் கொள்கிறான். குதிரைவாகனத்தில் ஆரோகணித்து உலாவருகிறான் அரசனாக. இதனாலேயே ரெங்கராஜா என்று அழைக்கப்படுகிறார். ஆகவே முதலும் கடைசியுமாக நாராயணனை ஆதிமுதல் அந்தமுமாக ஆதி ரங்கம், மத்யரங்கம் - அந்தியரங்கத்தில் திருவரங்கத்தில் அர்ச்சாவதாரமாக அரங்கன் தோன்றி இசைக்கு அதிபதியாய் நம்மை வாழ வைக்கிறான் என்ற இந்த கருத்து கணிப்பை கும்பகோணம் ஜெயம்மாள் அவர்களால் மேற்பார்வை செய்யப்பட்டது.*

*ப்ரணவத்தை சேர்த்து காயத்ரீயை ஐந்து பதமாக*

*1. ஓம்*

*2. பூர்ப்புவஸ்ஸுவ:*<br>*4 4*

*3. தத்ஸவிதுர்வரேண்யம்*<br>*4*

*4. பர்கோ தேவஸிய தீமஹி*<br>*3 3 4*

*5. தியோ யோந: ப்ரசோதயாத் என்று*<br>*4*

***ஐந்து இடத்தில் (மூச்சை விட்டு) நிறுத்தி ஜபம் செய்யவேண்டும்.***

***24 அக்ஷரங்கள் காயத்ரீயின் (என்பது)***

***தத் 'ஸ' வி' துர்' வ' ரே' ணி' ய ம்'***<br>***1 2 3 4 5 6 7 8 .***

***பர்க்' கோ' தே' வ' ஸ்ய' தீ' ம' ஹி'***<br>***9 10 11 12 13 14 15 16***

***தி' யோ' யோன்' ன' ப்ர' சோ' த' யாத்'***<br>***17 18 19 20 21 22 23 24***

மேற்சொன்னவை காயத்ரீயின்

24 அக்ஷரங்கள், 24 ஸ்வரங்கள்

ஸ்ரீமத்வால்மீகி ராமாயணம் (24,000) இருபத்தினான்காயிரம் ஸ்லோகம் கொண்டதாகும். 24 எழுத்துக்களை கொண்ட காயத்ரீ மஹாமந்திரத்தின் ஒவ்வோர் எழுத்தையும் ஒவ்வோர் ஆயிரம் முதல் சுலோகத்தின் முதல் எழுத்தாக அமைத்து வால்மீகிபகவான் ராமாயணத்தை இயற்றியிருக்கிறார். இப்படியே வால்மீகி மறு அவதாரமான ஸ்ரீத்யாகப்ரும்மம் 24 காயத்ரீ அக்ஷரத்தின் எழுத்துக்கள் முதல் எழுத்தாக பாடியதிலிருந்து நாம் அவரை வால்மீகி பகவான் என்று ஏற்கும்படியாகிறது. இதற்கான கீர்த்தனங்களை முன் அட்டவணையில் காட்டப்பட்டுள்ளது.

(காயத்ரி பற்றிய சில தகவல்கள் ஸ்ரீ காயத்ரீ ஸஹஸ்ரநாமஸ்தோத்திரம் உபாஸநாதெய்வம்) இருந்து தரப்பட்டுள்ளது.

## ஓம் நமோ காயத்ரீ

பிராம்மணர்களுக்கு காயத்ரீயை விட சிறந்த மந்திரம் வேறு கிடையாது. இதற்கு ''ந காயத்ரீயா பரமமந்த்ரம்'' என்னும் வசனமே சான்று. சந்த்யாவந்தனம், மாத்யான் ஹிகம், ஆகிய அனுஷ்டானங்களில் காயத்ரீயின் பெருமையை விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

### இந்த காயத்ரீ தேவதைக்கு

1. வாமதேவர் 2. அத்தரி 3.குத்ஸர் 4. கௌதமர் 5. அகஸ்தியர் 6. வேதவியாஸர் போன்றவர்கள் ரிஷிகள்.

### ஸ்ரீ காயத்ரிக்கு ரக்ஷையாக

1. உஷ்ணிக் 2.அநுஷ்டுப் 3.பிருஹதீ 4. பங்தீ 5.த்ருஷ்டுப் 6. ஜகதி 7.அதிஜகதி 8.அக்ருதி 9.விக்ருதி போன்ற பெருமை வாய்ந்த சந்தங்கள்.

### ஸ்ரீ காயத்ரீ தேவதைக்கு உகந்த தேவதைகள்

1. ஆக்னேயம் 2.பிராஜாபத்யம் 3. ஸௌம்யம் 4.ரசாயனம் 5.சாவித்ரிம்

### ஸ்ரீ காயத்ரீக்கு சித்திகள்

1. வாமதேவி 2. பிரியா 3.சத்யா 4. விச்வா 5.பத்ரவிலாசினி 6.ஜயா 7.காந்தா 8.சாந்தா 9.துர்க்கா 10.ஸரஸ்வதி

### ஸ்ரீ காயத்ரீயின் நிறங்கள்

1. சம்பகம் 2. பவளம் 3. ஸ்படிகம் 4. சிவப்பு 5.மஞ்சள் 6. முத்து 7. குங்குமம் 8. மை 9. சந்திரன் 10. வைடூரியம் 11.தேன் 12. வைரம்.

## ஸ்ரீகாயத்ரீயின் கவசம்

| | | |
|---|---|---|
| காயத்திரி தேவி | - | கிழக்கு திக்கில் காப்பாற்றட்டும் |
| சாவித்ரி தேவி | - | தெற்கு திக்கில் காப்பாற்றட்டும் |
| ப்ரமஹசந்தி தேவி | - | மேற்கு திக்கில் காப்பாற்றட்டும் |
| சரஸ்வதி தேவி | - | வடக்கு திக்கில் காப்பாற்றட்டும் |
| பார்வதி தேவி | - | அக்னி திக்கில் காப்பாற்றட்டும் |
| யாதுதானி தேவி | - | நிருதி திக்கில் காப்பாற்றட்டும் |
| ருத்ராணி | - | ஈசானி திக்கில் காப்பாற்றட்டும் |
| பிர்மானி | - | ஊர்த்துவபாகத்தை காப்பாற்றட்டும் |
| வைஷ்ணவி | - | அதோ பாகத்தை காப்பாற்றட்டும் |
| புவனேஸ்வரி | - | ஸர்வ இடத்தையும் காப்பாற்றட்டும் |
| தத் | - | என்னும் பதம் பாதங்களை காப்பாற்றட்டும் |

| | | |
|---|---|---|
| ஸவிது | - | என்னும் பதம் கணுக்கால்களை காப்பாற்றட்டும் |
| வரேண்யம் | - | என்னும் பதம் இடையைக் காப்பாற்றட்டும் |
| பர்க்கம் | - | என்னும் பதம் நாபியைக் காப்பாற்றட்டும் |
| தேவஸ்ய | - | என்னும் பதம் இருதயத்தை காப்பாற்றட்டும் |
| தீமஹி | - | என்னும் பதம் மோவாய்கட்டையை காப்பாற்றட்டும் |
| தீய : | - | என்னும் பதம் கண்களைக் காப்பாற்றட்டும் |
| ய | - | என்னும் பதம் நெற்றியைக் காப்பாற்றட்டும் |
| பிரசோதயாத் | - | என்னும் பதம் சிகையைக் காப்பாற்றட்டும் |

சிகைக்கு மேல் (ப்ரமரந்தரம்) கண்டஸ்தானம் அடைந்து (உச்சிக்குழி வழியாக) த்யானத்தின் நிலை அமிர்த்ததாரயாக வர்ஷித்து (அந்த இடம் நரஸிம்ம மூர்த்தியின் இடமாதலால்) இந்த காயத்ரீயை ஜபித்து இசையால் யோகிகள் தெய்வீகம் பெறுகிறார்கள். நாதயோகத்தால் அவர்களுக்கு தெய்வீகம் சித்திக்கிறது. இப்படி சித்தியடைந்த நாதயோகி ஸ்ரீத்யாகப்ரும்மம் இவருடைய 'ஸோபில்லு ஸப்தஸ்வர' ஜகன்மோஹினி ராகத்தில் கீர்த்தனையில் அனுபல்லவியில் நாபீஹ்ருத் கண்டரஸனா என்றும், தர, ருக், ஸாமா, துலலோ, வரகாயத்ரீ ஹ்ருதயமுனா (ரிக்ஸாம வேதத்திலிருந்து இசை பிறக்கிறது). ரிக்வேதம் ஸாம வேதங்கள் இசையின் பிறப்பிடம் ஆகும். ஸாம வேதத்திலிருந்து பிறந்த இசை என்றும் வர காயத்ரீ ஹ்ருதயமுன என்று காயத்ரீயையும் போற்றி பாடுகிறார். இந்த காயத்ரீதான் 24 அக்ஷரம் இசைக்கு ஆதாரம் என்கிறார். சங்கீதம் தேவியின் கண்டத்திலிருந்து தோன்றுகிறது என்றும், அது சங்கீதத்தில் ஷட்ஜ, மத்யம, காந்தார கிராமங்கள் என்று மூன்று உண்டு என்றும் அவை கலக்காமல் இருக்கவே தேவி தன் கழுத்தில் மூன்று ரேகைகள் பெயரில் பாத்தி கட்டுகிறாள், மூன்று கிராமமும் கலக்காது இருக்க என்று வியக்கிறார் ஸ்ரீ காஞ்சி காமகோடி பரமாச்சாரியார் ஸ்வாமிகள் (காஞ்சிபுரம்).

### காயத்ரீயின் இசைக்கான இடம்

| | | |
|---|---|---|
| பர்க்கம் | - | நாபி காப்பாற்றட்டும் |
| தேவஸ்ய | - | ஹ்ருதயம் காப்பாற்றட்டும் |
| தீமஹி | - | கண்டம் காப்பாற்றட்டும் |
| தியோ | - | கண்கள் காப்பாற்றட்டும் |
| யோ | - | நெற்றி காப்பாற்றட்டும் |
| ந: | - | தலையை காப்பாற்றட்டும் |
| பிரசோத | - | சிகை - தலைப்பகுதியை காக்கட்டும் |
| யாத் | - | பிரமரந்த்ரம் - ஜீவன் மேலே மரண ஸ்ரமமில்லாத - பயமில்லாதபடி உச்சிக் குழி வழியாக கிளம்ப காயத்ரீ உதவட்டும் |

மேலே சொன்ன காயத்ரீ தேவியின் அக்ஷரங்கள் ஸரிகமபதநி-ஸ் என்ற எட்டும் தேவியை இசை மூலம் ஸ்தோத்தரித்து மோக்ஷமடைய காயத்ரீ மந்த்ரம் மட்டுமே நமக்கு உதவக்கூடியது. இந்த காயத்ரீ மந்த்ரத்தின் 24 அக்ஷரங்கள் மட்டுமே இசையின் 24 அக்ஷரங்கள் என்ற பெருமையைக் கொண்டது. இந்த காயத்ரீயை பக்தி சிரத்தையோடு எவன் ஒருவன் சொல்கிறானோ அவனுக்கு கல்வி, செல்வம், இசை, பின் வயோதிகத்தில் துக்கப்படாத, நிம்மதியான மோக்ஷத்தை அடைய அவள் நமக்கு உதவுகிறாள். இந்த காயத்ரீ மந்த்ரம் மிகச்சிறிய மந்த்ரம்தான். ஆனால் இந்த மந்த்ரத்தை ஆச்சாரியர் கொண்டு நாம் உபதேசம் பெற்ற பின்பே ஜெபிக்க வேண்டும். ஆச்சாரியன் என்பது இருபொருள் கொண்டது - ஒருவர் நமக்கு குரு மற்றொருவர் இறைவன் - அவன் அருள் பெறுவோமாக.

**காயத்ரீ உருவங்கள்**

1. பிருதிவி 2. அப்பு 3.தேயு 4. வாயு 5. ஆகாசம்

ஸுமுகம், சம்புடம் போலும் 24 முத்திரைகள்.

__பஞ்சமுக காயத்ரீயின் வர்ணனை:-__ பெருமாள் பற்றியது

பஞ்சபூதங்களாய் இருக்கும் ஆதிசேஷனில் உறைபவன்

பஞ்சபூதங்களுக்கு சம்பந்தப்படாதவன்.

பஞ்சபூதங்களுக்கு கட்டுப்படாதவன்.

ஆனால் பஞ்சபூதங்கள் இவருக்கு கட்டுப்பட்டது.

இது பரதத்வம் ஆகும்.

பஞ்சமுக காயத்ரீ - பஞ்ச பூதங்களையும் கண்ணுள்ளே காட்டுகிறவள்.

பஞ்ச பூதங்களை காட்டுவதால் பஞ்சபூதங்களிலிருந்து விடுபடுவதற்கு வழி செய்கிறாள்.

பஞ்சபூதங்களிலிருந்து காப்பாற்றுபவள் காயத்ரீ என்பதற்காகவே காயத்ரீ தேவிக்கு __ஐந்துமுகம்__

இந்த காயத்ரீயின் விசேஷம் அமைந்த கோயில் திருவரங்கம்: இது ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரம் நூற்றியெட்டு திவ்ய தேசங்களில் முடிவானது. பூலோக வைகுண்டம் - வைகுண்டத்தில் இருப்பது போன்றதே இந்த திருவரங்கம், சுக்ரபகவானால் ஸ்தோத்தரிக்கப்பட்டதால் வெள்ளிக்கிழமையில் விஸ்வரூப தரிசனம் செய்வதால் கிரஹதோஷம் நீக்கம் ஆகிறது. இதுவல்லாது காயத்ரீ மண்டபத்தில் காலையில் எட்டுதிக்குகளையும் ஸேவிக்கும் பாக்யம் பஞ்சபூதங்களிலிருந்து நம்மை விடுவித்து பஞ்சபூதங்களுக்குக் கட்டுப்படாத அரங்கனை நெடிய திருமாலை, பாம்பணையில் பள்ளிக் கொண்டவனிடம் (பஞ்சபூதங்களாய் இருக்கும் பாம்பணையில் உறைபவனிடம்) பஞ்சபூதங்களுக்கு சம்பந்தப்படாதவனிடம் நம்மை சேர்க்கிறாள் ஸ்ரீகாயத்ரீ தேவி. நமக்கு தெரியாத புலப்படாத (தத்துவத்தை நமக்கு) கோயிலின் தத்துவமூலம் எடுத்துரைக்கும் காயத்ரீ தேவிக்கு சிரம்தாழ்த்துவோம். இசையால் அவளை ஸ்தோத்தரித்து மகிழ்வோம். 24 ஸ்ருதிக்கு ஆதாரமான காயத்ரீயையும், அரங்கனையும் வழிபடுகிறவர்கள் மரண பயமில்லாது மோக்ஷமடைய கூடிய தலம் திருவரங்கம்.

__இந்த ஆய்வின் மூலக்கருத்து காயத்ரீயின் 24 அக்ஷரங்கள்__

இசையின் ரகசியத்தை உங்கள் முன் ஸமர்பிக்கிறேன். 24 ஸ்வர அக்ஷரமே காயத்ரி தேவியின் 24 அக்ஷரங்கள். ஓம் என்ற மூலமந்த்ரம் 24 ஸ்ருதி பேதமும், 7 ஸப்தஸ்வரமும், 21 மூர்ச்சனைகளும், மேளராக எட்டு ஸ்வரங்களும் அஷ்டகம் என்றும் இதுவே சங்கீதத்தின் மூல ரகஸ்யம். 24 அக்ஷர காயத்ரீ ஓம் என்ற மூலமந்த்ரம் வேதத்தின் ஸாரமே ப்ரணவம், ஓம் ப்ரணவத்தின் வியாக்யானமே காயத்ரீ, ஏழுகோடி மஹாமந்த்ரங்களில் அது முதன்மை வாய்ந்தது. அதன் 24 அக்ஷரங்கள் இராமாயணத்தின் __24,000__ சுலோகங்களில் ஒவ்வொரு ஆயிரத்தின் அத்யக்ஷரங்களாக மஹரிஷியால் அமைக்கப்பட்டிருக்கின்றன. அந்த ஸ்ரீகாயத்ரீ மந்த்ரத்தின் 24 அக்ஷரங்கள்

(ஓம்)

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| த | த்ஸ | வி | து | ர்வ | ரே | ணி | யம் |
| 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 |
| ப | ர்க்கோ | தே | வ | ஸ்ய | தீ | ம | ஹி |
| 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |
| தி | யோ | யோ | ன்ன | ப்ர | சோ | த | யாத் |

1. ஓம்தத்ஸவிதுர் வரேண்யம் - 8

2. பர்க்கோ தேவஸ்ய தீ மஹீ - 8

3. தியோ யோன்ன ப்ரசோதயாத் - 8 இது காயத்ரீ மந்த்ரம்

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் 500 ஸர்கங்களென்றும், 24,000 ஸ்லோகங்களென்றும் கூறுகிறார். மேலும் எட்டு ஸ்வரங்கள் கொண்டதுதான் மேள ராகம் எனப்படுகிறது. ஸட்ஜ முதல் தார ஸட்ஜம் முடிய எட்டு ஸ்வரங்கள் ஸரிகமபதநிஸ் என்பது இந்த எட்டு அக்ஷரத்திற்கும் காயத்ரீ ஸ்லோகத்தில் இடம் பெற்றுள்ளது. அஂஂது பர்க்கம், தேவஸ்ய, தீமஹீ, தியோ, யோ,

1 2 3 4 5

ந: ப்ரசோத, யாத் (ஸரிகமபதநிஸ)

6 7 8

நாபீ, ஹ்ருதயம், கண்டம், கண்கள், நெற்றி, தலை, சிகை, உச்சிகுழி (இவை எட்டு) இதனையே ஸ்ரீத்யாகப்ரும்மம் நாபீ ஹ்ருதக்கண்டரஸனா என்கிறார். நாபியிலிருந்து துவங்கி ஹ்ருதயத்தை, கண்டம் வழியாக நமது சிரஸை அடைந்து, பிரமரந்த்ரத்தின் வழியே சித்தித்து மோக்ஷமடைகிறது. இந்த தத்துவமே எண் சாண் உடம்பிற்கு இணையாக வீணை தண்டியின் பாகம் அமைக்கப்பட்டிருப்பதாக குறிப்புகள் கூறுகின்றன. வீணை தண்டியில் மெட்டும் 24 கொண்டது எட்டின் வர்க்கம் தான் இசையின் ரகசியம். ஓம் நமோ நாராயணாய அஷ்டாக்ஷரம் இதற்கு உதாரணமாக உலகில் அஷ்டகத்தையே கோயிலில் உருவகப்படுத்தப்பட்டுள்ளது. ஐய்யாயிரம் வருடங்களாய் திருவரங்கம் கோயிலே இசைக்கு ஆதாரமானது என்னும் வரலாற்றை எனது தாயாரின் உத்தரவுபடி சேகரித்து அவர் கூறின விவரத்தோடு மற்றவைகளை ஆராய்ந்து திருவரங்கமே இசைக்கு ஆதாரமான கோயில் என்று மெய்ப்பித்துள்ளேன். இங்குதான் ஆழ்வார்கள் சுரத்தோடு, ராகத்தோடு ப்ரபந்த மழையை பொழிந்தார்கள். தமிழிசையாக ஆண்டாள் நாச்சியார் வகுத்தார் அர்த்தபஞ்சகத்தை, தமிழமுதமாக திருப்பாவையை பாமாலையாக சூட்டினார் அரங்கனுக்கு திருப்பாணாழ்வார் அ.உ.ம. மகாரத்தையோ பாசுரமாலையாக சாற்றினார். உ.ம.அ. என்று சொல்லி 1000ம் பாசுரம் பாடின நம்மாழ்வார் வாயாலே திருவாய்மொழியை எம்பெருமான் பறை சாற்றினான். தொண்டரடிபொடியெம்மான் பச்சைமாமலைபோல் மேனி என்று பாசுரம் பாடி அச்சுதன், அனந்தன், கோவிந்தன் என்று சொல்லி கோவிந்தா 24வது ஸ்ருதி என்றார். இந்த எட்டின் வடிவத்தை விவரத்தை எனது இசை ஆய்வுக்கு தேர்ந்தெடுத்துள்ளேன். அஷ்டாங்கவிமானம், அஷ்டவசுக்கள், அஷ்டலஷ்மி, அஷ்டதிக்பாலர்கள், அஷ்டபந்தனம், அஷ்டபதி, க்ருஷ்ணாஷ்டகம், ராமாஷ்டகம், அஷ்டாவதானம், அஷ்டருதுக்கள், அஷ்டகம், அஷ்டமேரு, அஷ்டமிதிதி இவை எல்லாம் எட்டு அக்ஷரங்களின் முக்கியத்துவத்தை பிரதிபலிப்பவனவாகும். எட்டுதான் உலகப்ப்ராதானியம் என்பது எனது கருத்து. எட்டு ஸ்வரங்களின் சேர்க்கையால் 72 மேள ராகம் ஏற்படுகிறது. மேளம் என்றால் எட்டு அக்ஷரம். இந்த எட்டைப் பற்றியே தான் எனது ஆய்வின் கடைசி வரை ஒலிக்கும் எண் ஆகும் என்பதனை தெரிவிக்கின்றேன். இதுவே எனது தாயாரின் குறிப்பாகும். வீணையில் 24 ஸ்வரஸ்தானங்கள் 48, 72, 96 ஸ்தானங்கள் அஷ்டகத்தின் வர்க்கமே அஷ்டாங்கயோகம் என்கிறார்கள். அஷ்டகத்தின் வடிவம் கொண்ட விமானங்கள் 108 விமானங்களில் உள்ளது. ஆகவே இசைக்குரிய ஸ்வரங்கள் 8, 12, 24, 48, 96 ஸ்ருதிகளே ஆதாரங்கள் என்று எனது ஆய்வின் முடிவாகும்.

## காயத்ரீ - மானுடல் தத்துவம்

காயத்ரீ பிராம்மணர்களுக்கு மட்டுமல்லாது ப்ரம்ம, க்ஷத்திரிய, வைசியாளுக்கும் உண்டு. ப்ராமணர்களுக்கு காயத்ரீ சந்தஸ் இதரர்களுக்கு வர்ணத்தாருக்கும் த்ரிஷ்டும் ஜகதீசந்தஸ் காயத்ரீ, ஜபமாகச் சொல்கிறார்கள். காயத்ரீ எப்படி ஜபம் செய்ய வேண்டுமென்றால் - வைகரீ, மத்யமா, பச்யந்தி, பரா என்று நான்கு வித (த்வனி) சப்தத்திற்கு உண்டு. வாக்கினால் சாதாரணமாக ஜபிப்பது அதமம் முணுமுணுத்து உதட்டை அசைத்து ஜபிப்பது இரண்டாம் பக்ஷம். மனத்தினால் உதடு அசையாது ஜபிப்பது உத்தமம். ப்ராணிகளின் மூலாதாரத்தில் சப்த ப்ரம்மம் என்று சொல்லப்படும் சப்தம் 'த்வனி'யாத்மமாக விளங்குவது, இதற்கு பராவாக் என்று கூறுவர். நாபிஸ்தானத்திலிருந்து இந்த 'த்வனி', நாதம் (வைப்ரேஷன்) அடையும்பொழுது மனதுடன் கூட பச்யந்தியென ஆகிறது. இரண்டும் (பராபச்யந்தி) ஆத்மதரம் அதாவது அதிசூஷ்மம் ஹ்ருதயஸ்தானத்தை அடையும் பொழுது அக்னிபிழம்பாக விளங்கும். இதுவே ''மத்யமா'' சப்தமாகும். இது சூஷ்மம் ப்ரஹ்ந்திரமான கழுத்தை (கண்ட ஸ்தானத்தை) அடையும் பொழுது சப்தம் ஸ்தூலமாக வெளிப்படுகிறது. இதற்கு வைகரீ என்று பெயர். ஆக நான்கு பெயருடன் 'த்வனி' (சப்தம்) மூன்று விதமாக சூஷ்மதரம், சூஷ்மம், ஸ்தானம் என்று வெளிப்படுகிறது.

ஒவ்வொரு சப்தம் (சவுண்டு) எந்த இடத்தில் (ப்ளேஸ் ஆப் ஆரிஜின்) கரணத்தில் (ஆக்ஷன் ஆப் ஆர்கன்ஸ் இன் ப்ரொனௌன்சிங்) பிரயத்தனத்தில் (எக்ஸர்ஷன் இன் ப்ரொடியூஸிங் சௌண்டு) மாத்திரை (கால அளவு) (டோன்) ஸ்வரத்தில் (மோடு ஆப் ப்ரொனௌன்ஸிங்) தேவதை (ப்ரிஸைடிங் டெய்ட்டி)யில் எந்த-

ஜாதியியில் (ஊஷ்ம, சௌம்ய, ஆக்னேய என்ற மூன்று ஜாதி) என்று வேத இலக்கணம் ஒவ்வொரு சப்தத்துக்கும் எட்டு அம்சங்கள் இருப்பதாக பெரியோர்கள் எழுதி உள்ளனர். இந்த காயத்ரீயை பிராம்மணர்கள் (1000) ஸஹஸ்ராவிர்த்தி செய்ய வேண்டும். பிரம்மச்சாரி 108, கிரஹஸ்தன் 108 தடவையும் வானப்ரஸ்தசன்யாஸகர்கள் 2000 தடவையும் ஜபம் செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீத்யாகப்ரும்மம் ஸ்ரீகாயத்ரீயை சன்யாசிகள் முறைப்படி ஜபித்து அந்த காயத்ரீயின் 24 அக்ஷரங்களே 24 ஸ்ருதியென்று தனது சாஸ்த்ரீய இசைக்கு தத்துவமாக்கிய பரமபுருஷர். இதனை உணர்ந்து நாமும் தினமும் காயத்ரீயை ஸ்தோத்தரிக்க வேண்டும். காயத்ரீ ஜபித்தால் எண்ணிக்கையில் பத்தில் ஒரு பங்கு ஜபிக்க வேண்டும் என்று சொல்லப்படுகிறது. காயத்ரீ மந்த்ரத்தை துளஸிமணியால் ஜபித்தால் அளவிடமுடியாத பலன்தரும் என்றுசாஸ்த்ரம் கூறுகிறது.

<u>**காயத்ரீமந்திரத்தின் உட்கருத்து:-**</u> காயத்ரீ - சூரியனுக்கும் ஒளி கொடுக்கும் பரம ஒளியே காயத்ரீ, ஈசாவாஸ்யஉபநிஷதம் சராசரங்களில் எல்லாம் எந்த ஒரு பராபரவஸ்து மூல காரணமாகி நின்று தினம் உதயமாகி ஜோதி வடிவாய் கண்களால் காண கூசும்படி பிரகாசித்து வருகிறதோ, எது மனம் வாக்கு கெடாது நிற்கிறதோ அந்த ஜோதி நமது புத்தியை பிரகாசிக்க செய்யட்டும் என்பதுதான், ஆத்ம ஜோதி, தரிசனம் ஏற்பட (காயத்ரீ மந்திரத்தை உச்சாடம் செய்தால் ஆத்மஜோதி தரிசனம் கிட்டும்) ஜபிக்கவேண்டும். மேலும் காயத்ரீ மந்த்ரத்தின் பலன் அடைய ஸ்வரசுத்தியோடு ஜபிக்கவேண்டும். மனம் லயித்துநிதானமாகஸ்வரசுத்தியோடு ஜபிக்க வேண்டும். இந்த சரீரத்தில் 72,000 நாடிகள் இருக்கின்றன (1008 ஸ்தானங்கள், 108 வர்மபுள்ளிகள் உள்ளன). இந்த சரீரத்தில் உள்ள 72,000 நாடிகள் இருப்பதில் மிகச் சிரேஷ்டமான இடகலை, பின்கலை, சுமுமுனை இம்மூன்றின் மூலமாக ப்ரம்மத்தை அறிய முடியும். இது யோக சூக்ஷமம், சகல ஜீவராசிகளில் உச்சுவாச நிசேச்வாசங்களாய் உள்ளுக்கும் வெளிக்கும் ஆடிக்கொண்டிருக்கும் மூச்சுக்காற்றை யக்ஞோ பவீதம் என்றும், ப்ரம்மசூத்திரம் என்றும், ஹம்ஸம் என்றும் சொல்லப்படுகிறது. காயத்ரீ ஜபத்தின் பலன் ப்ராணவாயுவின் அலைவிற்கு நாசம் உண்டானபோது மனம் மிகவும் சாந்தியடைகிறது. அப்போது ஏற்படும் மனோ லயத்தினால் (ஸுஷும்னா) நாடி திறந்து ப்ரம்மரந்திரம் வரை குண்டலினி செல்லும். இது காயத்ரீ ஜபபலன். இந்த காயத்ரீ மந்த்ரமே ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு மூலமந்த்ர ஜபமாகக் கொண்டு, ஸ்ரீரங்கநாதனை வழிப்பட்டு, திருவரங்கத்தில் உள்ள இருபத்தி நாலு தூண்கள் கொண்ட காயத்ரீ மண்டபத்தத்துவம் 24 ஸ்ருதிகள் என்பதை தீர்மானித்து, திருவரங்கத்தானை ஐந்து பஞ்சரத்னம்பாடி, மேலும் ஸ்ரீரங்க கீர்த்தனைபாடி, ஸ்ரீரங்கத்தை சிறப்பித்ததிலிருந்து காயத்ரீ மந்த்ரம் இசைக்கு தாரக மந்த்ரம் என்பதை நமக்கு உணரச் செய்த மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம். ஓம் என்ற ப்ரணவநாதத்தின் மத்யமே <u>அச்சுத மத்யம்</u> என்பதையும், அனந்தன் என்பது பஞ்சபூதங்கள் அதனை தன்னுள்ளே காட்டுகிறவன் பஞ்சமுக காயத்ரீ என்பதையும், பஞ்சபூதங்களை காட்டுவதால் பஞ்சபூதங்களிலிருந்து நம்மை விடுபடுவதற்கும் வழி செய்கிறாள் என்றும், பஞ்ச பூதங்களாய் இருக்கும் ஆதிசேஷனில் உரைபவன் பஞ்சபூதங்களுக்கு சம்பந்தப்படாதவன். அவனுக்கு பஞ்சபூதங்கள் கட்டுப்பட்டது. இது பரதத்வம். <u>**கோவிந்தனே**</u> பஞ்சபூதங்களிலிருந்து நம்மை காப்பவன். ஆகவே அது 24வது ஸ்ருதியாக கோவிந்தா என்று கூறி அனேக பாடல்களிலும் பஞ்சரத்தினத்திலும் கோவிந்தா என்று பொருள்பட உரைக்கிறார். விமான லக்ஷ்ணப்படி அச்சுத ஸட்ஜம் கோவிந்த தார ஸட்ஜம் என்பதை வரையறுக்கிறார். சுதஸட்ஜம், சுத்த ஸட்ஜம், அச்சுத ஸட்ஜம், ஸட்ஜம் (கோவிந்தஸட்ஜம்) 25வது ஸ்தானம் வாஸுதேவர் (பரதத்வம்). ஆகவே 'வாசு தேவஸர்வம்' என்கிறார். இந்த காயத்ரீ மந்த்ரத்தை ப்ரணவம் வ்யாஹ்ருதி, காயத்ரீயை எட்டு அக்ஷரங்களாக மூன்றாக பிரித்து ஆக ஐந்து பதமாய் ஜபம் செய்யவேண்டும். காயத்ரீ தேவிக்கு ஐந்து முகங்கள், 10 கைகள். ஒவ்வொரு முகத்திலும் மூன்று கண்கள், சந்திரகலைத்தரிக்கிறாள். காயத்ரீ மந்த்திரம் தன்னை ஜபிப்பவரை காப்பாற்றுவது என்று அர்த்தம். இத்துடன் காயத்ரீ மந்த்ரத்தின் சிறப்பை உங்களிடம் காண்பித்துள்ளேன். இந்த பக்கத்தில் ஸ்ரீத்யாகப்ரும்மம் காயத்ரீ மந்த்ரத்தினால் நமக்கு கொடுத்த பல அறிய விஷயங்களை உங்களுக்கு மனப்பூர்வமாக நீங்களும் அறிய எழுதியுள்ளேன். அவர் காயத்ரீ மந்திரத்தின் 24 அக்ஷரங்கள் கொண்ட காயத்ரீ மந்திரத்தின் முதல் எழுத்தைக்கொண்டு கீர்த்தனைகளை அமைத்துள்ளார். அந்த முதல் எழுத்தே ஸ்வராட்க்ஷரமாகவும் அந்தஸ்வராட்க்ஷரம் அந்த பாட்டின் ராகத்தின் ஜீவஸ்வரமாகும், நுட்பஸ்ருதியோடு கூடினதாகவும் அந்த ராகத்திற்கான ஸ்வரத்தின் சாட்க்ஷாத்ஸ்வரூபமாகவும் இருக்கும். இதுதான் அவர் கையாண்ட 12, 24, 48, 96 நுட்பஸ்ருதிகளை ஒரு ராகத்திற்கான ஸ்ருதி நிர்ணயத்தில் புகுத்தியுள்ளதை தெள்ளத் தெளிவாகப் புரிந்துகொள்ளவே இந்த ஸ்வராட்க்ஷரம் குறிப்பாகும். ஸ்ரீராம (பாதமாஸாகித்யம்) (பாதமாஸ்வரம்) ஸ்வராக்ஷரம் அம்ருதவாஹினிக்கு ராக ப்ரஸ்தார விளக்கம் அந்த பாதமாவில்தான் உள்ளது. இதுபோல் நீபஜனகானவில் நீ... எழுத்து நீயை சற்று கூட்டி பாடும்படி நாயகி உள்ளது. இந்த நீ ஸ்வராட்க்ஷரம் நீ பஜனகானவில் நீ ஸாகித்யம் நாயகிக்கு கைசிக நிஷாதத்தைவிட நிஷாதஸ்வரத்தின் (ஸ்ருதி வால்யூ) சற்று கூடுதல் ஆனது. இம்மாதிரி பாடங்களில் பாடத்திட்டத்தில்

ஆசிரியை நிஷாதம் கைசிகம் என்னும் போது இதற்கு வரும் நிஷாதத்தைப்பற்றி தெளிவாக்கவேண்டும். அப்போதுதான் அந்த நுட்பஸ்ருதி பற்றி எவ்வாறு ஸ்ரீத்யாகப்ரும்மம் கையாண்டார் என்பது புரியும். கார்வையோடு கூடிய ஜீவஸ்வரத்திலேயே 24 ஸ்ருதியை காட்டி 48, 96 நுட்பஸ்ருதிகளையும் திறம்பட புகுத்தியுள்ளார். இதற்காகவே இவர் வீணையிசையோடு பஜனையில் மாணாக்கர்களுடன் பாடுவார் என்பதிலிருந்து வீணை மட்டுமே ஸ்ருதியை உள்ளபடி காட்டக்கூடியது என்பதுதான். இதனாலேயே இவரது கீர்த்தனைகள் பாடாந்தரம் செய்ய எளிதாக அமைந்தது எனலாம். வழிவழியாக அவரது கீர்த்தனைகள் நாதத்தின் இருப்பிடமாக இருந்து வருவதை இன்றும் காணலாம். குருப்யோநம:

## காயத்ரீ மஹிமை

ஸ்ரீத்யாகப்ரும்மம் 'தரருக்ஸாமாதுலலோ' வரகாயத்ரீ ஹ்ருதயமுன என்று பாடலில் வர்ணிக்கிறார். காயத்ரீ மந்த்ரம் வேதமனைத்துக்கும் பிறப்பிடம். காயத்ரீ என்பது ஸந்தியாவந்தன காலத்தில் ஜபிக்க வேண்டிய ஒரு வேதமந்த்ரம். ஆனால் இது இசைக்கு எவ்வாறு உகந்த மந்த்ரம் ஆனது என்பதை பல கோணங்களில் விவரித்துள்ளேன். காயத்ரீ என்ற ஸமஸ்க்ருத சொல்லுக்கு காயந்தம் + த்ராயத= இதிகாயத்ரீ. தன்னை வழிபடுபவனை, பாடுபவனை காப்பாற்றுவது என்று அர்த்தம். ஆகவே மந்த்ர ஜபம் செய்பவரை காத்து ஸகலஸம்பத்தும், நன்மையையும், கல்வி கேள்வி ஞானத்தையும், நல்லொழுக்கத்தையும் தரவல்லது. மேலும் ஸ்ரீமந்நாராயணன் ஸ்ருஷ்டி செய்யவேண்டும் என்று ஸங்கல்பித்தவுடன் அவனுடைய திருமுகம் மண்டலத்திலிருந்து

1. தேவதைகளில் அக்னியும்

2. மந்திரங்களுள் காயத்ரீ மந்த்ரமும்

3. ஸாமத்திற்குள் ரதந்த்ரமென்றஸாமமும்

4. பசுக்களில் ஆடும் (காயத்ரீ ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்)

5. வர்ணங்களுள் பிராம்மணனும் தோன்றினார்கள் என்று வேதம் கூறுகிறது. எனவே இவ்வைந்தும் புனிதமானது என்று கருதப்படுகிறது. அனைத்துமாக உள்ள பகவான் குறிப்பாக சில பொருள்களில் மட்டும் தன்னுடையதேஜோம்சம் அதிகமாக உள்ளதாக பகவத்கீதையில் கூறுகிறார். இவ்வரிசையில் ''காயத்ரீ ஸந்தஸாமஹம்'' (சந்தஸ்ஸுகளில் வேதமந்த்ரங்களில்) நான் காயத்ரீயாக இருக்கிறேன் என்கிறார். ஆகவே 7 கோடி மஹாமந்த்ரங்களில் காயத்ரீயே சிறந்தது என்பதை பகவான் சொல்லியிருக்கிறார். காயத்ரீயை உபாசிப்பதால் ஆத்ம சக்தியும், மனோபலமும், சரீரபலமும், உயர்ந்ததேஜஸும் வளருமென்று வேதம் குறிப்பிடுகிறது. தவிர வேதத்திலுள்ள மற்ற மந்திரங்களை காட்டிலும் 24 அக்ஷரங்கொண்ட காயத்ரீ மந்த்ரம் உருவத்தில் மிகச்சிறியது. உருவத்தில் மிகச் சிறியதேயாயினும் மகிமையில் மிகப்பெரியது. இந்த காயத்ரீ மந்த்ரத்தை புரிந்து கொண்டு ஜெபிக்கவேண்டும்.

அர்த்தம்:-

''தத்ஸவிதுர்வரேண்யம் - பர்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோந:

ப்ரசோதயாத்'' என்பது காயத்ரீ மந்த்ரம்.

''ஓம் என்ற ப்ரணவத்தையும்'', பூர்புவஸ்ஸுவ: என்ற வ்யாஹ்ருதியையும் முதலில் சொல்லிய பிறகே இந்த காயத்ரீ மந்திரத்தை சொல்லவேண்டும்.

''ஓம் காரத்தை'' நமது உடலில் ஒலிப்பதை கேட்கலாம்.



காதின் அமைப்பு இம்மாதிரி கொண்டது நமது உருப்புகள் அமைத்தும் ஒவ்வொரு விஷயத்தையும் (சத்) தெரிந்துகொள்ளும் சின்னமாக அமைந்திருப்பதாகும். இரண்டு காதுகளையும் விரல்களால் அழுத்திக்கொண்டால் நமது உடலில் அலை ஓசை போன்ற ஒலியோடு ஓம் காரம் ஒலிப்பதை கேட்கலாம். நாம் காயத்ரீ ஜபம் செய்வதனால் இந்த ஓம்காரம் ஸ்திரப்பட்டு நமக்கு ஞானம் தெளிவடையச் செய்து சத்கதிக்கு அழைத்துச் செல்கிறது. ஆகவே ப்ரணவத்தோடு கூடிய காயத்ரீ மந்த்ரம் மிகச் சிறந்ததாகும். இந்தப்ரணவம் ஓம் என்பது பகவானை குறிப்பதாகும். சூடாமணி

| | |
|---|---|
| வ்யாஹ்ருதியும்:- | பூலோக, புவர்லோக, ஸுவர்லோக வடிவிலுள்ள பகவானைக் குறிக்கிறது. இத்துடன் பொருளுக்கேற்றவாறு காயத்ரீ மந்த்ரத்தை பதங்களாக வரிசைப்படுத்தி அப்பொருளை உணரவேண்டும். |

| | | |
|---|---|---|
| ய: | - | எவர் |
| ந: | - | நம்முடை |
| திய: | - | புத்தியை (எண்ணங்களை) |
| ப்ரசோதயாத் | - | தூண்டுகிறாறோ |
| தத் | - | அப்படிப்பட்ட |
| தேவஸ்ய | - | ஒளிமிக்கவரான |
| ஸவிது | - | உலகைப் படைத்தவருடைய (ஸுரியனுடைய) |
| வரேண்யம் | - | மிகவும் உயர்ந்ததான |
| பர்க்கோ | - | தேஜஸ்ஸை |
| தீமஹி | - | த்யானம் செய்கிறோம். |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| தத் அப்படிப்பட்ட | ஸவிது உலகை படைத்த வருடைய | வரேண்யம் மிகவும் உயந்ததான | பர்கோ தேஜஸ்ஸை | தேவஸ்ய ஒலிமிக்க வரான | தீமஹி த்யானம் செய்கி றோம் | தியோ புத்தியை |

| | |
|---|---|
| யோ: எவர் நம்முடைய | ப்ரசோதயாத் தூண்டுகிறாரோ |

எவர் நம்முடைய புத்தியை (எண்ணங்களை)

தூண்டுகிறாரோ அப்படிப்பட்ட ஒளிமிக்கவரான மிகவும் உயர்ந்ததான உலகைப் படைத்தவருடைய (ஸுரியனுடைய) தேஜஸ்ஸை த்யானம் செய்கிறோம். இதுதான் காயத்ரீ மந்த்ரத்தின் அர்த்தம் ஆகும். பதம் பிரிக்கும்போது சரியாகப் பிரித்து அர்த்தம் உணரும்போது ஜபம் பரிணமிக்கிறது.

**இந்த மந்த்ரத்தின் முடிவுரை:**

நமது புத்தியை இயங்கச் செய்யும் சூரிய நாராயணனை நாம் வணங்குவோம் என்பது சுருக்கமான பொருள். ஆகவே காயத்ரீ மந்த்ரம் ஜபம் செய்யும்போது, சக்தி வடிவம் ஆகிய (காயத்ரீ) தேவியையும் சூரியபகவானையும் அவனுக்கு அந்தர்யாமியாக உள்ள ஸ்ரீமந்நாராயணனையும் மனக்கண்முன் நிறுத்தி அவர்களைப் பக்தியுடன் பணிவோமாக. காயத்ரீ பற்றியது:- வேத வ்யாஸர் முதலான முனிவர்கள், மற்றும் புராணங்கள் கூறும் காயத்ரீ - காயத்ரீ என்னும் ஒரு மந்த்ரத்திற்கே ஸாவித்ரீ என்றும் ஸரஸ்வதி என்றும் பெயர்கள் உண்டு.

1. காலையில் - காயத்ரீ என்றும்

2. மாத்யாநிஹத்தில் - ஸாவித்ரீ...

3. மாலையில் - ஸரஸ்வதி என்றும் பெயரை பெறும் ஒரே மந்திரம் இந்த காயத்ரீ.

காயத்ரீ என்பதன் பொருள் - பல விதமான தோஷங்களிலிருந்து தன்னை ஜபிப்பவர்களை காப்பாற்றுவதால் காயத்ரீ என்றும் ஸாவித்ரீ:- ஸுர்யபகவானிடம் விளங்குபவராகையால் அந்த 'காயத்ரீக்கே' ஸாவித்ரீ என்றும்,

ஸரஸ்வதி என்பதன் பொருள்: உலகைப் படைத்தாலும் வாக்குருபமாக இருப்பதாலும் ஸரஸ்வதி என்றும் பெயர். காயத்ரீ உலகத்திற்கு காரணமான பராசக்தி ஸத்வ ரஜஸ், தமஸ், என்ற முக்குணகாரணமாயும் ஈஸ்வரனின் சக்தியாயும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஸாரத்தைக்கான எண்ணினார் பிரும்மதேவன்.

1. ருக் வேதத்திலிருந்து பூ: என்றும்

2. யஜுஸ்ஸிலிருந்து புவ: என்றும்,

3. ஸாமத்திலிருந்து ஸுவ: என்றும் வெளியானது என்று ஸாமவேதம் கூறுகிறது. வேதங்களில் மிகஸாரம் எது என்று மறுபடியும் ப்ரும்மா ஆராய்ந்தார். ப்ரணவம் என்ற ஓங்காரம் உண்டானது. ப்ரணவம், வ்யாஹ்ருதிகள், காயத்ரீ என்று மூன்றும் ப்ரும்மோபதேசமாக உபதேசிக்கப்படுகிறது. ஆகையால் காயத்ரீ ஜபம் இல்லாமல் வேறு எந்த ஜபம், பூஜை, ஆராதனம், பாராயணம் செய்தாலும் பயன்பெறுவதில்லை. இந்த மந்திரத்தை ப்ரணவம், வ்யாஹ்ருதி காயத்ரியை எட்டு அக்ஷரங்களாக மூன்றாகப் பிரித்து ஆக ஐந்து பதமாய் ஜபம் செய்யவேண்டும். ஐம்புலனையும் வெற்றி கண்டு மனத்தை அலையாது காற்றற்ற இடத்தே அமைந்த விளக்குபோல நிறுத்தும் சாதனம் நற்குண நற்பண்புகள், புலனடக்கம், உபாஸன யோகம் இவை மூன்றில் அடங்கியுள்ளது. யோகம், த்யானம் இவற்றால் நற்குண பண்புகள், அடக்கம் முதலியன வருகிறது. பிறப்பினால் தாழ்த்தப்பட்டவனாலும் ஒருவன் கர்மானுஷ்டங்களாலும், வேத அப்யாஸத்தாலும் தன்னைத்தான் உணர்வதால் ப்ரும்மக்ஞானி ஆகிறான். வேதங்கள் நித்ய கர்மானுஷ்டங்களை செய்வதால் சத்கதியடையலாம். அதற்குரிய வழி எப்படி என்று வரையறுத்து கூறுவது உபநிஷதம். இதுவே மோக்ஷத்திற்கு வழி. இதற்கு மூலதனமானது காயத்ரீ ஸ்துதி என்று கூறி காயத்ரீயை நமஸ்கரித்து எல்லோரும் நற்கதியடைய பிரார்த்திக்கிறேன்.

பாஞ்சராத்ர ஆகமப்படி ப்ராணப்ரதிஷ்டை செய்யப்பட்ட கோவில் திருவரங்கம் கோயில் ஆகும். இந்த கோயிலின் அமைப்பு படி ப்ரணவ விமானத்தில் காயத்ரீ மண்டபம் அமைந்துள்ளது. இங்கு மூலஸ்தானம் சாந்தா காரம் என்று புகழ்ந்து ஸ்தோத்தரிக்கப்பட்ட வகையில் சயனம் அமைந்துள்ளது. த்ரவியங்களினால் குழைக்கப்பட்ட தைலக்காப்புக்கொண்டு காப்பாற்றப்பட்டுள்ளது. பாஞ்சராத்ர பவசாஸ்த்ரப்படி இங்குள்ள அரங்கநாதனின் உத்ஸவ விக்ரஹம் பஞ்சலோகத்தாலான விக்ரஹகம் ஆகும். அதனை கவசம் சாற்றி காப்பாற்றப்படுகிறது. கஸ்தூரியினால் திலகமிட்டு கஸ்தூரி ரங்கன் என்று போற்றப்படும் உற்ஸவ மூர்த்தியை ஏனையோரும் போற்றி வணங்குகிறார்கள். ஆகவே பாஞ்சராத்ர ஆகமப்படி ப்ராணபரதிஷ்டை செய்யப்பட்டுள்ள இந்த திவ்யக்ஷேத்ரம் 108 திவ்ய தேசங்களிலும் முதலும் முடிவானதும் ஆகும். இங்கு ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன், சரஸ்வதி, லக்ஷ்மி, காயத்ரீ ஏனையோரும் அந்தர்யாமியாக இருந்து கொண்டு இந்த திருவரங்கத்தை காப்பதோடு உலகையும் காக்கிறார்கள் என்ற எனது ஆய்வின் கருத்து. எனது ஆசிரியரின் ஆணையும் கூட ஆகும். இந்த திருவரங்கத்தில் மண்ணில் பூமியின் அடியில் சாளிக்கிராமம் இருந்ததாக வரலாறுகள் கூறுகின்றன. ஆகவே இந்த திருவரங்க மண்ணை மிதிக்காமல் இருக்கும் வண்ணம் முழங்காலால் பட்டைகளை கட்டிக்கொண்டு தவழ்ந்து எம்பெருமானை ஸேவிப்பதற்கு சென்றதாக வரலாறுகள் கூறுகின்றன. இந்த மண்ணிற்கே ஒரு மகத்துவம் உள்ளது. அர்ச்சுனனுக்கு விராட விஸ்வரூபத்தை காட்டிய கண்ணன், வாஸுதேவன், கோவிந்தன் எல்லோரும் விமானத்தில் உள்ளனர். தசாவதாரம் கொண்ட நாராயணன், மஹாவிஷ்ணு இந்த க்ஷேத்திரத்தில் இருக்கிறார்கள். விமானத்தில் வாஸுதேவனுடைய விபவம்மாகவும் அதாவது வாஸுதேவனுடைய பிள்ளை அவருடைய பிள்ளை ஆகியோருடைய விருத்தாந்தங்கள் அடக்கியிருப்பதாலும் கோவிந்தாவே 24 அட்க்ஷரம் என்பதால் இந்த விமானத்தில் ஓம் ப்ரணவ விமானத்தில் இரண்டாவது திருசுற்றில் கண்ணனுக்கு தனி சன்னதி உள்ளது. ராமனுக்கு இல்லாத ஏற்றம் கிருஷ்ணனுக்கு அளிக்கப்பட்டதன் காரணம் இதுவேயாகும். மேலும் கண்ணபிரான் சந்தஸ்ஸில் காயத்ரீயாக இருக்கிறேன் என்று கூறுகிறார். பாவை விளக்கு இருக்கும் இடம் பொன்னரங்கம் என்று பெயர் பெற்று விளங்குகிறது. நர்மரங்கம், பொன்னரங்கம், திருவரங்கம், ஸ்ரீரங்கம் என்று போற்றப்படும் இந்த திருவரங்கம் பூலோக வைகுண்டமானதால் இத்திருவரங்ககோயிலில் வைகுண்டத்திலுள்ள ஏனைய விஷயார்த்தங்களும் இங்கு உள்ளன என்பதை பெருமையுடன் கூறிக்கொள்கிறேன்.

<u>ஓம் ப்ரணவம் பற்றிய விளக்கம் சிறப்பு உரையாக அளிக்கப்படுகிறது</u>

*ப்ரணவ ஓம்காரப்ரம்மம் பற்றிய விளக்கம் ஓம் என்ற இந்த அக்ஷரம் 'ப்ரணவம்' அழிவற்ற ப்ரம்மம் ஆகிறது. பெரியது, வ்யாபிக்கிறது என்பதனால் அது ப்ரம்மம் என்று ஆகிறது. பூலோக புவர்லோகம் ஸுவர்க்கலோகம் ஆகிய மூன்றும் இந்தப் ப்ரணவமந்திரத்தில் அடங்கி உள்ளது. அந்த ப்ரணவமே ருக், யஜுர், ஸாம, அதர்வணம் என்ற நான்கு வேதங்களாக இருக்கிறது. ஆகவேதான் ஓம் என்ற ஸ்ரீரங்கப்ரணவ விமானத்தில் உள்ள நான்கு கலசங்களும், நான்கு வேதங்களாகச் சொல்லியுள்ளேன். ஐந்து கலசங்களின் தோற்றம் காயத்ரீயின் ஐந்து தலைகளாக கூறியுள்ளேன். ஜகத்தின் உற்பத்தி அழிவுகளுக்குக் காரணமாக அறியப்பட்டதும் மஹத்தத்துவத்திற்கும் மேலான ஸுக்ஷ்மமானதும் ஆகிய ஓம்கார ப்ரும்மம் ஆழம் காணமுடியாதது கடக்க முடியாதது. அதுவே தமோ குணத்தால் ஸம்ஸார மயக்கத்தை உண்டாக்குகிறது. ரஜோ குணத்தால் ப்ரவ்ருத்தி, போகம், மோக்ஷத்திற்கு காரணமாக உள்ளது. அதுவே பரமாத்மா <u>'வாஸுதேவனின் ஸ்வரூபம்'.</u> இது திவரங்கக் கோயில் அமைப்பு. ஓம்ப்ரணவ விமானத்தால் 108 திவ்யதேசங்களில் சிறப்பானது. இந்த ஓங்காரப்ரம்மம் பிரிக்க முடியாத பிரிவுகளைக் கொண்டது. (அகார, உகார, மகாரங்கள்) அ+உ+ம=ஓம் இதுவே மூன்று வேதம் ஆகிறது. இதுவே வேதங்களைப் பல சாகைகளாகப் பிரிக்கிறது. இதுவே சாகைகளைப் பிரிக்கும் வ்யாஸரின் ஸ்வரூபம். ஞானஸ்ரூபம். இவ்வித சிறப்புகளை கொண்டு ஓம்காரப்ரும்மமான பரவாஸுதேவரை நமஸ்கரிப்போமாக - ஆகவே தான் இந்த விமானத்தில் - ஏனைய விசேஷங்களும் அடங்கியதால் பூலோக வைகுண்டம் ஆகிறது. இந்த ஓம்ப்ரணவாகார திவ்ய விமானத்தில் ஒன்று நாலுவேதங்கள், நான்கு கலசங்கள் - நாலு திக்குகளுக்கும் நான்கு கலசங்கள் உள்ளது. அவை நரன், நாராயணன், ஹரி, கிருஷ்ணன். ஐந்து கலசங்கள் உள்ளது, அவை காயத்ரீயின் ஐந்து தலைகளாக நான் கூறியுள்ளேன். மற்றொன்று வாஸுதேவர், சங்கர்ஷணர், ப்ருத்யுமனர், அனிருத்தர், நாராயணன். இந்த ப்ரணவ விமானத்தில் பரவாஸுதேவரின் பாதி கால்களுடைய மீதி பாதி கால்கள் கர்ப்பக்ரஹத்தில் இரண்டு தூண்களாக ஸேவிக்கப்படுகிறது. அவை இரண்டும் திருமண தூண்கள் கந்தஸ்தம்பங்கள் எனப்படுகிறது. இங்குள்ள ஐவராகிய பரவாஸுதேவர், சங்கர்ஷணர், ப்ரத்யுமணர், அனிருத்தரன், நாராயணன், என்பவர்களை 'ஐவருக்கு அருள் செய்த பெருமாள்' என்று அரையர் ஸ்வாமிகள் போற்றி பாடுகிறார். விமான லக்ஷணப்படி இசை கணிதத்தை கணித்து உங்களுக்கு தனியாக வகையில் விளக்கமாக தந்துள்ளேன். இங்குதான் இசைக்கான 24 ஸ்தானங்கள் காயத்ரீயின் 24 அக்ஷரமாக பாவிக்கப்படுகிறது. 24 ஸ்ருதியாக அனுமானிக்கப்படுகிறது. 12, 24 (<u>48, 96</u>) நுட்பஸ்ருதிகள் இவைக்கான விளக்கத்தை வீணையின் ஸ்வர விளக்கத்தோடு விளக்கியுள்ளேன். இந்த ஓம் ப்ரணவ விமானத்தின் மகாரமே இசைக்கு ஆதாரமான மத்யமஸ்ருதி ஆகிறது. இதையே அச்சுத மத்யமம் என்று கூறியுள்ளேன். இந்த அச்சுதம் என்பது அரங்கனையே குறிப்பதாகிறது. அஷ்டாக்ஷரன் என்பதால் 8, 16, 32 - 8, 12, 24, 48, 96 ஆகிய ஸ்வர ப்ரஸ்தார விளக்கத்தை பல இடங்களில் விளக்கியுள்ளேன். இவை எல்லாமே இந்த விமானத்தில் அடங்கியுள்ளது. இதில் 8 என்பது ஆதிதாளம் 12 என்பது ஸ்தானங்கள், 24 என்பது ஸ்ருதிகள், 36 என்பது மேளராகம், 32 என்பது ஆதிதாளம், 24 என்பது காயத்ரீயின் 24 அடஷரங்கள் இந்த காயத்ரீயினுடைய 24 அக்ஷரத்தினாலேயே இத்திருவரங்கம் கோயில் இசைக்கு ஆதாரமான கோயில் என்பதை மறுக்க முடியாத உண்மையாகிறது.*




விமானத்தின் ஸ்வர நிலை! 32 அக்ஷர கணக்கிலிருந்து அரங்கன் அஷ்டாக்ஷரத்திற்கும், இசைக்கும் பொருந்தும் விதம். ஆதாரம் 32 அக்ஷரம் - 1லகு ௨ த்ருதம்.

<u>ஓம் ப்ரணவ காயத்ரீ சக்ரம் பற்றிய விளக்கம்</u>

ஸூர்யபகவானிடம் விளங்குபவள் காயத்ரீ. இந்த காயத்ரீ உலகத்திற்கு காரணமான பராசக்தி ப்ரணவம் பகவானை குறிக்கிறது. வ்யாஹ்ருதியும் பூலோக - புவர்லோக - ஸுவர்க்கலோக வடிவிலுள்ள பகவானைக் குறிக்கிறது. நமது புத்தியை இயங்கச் செய்ய சூரிய நாராயணனை வணங்க வேண்டும். அதற்கு இசை மூலம் வழிபடலாம். சக்தி வடிவமாகிய காயத்ரீ தேவியையும் ஸூர்யபகவானையும் அவனுக்கு அந்தர்யாமியாக உள்ள ஸ்ரீமந்நாராயணனையும் மனக்கண் முன் நிறுத்தி அவர்களை பக்தியுடன் பணிந்து ஜபம் செய்ய வேண்டும். இதற்கு தகுந்த இடம் திருவரங்கம் கோயிலேயாகும். இதற்கு நமக்கு உறுதுணையாக இருப்பது இசையேயாகும். இசையால் தெய்வத்தை வசப்படுத்தி நமக்கு மேலான கதியை பிராத்திக்கலாம். ஆகவே இசை வடிவம் கொண்ட ப்ரணவ விமானத்தை பாசுரங்களை சுரத்தோடு பாட தெய்வாம்ஸத்தை பெறலாம் என்பது எனது கருத்து. இதுவேஎனது ஆய்வின் முடிவாகிறது. இந்த வழியை திருவரங்க காயத்ரீ மண்டபத்தில் ஸ்ரீகாயத்ரீயை தியானிப்பதன் மூலம் கிடைக்கிறது. இந்த சக்கரத்தில் அனுமந்த்ர, மந்த்ர, பஞ்சம, மத்யஸ்தாயி, தார, அதிதாரஸ்தாயிகள், வீணையில் எப்படி செயல்படுகிறது என்பதையும் காட்டுகிறது. வீணை இசையால் தெய்வீகத்தை அடையலாம் என்பது சான்றோர்கள் கருத்து. இந்த ஓம்காரத்தில் நாலு புரத்திலும் ப்ரணவ மத்யமத்தை ஒலிக்கும் அதிபதியான ஸூர்யநாராயணனிடம் இருந்து ஒளி எப்படி வெளி கிளம்புகிறதோ அப்படி தன்னுள்ளே ஐந்து மத்தியமத்தையும் அடக்கி தன்னுள்ளே ஐக்கியமாக்குகிறான் ஸூர்யநாராயணன் என்ற சித்தாந்தத்தை கவனிக்கலாம். இங்கு காலை விஸ்வரூபம் வீணை இசையோடு தொன்று தொட்டு புராதன வழக்கப்படி முறைப்படி நடக்கிறது. ஆகவே ப்ரபந்த பாசுரங்களைக் கொண்டு தமிழிசையை பாடி அரங்கனை வழிபடுவோமாக.

இப்படிப்பட்ட திருவரங்கம் கோயிலில் உள்ள ஸ்ரீ காயத்ரீ தேவதைக்கு க்ஷீரான்னம் (பாலுடன் கலந்தஹவிஸ் ) நிவேதனம் செய்யப்படுகின்றது. ஏனெனில் காயத்ரீ தேவிக்கு க்ஷீரான்னம் பரமஸந்துஷ்டியை கொடுக்குமாம். இனி வீணையிசை குறிப்பை பார்ப்போம்.

அனுமந்த்ர ஸ்தாயி பஞ்சமம் ப - ஸ வானால் - மந்த்ரஸ்தாயி ஸ - ம வாகும்.

மந்த்ரஸ்தாயி ப - ஸ வானால் - பஞ்சமஸ்தாயி ஸ-ம வாகும்

மந்த்ரபஞ்சமஸ்தாயி ப - ஸ வானால் மத்யஸ்தாயி ஸ - ம வாகும்.

மத்யஸ்தாயி ப - ஸ வானால்தாரஸ்தாயி ஸ் - ம வாகும்

தாரஸ்தாயி ப் - ஸ வானால் அதிதாரஸ்தாயி ஸ் - ம வாகும்

வீணையின் முறைப்படி இந்த குறிப்பேடு தரப்பட்டுள்ளது. ஆகவே இசைக்கான கோயில் திருவரங்கமே முதலும் முடிவானதும் ஆகும் என்பது என் ஆய்வின் கருத்து.

தமிழிசைக்கான 7, 8, 12, 24 ஸ்ருதிகளும், 48, 96 நுட்பஸ்ருதிகளையும் தெள்ளத் தெளிவாக அறிந்து கையாண்டு பாடி அரங்கனை வழிபடுவோமாக. இதற்கான குறிப்புப் படம், 3ல் விஸ்தரித்துக் காட்டப்பட்டுள்ளது.

<u>ஸ்ரீரங்க விமானம்:- இசைக்கு ஆதாரமானது</u>

5000 ஆண்டுகளுக்கு மேலாக இன்றும் தெய்வீக ஒளிவீசும் ப்ரணவாகார திவ்ய விமானத்தின் இசைக்காதாரமான விஷயங்கள் இங்கு எழுதப்பட்டுள்ளது. ஓம் என்ற வடிவம் கொண்டது. இந்த விமானம் கர்ப்பக்ரஹத்திலேயே அடங்கி உள்ளது என்பதனை இசைவடிவத்தால் விளக்கப்பட்டுள்ளது.

<u>முதல்திருச்சுற்று</u>

வைகுண்டம் போன்ற பூலோக வைகுண்டம்

1. ஜெயன் விஜயன் துவாரபாலகர்கள்

2. ஸன்னதியுள் நுழையும் திருவாசல் இதற்கு அணுக்கன் திருவாசல் என்று பெயர்

3. ஸ்ரீ ஆதிவராஹன்

4. விமானப்ரகக்ஷணம் இதுவே தர்மவர்மா திருச்சுற்று

5. விஷ்வக்ஸேனர் என்னும் கணநாதர்

*6. மேற்கூரையில் சுவர் சித்திரங்களை காணலாம்*

*7. யோஹ அநந்தன்*

*8. சுவர் சித்திரங்கள்*

*9. யோக நரஸிம்மன்*

*10. சுவர் சித்திரங்கள் வண்ணப்படம்*

*11. திருவடித்தாயாரான துர்க்காதேவி*

*12. விமானப்ரதக்ஷணம் முடிவு*

*13. நாரணர்*

*14. வெளியே வந்தால் இருக்கும் இடம் காயத்ரீ மண்டபம் - இந்த காயத்ரீயின் 24 எழுத்துக்களைப்போல்24 தூண்கள் இருப்பதைக் காணலாம்.*

*15.கர்பக்ரஹவாசல் - குலசேகரன் படி எனப்படுகிறது.*

*16. கந்தஸ்தம்பங்கள் எனப்படும் திருமணத்தூண்கள்*

*17.பாம்பணையில் பள்ளிகொண்ட கோலத்தில் பெரியபெருமாள், இங்கு யாகபேரர், உபநாச்சிமார்கள் உள்ளனர்*

__*விமான லட்க்ஷணம்*__



*- எனது குறிப்புப்படி இம்மாதிரி உள்ளவை வ்யூகங்கள்.*

*- அரங்கன் - ரங்கனாதன் இவரை ஐவர் காத்தபெருமாள் என்று கூறுகிறார்கள். வாஸுதேவர், சங்கர்ஷணர், ப்ரத்யுமனன், அனிருத்ரன், நாராயணனன்.*



*- வாஸுதேவர, சங்கர்ஷ்ணர், ப்ரத்யுமனர், அனிருத்ரர் இந்த கலசம்மேல் ஆமலசக்ரம், சாந்தசக்ரம், சாந்தோதித சகரம், உதித சகரம் உள்ளது.*



*- நான்கு வேதங்கள் ருக், யஸுர், சாம, அதர்வணம் நாலு கலசங்கள். நரன், நாராயணன், ஹரி, க்ருஷ்ணன் என்று கூறப்படுகின்றது.*



*- நர, நாராயண, ஹரி, க்ருஷ்ணன் நாலு கலசங்கள் நாசாமுக கலசங்கள் என்றும் புராணம் கூறுகிறது.*

*ஆதிதாளம், ஜம்பதாளம் - ஆதிதாளம் அஷ்டாக்ஷரனுக்கு, ஜம்பதாளம் ஐவருக்காக போடப்படுகிறது என்பது எனது கருத்து.*

*பேரீதாடனம் - கொடியேற்றப்பட்டவுடன் மாலை திக்தேவதைகளைக் கூப்பிட்டு உத்ஸவம் ஆரம்பிப்பதை தெரிவிக்க செய்யும் பத்ததி. இதில் தாள வகைகள் உள்ளன. இது பட்டர்ஸ்வாமிகளாலும், அரையர் ஸ்வாமிகளாலும் நடத்தப்படுகிறது.*

*வ்யூகம் 32 காயத்ரீயின் 24 அக்ஷரங்களையும் 8 அஷ்டதிக்தேவதைகளை குறிப்பதையும் 32 வ்யூகங்கள் என்று சொல்லப்படுகின்றது. (வழிமுறையாக)*

*வ்யூகம் 8 - 8 திக்தேவதைகள் அஷ்டாக்ஷரன் 8 அக்ஷரம் ஆதிதாளம் 8 அக்ஷரம் எனது குறிப்பு.*

*த்வாதசாக்ஷரம் 12 - ஓம் நமோ பகவதே வாஸுதேவாய என்பதாகும். வீணையில் 12 ஸ்வரஸ்தானங்கள் இது எனது குறிப்பு.*

*8, 12, 24, 32, 24★ 12 - 36 - இவையெல்லாம் வீணையின் ஸ்ருதியாகவும் கோடிட்ட 8, 12, 24 அக்ஷரங்கள் என்றும் 32 ஆதிதாளத்தின் அங்க அடையாளம் என்றும் காயத்ரீ மண்டபத்தின் 24 தூண்கள் ★ திருவெண்ணாழி ப்ராகாரம் 12 தூண்கள் ஆக 36ம் சுத்த மேளராகத்தை குறிப்பதென்றும் ப்ரக்ருத்யை, விக்ருத்யை, என்று ஸ்ரீரங்க நாயகியை அர்ச்சிக்கிறார்கள். இதுவே ப்ரக்ருதி - விக்ருதி பேதத்திற்கான அடையாளம். மேற்சொன்ன 36. ப்ரக்ருதி ராகம். 36 தாயாரின் விக்ருதி நாமாவளியானது - ரிகமதநி என்கிற ஸ்வரப்படி விக்ருதி ஸ்வரங்கள் ஆகிறது. இது ப்ரதி மேளராகம் 36 ஆகும். ஆகவே ஸ்ரீரங்கம் விமானம் லட்க்ஷணப்படி இசைக்கான குறிப்பை எனது தாயாரின் அறிவுரைப்படி விளக்கியுள்ளேன்.*

*செல்வி: அ.சூடாமணி*

**<u>இதனை தொடர்ந்து விமானத்தின் ஸ்ருதி கணக்கால் இசைத்தத்துவம் கொண்ட கோயில் திருவரங்கமே என்று தெளிவுபெறுகிறது. ஸ்ருதிகளின் தீர்மானம் - விமானம் - ப்ரணவவிமானம்.</u>**

இதுவரை கூறப்படாத அனேக விஷயங்களை இந்த ஆய்வில் கூறப்பட்டுள்ளது. முழு ஆதாரத்தோடு கூறப்பட்ட இந்த விவரங்களை நான் தெள்ளத்தெளிவாக விளக்கியுள்ளேன். தமிழிசைக்கான 12, 24, 48, 96 ஸ்ருதிகளை ஸ்ரீத்யாகப்ரும்மம் எப்படி கையாண்டார் என்பதற்கு இந்த விமான லட்க்ஷணமே காரணம் என்பது எனது ஆய்வின் முடிவு. ஸ்ரீத்யாகப்ரும்மம் காயத்ரீயின் 24 அக்ஷரத்திலும் 24 கீர்த்தனைகளை பாடியதிலிருந்து என் கண்ணோட்டம் உறுதியாகிறது.

**<u>விமானத்தின் ச்ருதி கணக்கால் இசைத்தத்துவம் கொண்ட கோயில் திருவரங்கமே என்று தெளிவுபெறுகிறது.</u>**

**<u>ஸ்ருதிகளின் தீர்மானம்</u>** - **<u>விமானம்</u>** - **<u>ப்ரணவவிமானம்</u>**

ஸ்ருதிகள் 24 - 24 வது ஸ்ருதி கோவிந்தா - வாஸுதேவன் ட்டு அச்சுதன் ட்டு அனந்தன்
8 8

ட்டு கோவிந்தன் ட்டு வாஸுதேவன் 8 என்பது அஷ்டாக்ஷரன். மேற்சொன்ன 8+8
8 8

8+8= ஆதிதாளம் 32 அட்க்ஷரம்

| | | | |
|---|---|---|---|
| <u>3</u> ஸ்ருதிகள் | ஸ | ப | ஸ் |
| | ப்ரக்ருதி | ப்ரக்ருதி | ப்ரக்ருதி எல்லை |
| | ஆதாரம் | நடுநிலை | முடிவுஸ்வரம் |
| இதன் தத்துவம் நம்மை | | தாயாரானவள் | பரம்பொருளிடம் சேர்க்கிறார் |

ஆகவே தாயாரை ப்ருக்ருதியை நம:- விக்ருதியைநம:- என்று ஸ்தோத்தரிக்கப்படுகிறார்.

அடுத்து ரிகமதநி - விக்ருதிஸ்வரங்கள்

பழைய நூல்கள் சுத்த ஸ்வரங்களாகிய | சுத்தஸ்வரங்கள் ஸரிகமபதநி-(யை) ப்ரக்ருதிஸ்வரம் என்று கூறப்படுகிறது

தற்காலத்தில் ஸ - ப ப்ரக்ருதிஸ்வரம் என்றும் ரிகமதநியை விக்ருதிஸ்வரம் என்றும் கூறப்படுகிறது.

கல்லூரிப்பாடங்களில் இதையே நடத்தப்படுகிறது.

எனது குருகுலத்தில் சுத்தஸ்வரங்களாகிய ஸட்ஜம், சுத்த ரிஷபம், அந்த்ர காந்தாரம், சுத்தமத்யமம், பஞ்சமம், சுத்த தைவதம், காகலி நிஷாதம், தாரஸ்தாயிஸட்ஜம், ப்ரக்ருதிஸ்வரங்கள் என்றும் இதற்கு நேரிடையான ஸட்ஜம், சதுஸ்ருதி ரிஷபம், ஸாதாரண காந்தாரம், ப்ரதிமத்யமம், பஞ்சமம், ஸதுஸ்ருதி தைவதம், கைசிக நிஷாதம், தாரஸ்தாயி ஸட்ஜம் என்றும் ஆனால் பூர்வநூல்கள் சுத்தஸ்வரங்களாகிய ஸரிகமபதநிஸ் ப்ரக்ருதிஸ்வரங்கள் என்றும் இதற்கு நேர்மாறான ஸ்வரங்கள் விக்ருதிஸ்வரங்கள் என்று கூறுகின்றன.

ஸப்தஸ்வரங்கள் - ஸரிகமபதநி - 7 ஸ்வரஸ்தானங்கள் ஸம்பூர்ணராகம் என்று கூறப்படுகிறது.

எட்டு ஸ்வரங்கள் ஸரிகமபதநிஸ் - 8 ஸ்வரஸ்தானங்கள் மேளராகம் மேளகர்த்தா எனப்படுகிறது. ஓம் நமோ நாராயணாய, நம : அஷ்டாக்ஷரம் 8

12 ஸ்வரஸ்தானங்கள்

ரிகமபதநி [ஸ] (நீக்கி / தட்டு) ரிகமபதநி <u>ஸ்</u> ரிகமபதநி <u>ஸ்</u>
2 2 2 1 2 2 1 2 2 2 1 2 2 1

ரிஷபம் 2, காந்தாரம் 2, மத்யமம் 2, பஞ்சமம் 1, தைவதம் 2, நிஷாதம் 2, தாரம் 1, ஆக 12

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 16 ஸ்வரஸ்தானங்கள் | ஸ | ரிகமபதநிஸ் | ரிகமபதநிஸ் | - | 16 ஸ்தானங்கள், 16 ஸ்ருதிகள் |
| | 1 | 3 3 2 1 3 3 1 | 3 3 2 1 3 3 1 | | 4 சுரங்களுக்கு 2 வீடுகள் |

24 ஸ்ருதிகள் வரும் நிலை ஸரிகமபதநிஸ 24 ஸ்ருதிகள் 24 ஸ்தானங்கள் இவை
தட்டும் 3 3 3 3 3 3 3 3

வீணையின் கணக்கு (தட்டே) ஸட்ஜமாகும் ஸ்வரம் 7, 8, 12, 24, <u>48, 96</u> நுட்பஸ்ருதிகள்

*1. வீணையில் மேளப்படி 12, 24, 48, 96 வீடுகள் - வீணையில் கொடுக்கப்பட்ட வீடுகளில் வாசிக்கும் ஸ்வரம் மெட்டிற்காக வைத்தஸ்ருதி பேசும், ஆனால் ஒரு ஸ்ருதியை தீர்மானிக்க வீணையிலுள்ள நாலு தந்திகளில் வரும் ஸ்வர நிலையை அனுபவத்தில் அறிந்துக் கொள்ளவேண்டும். சுத்தமான ஸ்ருதியாக நிற்கும் நிலை என்ன என்பது பற்றி எனது குருகுலத்தில் எனது குருவின் பாடம் மாணவர்கள் மனதில் ஆழப்பதியும் வண்ணம் போதிக்கப்பட்டுள்ளது.*

*2. மேற்சொன்ன அனைத்து விஷயமும் திருவரங்க விமானத்தில் உள்ள கணக்குகள். ஆதாரஸட்ஜம் ட்டு தாரஸட்ஜம் 8 அக்ஷரம் இங்குதான் 24 ஸ்தானங்களில் 24 வது ஸ்தானம் கோவிந்தா எனப்படுகிறது. இந்த பக்கத்திலுள்ள அனைத்து விஷயமும் விபரம் அமைப்பு அ.சூடாமணி ஜெயம்மாளால் சரிபார்க்கப்பட்டது.*

*விமானத்தில் ஸ்வரநிலை கூறப்பட்டது. இப்பொழுது கோவிலில் இருக்கும் ராக, தாள வகைகளை கூறப்பட உள்ளது. குமுதன், குமுதாக்ஷணன், சங்குகர்ணன், சுமுகன், புண்டரீகன், வாமனன், சர்வநேத்ரன், சுப்ரதிஷ்டன் மேற்சொன்ன எட்டுபேரும் விமானத்தை காக்கும் தேவதைகள். இவர்கள் ப்ரம்மோத்ஸவ காலங்களில் உத்ஸவம் நடப்பதை தெரிவித்து (எல்லா திக்கையும் பாதுகாப்பதால்) அவர்களுக்கு நியமம் செய்து கூறப்படுகிறது. பேரீதாடனத்தில் சொன்னபடி (ராக, தாள, பாவ, ஸ்வரம்) ஸ்வரத்தோடு தெரிவிக்கிறார்கள் என்று எழுதப்பட்டுள்ளது. இதில் உள்ள தாளங்கள், நிருத்யங்கள், ராகம், ஸ்வரம் முதலியவைகளைக்கொண்டு பார்த்தால் புராணக் காலத்தில் இருந்தவைகளாகத் தோன்றுகிறது. ஒருசில ராகங்கள், தாளங்கள் 108 தாளவகைக் கொண்டதில் இருக்கிறது. பலராக தாள பாவஸ்வரங்கள் தற்போது இல்லை. புராதனமான பண்ணாக உள்ளது. இந்த விவரங்கள் இக்கோயில் 5000 ஆண்டுகளாக இருந்ததை தெரிவிக்கிறது. இந்த பேரீதாடனத்தில் அர்ச்சகர் முதலில் <u>பேரீதாடனம்</u> (நடத்தும்போது) <u>வீரவண்டி</u> என்ற சிறிய பேரீ கொண்டு வாசிக்கப்படுகிறது. இதனை அடுத்து அரையர் <u>பேரீதாடனம்</u> (நடத்தும் போது <u>சுற்று மேளத்தை</u> உடன் வாசிக்கிறார்கள். அடுத்து <u>பெரிய மேளத்தை</u> கொடியேற்றம், வீதி புறப்பாட்டின்போதும் அடிக்கப்பபடுகிறது. புறப்பாட்டிற்கு <u>ஜெக்க</u> வாத்தியத்தின் மூலம் புறப்பாடாகிறது என்று தெரிவிக்க அதற்கென்று <u>அடிக்கும் ஒலியை</u> எழுப்புகிறார்கள். அது <u>ஓம்</u> என்ற ஒலியாக ஒலிக்கிறது. <u>திருச்சின்னம்</u> புறப்பாட்டிற்குப்பின் ஊதப்படுகிறது. இந்த திருசின்னத்தில் <u>ஓம்</u> என்ற <u>ஒலியை</u> எழுப்புகிறார்கள். இந்த வாத்யங்கள் எல்லாமே ஓம்காரத்தை பரைசாற்றுகின்றது. ஓம்கார வடிவ விமானத்தின் சின்னம் ஓம்மை ஒலிகர்ட்டும் பல பக்கமேள, தாளங்களால் வாசித்து பறை சாற்றுகிறார்கள். திருவரங்கம் திருப்பதியில் இந்த வாத்யங்கள் விமானம் கீழ் இறங்கும் போதே இந்த தேவதைகள் எல்லாமுடன் வந்ததாக புராணவரலாறு கூறுகின்றது. என் ஆய்வின்படி இந்த திருவரங்கமே இசைக்காதாரமான கோயில் என்பதாகிறது. இங்கு வாழ்பவர்கள் மேலான மோக்ஷம் பெற எளிதான முறை கைக்கொண்டாலே போதும் என்று புரிகிறது. 7 பிரஹாரம் கொண்ட இந்த கோயிலை ப்ரதட்க்ஷணம் செய்து ஹரி ஓம் நமோநாராயணாய என்று கூறி அரங்கனை பக்தி செய்தாலேயே அவன் திருவடி அடைய நல்ல வழி கிடைக்கிறது என்பது எனது ஆழ்ந்த கருத்து. த்யாகராஜர், தீக்ஷிதர், அரங்கனை போற்றி பாடியுள்ளார்கள். புரந்தரதாஸர் ரங்கனைப் பாடியுள்ளார். மேலும் ஸ்ரீமந்நாராயணனுடைய சந்நிதியில் காயத்ரீ ஜபம் செய்தால் எல்லையில்லா பலனைத்தரும் என்று சிவபெருமான் சிலாகித்து கூறுகிறார். ஆகவே நமக்கு கிடைத்த பாக்யம் திருவரங்கத்தில் காயத்ரீ இருப்பது நமக்கு எல்லையில்லா பாக்யத்தை தரும் என்பதேயாகும்.*

***<u>108 திவ்ய தேசங்களில் முதலும் முடிவுமாகவும், 108 திவ்யதேசங்களுள் திருவரங்கமே சிறந்த முதன்மையான தொன்மையான கோயில் என்பது பற்றி ஆய்வில் ஒரு கண்ணோட்டம்: சூடாமணி</u>***

*1. இசைக்கு ஆதாரமான கோயில் திருவரங்கம்தான் முதன்மையானது <u>108</u> திவ்ய தேசங்களில் முதன்மையானது.*

*2. வைகுண்டத்தை போன்றது பூலோக வைகுண்டம் என்று பெயர் பெற்று <u>108</u> திவ்யதேசங்களில் முதலும் முடிவானதும்.*

*3. இயல், இசை, நாடகம், முத்தமிழை ஆதரித்த அரசன் அரங்கன் என்பதனால் <u>108</u> திருப்பதிகளில் முதன்மையானது.*

*4. மதுரகவியாழ்வாரைத்தவிர மற்ற ஆழ்வார்களும் ஆண்டாளும் இந்த தலத்தில் வந்துரைந்து நம்பெருமாளான அழகிய மணவாளனுக்கு பாசுரமாலை சாற்றுவித்த பெருமை பெற்றதும், அ.உ.மகாரத்தை சொன்ன திருப்பாணழ்வார் ஸ்ரீரங்கனாதனுடன் ஒன்றிவிட்ட பெருமை பெற்ற திவ்யதேசம் <u>108</u> என்ற திருப்பதிகளில் முதன்மையானது.*

*5. காயத்ரீ மண்டபத்தில் 24 தூண்களால் (இசைதத்துவம் அடங்கிய கோயில் என்பது காயத்ரீயின் 24*

அக்ஷரமும் 24 ஸ்ருதிகள் என்பதை (காயத்ரீ மண்டபத்தில் கேட்கலாம்) ஆதலால் இசைக்கு முதலும் கடைசியுமான விவரம் அனைத்தும் கொண்ட திருவரங்கம் 108 திவ்ய தேசங்களில் ஒன்றாகும்.

6. ஓம் ப்ரணவ விமானத்தில் இசை தத்துவம் அடங்கியுள்ளதால் இசைக்கு ஆதாரமான கோயில் என்பதனாலும் 108 திவ்ய தேசங்களில் சிறந்தது.

7. ஸப்தப்ரகாரம், அஷ்டாக்ஷரம், த்வாதசாக்ஷரம் மந்திரத்தால் சிறப்பு கொண்ட கோயில், இசைதத்துவம் அடங்கியுள்ளது. பேரீதாடனம் போது அர்ச்சகர் திக்தேவதைகளை கூப்பிட்டு திக்பந்தனம் செய்கிறார் தானத்தோடு. பேரீதாடனக் குறிப்பில் பல தாளங்கள் உள்ளது. தனியாகத் தரப்பட்டுள்ளது.

அரையர் தாளத்தோடு பெருமாளுக்கு (பேரீதாடனத்தின்போது) உத்ஸவம் ஆரம்பிக்கப்போவதை கூறுகிறார்கள். பேரீதாடனத்தின்போது அர்ச்சகர் வாசிக்கும்போது பேரீ - வீரவண்டி வாத்யத்தில் தாளத்தை வாசிக்கப்படுகிறது. அரையர் சொல்லும்போது சுற்று மேளத்தில் வாசிக்கப்படுகிறது. கோயில் அரையர் ஸ்வாமிகள் பெருமாள் முன்பு அரையர் ஸேவை செய்யும்பொழுது பெருமாள் புறப்பாட்டின்போதும், அரையர் கூடவரும்பொழுது ஜம்பதாளம், ஆதிதாளம் மட்டும் தான் போடப்படுகிறது. இது எதை குறிக்கிறது என்றால் ஐவருக்கு அருள் செய்த பெருமாள் என்பதற்கு ஜம்பதாளமும், அஷ்டாக்ஷரம் என்பதற்காக ஆதிதாளமும் போடப்படுகிறது. இந்த இரண்டு தாளங்கள் மட்டுமே பிரதானியமானது. திருவரங்கத்தின் முக்கிய தெய்வங்கள் என்பதை உணர்த்துவதற்காக ஜம்பதாளம், ஆதிதாளம் குறிப்பிட்டு வாசிக்கப்படுகிறது. இதுவே எனது தாயாரின் இசைக் குறிப்பாகும். ஆகவே திருவரங்கமே இயல், இசை, நாடகத்திற்கு 108 திவ்ய தேசங்களில் முதலும் முடிவானதும் என்பது என் ஆய்வின் கருத்து ஆகும். இங்கு வாசிக்கும் வாத்யங்கள் ஓம், ஓம் என்றே ஒலிக்கிறது. காரணம் இங்கு இருப்பது ஓம்கார, ஓம்ப்ரணவாகார ஓம்ப்ரணவாக்ருதி விமானம் என்பதனால் ஆகும்.

| | | |
|---|---|---|
| 1. திருச்சின்னம் | - | பூம்... என்று ஊத ஓம்காரம் எழும்புகிறது. வாகன புறப்பாட்டின் போது ஊதப்படுகிறது. |
| 2. வீரவண்டி | - | ஓம்காரத்தை டண், டண், டண்... என்று பிரதிபலிக்க ஓம், ஓம், ஓம் என்ற ஓசை எழுப்பப்படுகிறது. பேரீதாடனத்தின் போதும் புறப்பாட்டின் போதும் அடிக்கப்படுகிறது. |
| 3. சுற்றுமேளம் | - | இதே ஓம்காரத்தை டாண், டாண், டாண்.. என்று வாசிக்கப்படுகிறது. மாலை வேளை புறப்பாட்டிலும் வாசிக்கப்படுகிறது. பேரீதாடனத்தின் போதும் வாசிக்கப்படுகிறது. |
| 4. ஜெக்க | - | இரும்பால் செய்த வட்டமான தட்டும் குச்சியும் கொண்ட வாத்யம் ஓம்கார ஒலியே எழுப்பப்படுகிறது. |
| 5. பெரிய மேளம் | - | டாண், டாண், டாண் என்று அடிக்கையில் புறப்பாடு ஆகிவிட்டது என்று தெரிகிறது. அதிலும் ஓம்காரநாதமே எழும்புகிறது. |

ஆகவே மேற்சொன்ன ஐந்து வாத்யம் - காயத்ரீயின் ஐந்து தலையை உணர்த்துவதுபோல் 5 கலசம் பஞ்சபூதங்களை அடக்கி ஆள அரங்கனின் ஓம்கார ஒலி எழுப்பும் 5 வாத்யங்களும் இந்த திருவரங்கம் ஓம்ப்ரணவ விமானத்தை ஒரு தத்துவத்தையே அடக்கிக் கொண்டிருப்பதை தெரிவிக்கவே வாசிக்கப்படுகிறது. இசை தத்துவத்தை இசைக்கு ஆதாரமான கோயில் என்பதை ஐவருக்கு அருள் செய்த பெருமாள் என்பதை உணர்த்தவே இந்த ஐந்து வாத்யங்களும் திருவரங்கம் கோயிலில் வாசிக்கப்படுகிறது. பாஞ்சராத்ரம் கொண்ட கோயில் என்பதை தெரிவிக்கவே இந்த ஐந்து வாத்யங்கள் வாசிக்கப்படுகிறது.

இந்த பாஞ்சராத்ரத்தை பற்றி குறிப்புரை சேர்க்கப்படுகிறது. முக்கியமான ஒன்று ஐந்து வாத்யங்களுக்கு எப்படி முக்கியத்துவம் தரப்படுகின்றதோ அதுபோல் பாஞ்சராத்ர ப்ராணப்ரதிஷ்டை முக்கியமான ஒன்றாகக் கருதப்படுகிறது. ப்ராணப்ரதிஷ்டை என்பது நவக்ரங்களுக்கு அதிபதியான நாராயணனை மூலஸ்தானத்தில் அமர்த்த (கணிதப்படி) கணிக்கப்பட்டுள்ளது. நவக்ரஹங்களுக்காக நவாம்ஸமாக மூலஸ்தானத்தை ஒன்பது பாகங்களாக பிரிக்கவேண்டும். பின் அதனிடையில் பிம்பத்தை வைப்பதற்கான இடத்தை தேர்ந்தெடுக்க வேண்டும். மூலஸ்தானத்தின் மத்ய பாகம் தான் ஆவாகனம் செய்யப்பட வேண்டிய இடம், அதனை தொடர்ந்து மூர்த்தியின் அம்சத்தைக் கொண்டு சிலா ரூபத்தை அமைக்க வேண்டும். இந்த திருவரங்கம்

கோயிலில் சாந்தாகாரம் என்று சொல்லும் மூலஸ்தானம் ஆகும். இதனையே விஷ்ணு சகஸ்ரநாமத்தில் சாந்தாகாரம் புஜக சயனம் என்று போற்றப்படுகிறது. மேலும் ஸ்ரீரங்கம் ஸ்வயம்வக்த க்ஷேத்திரம் ஆகும். இந்த அரங்கனை பெருமாளை த்ரிதாத்மா என்பார்கள். மேலும் ஓம்ப்ரணவ விமானத்தின் அமைப்புபடி ஓம்ப்ரணவத்தின் மூன்று எழுத்துக்களாகிய அகார, உகார, மகார தான் (அ.உ.ம.) ப்ரணவம் என்பதால், அர்ச்சாவதார மூர்த்தியான அழகிய மணவாளனின் இருப்பிடம் 3ன்றை தழுவிய நிலையில் அமைக்கப்பட வேண்டும். சாஸ்த்திர ரீதி பிரகாரம் பாஞ்சராத்ர ஆகமவிதிப்ரகாரம் என்று எனக்கு என் தாயாரால் கூறப்பட்டுள்ளது. அ.உ.ம. மத்தியிலிருந்து மேலே அகாரம் மத்தியில் உகாரம் கீழே மகாரம் மூன்றும் சேர்ந்த பகுதியில் ஒன்பது பாகத்தில் 3+3+3 - 9ல் மத்ய மூன்றில் மேற்சொன்ன மூன்றின்படி சிலாரூபம் இருக்க வேண்டியதால் அகார, உகார, மகாரத்தில் ப்ராணப்ரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. ஓம்கார தத்துவப்படி ப்ராணப்ரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது என்பது எனது ஆய்வின் முடிவான கருத்து. இதனால்தான் இங்கு ஓம்காரத்தின் ஒலி எப்பொழுதும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. காயத்ரீ மண்டபத்தில் இசையில் (வைப்ரேஷன்) உள்ளதால் மெல்லிய துல்லியமான ஓம்காரத்தை கேட்கப்படுகிறது. மூலஸ்தானத்தில் இத்துணை சிறப்புக்கொண்டது. நாம் உள்ளே செல்லும் போதும் உணரலாம்.

**அர்ச்சாவதாரம்:- சில்பசாஸ்திரப்படி அமையவேண்டியது**

**அர்ச்சாவதாரம்:-** மரம், மண், உலோகங்கள், சிலை முதலியவைகளால் ஆக்கப்பட்டவை அர்ச்சாவதார வடிவமாகும். இத்தகைய வடிவமாகிய என்னை வழிபாடு செய்தால் வைகுண்ட பதவி கிடைக்கும். மேலே குறித்த பொருள்களில் வடிவம் இருந்தால் அது ஒருவரால் தயாரிக்கப்பட்டது எனக் கூறவேண்டும். அர்ச்சாவதார வடிவங்களை நல்லஸ்தபதிகளை கொண்டே செய்யப்பட வேண்டும். இவைகளில் அதிகமான அங்கங்கள் வைத்து விடக்கூடாது. அங்கக்குறைவும் இருத்தல் கூடாது. சமநோக்கு இருப்பது நல்லது. மேல்பார்வையோ, கீழ்ப்பார்வையோ இருத்தல் கெடுதல், பார்வையில் அழகு புலப்பட வேண்டும், குளிர்ச்சி இருக்க வேண்டும், நல்லபொலிவு இருக்கவேண்டும், உயிர் ஒட்டம் இருக்க வேண்டும். இவ்வாறு சிற்பநூல் விதி தவறாமல் வடிவம் அமைத்து பூஜைசெய்வது நல்லது. இவையாவும் இப்பூவுலகில் உள்ள விக்ரகங்களுக்கே பொருந்தும் சிற்பசாஸ்திரம்

**முக்கியமாக சிற்பசாஸ்திரம் கூறுவது:-** மேல்பார்வை வானில் பறந்துவிடும். கீழ்பார்வை பாதாளம் புகுந்துவிடும். குரூரப்பார்வை ஆளை அழித்துவிடும். ப்ரம்மா ஆராதிப்பதற்காக ஸ்ரீமந்நாராயணன் மத்ஸ்ய, கூர்ம, அவதாரங்களுக்குப்பிறகு அர்ச்சாமூர்த்தியாக ஸ்ரீரங்கனாதநாக முதன் முதலில் தோன்றி இந்த ஸ்ரீரங்கத்தில்தான் முதலில் கோயில் கொண்டருளினார். ஆகவே ஸ்ரீரங்கனாதனே அர்ச்சாவதாரத்தில் முதல் அவதாரம் என்பதால் 108 திவ்யதேசங்களில் சிறப்பானது திருவரங்கமே என்று நிரூபணமாகிறது.

**ஸ்வயம்வ்யக்த க்ஷேத்ரம் எட்டு ஸ்தலங்கள்:-** 1. ஸ்ரீரங்கம் 2. திருமுஷ்ணம் 3.திருவேங்கடமாமலை 4.சாளக்ராமமலை 5. நைமிசாரண்யம் 6 தோதாத்ரி 7.புஷ்கரக்ஷேத்திரம் 8.பத்ரிஸ்வயம் வியக்தக்ஷேத்திரம் இந்த எட்டிலும் முதலும் கடைசியுமானது திருவரங்கம் என்பது 108 திவ்யதேசங்களில் முதலானது திருவரங்கமே. மேலும் பாஞ்சராத்ர ஆகமம்படி முறைப்படி பூஜை செய்யப்பட்டகோயில் திருவரங்கம் 108 ஸ்தலங்களில் முதன்மையானது. பாஞ்சராத்ர முறைப்படி பூஜைசெய்ய ப்ரம்மாவுக்கு உபதேசம் செய்த அரங்கனின் ஸ்தலமான திருவரங்கமே 108 திவ்யதேசங்களில் முதன்மையானது. அதனை அரங்கனேப்ரம்மாவுக்கு தெளிவுபட விளக்கினார். நவக்ரஹத்தில் ஒருத்தரான (அசுரகுரு) சுக்ரபகவான் அரங்கனை பூஜித்தான். ஆகவே நவக்ரஹ தோஷம் நீங்க அரங்கனை வழிபட நன்மை கிடைக்கிறது. பாஞ்சராத்ரபடி பூஜைசெய்ய வேண்டுமானால் ஒரு நாளை ஐந்துகாலமாக பிரித்துக்கொள்ளவேண்டும்.

அதிகாலையில் எழுந்திருந்து நித்ய கர்மாக்களை முடித்து அஷ்டாக்ஷர மந்த்ரம் ஜபம் செய்து, பிறகு **ஆபிகம்யம், உபாதானம், இஜ்யா, ஸ்வாத்யாயம்** என்று காலங்களை பகிர்ந்து கொண்டு த்வாதசாக்ஷர மந்திரத்தையும் அஷ்டாக்ஷரத்தையும் ஜபித்து வழிபடுவதே முறை என்பதை அரங்கனே ப்ரம்மனிடம் தன்னைப் பூஜிக்க சொன்னதால் 108 திவ்ய தேசங்களில் திருவரங்கமே முதன்மையானது. பஞ்சோப நிஷத்ப்ரதிபாத்யனான நான் பரம், வ்யூகம், விபவம், அர்ச்சை, அவதாரம் இவைகளில் இருப்பேன். அப்ராக்ருதங்களான ஆவிர்பாவங்களில் என்னுடைய சங்கற்பத்தாலேயே உண்டாகிறேன். ஆவேச அர்ச்சாவதாரங்களில் பஞ்சபூத சரீரமுள்ளவனாக இருப்பேன். தாரு, லோஹம், சிலை, மண் இவைகளின் ஸம்பந்த சரீரமானது அர்ச்சாஸ்வரூபமென்று பெயர். திருவரங்கத்திலுள்ள அர்ச்சாஸ்வரூபம் லோஹம், மண் இவைகளில் முக்கிய சம்பந்தப்பட்டது. அர்ச்சாவதாரம் நான்கு விதமென்று பாஞ்சராத்ரம் முதலிய ஆகமங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ப்ரதிமாஸத்ருசங்களான விமானங்களும் **திவ்யமென்றும், ஸைத்தமென்றும், ஸ்வயம் வியக்தமென்றும், மாநுஷமென்றும்** நான்கு வகை பேதமுள்ளவை. அந்த

நான்கில் திவ்யம், ஸைத்தம், மானுஷம் இம்மூன்றும் க்ருத்திரிமம் - ஒருவரால் செய்யப்பட்டது. ஸ்வயம்வியக்தம் - அக்ருத்ரிமம் - ஒருவராலும் செய்யப்படாதது. இந்த ஸ்ரீரங்கவிமானம் ஆதியிலுண்டான ஸ்வயம் வியக்தம். எல்லா ஸ்வயம் வியக்தஸ்தலங்களுக்குள் ஸ்ரீரங்கம் மிக மேன்மையானது. சதுர்முகனை ஸர்வேஸ்வரனை நீர் பஞ்சகாலவிதானத்தால் ஸ்ரீபாஞ்சராத்ரத்தில் சொல்லியப்படி மூன்று கால ஆராதனை செய்யும் என்றார். இந்த பாஞ்சராத்ரவிதியை தெரிவிக்கும் இரண்டு சங்கல்பங்கள் உண்டு. 1. சத்துவம் 2. புஷ்கரம் - இந்த சங்கல்ப விதிகளிலே சொல்லப்பட்டபடி எல்லாவற்றையும் குருவின் மூலமாக கேட்டறிந்து பாஞ்சராத்ர முறைகளில் நன்கு தேர்ச்சிபெற்ற ஐந்து பேர்களை வைத்துத்வாத சாக்ஷர வித்தையால் அஷ்டாங்க விதானமாக அர்ச்சியும் என்று அரங்கன் ப்ரும்மாவுக்கு கூறினதாக ஸ்ரீரங்கபுராணம் கூறுகிறது. மேலும் திருவாராதனத்திற்கு பிறகு ஆடை, அணிகளை சாற்றி மற்றும் உள்ள உபசாரங்களை செய்து பூஜை செய்யவேண்டும் என்றும் அரங்கன் ப்ரும்மாவுக்கு உபதேசித்ததால் இந்த திருவரங்கக்ஷேத்திரம் 108 திவ்யதேசங்களில் முதன்மையானது. மேலும் ப்ரும்மா சூரியனிடம் ஸ்ரீரங்கனாதனை பூஜிக்கச் சொன்னது. அதன் பிறகு சூரியபகவான் வைவஸ்தமனுவை பூஜை செய்யச் சொன்னது, பிறகு மனு இஷ்வாகுவை பூஜை செய்யச்சொன்னது, பின் அயோத்தியில் இராமனால் ஆராதிக்கப்பட்டு பின் காவேரியின் விருப்பத்திற்காக காவேரி நதிக்கரையிலுள்ள சந்திரபுஷ்கரணிக்கு அருகிலே வெகுகாலமாக காவேரி கொள்ளிடத்தை மாலையாக அணிந்து தற்போதும் பட்டர்களாலும், அரையர்களாலும் அரங்கனை ஆராதிக்கப்படுகிறது இந்த திருவரங்கமே. ரங்கநாதரை ஆராதித்த ராமர் - திருப்பாற்கடலில்மகாவிஷ்ணு - தான் ராம அவதாரத்தை எடுக்கப்போவதாக சொன்னார். அதே திருப்பாற்கடலைப் போன்ற சயனம் ஸ்ரீவைகுண்டத்தில் - பூலோக வைகுண்டம், அதே விஷ்ணு இங்கு ஆதிசேஷன் மேல் சயனம் இங்கு ஓர் விளக்கம் கூறப்படுகிறது. சாந்தாகாரம், புஜகசயனம், பத்மநாபம், சுரேஸம் என்று தொடங்கி ஸசங்கசக்ரம், ஸகிரீடகுண்டலம், ஸபீதவஸ்த்ரம் முதல் நமாமி விஷ்ணும் சிரஸா ஸதுர்புஜம் - சந்த்ராननம் - க்ருஷ்ணமாஸ்ரயே என்று வாஸுதேவனின் புகழ்பாடி ராமனும் க்ருஷ்ணனுமாக போற்றப்படுவது. இந்த திருவரங்கமே 108 திருப்பதிகளில் ஒன்றானதாகிறது.

திருவரங்கபெருமானே இசைக்கு அதிபதி என்ற முடிவுக்கு வருகின்றேன். இந்த கோயிலுக்கு செல்பவர்கள் காயத்ரீ மந்த்ரத்தையும், த்வாதசாக்ஷரத்தையும், அஷ்டாக்ஷர மந்த்ரத்தையும் சதா த்யானித்துக்கொண்டு சென்றாலே போதும். எல்லா மங்களமும், மேலான மோக்ஷமும் கிட்டும் என்று ஸ்ரீரங்கபுராணம், ஸ்ரீரங்கமஹாத்மியம் கூறுகிறது. அணி அரங்கன் நமக்கு சகல சௌபாக்யத்தையும் அருளுகிறான். பாஞ்சராத்ர ஆகமவிதிப்படி திருவாராதனம் செய்யப்படும் இக்கோயில் திருவரங்கம் பெரியகோவில் என்று அழைக்கப்படுகிறது. ஸ்ரீரங்கபெருமான் ப்ரணவாகார விமானத்திலே படமெடுத்து ஆதிசேஷப்படுக்கையிலே சயனத் திருக்கோலத்துடன் எழுந்தருளியிருக்கிறார். தன் வலக்கையைத் திருமுடியில் படும்படி வைத்த வண்ணம், இடக்கையை திருவடிப்புறமாக வைத்த வண்ணமும் துயில் கொண்ட காட்சியால்தான் உலகப்பெரியவன் என்பதையும் அவனை வணங்கி வழிபடுவதே நமது கடமை என்பதையும் உணர்த்துகிறான் அணிஅரங்கன். விமானத்தில் பரவாசுதேவர் இருக்கிறார். வாசுதேவஸர்வம் என்று த்யாகப்ரும்மம் கூறுகிறார். வாசுதேவனின் த்வாதசாக்ஷரத்தை நினைவில் கொள்ள இந்த பரவாசுதேவர் தங்கத்தட்டில் தேஜோஸ் மயமாக காட்சி அளிப்பது போல் தெரிகிறது. ரங்கமண்டபத்தில் காயத்ரீ மண்டபம் என்று கூறும் அந்த மண்டபத்தில் நிற்கும் 24 தூண்களையும் காயத்ரீயின் 24 அட்சரங்களாகவும் கூறுவதாலும் (24லும் 24 ஸ்ருதி என்பது எனது ஆய்வின் முடிவு) கோயிலில் தென்படும் கோபுரங்களை வேதத்தின் தேவதைகளாகவும் சாஸ்திரங்களை அங்குள்ள பொருள்களாகவும் செயல்களாகவும் குறிப்பிடப்படுகிறது. ஏழுமதிற் சுற்றுகளையும் ஏழு உலகங்கள் என்று கூறப்படுகிறது. 1. பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம், ஜநோலோகம், தபோலாகம், ஸத்யலோகம் இந்த ஏழு சுற்றும் பூலோகம் மாடங்கள் சூழ்ந்துள்ள சுற்று 2. புவர்லோகம் - திரிவிக்ரம சோழன் சுற்று 3.ஸுவர்லோகம் - அகளங்கனென்னும் கிளிசோழன் சுற்று 4. மஹர்லோகம் - திருமங்கைமன்னன் சுற்று 5. ஜநோலோகம் - குலசேகரன் சுற்று 6. தபோலோகம் - ராஜமகேந்த்ரன் சுற்று 7. ஸத்யலோகம் - (கர்ப்பக்ரஹமுள்ள சுற்று)

(தர்மவர்மசோழமன்னன் சுற்று) இவ்வளவு பேரும் பெரியது ஊரும் பெரியதுமாகியது திருவரங்கம்; இந்த திருவரங்கமே அணி அரங்கனின் நர்மரங்கம் என்று சொல்லப்பட்ட ஸ்ரீரங்கம் 108 திவ்யதேசங்களில் முதலும் முடிவானதும். இந்த கோயிலில் வேதஸ்வரூபம் - பெரிய பெருமாள் - வேதச்ருங்கம் - விமான சிகரம் - வேதப்ரணவம் - விமானம் வேதாக்ஷரம் - காயத்ரீ மண்டபம் - இதுவே பூலோக வைகுந்தம் என்னும் திருவரங்கம் என ஆய்வு முற்றுபெறுகிறது தொடருகிறது. கோயில் பெரியகோயில், ஸ்ரீரங்கம், திருவரங்கம், நர்மரங்கம், பூலோக வைகுந்தம், போகமண்டபம் என்று பாராட்டும் திருவரங்கம் 108 திவ்யதேசங்களில் முதலும் முடிவானதும் முதன்முதலில் நர்மரங்கம் என்ற பெயரைப்பெற்று ஸ்ரீரங்கநாதன் எழுந்தருளிய பிறகு

ஸ்ரீரங்கமாயிற்று. ரங்கம், ரங்கம் என்பதால் ஸ்ரீவைஷ்ணவ அடியார்கள் நம் பெருமாளிடம் ஈடுபட்டுக் கூத்தாடும் நாடகரங்கம் நாடக அரங்கம் போன்ற இடமாயிற்று என்றால் மிகையாகாது. வைகுந்தத்தை பார்க்கமுடியாது. ஆனால் இந்த பூலோக வைகுந்தத்தை திருப்பாற்கடலில் பள்ளி கொண்ட பரமனை காண்பது போல் அணி அரங்கனை கண்டு நமது தென்டத்தை சமர்ப்பிக்க முடியும். எல்லாவிதத்திலும் அரசனாக இயல், இசை, நாடகத்தை இயக்குவித்து, மக்களை தன்பால் ஈர்த்து மோக்ஷோபாயத்தை லகுவாக பெற 45 ஸந்நதிகளையும் ஆழ்வாராதிகளின் ஸந்நதிகளில் ப்ரபந்த ஸேவையையும் கேட்டு அனுபவிக்க நமக்கு அனுக்ரஹம் செய்த அரங்கனை, அணி அரங்கனை அண்டர்கோன் அணிஅரங்கனை, என் அமுதினை கண்ட கண்கள் மற்றொன்றினை காணாவே என்று பாடிய (அ.உ.ம) காரத்தை ஓம்காரத்தைதான் இசைக்கு ஆதாரம் என்பதனை பத்து பாசுரங்களை பாடி அரங்கனை புகழ்மாலை சாற்றிய திருப்பாணழ்வார் தாள் பணிந்து வீணையோடு அரங்கனுக்கு இசைமாலை, பாசுரமாலை ராகமாக இயற்றி சாற்றி அனுபவித்து மகிழ்ந்த என் தாயாருக்கு தாழ்பணிந்து எனது குருவம்ச ஸ்ரீத்யாகப் பிரும்மத்திற்கு தாழ்பணிந்து இந்த திருவரங்கமே இசைக்கு, தமிழ் இசைக்கு, உகந்த உகப்பான கோயில் என்பதனை எனது திட்டவட்டமான கருத்தோடு என்குரு அனைவரையும் சிரம் தாழ்த்தி வணங்கி, அரங்கனே இசை அரசன் என்ற இந்த ஆய்வை முற்றுபெற வைக்கின்றேன். பாஞ்சராத்ர ஆகமவிதிப்படியும், தென்கலை சம்பிரதாயப்படியும் பூஜை செய்யப்படுகின்றன. இந்த கோயிலில் எட்டு உபகோயில்களும் 42 உப்சந்நதிகளும் கோயிலின் உட்ப்புரத்தில் உள்ளன. ஆகவே 108 திவ்ய தேசங்களில் மிகப்பெரிய கோயில் திருவரங்கம். அதனையே கோயில் நெல் அளவையின் போது திருவரங்கம் பெரிய கோவில் என்கிறார்கள்.

''பாஞ்சராத்ராத்வ தத்வக்ஞம் கௌதிகான்வய பூஷணம்
ரங்கராஜகுரோஹ் புத்ரம் தேவராஜகுரும்பஜே'' பூஷணம்
கௌசிகான்வய சம்பூதம் ரங்கநாத பதார்ச்சகம்
தேவராஜ குரோஹ்புத்ரம் கோபாலஸ்ய அஹம்பஜே
ஔபகாயனவம் சேர்ந்திம் ஸ்ரீரங்கேசேபரார்ஜகம்,
பாஞ்சராத்ர தத்வக்ஞம் ராகவார்ய அஹம்பதே

இந்த அனைத்து விவரத்தோடு பாஞ்சராத்ரதத்வம் கொண்டு ஆராதிக்கப்படும் கோயில் என்ற நிரூபணத்தோடு முடிவு பெறவும் தொடரவும் படுகிறது. ஆகவே முதலும் முடிவுமான திருவரங்கமே 108 திவ்ய தேசங்களில் முதலானது முடிவானது. திருவரங்கம் 108 திவ்ய தேசங்களில் சிறப்புற்றது. எம் பெருமானார் உள்ள இடம். ஸ்ரீராமானுஜர் ஸ்ரீபாஷியகாரர் என்று போற்றப்படுகிறார். இந்த திருவரங்கத்தில் ஆழ்வார்கள் அழகிய மணவாளனை ராமாவதார க்ருஷ்ணவதாரத்தை போற்றி அழகிய மணவாளனை பாடுகிறார்கள். ஸ்ரீ ஆண்டாள் கோதை நாச்சியார் கண்ணபிரானை போற்றி பாடி திருப்பாவை இயற்றினாள். அரங்கனை அடைந்தாள். நாலாயிர திவ்யப்ப்ரபந்தத்தில் இராமாயணக்கதையை பத்து பாசுரங்களில் குலசேகராழ்வார் சொல்லியிருக்கிறார். பாசுரங்கள் 741 முதல் 751 வரை அங்கண்ணெடு மதிள் புடைசூழ் (பக்கம் 166 திவ்யப்ப்ரபந்தம்) பெரிய பெருமாளை ராமனாகவும் அழகிய மணவாளனை கண்ணனாகவும் இரண்டு அவதாரங்களும் முடிவானதும் முக்கியமானதாகவும் இதிஹாஸபுராணமாக வரலாறு சிறப்புடையதாகவும் இருந்ததால் போற்றிப் பாடினார்கள். திருப்பாணழ்வார் வெண்ணை உண்டவாயன் என் உள்ளம் கவர்ந்தானை என்கிறார். அரங்கனை கண்ணனாக பாவிக்கிறார். நம்மாழ்வார் கண்ணல்லால் பாசுரம் 2973 - கார்வண்ணன் கண்ணபிரான் - கண்ணன் கழலினையில் பக்தி பண்ணும் வகைகளை கூறுகிறார். இதே நம்மாழ்வார் இங்கு நீயிருக்கும் இடமே எனக்கு வைகுந்தம் என்று கூறி இந்த திருவரங்கத்திலேயே இருந்ததாக உத்ஸவம் நடக்கிறது. வரலாறு கூறுகிறது. அணி அரங்கனை கண்ணனாக பாவித்து ஆழ்வார்கள் பாடியுள்ளார்கள். இந்த அரங்கன் 5000 ஆண்டுகளுக்கு முன் விருத்தாந்தம் - த்ரேதாயுகம் - த்வாபரயுகம் - சந்த்யாம்ஸத்தில் ராமபிரான் அவதரித்தார்.

மேலும் ஆழ்வார்கள் பெரிய பெருமாளை நம்பெருமாளை ராம, க்ருஷ்ணனாக போற்ற காரணம் அவதாரிகையில் இரண்டு அவதாரத்தில் திருப்பாற்கடலில் ஆதிசேஷனில் லக்ஷ்மி நாராயணனாக இருந்தவர், மானிடரில் சீதாராமனாக அவதாரம் ஸ்ரீராமாயணம் இதிஹாஸப்புராணமானது. 2. வாசுதேவனே சர்வம் என்று சொல்லப்படுகையில் க்ருஷ்ணாவதாரத்தில் ருக்மணி ஸமேதராக மானிட அவதாரம் எடுத்து, ஸ்ரீமத்பாகவதம் தோன்றக் காரணமாயிற்று என்று பெரும் காரணம் ஒன்று ஆழ்வார்கள் அந்த நோக்கத்தோடு இந்த எல்லா அவதாரத்தையும் முடித்து கலியில் அர்ச்சாவதாரமான அரங்கனே முடிவானவனாக கருதி அரங்கனே ப்ரளய காலத்தை உண்டாக்கப்போகிறான் என்று தெளிவு பெற்ற ஆழ்வாராதிகள் த்ரேதாயுக த்வாபரயுக புருஷர்களாக ராமக்ருஷ்ண அவதாரத்தை போற்றி கலியில் கேசவ கீர்த்தனை போல் பாசுரங்களை அர்ச்சாவதாரமூர்த்தியான அரங்கனை பெரிய பெருமாளை ராமனாகவும் க்ருஷ்ணனாகவும் போற்றி பாடுகிறார்கள்.

**ஆழ்வார்கள் கண்ட அழகிய மணவாளன்:-** அழகிய மணவாளனை ராமனாகவும் க்ருஷ்ணனாகவும் பாவித்து பாசுரமழை பொழிந்தார்கள். இவர்கள் போற்றிப்பாடிய காரணம் த்ரேதாயுகமும் த்வாபரயுகமும் சேர்ந்த சந்த்யாம்ஸத்தில் ராமன் அவதரித்தான். க்ருஷ்ணன் த்வாபரயுகத்தில் யோகமாயையுடன் தேவகியின் ஏழாவது கர்ப்பத்தை இழுத்து நழுவச் செய்து வாசுதேவரின் இன்னொரு மனைவியான ரோஹிணியின் வயிற்றில் சேர்ப்பித்துவிடு. இவ்விதம் பிறக்கப்போகும் குழந்தை கர்ப்பத்திலிருந்து இழுக்கப்பட்டதால் ஸங்கர்ஷணன் எனப்பெயர் ஏற்படப் போகிறது. கம்ஸனிடம் இருந்த பீதியில் தேவகியின் கர்ப்பம் கலைத்து நான் எட்டாவது கர்ப்பமாக வந்து வர்ஷருது வந்தவுடன் பாத்ரபதமாஸத்தில் க்ருஷ்ணபக்ஷத்தில் அஷ்டமிதிதியின் நள்ளிரவில் நான் தேவகியின் மைந்தனாக பிறப்பேன் என்றார் க்ருஷ்ணன். இதனையே இரண்டாவது திருச்சுற்றில் கண்ணன் கோயில் உள்ளது க்ருஷ்ணன் பிறப்பு கொண்டாட்டம் கூறுகிறது. இங்கு ஒரு விளக்கம் விமானத்தில் வாசுதேவன் சங்கர்ஷணன், ப்ருத்யுமனன், அனிருத்ரன் (நாராயணன்) வியூகமாக உள்ளனர். இவர்களின் வழி பிறந்த கடவுளாக தசாவதாரம் ஆகிறது. க்ருஷ்ணன் சகோதரன் பலராமன், பலராமனே ஸங்கர்ஷணன் - க்ருஷ்ணன் - வம்சம் ப்ரத்யுமனன் - அனிருத்ரன் பிள்ளை பேரன் வம்சம் வ்யூகமாக உள்ளனர். ஆகவே ராமாவதாரமாக பெரிய பெருமாளையும், ரங்கனாதனை க்ருஷ்ணனாகவும் அனுபவித்து ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்து பார்க்கிறார்கள். இது எனது ஆய்வின் கருத்துரை. பொய்கையாழ்வார் துவாபரயுகத்தில் 8, 62, 901 வதான சித்தாத்ரிவருஷம் ஐப்பசி மாதம் சுக்லபக்ஷ அஷ்டமி - செவ்வாய் - திருவோணநட்க்ஷத்திரத்தில் பாஞ்சஜன்யமாக அவதாரிகை - திவ்யப்பிரபந்தத்தில் இயற்பா - முதல் திருவந்தாதியில் முதல் பாசுரத்தில் ஸ்ரீரங்கனாதனை மங்களா சாஸனம் செய்கிறார். 2. பூதத்தாழ்வார் - துவாபரயுகம் - 8, 62, 901 சித்தாத்ரி வருஷம் ஐப்பசி மாதம் புதன் கிழமை நட்க்ஷத்திரம் அவிட்டம் அவர் கௌமோதகி என்கிற திருமாலின் கதாயுதம் அவதாரம் இவர் இரண்டாம் திருவந்தாதியில் ஸ்ரீரங்கனாதனை நான்கு பாசுரங்களில் பாடுகிறார்.

3. பேயாழ்வார் - துவாபரயுகம்

8, 62, 901 ஐப்பசி மாதம்

சுக்லபக்ஷ, தசமி வியாழக்கிழமை பிறந்தார். - நட்க்ஷத்திரம் சதயம். பெருமாளின் நந்தகம் என்னும் திருமாலின் அவதாரம். இவர் ரங்கநாதனை இரண்டு பாசுரங்களால் பாடுகிறார் மூன்றாம் திருவந்தாதியில். திருமழிசை பிரான் - துவாபரயுகம் 8, 62, 901 சித்தாத்ரி வருஷம் தை மாதம் க்ருஷ்ண பட்ஷம் ஞாயிற்று கிழமை திருவாழியின் (சங்கத்தின்) வடிவாக (பெருமாளின் அவதாரமாக பிறந்தவர்) இவர் ஸ்ரீரங்கநாதனை நான்முக திருவந்தாதியில் 4 பாசுரங்கள் பாடியுள்ளார். இவர் நட்க்ஷத்திரம் மகம்.

5. நம்மாழ்வார் - கலியுகத்தில் பிறந்து வைகாசி மாதம் விசாகம் சேனை முதலியாரின் அவதாரம் கொண்டவர். இவர் (ரங்கனாதனை) திருவாய்மொழியில் பத்து பாசுரங்களும் ஸ்ரீரங்கநாதன் விஷயமாக இருக்கின்றன. இவர் நட்க்ஷத்திரம் விசாகம்.

6. மதுரகவியாழ்வார் - துவாபரயுகம் - இவர் நட்க்ஷத்திரம் - சித்திரை. இவர் வைநதேயரின் அம்சம். செந்தமிழில் இனிய நற்கவிதைகளை பாடிய காரணம் பற்றி இவருக்கு மதுரகவி என்ற சிறப்புப் பெயர் உண்டாயிற்று. இவர் பெருமானைத் தன் பாசுரங்களால் பாடாமல் தன் ஆச்சாரியனையே சிறந்த தெய்வமாக தன் மனதில் எண்ணி அவரை பாடியுள்ளார்.

7. குலசேகராழ்வார் - கலியுகம் - புனர்பூசம் நட்ஷத்திரம் திருமாலின் கௌஸ்துபம் பெரிய பெருமாளாகிய ராமபிரானிடம் அன்புபூண்டவரானதால் இவருக்கு குலசேகர பெருமாள் என்ற திருநாமம் ஆயிற்று. இவர் ஸ்ரீரங்கநாதனை பெருமாள் திருமொழியில் 31 பாசுரங்களால் பாடி சிறப்பிக்கிறார்.

8. பெரியாழ்வார் - சுவாதி நட்க்ஷத்திரம் கருடாம்ஸராக அவதரித்தவர் விஷ்ணு சித்தர் கண்ணன் விஷயமாகவே பாசுரங்களை பாடினார். திருமொழி பாசுரங்களாக இவர் ஸ்ரீரங்கனாதனை 25 பாசுரங்களில் பாடுகிறார். தம்மை யசோதையாகவும் நம்பெருமாள் அரங்கனை கண்ணனாகவும் பாவித்து மகிழ்கிறார்.

9. தொண்டரடிப் பொழியாழ்வார் - இவரது காலம் கலியுகம் நட்க்ஷத்திரம் கேட்டை திருமாலின் வனமாலையின் அம்சம் கொண்டவர். இவர் திருமாலை 45 பாசுரங்களையும் திருப்பள்ளியெழுச்சி 10 பாசுரங்களையும் ரங்கனாதனை பற்றியே பாடியுள்ளார். 105 வருடம் வாழ்ந்தவர்.

10. திருப்பாணழ்வார் - திருமாலின் ஸ்ரீவத்ஸம் இவரது காலம் - கலியுகம் நட்க்ஷத்திரம் ரோஹிணி இவர் ரங்கனாதனை அமலனாதிபிரான் என்று பத்து பாசுரங்கள் பாடி சிறப்பிக்கிறார். இவர் வெண்ணெய் உண்டவாயன் என்று அரங்கனை பாடி மகிழ்கிறார்.

*11. திருமங்கையாழ்வார் - நட்சத்திரம் கார்த்திகை திருமாலின் சாரங்கம் என்னும் வில்லின் அம்சம் பொருந்தியவர். வருஷம் - கலியுகம் ஸ்ரீரங்கனாதன் விஷயமாக பெரிய திருமொழியில் 58 பாசுரங்களையும் திருக்குறுந்தாண்டகத்தில் 4 பாசுரங்களையும், திருநெடுந்தாண்டகத்தில் 9 பாசுரங்களையும், சிறிய திருமடலில் 1, பெரிய திருமடலில் 1 பாசுரத்தையும் பாடியுள்ளார்.*

*12. ஸ்ரீ ஆண்டாள் - பூமாதேவி - பூதேவி அம்சம் - பெரியாழ்வார் - விஷ்ணு சித்தர் மகளாகப் பிறந்தவர். அரங்கனை பெரியபெருமாளான இஷ்வாகு குலதனமான ஸ்ரீரங்கனாதனின் திருவடியை அடைந்தார். இவர் பெருமாளுடன் ஐக்கியமானவர். ஆண்டாள் அருளிச்செயலான - நாச்சியார் திருமொழியில் 11-ஆம் திருமொழி 10 பாசுரங்கள் ஸ்ரீரங்கநாதனைப் பற்றியவை ஆகும். இவ்விதமாக ஆழ்வார்கள் கோதைநாச்சியார், பெரியபெருமாள், நம்பெருமாளை ராம க்ருஷ்ணனாக பாவிக்கிறார்கள். இப்படியே வால்மீகியான ஸ்ரீத்யாகப்ரும்மம் அரங்கனை பாடுகிறார். ஸ்ரீரங்கம் பஞ்சரத்னமாக, இன்னும் பல கீர்த்தனையிலும் பாடுகிறார். எனது குருபரம்பரை ப்ரபாவத்தை எத்தனை கூறினாலும் போதாது. எனது தாயார் பெரியபெருமாள், ரங்கனாதனை திவ்யப்ரபந்த பாசுரங்களின் ராகம் அமைத்து புத்தகவடிவமாக்கினார் பாசுரமாலா.*

## தமிழிசையே தரணி போற்றும் இசை

*இப்போதுதான் நாம் தமிழை தழைத்தோங்க வைக்க முற்பட்டுள்ளோம். ஆனால் ஆழ்வார்களும், நாயன்மார்களும் ப்ரபந்த, தேவார திருவாசகத்தை தமிழிசையாக பாடினார்கள். தூயத்தமிழிலே வள்ளுவன் வரலாற்றுக்கு திருக்குறளை படைத்தார். தமிழ் வேதமாகிய ப்ரபந்தத்தால் தமிழ் மணத்தது, தழைத்தது தமிழ், தமிழக மண்ணிலே. 'கம்பன் படைத்தார் கம்பராமாயணத்தை - அதை தெளிவுபடுத்த நம் ஆழ்வார் சடகோப அந்தாதி பாடி வெற்றி கண்டார்.' பாரதி பாடினார். பைந்தமிழை - செந்தமிழ் நாடென்னும் போதினிலே இன்பத்தேன் வந்து பாயுது காதினிலே என்றார். தமிழகத்தில் தான் தேவ வருடி நாரதர் யாழாசிரியனாக இருந்தார் என்று வரலாறு கூறுகிறது. நாரதரே தன் குரு என்கிறார் ஸ்ரீத்யாகராஜர். வால்மீகம் பிழைத்தது பாடினார் ராமாயணத்தை வால்மீகி, பாடினார் பாசுரப்படி ராமாயணத்தை பெரிய வாச்சான்பிள்ளை குலசேகரன் சொன்னார் ராமாயணத்தை நம்மாழ்வார் கூறினார் உண்ணுஞ்சோறு, பருகுநீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன் எம்பெருமான் என்று, திருமங்கை மன்னன் பாடினார் பெரிய திருமொழி. பெரியாழ்வார் பிள்ளை தமிழ் பாடினார், கோதை வகுத்தாள் அர்த்த பஞ்சகத்தை, தேவ வருடி நாரதரோ பஞ்சபாரதீயம் என்னும் தமிழ் நூலை தியாகராஜருக்கு தந்தார். தமிழ் மண்ணிலே வாழ்ந்த தியாகராஜரோ வால்மீகி ராமாயணத்தை பாடினார். பஞ்சபாரதீயமே ஸ்வரார்ணவம் என்பதற்கு கருத்தினை, நுட்பஸ்ருதிகளை பாட்டில் தமிழிசையின் தத்துவத்தை நுழைத்தார். மோனை யதுகை கொண்ட அமைப்பாக பாட்டை அமைத்தார். இயல், இசை, நாடகம்தான் முந்து தமிழ் என்று விளக்கவே இயல் கூறி, இசைபாடி, ராகம் எழுதி நமக்கு புரிய வைத்தார். ஓம் என்ற எழுத்தே ப்ரணவமாயிற்று. அதுவே தமிழ் எழுத்தாயிற்று ப்ரணவம் பற்றி கூறி இதுவே தமிழிசை என்று கூறி நம்மை வாழ்வித்தவர் தியாகப்ரும்மம் - அவரது நுட்பஸ்ருதியாலேயே தமிழிசையே தரணி போற்றும் இசை என்று தெளிவுபடுத்தினார், தமிழிசையை குறிப்பிடும் வகையில் கணிப்பு.*

| | | |
|---|---|---|
| *1. சட்ஜம், ப்ரக்ருதி* | - | *ஆதாரம் பூமி - ஸ - ப ப்ரக்ருதி ஸ்வரங்களை* |
| *2. ரிஷபம் விக்ருதி* | - | *இகபரத்தின் இதரதத்துவம்-ரிகமபதநி விக்ருத ஸ்வரங்கள்* |
| *3. காந்தாரம்* | - | *நிலையான ஸ்தானமாயிற்று. சுத்தஸ்வரமானது.* |
| *4. ஓம் ப்ரணவம் அச்சுத மத்தியமம்* | - | *ஒலியால் இசை தமிழ் பிறந்தது.* |
| *5. ஆதாரம் இல்லாமல் இசை இல்லை* | | |
| *ஸ - ப - ஸ்* | - | *ஆதார ஸ்ருதி - ஸ பஞ்சமஸ்ருதி நிர்ணயிப்பது ஸ் -* |

*தாரஸ்தாயி ஒரு ராகத்தை மேளராகமாக ஆக்கி ராகத்தின் பிரிவுக்கு வழி வகுக்க தாரஸ்தாயி இந்த 2 அலகுதான் இசைக்கு பிரச்சனையாகி 22 ஸ்ருதி என்கிறார்கள். அந்த இரண்டு அலகு தைவதத்திலே நிஷாதத்திலோ இழுத்து பிடிக்கப்படுகிறது. தாரத்தை முற்று பெறாத ரிகமபதநி மேளராகமாகாது. ஜன்யமாகிறது. ஸரிகமபதநி ஸப்தஸ்வரத்தை கூறுவதை ஏற்பவர்கள் ஸரிகமபதநிஸ் - என்பதுதான் நிலையான ராகமுற்று என்பதை அறியவில்லை 24 ஸ்ருதி தான் முற்றுப்பெற்றது.*

உயிர்மெய் எழுத்தாகிய ஓம் இதில் மகாரம் மத்யமமான அச்சுத மத்யமமாயிற்று. ஓம் ப்ரணவமே அ.உ.ம ஆயிற்று. அ.உ.ம தமிழ் எழுத்தே ப்ரணவ நாதம் பற்றி பாடுகிறார். ஓமே ஓம்காரமே தமிழ் எழுத்து என்று கூறுகிறார். அவர் ராகப்ரயோகத்தின் நுட்பஸ்ருதியை தெளிவாக ஸ்வராட்க்ஷரக் குறிப்பால் குறிப்பிடுகிறார். தமிழிசையை குறிப்பிடுகிறார். அவருடைய பாடல்கள் தெலுங்கு ஸமஸ்கிருத பாஷையில் இருந்தபோதிலும் மூலக்கருத்தானது. ஆதாரமானது. தமிழ் இசை பற்றியதாகவே ராகத்தை பாடி அமைத்துள்ளார். தமிழிசை குறிப்பிடும் வகையில் கணிப்பை என் குருவின் பாடாந்தரப்படி அளிக்கின்றேன்.

| | | |
|---|---|---|
| 1. ப்ரக்ருதி | - | பூமி, ஆதாரம் தாயார் ஸ - ப ப்ரக்ருதி ஸ்வரங்கள் |
| 2. விக்ருதி | - | ஆதாரத்திலிருந்து பூமியில், ரிகமதநி பிற விஷயத்தை வேறுபடுத்தி (விக்ருதிஸ்வரம்) காட்டுவது |
| 3. அ.உ.ம | - | ஓம்ப்ரணவம் மூன்றும் மத்யமம் ஒலியால் தமிழ் இசை பிறந்தது. அச்சுத மத்யமம் |
| 4. வேதங்கள் | - | நாலு வேதத்தில் சாமவேதம் இசை கொண்டது. |
| 5.பஞ்ச பூதம் | - | பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம். |
| 6. ஆறு சாஸ்திரம் | - | ஆறு தமிழ் எழுத்து கசடதபர - ஞஙனநமன - யரலவழள |
| 7. ஸப்தரிஷிகள் | - | ஸப்தஸ்தானம், நாபி, ஹ்ருத், கண்ட (கழுத்து) நாவு, நாசி, புருவமத்தி. |
| 8. அஷ்டவசுக்கள் | - | அஷ்டாக்ஷரம் - சிரஸ் என்சாண் உடம்பு மனித உடல் யாழுக்கு இலக்கணம். |
| 9. நவதீர்த்தங்கள் | - | நவரஸங்கள் |
| 10. த்வாதசகமகங்கள் | - | நமது உடலில் உள்ளது தசவிதகமகம். பெறாதவரால் இசைபாட இயலாது. அது பெற்றவர் மோக்ஷத்திற்கு இசையை உபாயமாக அடையலாம். |
| 11. | | |
| 12. ஸ்தானம் | - | 12 ஸ்வரஸ்தானங்கள் |
| மூர்ச்சனை | - | 21 மூர்ச்சனைகள் |
| ஸ்ருதிகள் | - | 24 ஸ்ருதிதான் நிலைத்துவமானது ஸ்ரீகாயத்ரீ மந்த்ரத்தின் 24 எழுத்தும் 24 ஸ்வரங்கள் |
| நுட்பஸ்ருதிகள் | - | 48, 96 |
| 1. ஸட்ஜம் | - | சுத ஸட்ஜம் |
| 2. ரிஷபம் | - | சுத்த ரிஷபம், ஸதுஸ்ருதி ரிஷபம் ஷட் ஸ்ருதி ரிஷபம் |
| 3. காந்தாரம் | - | சுத்தகாந்தாரம், ஸாதாரண காந்தாரம், அந்த்ர காந்தாரம் |
| 4. மத்யமம் | - | சுத மத்யமம், சுத்த மத்யமம், அச்சுத மத்யமம், பிரதி மத்யமம், அப்பிரதி மத்யமம் |
| 5. பஞ்சமம் | - | சுத பஞ்சமம், சுத்த பஞ்சமம் (ஆர்) அச்சுத பஞ்சமம் |
| 6. தைவதம் | - | சுத்த தைவதம், சதுஸ்ருதி தைவதம், ஷட் ஸ்ருதி தைவதம் |
| 7. நிஷாதம் | - | சுத்தநிஷாதம், கைசிக நிஷாதம், காகலி நிஷாதம் |
| 8. தாரஸட்ஜம் | - | சுதஸட்ஜம், அச்சுதஸட்ஜம், ஸட்ஜம் |

ஒவ்வொரு ஸ்வரத்திற்கு 3 ஸ்தானங்கள் ஆக 24 ஸ்ருதி. இந்த 24 ஸ்ருதிகளை ராகங்களில் ஸ்வரபேத மடையும்போது விளக்கினால் வரும் தலைமுறைகள் கர்னாடக சாஸ்த்ரீய சங்கீதத்தில் திறமையுடையது ஆவார்கள். நுட்பஸ்ருதி எங்கு வருகிறது என்பதனை எளிதில் உணர, காட்டக் கூடிய க்ருதி த்யாகப்ரும்மக்ருதிகள் மட்டுமே என்று என்னால் உறுதியாக கூறமுடிகிறது. நன்றி. வணக்கம்.

## ஸ்வரம்பற்றியது

## ஸ்வரம் சப்தஸ்வரங்கள் ஆகும்

ஸ்வரங்கள் ஏழுஸ்வரங்கள் ஆகிறது. அவை ச.ஸட்ஜம் ரி - ரிஷபம், க-காந்தாரம் ம.மத்யமம், ப.பஞ்சமம், த. தைவதம், நி.நிஷாதம் ஆகும். இந்த சுரங்கள் சாமவேதத்திலிருந்து பிறந்தன என்று வரலாற்றுக் குறிப்பு கூறுகிறது. 'ஸரிகமபதநி' வர ஸப்தஸ்வர என்கிறார் ஸ்ரீத்யாகப்ரும்மம் 'தநிஸரிக' என்ற ஐந்து ரீக்குகள் பூர்வகாலத்தில் சொல்லுவது வழக்கமாக இருந்திருக்கிறது. காந்தாரத்திற்கு மேலும் (ம), தைவதத்திற்கு கீழும் (ப) வரக்கூடிய, ம என்ற இரண்டு ஸ்வரங்களை சேர்த்து 'பதநிஸரிகம' என்று ஒரு ஸ்தாயியை பூர்த்தி பண்ணி கானம் பண்ணினான், அதோடு சப்தஸ்வரங்களிலிருந்து வரும் 1/2 (அரை) ஸ்வரங்களையும் சேர்த்து இனிமையாக வெவ்வேறு ராகங்களில் வெவ்வேறு சாகைகளை பாடினான் இராவணன் என்று வரலாறு கூறுகிறது. இவன் பாடிய பின்பே மற்றவர்களும் அப்படியே கானம் செய்தார்கள், செய்து வருகிறார்கள் என்று குறிப்பேடுகள் சொல்லுகின்றன. இவன் வழங்கிய சுரங்கள் கர்னாடக சங்கீதத்தில் இவனுக்கு முன்பேயுள்ளது என்று வரலாற்று குறிப்புகள் கூறுகின்றன.

### தமிழிசை எழுத்துக்களோடு பிற பாஷைகள்

தமிழிசையே தரணி போற்றும் இசை என்று சங்ககாலம் தொட்டு நம் தமிழ் மண்ணில் மங்கா புகழோடு பரவிக் கிடந்து வந்துள்ளது. நமது எழுத்துக்களில் ங, ஞ, ண, ந, ம, ன என்ற மெல்லெழுத்துக்குப்பின்னே வரும் வல்லெழுத்துக்கள் தமிழ் எழுத்தின் வல் ஓசையை இழந்து சம்ஸ்க்ருத எழுத்துக்களின் மூன்றாம் ஓசை, ஒலியுடையதாக காணப்பட்டு வந்துள்ளது. இவை பண்டைகாலம் தொட்டு பாரம்பரியமாக வந்துகொண்டிருக்கும் ஒன்றாகும். சம்ஸ்க்ருத பாஷையிலிருந்து இவை தமிழில் கலந்தவையல்ல, உதாரணமாக பங்தும், கங்குலும் பதலும் (பிரபந்தம்) தஞ்சம், பஞ்சு கொம்பு வம்பு, நம்பு தும்பல் பம்பையாறு, தும்பை பூ, உம்பரால் அறியலாகா கலம்பகம், போன்ற வார்த்தைகளின் உச்சரிப்பில் சம்ஸ்க்ருத எழுத்துக்களின் ஒலி வருவதைக் காணலாம். அதற்காக மேலே சொன்ன வார்த்தைகள் தமிழ் வார்த்தையல்லாது சமஸ்க்ருத வார்த்தை கலந்தது என்று கூறிவிடமுடியாது. இதுபோல ஆய்த எழுத்திற்கு பின்னால் வரும் வல்லெழுத்து தங்கள் ஓசையை இழந்து ஹ என்கிற சமஸ்க்ருத எழுத்தையும் சேர்த்து மெய்யெழுத்தின் ஓசையை தழுவி வருகிறது. அஃது எஃகு வானது ஹு என்ற ஒலியாக பேசப்பட்டது. இம்மாதிரியான ஒலி உடைய சொற்கள் பூர்வம் தொட்டு தமிழில் வழங்கி வந்திருக்கிறது. சமஸ்க்ருத எழுத்தில் வரும் கசடதப என்ற எழுத்துக்கள் ஒலியால் வேறுபடுகிறது. க1 க2 க3 க4 - 1ம் 3ம் ஒலியும், 2ம் 4ம் ஒலியும் உச்சரிப்பால் வேறுபடுகிறது க, இரண்டாம் எழுத்துக்க என்ற அழுத்தமான ஒலி க என்பது நமது தமிழ் எழுத்தில் பக லும் ஒலிப்பது போலும், சமஸ்க்ருத எழுத்தின் ஒலியாக கேட்கும், பங்கம் என்னும் போது 4வது (கால) ஒலி இங்கு ஒலிப்பதை காணலாம். மேற்படி உதாரணங்களுக்கு பிறகு தமிழில் ஸமஸ்க்ருத தெலுங்கு வார்த்தைகள் கலந்து விட்டது என்பதை ஏற்க முடியாது.

**தமிழ் எழுத்துக்களோடு பிறபாஷைகள்:-** தெலுங்கு கீர்த்தனைகளுக்கு தமிழ் ஸ்கிரிடு எழுதப்படுகிறது. எப்படி தமிழில் அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ ஃ - என்ற 12 எழுத்தும் க ங ச ஞ ட ண த ந ப ம ய ர ல வ ழ ள ற ன - என்ற 18 எழுத்தும் உயிர்மெய்யெழுத்துக்களும் கொண்டதோ அப்படி (ஸமஸ்க்ருதத்தில் க1, க2, க3, க4, ச1 ச2 ச3 ச4, ட1 ட2 ட3 ட4, த1 த2 த3 த4 ந, ப1 ப2 ப3 ப4 ம) யரலவழளறக்ஷ ஸஷஸஹ ஸமஸ்க்ருத எழுத்துக்கள், கசடதபற, ஞஙணநமன, யரலவழள எழுத்துக்கள் தமிழ் எழுத்துக்கள் - ஆக பாஷைக்கு எழுத்துக்களால் வித்யாசப்படாமல் உச்சரிப்பாலும், ஓசையாலும், ஓசை இரட்டித்தும் ஒலி வேறுபட்டாலும் தமிழுக்கு - ஸமஸ்க்ருத தெலுங்கு பாஷை வேறுபட்டு மாறுபட்டதே ஒழிய வேறில்லை. ஆனால் தமிழ் எழுத்துக்கு அர்த்தங்கள் மாறுவதில்லை. (ஆனால் இதர பாஷைகளுக்கு அர்த்தம் மாறும் படிம்மா என்றால் படிக்கச் சொல்வது (தமிழ்படி)) ப டி ம் மாஎன்றால் பெரியம்மா ஆகும். (கன்னடத்டதில்) ஆக எழுத்துக்கள் ஒலியால் வேறுபடுகிறது. 3 3

ஆகவே தமிழ் எழுத்துக்களுக்கு ஓரிரு எழுத்துக்கள் ஒலி வேறுபாட்டால் அர்த்தம் மாறாது, தமிழ் எழுத்து இல்லை என்றும் ஆகிவிடாது. பூர்வகாலந்தொட்டும் நம்மிடையே இந்த உச்சரிப்பு இருந்து வருகிறது. ஆகவே தமிழ் எழுத்தாகிய கசடதபற, ஞஙணநமன, யரலவழள இவையும் க1 க2 க3 க4 ங, ச1 ச2 ச3 ச4 ஞ, ட1 ட2 ட3 ட4 ண, தததத ந பபபபம, கசடதப ஸமஸ்க்ருத எழுத்தாகிய இவையும் கடபயாதி சக்ரம் தெலுங்கு எழுத்தும், எழுத்துக்கள் ஒன்றுதான்.

| | | | |
|---|---|---|---|
| காதி நவ | கககக ங, சச ஜஜஞ் | பாதி பஞ்ச | பபபபம, |
| டாதி நவ | டடடடண தததந்ன் | யாத்யஷ்ட | யரலவ/ ஸ்ஸ/ஷ/ஸ/ஹ |

*இவை கடபயாதி சக்ரம் ஆகும். (தெலுங்கு) இந்த சக்ரத்தால் மேளகர்த்தா முதலிரண்டு அக்ஷரங்கள் திருப்பிப்போட (அது 51 ஆனது 15 ஆகி மாயாமாளவகௌளை 15வது மேளம் என்று கண்டுபிடிக்க) இந்த கடபயாதி சங்கியை பயன்படுகிறது. இதனை பின் தொடரப்படும். கடபயாதி சக்ரம் தரப்படும்*

குறிப்பு:- யாத்யஷ்ச/ய,ர,லவ/ஸ்ஸ श இவ்விதம்| ஷ ष | ஸ स |இவ்விதம்| ஹ ह |

**கடபயாதி 5 சக்ரம்**

| வரிசைகள் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| காதிநவ | க் | க் | க் | க் | ங் | ச் | ச் | ச் | ச் | ஞ் | |
| டாதிநவ | ட் | ட் | ட் | ட் | ண் | த் | த் | த் | த் | ந் | ன் |
| பாதிபஞ்ச | ப் | ப் | ப் | ப் | ம் | | | | | | |
| யாத்யஷ்ட | ய் | ர | ல் | வ் | ஸ் | ஷ் | ஸ் | ஹ் | ற் | ள் | க்ஷ் |

சூடாமணி-ஸம்ஸ்க்ருத க்ஷ, த்ர, க்ஞ

*(உம்) மாயாமாளவகௌளை:- என்றும் மேளகர்த்தாவின் முதலிரண்டு அக்ஷரங்கள் மா-யா என்றிருப்பதில் மாவிலுள்ளம் மேற்கண்ட சக்ரத்தின்படி 5 லக்கத்தை குறிப்பதாலும் மாயாவானது 51 ஆக நிற்கிறது. அதை முன் பின்னாக மாற்ற அது 15 ஆக நிற்கிறது. ஆகவே மாயாமாளவகௌள என்னும் மேளகர்த்தாவானது 15 மேளகர்த்தா என்று மேற்படி சக்ரத்தின் உதவியால் கண்டறிய முடிந்தது. இதே மாதிரி 72 மேளகர்த்தாவையும் கண்டறியலாம்.*

***ஆழ்வார்களும் நாயன்மார்களாலும் தமிழிசை போற்றப்பட்டது எனலாம். இதில் த்யாகப் பிரும்மம் பங்கு பற்றி ஒரு கண்ணோட்டம்:-***

*தமிழ் வேதமாகிய நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் ஆரிய வேதமாகிய சதுர்வேதத்திற்கும் சமானமானது.*

*தமிழ் வேதம் முன் செல்ல ஆரிய வேதம் பின் தொடர அணி அரங்கன் நடைபோட்டு வீதி உலாவருகிறான். திருவரங்க பவனியில் தமிழுக்குதான் முன்னனி அளித்துள்ளான், இசையில் தமிழ் இசை தான் என்பதற்கும், இசைக்கு ஆதாரமான கோயில் திருவரங்கமே என்பதற்குச் சான்றுகள் உரைக்கின்றன. பேரீதாடனத்தில், தமிழை தமிழிசையை உலகம் உய்ய தீப விளக்காக ஏற்றி வைத்தவர்கள் நம் ஆழ்வார்கள். ஆழ்வார் ஆழ்ந்த அறிவினை உடையார் என்னும் பொருளில் ஆழ்பகுதியாக வைத்து அறிவை தொகுத்து பொருளினது சூழ்ச்சி அறிவின் வாயிலாய் அறிவுடையார் மேலதாக 'ஆர்' விகுதி கூடி ஆழ்வார் என நின்றது. வேதத்தை கடலாகவும் காடாகவும் உருவகம் செய்து இவற்றை முறையே வேதசாகரம் என்றும், வேதாரணியம் என்றும் வழங்கி வருகிறது. வேதத்தை திராவிட வேத சாகரம் என்று உருவகஞ்செய்து அக்கடலுள் ஆழ்ந்தறியும் அறிவு விசேஷமுடையவர்களை ஆழ்வார்கள் என்று வழங்கினார்கள். இதனால் தெரிய இயலாத வேதக் கடலுள் ஆழ்ந்து கிடந்த மந்திரார்த்னார்த்த விசேஷங்களை தங்கள் திவ்ய ஞானத்தை மூழ்கி எடுத்து உலகுக்கு அளித்த அவர்களை ஆழ்வார்கள் என்று போற்றப்பட்டார்கள். வடமொழி வேதமும், திவ்யப் பிரபந்தமாகிய தமிழ் வேதமும் பொருள் ஒற்றுமையால் ஒன்றேயென்றும் வடமொழி வேதத்துக்கு உரியவர். 'அந்தணர்' தமிழ் வேதத்துக்கு எல்லோருமே உரியர் என சிறப்பு நோக்கி வடமொழி வேதத்திலும் தமிழ் வேதம் சிறந்தது என்பர். இப்படிப்பட்ட வேதசாரமான ப்ரபந்தத்தை வேதத்தின் சாரமாய் எப்படி ஆழ்வார்கள் பண் இசைத்தார்களோ அது திவ்யப்பிரபந்தமாயிற்று. இதனையே வேதத்தின் சாரமாய் வியாக்யானமாய் ஸ்ரீமத்ராமாயணத்தை தமிழிசையின் இசை நூலால் கீர்த்தனைகளை அமைத்தார் ஸ்ரீத்யாகப்ரும்மம். இதேபோன்று சம்பந்தர் சுவாமி தேவாரம் மாணிக்கவாசகர் திருவாசகம் சுந்தரர் தேவாரம் தூய தமிழ் பாக்களை பாடினார்கள். தமிழ் இலக்கண இலக்கிய நடையில் தமிழ் பண்களை இசைத்தார்கள். இவர்கள் காலத்தில் தமிழ் மணத்தது தமிழ் பாக்கள் மணத்தது. சங்கப் புலவர்கள் செய்தது. பெருநாரை, பெருங் குருகு முதலானவை நாரதராகிய தேவ வருடியாரால் செய்யப்பட்டது. பஞ்ச பாரதீயம். இந்த நூலையே ஸ்ரீத்யாகராஜருக்கு அளிக்கப்பட்டது. இதனை ஸ்வரார்ணவம் என்று தேவநாகிரியில் கூறப்பட்டது என்று நான் உறுதியாகக் கூறுவேன். ஏனெனில் ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் கீர்த்தனையில் தமிழிசை ஸ்ருதிகள்பளிச்சிட்டிருப்பதிலிருந்து (48, 96 நுட்பஸ்ருதிகள்) இவருக்கு நாரதர் அளித்தது பஞ்சபாரதீயமே என்று திட்டவட்டமாக என்னால் இப்பொழுதும் இதற்கு முன்பும் கூறப்பட்டது. பஞ்சரத்னம் (5) ஐந்திலும் இசையின் எல்லா விஷயத்தையும் காணலாம். மேலும் சிகண்டி முனிவனார் செய்தது இசை நுணுக்கம்; அறிவனாசிரியர் அருளியது பஞ்சமரபு யாமர் யாமளேந்திராசிரியர் இவர் செய்தது இந்த்ர காளியம் மற்ற*

நூல்கள் தாளவகையொத்து வியாழமாலை, வெண்டாளி, முறுவல், சயந்தம் முதலியன இந்த தமிழ் நூல்களை கொண்டே தமிழில் அடிச்சுவடான தமிழிசை சுருதிகளை 48, 96 நுட்பஸ்ருதிகளை பிரயோகப்படுத்தி கீர்த்தனையை ரஸானுபாவமாக அமைத்தார் என்று எனது ஆய்வின் முடிவு. ஆகவே இவருடைய பாடல்கள் ரம்யமாக இருந்ததற்கான காரணம் கீர்த்தனை தெலுங்கு கலந்த ஸமஸ்க்ருதமாக இருந்தாலும் இசையின் தத்துவம் தமிழிசையை தழுவியது. ஆகவே நுட்பஸ்ருதிகளை நாம் தெளிவடைய தமிழிசையை முறையாக பயின்று ராகத்தை கலப்படம் செய்யாமல் பாடுவோம்.

<u>தமிழிசையே தாரணி போற்றும் இசை</u>

<u>காவேரி கொள்ளிடக்கை மாலையாய் அணிந்த அரங்கன் இசைக்கு அதிபதி தமிழிசையே தாரணி போற்றும் இசை என்பது இந்த ஆசிரியை கருத்து</u>

மைசூர் தலை காவேரி ஸப்தரிஷி மண்டலம் ஏழு அட்க்ஷரம் என்று நினைவு கூறுகிறது ஸப்தஸ்வரம். நாததநுமநிசம் என்ற கீர்த்தனையில் ஸப்தஸ்வரம் என்று கூறினாலும் அஷ்டகம் என்பது தான் முதன்மையானது என்று அவர் பல கோணங்களில் தெளிவுபடுத்துவதாகவும் எனது தாயாருடைய கருத்து. அஷ்டாக்ஷரம் என்பதையும் அதனால் நான் அஷ்டகத்தையே ஸ்வரப்ரஸ்தாரத்தில் வலியுருத்தி உள்ளேன் என்கிறார். அஷ்டாக்ஷரம், அஷ்டவசுக்கள், அஷ்டாங்க விமானம் அதை ஒட்டி 8+8+8=24 அக்ஷரம் திருவரங்க விமானத்தின் அஷ்டக கணிதம் அச்சுதா, அனந்தாகோவிந்தா ஸ — ப — ஸ் 24 ஸ்ருதி

அச்சுதா அனந்தா கோவிந்தா




ஆம்பல்பூத்தசய பருவதமடுவிலே, அவதரித்த இரண்டாற்றுக்கு நடுவிலே - ஆக இந்த சயபர்வதம் சய்யோகமேரு'' மேலே காட்டப்பட்டுள்ளது.

5000 ஆண்டுக்கு முன்பே ஏற்பட்ட கோயில் என்று திருவரங்ககோயில் இருப்பத்திநாலுஸ்ருதி, 24,000 க்ருதி, 24 உலக நேரம் 24,000 ராமாயணஸ்லோகம் ஆக 8ன் வர்க்கமே அஷ்டவர்க்க இசைக்கு ஆதாரம் - மேளம் மேளகர்த்தா 8ன் சங்கமம். எட்டு ஸ்வரம்தான் ஒரு ராகத்திற்கு முழுவடிவம். - இந்த திருவரங்கம் சுமார் 156 ஏக்கர் பரப்பளவில் அமைத்துள்ள இத்திருக்கோவில் 21 கோபுரங்கள் தற்போது கட்டப்பட்ட ராயகோபுரம் 236 அடி உயரமும் இங்கு <u>எட்டு உபகோயில்களும்</u> கோயில் உட்புரத்தில் 42 உபசன்னதிகளும் உள்ளன. ஒரு விசேஷம் என்னவென்றால் கோவிந்தா என்ற சொல்லை நிரூபிக்கும் வகையில் ஒவ்வொரு திருசுற்றிலும் கிருஷ்ணன் கோயில் உள்ளது. தென்னிந்தியாவில் மிகப்பெரிய கோவில்திருவரங்கம். ஆனால் திருவரங்கம் இசைக்கு ஆதாரமான கோயில் என்ற ஆதாரத்தை கும்பகோணம் திருமதி ஜெயம்மாளால் எடுத்துக்காட்டப்பட்டு நான் அதனை தக்க முறையில் மெய்பித்துள்ளேன். ஆதாரங்கள் மட்டுமில்லாமல், உலக வரலாற்று நூல்களும் அவர் கூறியதை சரி பார்த்ததும் என்னிடம் உள்ளது. ஆதி ரெக்கார்டுகளை திருவரங்கம், மத்யரங்கம், கடைசிரங்கம் ஆகிய இடங்களைப் பற்றி அறிந்து எனது சகோதரர் உதவியோடு போய் பார்த்துவிட்டு கடைசியாக திருவரங்கம் வந்து பெருமாளை தரிசித்து ஸ்தல புராணம் அறிந்து அனைத்து ரெக்கார்டுகளையும் சேகரித்தபின் இதனை எழுதியுள்ளேன். தலை காவேரி என்று <u>பாக மண்டலம்,</u> ப்ளப் நீர்வீழ்ச்சி சென்று பார்த்தேன். அங்கு இசையின் தத்துவம் புலப்படுகிறது. கடைசி திருவரங்கம் கோயிலிலேயே இசை பற்றி உள்ளதை தெளிவுபடுத்தி உள்ளேன்.

**மத்ய ரங்கம் ப்ளப் - சிவசமுத்திரம் - ஆறிலிருந்து 'ஸ' பிறக்கிறதின் தத்துவம்**



*நீர்வீழ்ச்சியில் இசையின் பிரிவுகளை காணலாம். மூன்று பாகங்களில் விழும் நீர் இவ்விதம் மத்ய ஸ்தாயி 1 ஆனால் தாரஸ்தாயி அதன் 2 மடங்காகும்.*

*அதிதாரஸ்தாயி, தாரஸ்தாயிக்கு 2 மடங்காக இருக்கவேண்டும் 1 : 2 : 4*

*மத்ய தார அதிதார*

*ப்ளப் நீர்வீழ்ச்சி விழும் இடத்தில் ஸ்தாயிகள் இந்த விகிதத்தில் உள்ளதை காணலாம்.*

*இதுபோல் ஆதாரம் - மத்யமம் - தாரம் அதிதாரம்*

*1 1 2 4*

*என் தாயார் திவ்யப்பிரபந்த பாசுரங்களை ஆதிதாளத்தில் அமைத்துள்ளார். மேலும் தமிழிசை பண் ராகங்களிலே அமைத்துள்ளார். அவற்றில் இரண்டு ஆனந்த பைரவி ராகம் பண் ஆர்ஷ என்ற ப்ரயோகம் இரண்டாவது ஆண்டாள் பாசுரத்தில் ஆழிமழைக்கண்ணாவை ஆதிதாளம், இந்தோள ராகத்தில் பாடியுள்ளார். பண் இந்தளம் - மார்கழியில் விடியற்காலத்திற்கு பாடும் ராகத்தில் இவர் அமைத்துள்ளது சிறப்புடையது. இந்த பாசுரம் மழைபொழிய ஆண்டாள் கண்ணனை பாடுகிறார் என்று சான்றோர் கூறுகின்றனர். விடியற்காலையில் பாட - பூபாளம், நாட்டையில் பாசுரங்களை பாடியுள்ளார். இவர் பாடிய பாசுரங்கள் திருப்பாவை திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலநாதிபிரான் அ.உ.ம ரத்திற்கு திருவாய்மொழி, திருமொழி, நாச்சியார் திருமொழி, திருநெடுந்தாண்டகம், பெரியாழ்வார் பாசுரங்கள், திருச்சந்த விருத்தம், ப்ரபந்தம் ஆரம்பமுதல் கடைசி வரை ராகம் அமைத்துள்ளார். அதற்கு நான் நொட்டேஷன் செய்துள்ளேன். முதற்பதிப்பு பாசுரமாலா. இவரது குறிக்கோள் தமிழிசை பரப்புவதே இயற்றமிழின் சிறந்ததான பாசுரங்கள் சீர், அடி, மோனை எதுகை என்ற முக்கிய அம்சங்களுடன் அமைந்திருக்கிறார்கள். இவ்வகையில் என் தாயார் எடுத்துக்கொண்ட தமிழிசை நாலாயிரத் திவ்யப் பிரபந்தம். அதனை பழந்தமிழ் பண்களில் பாடி பலவிதமான தாளக்கட்டோடு சீர், அடி, மோனை, யதுகை - சீர் குலையாமல் தமிழிசைப் பண்ணாக நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்தை மெட்டும், ராகமும் அமைத்து பாடி தமிழிசையே தரணி போற்றும் இசை என்று விளக்கி உள்ளதை நான் ஆய்வு கண்டுமுடித்துள்ளேன். இசையின் பெருமையை மும்மூர்த்திகளும் உலகுக்கு உணர்த்தினார்கள். அவர்களில் ஸ்ரீத்யாக ப்ரும்மம் ஞானியாக முனிவராக, யோகியாக, நாரத முனிவரை பார்த்தவராக, ராமனை நேரில் பார்த்தவராகப் போற்றப்படுகிறார். ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதப்ரும்மமாக நாதோபாஸனை செய்து மோக்ஷமடைந்தவர். எனது ஆய்வில் அவரது இசையின் இலக்கிய இசையில் எட்டிய சிகரத்தின் பரமரகசியமான, விந்தையான விஷயங்களை வெளியிட்டுள்ளேன். அவர் பாரத்வாஜகோத்ரம், நானும் அவர் வழி வந்த சிஷ்யபரம்பரை, பாரத்வாஜகோத்ரம், என் குருநாதர் வழிமுறைகளை ஆராய்ந்து தெளிவுற்று பின் முடிவானதை இந்த ஆய்வில் வெளியிட்டுள்ளேன். கர்னாடக இசையும் தமிழிசையும் ஒன்றே என்று நிலைநாட்டியுள்ளேன். தமிழின் உயிர்மெய் எழுத்துக்களை போல், ஸமஸ்க்ருத தெலுங்கு பாஷைகளிலும் எழுத்துக்கள் ஒன்றானாலும் ஒலி வித்யாசத்தால் வேறுபாடாகத் தெரிகிறது. ஆனால் எழுத்துக்கள் ஒன்றே என்பது முக்கியமானது. ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் கீர்த்தனை த்ருத, மத்ய, விளம்பித க்ருதிகளாக அமைந்துள்ளதால் ஏனைய சிறுவர்கள் முதல் பெரியவர்கள் வரை மிக எளிமையாக கஷ்டப்படாமல் மனனம் செய்யும் வண்ணம் அமைத்துள்ளார். இவரது கீர்த்தனையில் 48, 96 நுட்பஸ்ருதிகளை ஸ்ருதிகளின் இலக்கை சரியான கோணமிட்டு காட்டி உள்ளார். நுட்பஸ்ருதிகளை தனித்து பிரித்து காட்ட முடியாது. ஸ்ருதியை விட்டு வேறுபடுத்திக்காட்ட முடியாது. ஆனால் இவரது கீர்த்தனையில் ஸ்வராட்க்ஷரக் குறிப்பால் நுட்பஸ்ருதிகளின் நுட்பத்தை பிரமிக்கும் வகையில் அமைத்துக்காட்டியுள்ளார். நீ பஜனகான ஸ்ரீராமபாதமா பாலகனகமய, ஸ்வரராகஸுதா போன்ற கீர்த்தனைகளில் ஸ்வராட்க்ஷரக் குறிப்பால் நுட்பஸ்ருதியை திட்டவட்டமாகக் காட்டியுள்ளார். அவர் சுவடிகளிலோ ஏட்டிலோ எழுதி வைக்காமல் போய்விட்டது நமது துர்பாக்யம் என்று கூறுவோருக்கு இவ் பாடலை மாணாக்கர்களுக்கு நித்யபஜனையில் பாடியதால் இசையின் தத்துவத்தை ஸ்ருதி நிர்ணயத்தை நன்கு-*

உணர்த்தி பாடவைத்ததனால் கீர்த்தனைகள் பிழைத்தது என்பதனை நான் கூறுகிறேன். இவருடைய பாடல்களை, கீர்த்தனைகளை வீணையோடு பஜனையில் பாடினார். அவர் சீடர்களை வீணையோட பாடவைத்தார். இந்த அவருடைய சரித்ர வரலாற்றிலிருந்து ''ஸ்ரீத்யாகப்ரும்மம்'' வீணையோடு வாசித்து காட்டமுடியாத மிக துல்யமான நுட்பஸ்ருதிகளை காட்ட முடியுமென்பது யாழில் மட்டுமே என்று அவருடைய கீர்த்தனைகளை யாழுடன் பஜனையில் பாடினதானது நுட்பஸ்ருதியை சீடருக்கு உணர்த்தும் பொருட்டே எனலாம். 72 மேளத்திலும் கீர்த்தனைகளை பாடி உள்ளார். அதற்கான ஆதாரத்தை அளித்துள்ளேன் இரண்டாம் முறையாக.

<u>இசை பற்றிய முக்கியமான ஏடு</u>

<u>ஆத்மாவானது தன்னுடைய எண்ணங்களை ப்ரதிபலிக்க நினைக்கிறது தலைப்பு:</u>

<u>இசையின் தத்துவம்</u>

நினைக்கும் பொழுது மனத்தை தூண்டுகிறது. இந்த மனம் (எண்ணமானது) உடலில் இருக்கக்கூடிய காற்றை உஷ்ணப்படுத்துகிறது. அப்படி சூடேற்றப்பட்ட இந்த காற்றானது ப்ரம்மகந்தி நிலையில் இருந்து கொண்டு மேலே கிளம்பகின்ற நேரத்தில் உடலில் நாபி மூலமாகவும், இதயத்தின் மூலமாகவும், கழுத்து தலை மூலமாகவும், முகத்தின் வாய் மூலமாகவும் ஸப்தத்தை உண்டாக்குகிறது. ஆத்மாவானது தன்னுடைய எண்ணங்களை ப்ரதிபலிக்க விரும்பும்போது மனத்தைத் தூண்டுகிறது. அப்படி தூண்டப்பட்ட மனமானது உடலில் உஷ்ணக் காற்றழுத்தத்தை உருவாக்குகிறது. இப்படி உருவாக்கப்பட்ட உஷ்ணக்காற்று மேல் நோக்கி நகரச் செய்கிறது. அப்படி நகரும் காற்று (ப்ரமக்கந்தியிலிருந்து) ஜீவனிலிருந்து கிளம்பி மேல் நோக்கிச் செல்லும் பொழுது நாபி தொப்புள், இதயத்திலிருந்து கழுத்து (தலை முகம்) இவைகளின் மூலம் சப்தத்தை வெளிப்படுத்துகிறது. அந்த ஸப்தமே ஸப்தஸ்வரமாக உறுவகப்படுகிறது. இதுவே <u>இசையின் தத்துவம்</u>. இதனையே ஸ்ரீத்யாகப்ரும்மம் நாபிக்ருத் கண்ட ரஸனா என்று ஸோபில்லு (ஜகன்மோஹினி ராகம்) கீர்த்தனையில் பாடுகிறார். இவரது ஒவ்வொரு கீர்த்தனையும் இசையின் தத்துவங்களை புலப்படுத்தும் வகையில் அமைந்ததால் இசையாதாரங்களை நாம் தேடி செல்லவேண்டிய அவசியம் இல்லை. இசை அதுவும் கர்னாடக இசை நம்மிடையே அழியாது நிலைத்து நிற்க இவரது கீர்த்தனைகளே சான்றாகும்.

<u>தேவீ உபாஸனை மூலம் தான் கோரிய வரத்தை பெற முடியும் என்ற விளக்கம்</u>

குறிப்பு:- ஸ்ரீவ்யாஸரே தான் கோரியதை அடையயாரை தொழ வேண்டும் என்று நினைக்கையில் விஷ்ணுவா, பரமேச்வரனா, தேவேந்திரனா, பிரம்மதேவனா, ஸுர்யனா, கணபதியா, முருகனா, அக்னியா, வருணனா, என்றெல்லாம் கவலையுடன் கலங்கியிருக்கும் போது ஸ்ரீநாரத முனிவர் அங்கு வந்து

''வரப்ரதான நிபுணம் வாஞ்சிதார்த்தப்ரதம்ததா''

விஷ்ணும்ருத்ரம் ஸுதேந்திரம் வாப்ரம்மாணம்வா திவாகரம்.

கணேசம் கார்த்திகேயம் வாபாவகம் பருணம்ததா''

தங்கள் ஹ்ருதய கமலத்திலுள்ள ஸ்ரீபுவனேஸ்வரியின் சரண கமலத்தை த்யானம் செய்யுங்கள் கோரியதை உடனே அளிப்பாள் என்று கூறினார். இதேபோல் ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு ஸ்ரீநாரதமஹரிஷி ஸ்வரார்ணவம், நாரதீயம் என்னும் அறிய நூல்களை அருளினார். அவற்றை பூஜை அறையில் வைத்து பூஜித்து அவருடைய உபதேசப்படி அம்பாளையும் த்யானித்து தேவியின் மீது பல கீர்த்தனைகளை புனைந்தார். முக்கியமாக தேவியை உபாஸித்து ராம நாமத்தை ஜபித்து ஒரு கோடி பாராயணம் செய்து ராமனை தரிசித்து மோக்ஷமடைந்தார். அவரது (பல்லாயிரக்கணக்கான) கீர்த்தனைகளை 24,000 பாடினார் என்று சில குறிப்புகள் கூறுகின்றன) கீர்த்தனைகளில் முக்கியமான கீர்த்தனையாக சிறப்பிக்கப்படுகிறது தாரிணி தெலுஸுகொண்டி என்ற கீர்த்தனை. இதில் தேவியின் உபாஸனை மூலம் கோரியதை பெறலாம் என்று தெளிவாக்குகிறார். இதன் பதவுரையை எனது வெளியீடான ஸ்ரீத்யாகராஜக்ருதி மாலாவில் காணுங்கள்.

## ஓம் ப்ரணவத்தைப் பற்றி

ஓமே ப்ரம்மம், ஓமே ஸர்வம், ஓமே ஸாமகானம் என்பது வேத முனிவர்கள் கண்ட உண்மை. அந்த ஓம்கார நிறைவே ஆகாச மாகியப்ரம்ம சரீரம் அதனின்றே எல்லா பூதங்களும், தன் மாத்திரைகளும், தத்துவங்களும், உலகங்களும் விரிந்து பரவின. பரமாத்மா ஓம்காரமாகவே ஜீவாத்மாவுடன் உடலில் வசிக்கிறான். இந்த ஓம்காரத்தின் விரிவுதான் வாழ்வும் கலையும் ஆகும். ஓம்காரத்தின் உயிர்மூச்சே இசைக் கலையாகும். அது எல்லா உயிர்களையும் வசப்படுத்தும். ஓம்காரத்தின் தத்துவம் கொண்டது குழல், கண்ணன் குழலோசையால் எல்லா உயிர்களும் வசப்பட்டன. மகுடி இசைக்கு பாம்பு மயங்குகிறது. இசைக்கு குழவி மயங்குகிறது. பரம பக்தியால் அந்தகான சக்தி பெற்ற யோகிகள் அனாகதகானமான ஓம்காரத்தில் எப்போதும் மூழ்கியிருந்தார்கள். இசையின் மூலம் இறைவனை கண்டார்கள். இறைவனும் இனிய கானத்தால் அடியாரை ஆட்கொண்டான். அந்த லயமுதிர்ச்சியால் விசுத்தி சக்ரம் மலர்ந்தது. அருள் வாக்கு அவர்களுக்கு சித்திக்கிறது. அருள் கனிந்து பொழியும் அமுதகானரஸம் நாதயோகிக்கு பிரஸாதமாகிறது. இதனை ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதோபாஸனாக்ருதியில் கூறுகிறார். அந்த கான சுத்தி பெற்ற யோகிகளில் ஸ்ரீத்யாகப்ரும்மம் ஒருவர் ஆவார். அந்த கானசுத்தி பெற்று அனாஹத கானமான ஓம்காரத்தில் லயித்து அந்த லய முதிர்ச்சியால் விசுத்தி சக்கரம் மலர்ந்து அருள் வாக்கு பெற்ற அருள் கனிந்து பொழியும் அமுதகான ரஸத்தை நாதயோக பிரஸாதமாக நமக்கு அளித்தவர் ஸ்ரீத்யாகப்ரும்மம். இந்த லய விந்யாஸம் பெற, நாதோபாஸனை செய்ய நாத வடிவானவளான, அம்பிகையை எங்ஙனம் த்யானிப்பது என்பதை தாரிணி தெலுஸுகொண்டியில் கூறியுள்ளார்.

## சங்கீத வாணியின் பூரணமான ஒளியை பெற்ற நாடு தமிழகமே

ஸங்கீத வாணியின் பூரணமான ஒளியை பெற்ற நாடு தமிழகமே. இங்கே தான் கர்னாடக இசை உச்சம் பெற்றது. இக்கலை பல்லாயிரம் ஆண்டுகளாகவே வளர்ச்சி பெற்று வந்திருக்கிறது. நாரதர் தமிழ் நாட்டில் யாழ் ஆசிரியனாக இருந்திருக்கிறார் என்று வரலாறு கூறுகிறது. நாரதரின் ஸங்கீத மகரந்தம், பரத முனிவரின் பரத சாஸ்த்ரம், நாட்டிய சாஸ்த்ரம், சார்ங்க தேவரின் ஸங்கீத ரத்னாகரம், லோசன கவியின் ராக தரங்கிணி, புரந்தரதாஸரின் கீதங்கள், நாராயண தீர்த்தரின் க்ருஷ்ணலீலாதரங்கிணி, ராமதாஸ் கீர்த்தனைகள் அஹோபலரின் ஸங்கீத பாரிஜாதம், வேங்கடமகியின் சதுர்தண்டிப்பரகாசிகை முதலிய ஸங்கீத நூல்கள் கர்னாடக கலையில் அடங்கியுள்ள மேள ஜன்ய ராகங்களையும் லட்க்ஷணங்களையும் விளக்குகின்றன. இந்த இலக்கணங்களுக்கெல்லாம் இலக்கியமாக அமைந்தது ஸ்ரீத்யாகராஜ கீர்த்தனைகள். தெலுங்கு, ஸமஸ்கிருத கீர்த்தனைகள் உலகிற்கு பொதுவான இசை செல்வங்கள், பாஷைகள் வேறுபட்டாலும் நாத மயமான இந்த கீர்த்தனைகள் அந்தராத்மாவை தொட்டு கான ஸுகமளிப்பதால் இவை ஜனரஞ்சகமாக எல்லோராலும் ஏற்கப்பட்டு பாடப்படுகிறது. நாரதரின் க்ரந்தமான ஸ்வரார்ணவம் இலக்கண இலக்கியம் கொண்ட நூலாகவே கருதப்பட உள்ளது. ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் கீர்த்தனை வடிவத்திலிருந்து மேலும் தமிழ் நூல்களாகிய பஞ்சபாரதீயம், நாரதீயம், அகத்தியம், பெருநாரை, பெருங்குருகு என்னும் இசை நூல்களும் தமிழ் நூலாக தமிழகத்தில் இருந்தன என்று குறிப்பேடுகள் கூறுகின்றன. நாரதரின் பேரியாழ் ஆயிரம் தந்திகள் பூட்டியது தமிழகத்தில் இருந்தனவென்றும் தமிழ் பாஷை உண்டான காலமே கர்னாடக இசை சங்கீதம் உண்டான காலம் என்று வரலாறு கூறுகிறது. இந்த பஞ்சபாரதீயம் தான் ஆரியரால் ஸமஸ்க்ருத நூலாக மாற்றப்பட்டு விட்டிருந்திருக்கலாம். (ஸங்கீத ரத்னாகரம்) (எனது அனுமானம்) என்று தோன்றுகிறது. தமிழ் இசை நூல்கள் எல்லாமே வடமொழியில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கும் என தோன்றச் செய்கிறது. மேலும் நாரதர் யாழாசிரியனாக தமிழகத்திலிருந்தார் என்று வரலாறு கூறுவதிலிருந்து ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு தமிழிசை நூல்களையே நாரதர் அளித்திருக்க வேண்டும் என்ற என் முடிவை உங்களுக்கு சமர்பிக்கிறேன். மேலும் கர்னாடக இசை காலக் கிரமத்தில் எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டன. 1750 - 1920 ஆண்டுகளில் நமது இசை உச்சநிலையை அடைந்தது எனலாம். அப்பொழுது ஏற்பட்ட பாவ சங்கீதமே இன்னும் இசை உலகில் நீடித்துள்ளது. அதை ஒரு ஸங்கீத ஸகாப்தம் எனலாம். அப்போதுஎத்தனையோ ஸங்கீத மணிகள் விளங்கினார்கள். அவர்களுக்கெல்லாம் அரசராக கலைச் செங்கோல் பிடித்து புகழ் முடிதரித்து விளங்கின நாத வடிவானவரே ஸ்ரீத்யாகப்ரும்மம். இந்த இரு நூற்றாண்டை ஸ்ரீத்யாகராஜ ஸகாப்தம் எனலாம். ஸ்ரீத்யாகராஜரை பக்திபரவசரான ஸங்கிதராஜர் என்பதை உலகம் ஒப்புக் கொள்கிறது. இவரது புகழ் நாளாக நாளாக அகண்ட ஜீவநதிபோல் உலகெங்கும் பரவி வருகிறது. இந்த மகாத்மாவின் ஜிவியமே ஸங்கீர்த்தனம். ஸங்கீர்த்தனமே ராமநாமம். ராமநாமமே தாரக மந்த்ரம் தாரக மந்த்ரத்தின் மூலாதாரக்கடவுள் ஸ்ரீராமபிரான். ஸ்ரீராமகாவிய ராமாயணத்தை படைத்தவன் ஸ்ரீவால்மீகி மஹரிஷி. ஸ்ரீவால்மீகியின் மறு அவதாரமே ஸ்ரீத்யாகப்ரும்மம். ஸ்ரீவால்மீகி மஹரிஷியின் காவியமான ராமாயணத்தை அறிந்தவர் ஸ்ரீநாரதர். அந்த காவியத்தலைவன் ஸ்ரீராமபிரான் என்னும் போது மறுபிறவியிலும் ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு அரிய நூல்களை தந்தருளி ராமபிரானை நினைவுகொள்ளச் செய்து ராமாயண பாடல்டகளைப்பாடி அதன் மூலம் ஸ்ரீத்யாக

ப்ரும்மம் வால்மீகி என்று நாம் உணரச் செய்த நாரத பகவானை போற்றி வணங்கவேண்டும். இந்த ஸ்ரீராமன் வணங்கிய இஷ்வாகு குலதனமான அரங்களை ஓம் ப்ரணவாதி என்பதனை உணர்த்த ஓரங்கசாயி பாடி ப்ரணவமந்த்ரமே இசைக்கு ஆதாரம் என்று மெய்பித்துள்ளார்.

## பஞ்சபூதங்கள்

ப்ருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் இவை பஞ்சபூதங்கள். தாமரையை ஆழ்வார்கள் போற்றிப் பாடுகிறார்கள். அரங்கன் மார்பில் லக்ஷ்மியை வைத்துள்ளான். ஆழ்வார்கள் வலமார்பில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு என்கிறார்கள். ஆழ்வார்களில் தாமரை கண்ணன் என்றே தளரும் என்றும் நம்மாழ்வாரும், அல்லி நாள் தாமரைமேல் ஆரணங்கின் இன் துணைவி என்று கோதையும் பாடுகிறார்கள். தாமரை கண்ணன் திருவடித்தாமரை என்கிறார்கள். நம் அகத்தில் இருக்கும் பஞ்சபூதங்களை தட்டி தாமரையின் மேல் அமர்ந்திருக்கும் லக்ஷ்மியை த்யானிக்க பஞ்சபூதங்களுக்கும் நம் வணக்கத்தை தெரிவிக்கிறோம். நிலம், நீர், நெருப்பு, காற்று, வான் அனைத்துக்கும் நாம் பிரார்த்தனை பலனை தாமரை மூலம் அடைகிறோம். பஞ்சபூதங்களால் தாமரையின் கூம்புபாகம் தீர்க்கமாக புரிந்து கொள்ளும் சக்தியை குறிக்கிறது. விரிந்த இதழ் பரந்த மனப்பக்குவத்தை அளிக்கிறது. தண்டு திடமான சரீரத்தை கொடுக்கிறது. மண் அளிக்கும் ஜீவாதாரம் காற்று இரண்டும் தெம்பை அளிக்கிறது. நல்ல காற்றை பெற்று ஸ்வாசிக்கிறது. சூரியனிடமிருந்து உஷ்ணத்தை பெறுகிறது. உஷ்ணத்தை பெற்று பூ திடமான உருவத்தை பெறுகிறது. குளத்தில் இருக்கும் நீரை தண்டு மூலம் பருகி தாமரை உயிர்வாழ வழிகோருகிறது. ஆகாசத்தின் வெட்பதட்ச நிலைக்கு தன்னை வழிப்படுத்திக் கொள்கிறது. காலையில் மலரும் தாமரை மாலையில் கூம்பிக் கிடக்கிறது. கதிரவன் ஒளியால் மலர்கின்றது. இந்த தத்துவமே மானிடனாகிய நமக்கு பொருந்துவதால் இறைவழிபாட்டுக்குரிய மலராக தாமரையை வணக்கத்திற்குரியதாக தேர்ந்தெடுத்துள்ளார்கள். இதையே ஆழ்வார்களும் பாடியுள்ளனர். இறைவனும் தாமரையை தனது நாபியில் வைத்துள்ளான். அவனுடைய பஞ்சபூதங்களுக்கு சாக்ஷியாக தாமரை மேல் ப்ரும்மா அமர்ந்துள்ளான். 'தாமரை மேல் அயனவனை படைத்தவனே என்று குலசேகராழ்வார் பாடுகிறார். இறைவனை நாம் அடைய நம்முன் இருக்கும் பஞ்சபூதங்களுக்கு பயந்து பணிந்து நல்லொழுக்கத்தை பெற்று பாடி பரமனை துதித்து அருள் பெற தாமரையின் மேல் இருக்கும் லக்ஷ்மியை வணங்குவோமாக. இதையே ஸ்ரீத்யாகப்ரும்மம் நம் பஞ்சபூதங்கள் பிராண வாயு, நெருப்பு ஆகியவற்றின் சேர்க்கையால் ப்ரணவ நாதம் ஸப்தஸ்வரங்களாக பெருகுகிறது என்கிறார் மோக்ஷமுகலாதாவில்.

**தமிழிசை**

| | | |
|---|---|---|
| ஏழு | - | ஸரிகமபதநி |
| எட்டு சுரங்கள் | - | ஸரிகமபதநிஸ் |
| ஏழு சுரங்கள் | - | ஸட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் |
| எட்டு சுரங்கள் | - | ஸட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம், தாரஸ்ட்ஜம் |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| தமிழிசை | - ஸ - | ரி - | க - | ம - | ப - | தை - | நி |
| | குரல் - | துத்தம் - | கைக்கிளை - | உழை - | இளி - | விளரி - | தாரம் |

| | | | |
|---|---|---|---|
| குரல் | - | ஸட்ஜம் | |
| துத்தம் | - | ரிஷபம் | |
| கைக்கிளை | - | காந்தாரம் | |
| உழை | - | மத்யமம் | (கருணாமிர்த சாகரம்) |
| இளி | - | பஞ்சமம் | |
| விளரி | - | தைவதம் | |
| தாரம் | - | நிஷாதம் | |

மத்யமத்தை ஸவாக வைத்தே பாக்கி ஸ்வரங்களின் சரியான நிலையை நிர்ணயித்தார்கள் (எனது பாடாந்தரம்)

பஞ்சமத்தை ஸவாக வைத்து பாக்கி எல்லா விஷயங்களையும் தீர்மானித்தார்கள். (எனது பாடாந்தரம்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மூன்று ஸ்தாயிகளை - | மந்த்ரஸ்தாயி | - | மத்யஸ்தாயி | - | தாரஸ்தாயி |
| | மெலிவு | | சமம் | | வலிவு என்று சிலரும், |
| மூன்று ஸ்தாயிகளை | தாரஸ்தாயி | - | மந்த்ரஸ்தாயி | - | மத்யஸ்தாயி |
| | வலிவு | | மெலிவு | | சமம் என்று சிலரும், |

அமைத்து கூறுகிறார்கள். இதனை அவரவர்கள் பாடப்படி கூறிக்கொள்ளலாம். இதில் மந்த்ர ஸ்தாயிக்கு எல்லை மத்தியஸ்தாயி மத்யமம் அதாவது மத்யஸ்தாயி மந்திரத்தை (ம) வை ஸவாகக் கொண்டால் முடிந்த ஸ்ருதி மந்த்ர மத்யமம் ஆகும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மகரிஸ | நிதபம (ஸ்வரங்களின் கீழ் புள்ளி) | ஆக இது | மபதநி (ஸ்வரங்களின் கீழ் புள்ளி) | ஸரிகம | ஸ்தாயி |
| மத்ய ஸ்தாயி | மந்த்ர ஸ்தாயி | | மத்ர | மத்ய | |

(மெலிவிற்கெல்லை) மந்த்ர ஸ்தாயி மத்யமத்திற்கு எல்லை மத்யஸ்தாயி மந்த்ரமே எனப்படுகிறது. மேலே கூறியவை மூவகையான இயக்கம் எனப்படுகிறது. பொதுவாகவே மத்தியமத்தை ஆதார ஸட்ஷமாக வைத்துதான் ஸ்ருதி நிர்ணயிக்கப்பட்டதை எனது தனி சார்ட்டில் காணலாம்.

<u>யாழில் தமிழிசை</u> - <u>ஆய்வின் சிறப்புப் பகுதி</u>

| | | |
|---|---|---|
| ஸ்ருதி சேர்ப்பதை | - | ஸ - ப - ஸ் — இம்முறையில் ஸ்ருதி சேர்க்கவேண்டும். |
| இசையோர்தல் | - | ஸ் - ப - ஸ் |
| யாழ் | - | வீணையை சொல்லப்படுகிறது |
| தமிழ் இசை | - | ஆதி இசை |
| பண் | - | என்றால் சம்பூர்ண ராகம் 7 ஸ்வரங்களுடையது |
| மேளம் | - | என்றால் கர்த்தாராகம் 8 ஸ்வரங்களையுடையது |
| இசை நுண்மை | - | நுட்பமான ஓசை ஒரு முழு சுரத்தில் 1/16 (வீசம் அளவை குறிக்கும் எண் - வீசம் பகுதி)<br>1/16 ஒன்றான ஓசைக்கு பெயர் 1/4 மாத்திரை ஆகும். ஸ்ருதி எப்போதோ நிர்ணயிக்கப்பட்டது. தற்போதல்ல இது மறந்துவிடக்கூடாது. நாம் செய்ததாக நினைக்கக்கூடாது. புராண காலத்திலேயே நிர்ணயிக்கப்பட்டுவிட்ட ஒன்று. இதற்கு ஆதாரம் திருவரங்ககோயில் - சார்ட் 3ல் ஓம் ப்ரணவ விமானத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. |
| அலகு | - | ஸ்ருதி, ஓர் அலகுள்ள ஓசை ஸ்ருதி எனப்படும் |
| அஷ்டகம் | - | என்பது ஸரிகமபதநி (ஸ்) என்பது ஒவ்வொரு ஸ்ருதிக்கும் எட்டு ஸ்ருதி, எட்டு அலகு 3 ஸ்தானம் ஆக 24 ஸ்ருதி (இது எனது பாடாந்தரம்) |
| யாழில் | - | ஸரிகமபதநிஸ் |

| ஸ | சு.ரி | அம்.கா | சு.ம | ப | சு.தை |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| சுதஸட்ஜம் | சுத்த ரிஷபம் | சுத்த காந்தாரம் | சுத மத்யமம் | சுத பஞ்சமம் | சுத்த தைவதம் |
| அச்சுத ஸட்ஜம் | சதுஸ்ருதி ரிஷபம் | சாதாரண காந்தாரம் | சுத்த மத்யமம் | அச்சுத பஞ்சமம் (ஆர்) | சதுஸ்ருதி தைவதம் |
| ஸட்ஜம் | ஷட்ஸ்ருதி ரிஷபம் | அந்த்ர காந்தாரம் | பிரதி மத்யமம் | அனந்த பஞ்சமம் பஞ்சமம் | ஷட்ஸ்ருதி தைவதம் |

6க்கு பிறகு 7, 8 - கா.நி தா.ஸ்

| 7 | 8 |
|---|---|
| சுத்த நிஷாதம் | சுத சட்ஜம் நேத (ஆர்) |
| கைசிக நிஷாதம் | அச்சுத சட்ஜம் சட்ஜம் |
| காகலி நிஷாதம் | |

விமானம்

| விமான லக்ஷ்ணத்தில் | அச்சுத | அனந்த | கோவிந்த |
|---|---|---|---|
| | 8 | 8 | 8 |
| | சுதஸட்ஜம் | சுத பஞ்சமம் | சுத ஸட்ஜம் |
| | அச்சுத ஸட்ஜம் | அநந்த பஞ்சமம் | நேத ஸட்ஜம் |
| | ஸட்ஜம் | பஞ்சமம் | கோவிந்த ஸட்ஜம் |

25

வாஸுதேவன்

<u>தெளிவான தமிழிசை பெயர்கள்</u>

ஸ்ருதி சேர்ப்பதை - ஸ - ப - ஸ் ஸ்ருதி பார்ப்பதை ஸ் ப ஸ் இசையோர்தல் என்று கூறப்படுகிறது.

வீணையை - யாழ் என்று சொல்லப்படுகிறது.

ஆதி இசை - என்றால் ஆதி தமிழ் இசையாகும்.

இசைநுண்மை - நுட்பமான ஓசை - ஒரு சுரத்தில் 1/16 ஒன்றான ஓசைக்குப் பெயர் 1/4 மாத்திரையாகும். ஸ்ருதியில் நிர்ணயிக்கப்பட்ட கணக்கு இதில் மாற்றமே கிடையாது.

அலகு - ஓர் அலகுள்ள ஓசை ஸ்ருதி என்று கூறப்படுகிறது.

அஷ்டகம் - என்பது ஸரிகமபதநிஸ் என்பது தாரம், நிஷாதமிலிருந்து தார

எட்டு ஸ்ருதி - ஸட்ஜத்திற்குள் 2 அலகு உள்ளது அது

எட்டு அலகு - அச்சுதன் ஸட்ஜம் (ஆர்) நேத ஸட்ஜம் - கோவிந்தன் ஸட்ஜம் இது எனது குறிப்பாகும்.

அலகு - எண் (ஆர்) மாத்திரை - ஓர் அலகு 1/4 மாதிரை

பண் - பாசுரம், சுரத்துடன் பாக்களை பாடுவது பாட்டு

| | | |
|---|---|---|
| பண் | - | இசைத்தமிழ் |
| பண் | - | பாடல், பெருந்தான மெட்டிலும், கிரியைகள் எட்டாலும் பண்ணிப்பகுப்பது. |
| பண் | - | திவ்யப்பிரபந்தம், ப்ரபந்தங்கள். |
| பண் | - | தேவாரம், திருவாசகம் |
| பண்ணியம் | - | ஆறு சுரங்களுள்ள இராகம் |
| திறம் | - | ஐந்து சுரங்களுள்ள இராகம் |
| திறத்திறன் | - | நாலு சுரங்களுள்ள இராகம் இந்த நான்கும் முறையே சம்பூர்ணம் ஷாடவம், ஔடவம், சுவராந்தம் என்று தற்காலத்தில் வழங்குகின்றனர். |
| ஆளத்தி | - | இராகம் ஆலாபித்தல், ஆலாபனை என்று கூறவர். |
| யாழ் | - | யாளிமுகத்தை போல் செய்துமேள சட்டத்துடன் கூடிய தந்தி வாத்யம் (ஆர்) நரம்புக் கருவி. |
| நரம்பு | - | தந்தி |

மொத்தம் 24 ஸ்தானங்கள் 24 ஸ்ருதி 24 அலகு வீணையை பற்றி தனியான பகுதியை எழுதி உள்ளேன். பழைய காலத்து குறிப்புகளை தனியாக தந்துள்ளேன்.

| | | |
|---|---|---|
| யாழ் | - | வீணை |
| யாழின் பாகம் | - | வீணையின் பாகமாகும் |
| யாழின்உருப்புகள் | - | கோடு, மாடகம், நரம்பு, பத்தர், ஆணி |
| கோடு | - | யாழின் தண்டி வீணையின் தண்டி பாகம் |
| மாடகம் | - | முறுக்காணி |
| நரம்பு | - | தந்தி <u>தந்திரி</u> ராமாயணத்தின் குறிப்பு யாழ் நரம்பு, வீணைத்தந்தி |
| பத்தர் | - | குடம், வீணையின் குடம் |
| திவ்வு | - | நரம்புகளை இழுத்து வலிப்பெறக்கட்டும் வார்க்கட்டு தற்போது நாகபாசம் என்பார்கள். |
| ஒற்று | - | வீணையில் தாள தந்தி 3 ன்றையும் தாங்கும் இடம் விளைவு ரேக்கு எனப்படுவதாகும். |
| தந்திரிகரம் | - | மெட்டுக்கள், இசைபிறக்க வைக்கும் மெட்டுகள் |
| ஆணி | - | தாளத்தந்திகளை பிருடைகளில் இணைக்க தாங்கி நிற்கும் சிறு குமிள் போன்ற பாகம் இதை பொகடி என்பர். |
| யாழ் வகை கருணாமிர்த சாகரம் | - | பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், நாரதயாழ், தும்புருயாழ், கீசகயாழ், மருத்துவயாழ் யாழ் வகை எட்டு ஆகிறது. |

திருவரங்ககோயில் படி - இந்த கோயில் அஷ்டகம் எனப்படும் கணித முறைப்படி பிரும்ம, விஷ்ணு, ருத்ரன், ஸரஸ்வதி, லக்ஷ்மி, காயத்ரீ, நாரதர், நாராயணன் இவர்கள் எட்டு பேரும் வீணை உடையவர்கள். ஆகவே இந்த காயத்ரீ மண்டபம் சிறப்புடையதாக உள்ளது. இந்த திருவரங்க கோயிலில்,

நான் பார்த்த யாழில் - செம்மரத்தினால் செய்யப்பட்ட யாழ் பார்த்துள்ளேன். நாரதயாழுக்கு ஆயிரம் தந்தி என்பதை கேட்டுள்ளேன். ரகுநாதவீணை, தஞ்சாவூர் வீணை, திருவனந்தபுர வீணை, மைசூர் வீணை, திருச்சி வீணை (பொப்பிலி வீணை <u>விஜயநகர வீணை</u>) இந்த வீணை நீங்கலாக அனைத்து வீணையும் என் குருகுலத்தில் உள்ளது. யாழின் வகைகளும் அதற்கு வேண்டிய பகுதிகளும், அதனுடைய பாகங்களும் (ஆசாரிகளை என் வீட்டிலேயே மேளம் (செய்ததால்) கட்டச் சொல்வேன். ஆகையால் யாழ் பற்றிய குறிப்புகளை திட்டவட்டமாகக் கூற முடிந்தது. வீணை மேளம் செய்யும்போது நான் அருகில் இருந்து கொண்டே சரி சரிபார்ப்பது வழக்கம்.

| | | |
|---|---|---|
| யாழ் ஆசிரியர் | - | வைணிகர் |
| செம்பகை | - | எடுத்துக்கொண்ட ராகத்திற்கு இன்பமாய் பொருந்தாத ஓசை. |
| பெருந்தானமெட்டு எட்டு | - | நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, கண்ணுக்கு, உதடு, பல், தலை. |
| கிரியை எட்டு (சங்கீதசந்த்ரிகை) | - | எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு தாக்கு |
| கலம் | - | யாழ் |
| கண்டம் | - | வாய்பாட்டு |
| பாணி | - | தாளம், நாற்பத்தொரு வகை |
| பாணியின் அங்கம் (அப்ரஹாம் பண்டிதர்) | - | கொட்டு அரை மாத்திரை, அசை ஒரு மாத்திரை, தூக்கு இரண்டு மாத்திரை, அளவு மூன்று மாத்திரை. |
| ஓர் அக்ஷரம் | - | நாலு மாத்திரை |
| அபிநயம் | - | 24 |
| காயத்ரீ | - | பாடு மந்திரத்தை உச்சாரணம் செய்பவர்களை ரக்ஷிப்பதால் காயத்ரீ என்று பெயர். அந்த காயத்ரீ மந்திரத்தில் இருக்கும் 24 அக்ஷரங்களும் 24 ஸ்ருதிகள். |
| தமிழ் எழுத்து | - | கசடதபர, ஙஞணநமன, யரலவழள இந்த தமிழ் எழுத்திலிருந்தே க1 க2 க3 க4 என்று வந்தது. நமது ஸ்வரங்களிலே க, த உச்சரிப்பை கொண்டு பார்க்கையில் அவை தமிழ் எழுத்து இல்லை என்று எண்ணிவிடக்கூடாது. இது விவரம் தனியாக தரப்பட்டுள்ளது. (உ.ம்) (தாதம் ஒலியால் உச்சரிப்பால் தமிழ் எழுத்தே மாறும் நிலை. |
| மந்த்ர, மத்ய, தாரஸ்தாயி பேசும் இடம் | - | அடித்தொண்டையில் மந்திரஸ்தாயி அடிநாக்கு வரை மத்யஸ்தாயி உள்நாக்குமேல் மூக்கு சம்பந்தத்துடன் தாரஸ்தாயியாகிறது. மந்த்ரஸ்தாயி -1 மத்யஸ்தாயி - 2 தாரஸ்தாயி -4 |
| ஙஞணநமன கசடதபற | - | என்ற மெல்லெழுத்துக்களுக்கு பின்னே வரும் கசடதபற என்ற வல்லெழுத்துக்கள் தமிழ் எழுத்தின் வல் ஓசையை இழந்து ஸமஸ்க்ருத எழுத்துக்களின் மூன்றாம் ஓசையையுடையதாக காணப்படுகிறது. இவை பண்டைகாலம் தொட்டு வழங்கி வந்துள்ளது. தங்தம் கங்குல் ஒலியுடைய வார்த்தைகள். ஆனால் சுத்த தமிழ் எழுத்துக்கள். |
| அஃகம் எஃகு | - | அதிலேயும் ஆய்த எழுத்திற்கு பின்னால் வரும் வல்லெழுத்துக்கள். ஓசையை இழந்து ஹ என்ற ஓசையை சேர்த்து மெய்யெழுத்தானது ஆய்த எழுத்தை தழுவி வருகின்றன. அஃகம் - க - ஹாவாகவும் எஃகு கு - ஹீவாகவும் ஒலி மாற்றம் ஏற்படுகிறது. |
| தற்காலப் பெயர் | - | மந்த்ர, மத்ய, தாரம் |
| மந்த்ர, மத்ய தார | | மந்தம் சமம் உச்சம் |
| 1 பங்கு :2 :4 | - | மெலிவு சமம் வலிவு |
| 120 அதிர்வெண்கள் | | மந்த்ரஸ்தாயி ஷட்ஜத்திற்கு 120 அதிர்வெண்கள் |
| 240 அதிர்வெண்கள் | | மத்ய ஷட்ஜத்திற்கு 240 அதிர்வெண்கள் |
| 480 அதிர்வெண்கள் | | தார ஷட்ஜத்திற்கு 480 அதிர்வெண்கள் |

| | |
|---|---|
| யாழ் | - வீணை |
| யாழை | - மனிதன் உடலின் உறுப்புகளோடு ஒப்பிடப்படுகிறது. |
| சரீரத்தின் அளவு | - எண் சாண் - 8 சாண் ஆகும். |
| யாழின் சுரம் | - 1 சாண் என்பது 12 அங்குலி ஆக எண் சாண் உடம்பு என்பது 96 அங்குலி ஆகிறது. |
| 12, 24, 48, 96<br>12, 24 ஸ்தானங்கள் | - 96 நுட்பஸ்ருதியை மனிதனால் தீர்மானிகப்படுகிறது. காரணம் எண் சாண் உடம்பில் 96 அங்குலி என்பதால் 12 ஸ்தானத்தை உணர முடிகிறது. 24 ஸ்தானத்தை உணர முடிகிறது. |
| 48, 96 நுட்பஸ்ருதிகள் | - 48, 96 நுட்பஸ்ருதிகளை உணர முடிகிறது. தண்டுவடம் மூலம் ஸ்பைனல் கனால் மூலம் முடிகிறது. |
| யாழின் மெட்டுக்கள் 24 | - மனிதனின் ஸ்பைனல் கனால் தண்டு வடம் 24 வளைவுகள் |
| இந்த யாழின் தத்துவம் 24 ஸ்ருதிகளைக் கொண்டு பரமனை துதிக்க உதவியாகும் கருவி. இந்த வாத்யம் மட்டுமே மனிதனுக்கு ஒப்புடமையான வாத்யம் | - மெட்டுக்களைப்போல் உள்ளது தண்டுவடத்தின் வழியாக தலை பகுதிக்கு சேருகிறது அவனது உணர்வு. யோகசக்தி, சிரஸை அடைகிறது. அப்போது ஜீவாத்மா, பரமாத்மாவுடன் ஐக்யபாவம் ஏற்பட்டு ஸமாதிநிலை அடைகிறான். |

இந்த யாழின் தத்துவம் 24 ஸ்ருதிகளைக் கொண்டு பரமனை துதிக்க உதவிய கருவி. இந்த வாத்யம் மட்டுமே மனிதனுக்கு ஒப்புமையான வாத்யம் மெட்டுக்களை போல் உள்ளது தண்டுவடத்தின் வழியாக தலை பகுதிக்கு சேருகிறது. அவனது உணர்வு, யோகசக்தி சிரஸை அடைகிறது. அப்போது ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஐக்யபாவம் ஏற்பட்டு ஸமாதிநிலை அடைகிறான். மனிதனின் உடல் எண்சாண் உடம்பு என்கிறார்கள். மனிதனின் எண்சாண் உடம்பு யாழின் அமைப்பை கொண்டதாக உள்ளது. மனிதனின் உடலில் தண்டுவடமும் யாழின் தண்டின் 24 மெட்டும் ஒன்றான அமைப்பு. மனிதனின் தலை, யாழின் குடம் யாழின் நரம்பு மனிதனின் நரம்பு மண்டலம். 72,000 நரம்புகள் உள்ளது. 108, 1008 வர்ம புள்ளி. வர்ம ஸ்தானங்கள் உள்ளது. தசவித கமகங்கள் நம் உடலில் உள்ளது. இப்படியாக உடலின் அமைப்பு இசைக்குரிய குறிக்கோளை ஒத்திருப்பதாகும். 72 மேளம் 108 தாளம் 1008 ராகம் இந்த கணக்கை நமக்கு நம் உடலே தெரிவிக்கிறது. ஆகவே தான் இசையைக் கொண்டு தமிழ் பாசுரங்களை கொண்டு இறைவனை பாடி பணிந்தால் நமக்கு தெய்வாம்ஸம் கிட்டுகிறது. இதனையே தரணியில் தமிழிசையே தலையாய இசை என்பதனை ஸ்ரீத்யாகப்ரும்மம் தனது இசையில் சாதித்துள்ளார். இசை அது தமிழ் இசை அது வரலாற்று சிறப்புக் கொண்ட இசை, தரணி காத்த இசை, தமிழ் மண்ணில் பிறந்த தமிழிசை.

தமிழின் எழுத்தே ஏனைய எழுத்துக்கும் வித்தானது என்று உறுதி கூறும் தமிழிசையின் சிறப்பை போற்றி தமிழ் புராண இதிஹாசங்களின் வரலாறுகளில் சிறந்தது தமிழ் இலக்கண, இலக்கியங்கொண்ட தமிழிசை. அப்படிப்பட்ட தமிழிசை கர்னாடக இசை, சாஸ்த்ரீய இசை, ஆதி இசை, அனந்தன் இசை அளவற்ற மகிமை கொண்ட இசை, அந்த்தராத்மா சுத்தியடையும் இசை, அவனை அடையும் இசை அவ்வளவையும் ராம சரித்ரம், க்ருஷ்ண சரித்ரம் சிவசரித்ரம் புராணம், இராமாயண இதிஹாசம், துருவ சரித்ரம், ப்ரஹலாத சரித்ரம், வேத, வேதாந்தம், தத்வார்த்தம், சித்தாந்தம், தெய்வீகம், மானுஷம், அனந்தம் இவற்றை ஓம்ப்ரணவமூலம் தமிழ் ஓசை மூல எழுத்து என்று கூறி, மூலஸ்ருதி என்ன என்று சொல்லி தரணி போற்றிய த்யாகப்ரும்ம இசை கூற நான் இசைந்து ஏற்றுக் கொண்டது 'தரணி புகழும் தமிழிசை' ஆய்வே. இந்த ஆய்வின் ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் தமிழிசை தத்துவம் கொண்ட கீர்த்தனைகள் (இசை) யதி, ப்ரஸ்தாரம் கொண்டு, இசை இலக்கணம் கொண்டு அமைந்தது, அவரது கீர்த்தனைகள் என்று கூறி முடிவுரை யாக்குகிறேன். யாழ் ஆசிரியன் நாரதர் மூலம் பஞ்சபாரதீயம் என்ற நூலை பெற்று தமிழிசை சூட்சமத்தை கீர்த்தனையில் புகுத்தி உள்ளார். இதைத் தழுவியே பஞ்சரத்னத்தை பாடினார். ஸ்வரார்ணவம் ஸ்லோகம் ஒன்றும் - சங்கீத ரத்னாகர ஸ்லோகம் ஒன்றும் ஒன்றுபோல் அமைந்ததிலிருந்து பஞ்சபாரதீயம் நமது நாட்டிலிருந்து வடநாட்டுக்கு எடுத்துச்சென்று அதனை ஸமஸ்க்ருத நூலாக்கியிருக்கலாம். ஸ்வரார்ணவமே பஞ்சபாரதீயமாயிருக்கலாம். இந்த ஸ்வரார்ணவம் சங்கீத ரத்னாகரமாக மாற்றி எழுதப்பட்டிருக்கலாம் என்பது எனது கருத்து. ஆகவே தமிழிசையை த்யாகப்ரும்மம் பாடினதற்கு இந்த விவரமே போதுமானது. தமிழிசையே தரணி போற்றும் இசை என்று கூறி இந்த ஆய்வை முடிக்கின்றேன். வாழ்க தரணி போற்றும் தமிழிசை வளர்க தமிழ்மொழி.

## இனி வீணை பற்றிய விவரம் பார்ப்போம்

*யாழொலிக்கப்பண் என்று புராணக் காலத்திலிருந்து சொல்லப்படுகிறது. இசைக்கருவியிலே மிகச்சிறந்தது வீணை. நமது கர்னாடக இசைக்கு பாரம்பரியத்திற்கு வீணை ஓர் அங்கம் ஆகும். நமது தேசிய பறவை மயில். நமது தேசிய வாத்யம் வீணை என்பதை பெருமையோடு கூறவேண்டும். இதைவிட ஸரஸ்வதி மாதாவின் கையில் வீணையும் கண்ணன் கையில் குழலும் இசைத் தத்துவத்தை கொண்டதான கருவியாகும். நம் தமிழ் நாட்டில் பூர்வ பண்களை யாழொடு வாசித்தார்கள் என்று நமது வரலாறு கூறுகிறது. நாரதர் யாழ் ஆசிரியராக தமிழகத்தில் இருந்தார் என்றும் நமது தமிழ் வரலாறு கூறுகிறது. இதனிடையில் திருவரங்கம் கோயில் விமானத்தின் சிகரத்தில் ஸர்வஜகத் காரணமாயும், ஓம்கார ரூபமுள்ள ஸரஸ்வதியை பிரும்மா பார்த்தாக ஸ்ரீரங்க மஹாத்மியம் கூறுகிறது. ஸரஸ்வதியின் வீணை, கண்ணனின் குழல், பரமசிவனின் டமருகம் வாத்யங்களில் தெய்வீகத்தை குறிப்பதாக உள்ளது. இம்மூன்றும் இசை தத்துவத்தை தெரிவிப்பதாக வரலாறு கூறுகிறது. வீணையில் தான் இசையின் நுட்பஸ்ருதி வரை திட்டவட்டமாக கூற இயலும் மேலும் வீணையோடு வாசிக்கும் பாட்டுக்கள் சுருதி லயத்தோடு இருக்கக் காரணம் மனிதனின் உடல் யாழின் தத்துவத்தோடு ஒத்தது என்பதனால் ஏனைய சுருதி 12, 24, 48, 96 சுருதிகளையும் வீணையில் மட்டுமே திட்டவட்டமாகக் கூற முடியும். வாசித்து நிரூபணம் செய்யமுடியும். ஸ்ரீத்யாகப்ரும்மம் வீணையோடு மாணாக்கர்களுக்கு கீர்த்தனைகளை பஜனையில் பாடுவார் என்று அவரை பற்றி என் குருபரம்பரை கூறுகிறது. த்யாகப்ரும்மம் வீணையோடு க்ருதிகளை வாசித்து மாணாக்கர்களுக்கு போதித்தார். புரியாத இடங்களை கரும்பலகையில் எழுதி காட்டுவார் என்ற இரண்டு ஆதாரங்களும் என்னால் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. எனது தாயார் அவர் குரு சங்கீத கலாநிதி ஸ்ரீஉமையாள்புரம் ஸ்வாமிநாதய்யர் ஸ்ரீத்யாகப்ரும்மம் வீணையோடு க்ருதிகளை அவரது பஜனையில் பாடுவார் என்றும் தனக்கு கூறியுள்ளதை என்னிடம் கூறியுள்ளார். வீணை தான் 12, 24, 48, 96 சுருதிகளை திட்டவட்டமாகக் கூறும் அளவு மானி என்று நான் குறிப்பிடுகிறேன். வீணை வாங்க நல்ல அனுபவம் வேண்டும். குடத்தில் செதுக்கும் போது உடைசல் ஏற்பட வாய்புண்டு. அதனை உட்புறம் விரிசல் தெரியாது ஒட்டப்பட்டிருக்கும். ஆகையால் குடம் முக்கியமான பாகம். ஆகவே வீணையை நிற்க வைத்து தட்டிப்பார்த்தால் விரிசல் உள்ள வீணை என்றால் டக் டக் என்று உடைந்த சப்தம் கேட்கும். நல்ல வீணை என்றால் ணக் ணக் என்று வெங்கல நாதம் என்பார்களே அதுபோல் நல்ல சப்தம் கேட்கும். மேல் பலகை மெல்லியதாக குடைந்த வீணையாக பார்த்து வாங்கவேண்டும். அப்போதுதான் நாதம் சிறப்பாக இருக்கும். மேலும் வீணை சரஸ்வதியின் வாத்யம். ஆகவே ஏகாண்ட வீணை மட்டுமே பூஜைக்கு உரியதாக புராதன காலம் தொட்டு கடைபிடித்து வழிபட்டு வருகிறது. வீணையின் மேள பாகம் தான் வெகு முக்கியமானது. படுக்கைமேளம், குழிமேளம் என்று ஆசாரிகள் சொல்வார்கள். ⌣⌣⌣ குழிமேளம் என்று ⁓⁓ படுக்கை மேளம் வீணை ஆசாரிகளிடம் நமக்கு வேண்டியபடி சொன்னால் மட்டுமே ⁓⁓ இம்மாதிரியான மேளத்தை கட்டுவார்கள். இல்லை என்றால் குழிவான மேளத்தைதான் பெரும்பாலான வீணை ஆசாரிகள் கட்டுவார்கள். குழிவான மேளத்தில் வீணையின் நாதம் தட்டின பின் வெகு நேரம் நிற்காது. ஆனால் தட்டும்போது ரம்யமாக கேட்கும். ஆனால் படுக்கை மேளத்தில் தட்டி ஒலி எழுப்பிய பல வினாடி ஒலி (சௌவுண்டு) நிறைந்து நிற்கும்.வீணையில் ஒலி நின்று நாதத்தை நிறைவாக கேட்கச் செய்யும். ஆனால் குழியான மேளத்தில் ஜிலுஜிலுப்பான சப்தத்தோடு சீக்கிரம் ஒலி குறைந்து விடும். என் தாயார் வீணை அனைத்திலுமே படுக்கை மேளம் தான். வீணையின் பாகங்களை அறிவது அவசியம் குடம். மேற்பலகை, தண்டி, கழுத்து, மாடச்சட்டம், சுரைக்காய், பிருடைகள், யாளி முகம், மேளச்சட்டம், மெழுகுச் சட்டம், 24 மெட்டுக்கள், குதிரைகள், லங்கர், நாகபாசம், மூலாதாரம், என்று வீணையின் பாகங்களாகும்.*

*வேத காலம் தொட்டு வீணையின் பெருமையை கூறப்படுகிறது. வேத ஜனித வரவீணா என்று ஸ்ரீத்யாகப்ரும்மம் கூறுகிறார். வீணை தந்தி வாத்யம் என்றும் மீட்டுவாத்யம் என்றும் மெட்டுக்களோடு இருப்பதால் ஸாரி வீணை என்றும் கூறப்படுகிறது. இது ஸ்ருதிக்கு ஆதாரமாய் இருப்பதால் ஸ்ருதி வாத்யம் என்று பெயர் கொண்டதாக உள்ளது. வீணையில் மெட்டுக்கள் வெண்கலத்தினால் செய்யப்பட்டது ஆகும். வீணைக்கு பித்தளை ஸ்டெயின்லஸ் ஸ்டீல் கம்பிகள், மந்த்ர (அனுமந்த்ரத்திற்கு செப்புக்கம்பிகள் போட்டும்) வாசிக்கப்படுகிறது. எனது தாயார் குருகுலத்தில் வீணை ஸ்ருதியை $4\,^1/_2$ கட்டைவைத்து வாய்பாட்டுடன் பாடி வீணை இசையை கற்றுள்ளேன். ஆகவே $4^1/_2$ கட்டைஸ்ருதி வரை வீணையில் வைத்து ரம்யமாக வாசிக்கலாம். வீணையில் அனுமந்த்ரஸ்தாயி என்றுள்ளது. நான்கு தந்திகள் வாசிப்பதற்கும் ஸாரணி (ஸ) பஞ்சமம் (ப) மந்த்ரம் (ஸ) அனுமந்த்ரம் (ப) 3 தந்திகள் தாளத்திற்கு பக்க ஸாரணி (ஸ) பக்கபஞ்சமம் (ப) ஹெச்சு ஸாரணி (ஸ்) பெயர் கொண்டது. வாசிக்கும் தந்திகள் லங்கர் வளையத்தில் முடியப்பட்டு குதிரை மேலும், மெட்டுகள் மேலும் சென்று பிருடையில் சுற்றப்பட்டிருக்கும். தாளத்தந்திகள்*

லங்கரில் முடியப்பட்டு வளைவு மெட்டு என்று சொல்லப்படும் பக்கவாட்டு குதிரை மேல் பதிந்து பிருடையில் சுற்றப்பட்டிருக்கும். வாசிக்கும் தந்திகள் நாலும் யாளிமுகத்து பிருடையிலும் தாளதந்தி மூன்றும் தண்டியில் உள்ள பிருடையிலும் சுற்றப்பட்டிருக்கும். வீணையை (பழைய காலத்திலிருந்து வரலாற்று சிறப்பு என்னவென்றால்) பலாமரத்தில்தான் செய்யப்படும். அதுவும் கோயில் பலாமரங்களைத் தேடிச்செய்வார்கள். காரணம் கோயில் மணியோசை கேட்டு கேட்டு சிறந்த நாதமுடையதாக இருக்கும் என்று சரித்திரம் கூறுகிறது. அதன்பின் தற்போது ரோஸ் உட்டிலும் செய்கிறார்கள். பலாமரத்தில் மட்டுமே ஏகாண்ட வீணை, ஏகதண்டி வீணை செய்வார்கள். பாக்கி மரங்களில் ஒரு ஒட்டு, இரண்டு ஒட்டு வீணையை செய்வார்கள். இந்த வகை வீணையை விட ஏகாந்த வீணையில் தான் நாதம் அதிகம் ஆகும். மேலும் பூஜைக்குரியது ஸரஸ்வதி வீணையான ஏகாண்ட வீணையேயாகும். ஏகாண்ட வீணைக்கு யாளி முகம் மட்டும் ஒட்டு ஏக தண்டிவீணைக்கு ஒரே மரத்தில் செதுக்கி ஒட்டே இல்லாமல் செய்வார்கள். இதுவும் பூஜைக்குரியது. வீணை (ஏகதண்டி வீணை) யாளி முகத்திலிருந்து குடம் வரை ஒரே மரத்தில் செய்வார்கள். ஏகாண்ட வீணையை யாளிமுகத்தைவிட்டு ஒரே மரத்தில் செய்யப்படும். வீணை செய்யும் இடங்கள் திருச்சி, தஞ்சை, மைசூர், விஜயநகரம், திருவனந்தபுரம் ஆரம்பகாலம் முதல் செய்யப்படுகிறது. ஆனால் தற்போது சென்னை, திருச்சி, திருவரங்கத்திலும் செய்யப்படுகிறது. விஜயநகர வீணை பொப்பிலி வீணைகள் சிறப்பானது. ஆனால் தற்போது தஞ்சாவூரில் தொடர்ந்து செய்யப்படுகிறது. எனது குருகுலத்தில் திருச்சி, தஞ்சாவூர் மைசூர் வீணைகள் உள்ளன. ரோஸ் உட்டில் செய்த வீணைகளும் உள்ளன. வீணையில் உள்ள லங்கரில் இருக்கும் உருட்டுகள் வீணையை ஸ்ருதி சேர்த்த பின் சரிபார்ப்பதற்கு, ஜாஸ்தியாக்க வேண்டும். ஸ்ருதியை என்றால் உருட்டுகளை நாகபாசம் பக்கம் தள்ளவேண்டும். வீணையில் அழகுக்காக கமல வேலை செய்யப்பட்டிருக்கும் மேல் பலகையில் இரண்டு வட்டமான பூக்கள் (நாதரந்திரங்கள்) போடப்பட்டிருக்கும். ஒலி (சௌவுண்டு) வர பூக்களில் துவாரம் இடப்பட்டிருக்கும். பூவேலைகள் தந்தத்தினால் பழைய காலங்களில் செய்வார்கள். ஆனால் தற்போது மான்கொம்பு பிளாஸ்டிக்கில் போடப்பட்டுள்ளது. குடத்தின் நடுவில் வெள்ளியினால் தங்கத்தினால் ஆன ஸரஸ்வதியை பொருத்தியிருப்பார்கள். நாதம் நிறைய கிடைக்கும் பொருட்டு குதிரையின் மேலுள்ள தகட்டை ராவி வைப்பார்கள். இதற்கு ''ஜீல்'' பார்ப்பது என்று கூறுவார்கள். ஏகாண்ட வீணை மிகவும் மெல்லியதாக குடைந்து இருப்பார்கள் நாதம் வர. தஞ்சாவூர் வீணை என்னிடம் உள்ளது. மிக லேசான அதிலயச்ருதியுடைய தேவகானம் பொழியும் வீணையை மெல்லியதாக குடைந்து நாதம் தேவகானமாக ஒலிக்கும் வண்ணம் செய்வார்கள். பல புத்தகங்களில் ஏகாண்ட வீணை என்பதனால் கனமாக இருக்கும் என்று எழுதி உள்ளார்கள். ஆகவே வீணையிலேயே அனுபவமடைந்தவர்களால் மட்டுமே வீணையின் தாரதம்யத்தை பற்றி கூறமுடியும் என்று தோன்றுகிறது. முன்பெல்லாம் வீணில் தந்த வேலை செய்யப்பட்டிருக்கும். தற்போது மான் கொம்புகளில் செய்வதாக வீணை ஆசாரிகள் கூறுகிறார்கள். வீணைப்பலகையில் வட்டவடிவமாக இரண்டு பக்கத்திலும் உள்ளதற்கு பெயர் நாதரந்திரங்கள். இந்த வட்டம் துளைக்கப்பட்டதால் நாதம் நன்றாகக் கேட்கும் என்று இதை அமைக்கிறார்கள். ஒட்டு வீணை என்பதை அறிய வீணையின் குடமும் தண்டியும் சேரும் இடத்திலும், கழுத்தும் யாளிமுகமும் சேர்க்கும் இடத்திலும் மான்கொம்பினால் சட்டங்கள் இணைக்கப்பட்டிருக்கும். இதற்கு அரடா என்று பெயர். ஏகாண்ட வீணைக்கு இம்மாதிரி இணைப்பு இருக்காது. ஆக வீணையை வாங்க இந்த கட்டுரையை படித்தபின் நன்றாக தெரிந்து கொள்ளலாம். வீணை வாசிப்பவர்களை வைணிகர் என்று அழைக்கப்படுகிறார்கள். ஏகாந்தங்களில் கோவிலில் வீணை வாசிக்கும் போது நிறுத்தி தோளில் சாற்றிக் கொண்டு வாசிப்பார்கள். இந்த வாசிப்பை திருவரங்கம் கோயில் ஏகாந்தத்தின் போது அரங்கன் முன்னிலையில் வாசிக்கப்படுவதை இன்றும் காணலாம். வீணை வாசிக்கும் போது கையில் நெளி போன்ற கம்பிகளை போட்டு கொண்டு மீட்டுவார்கள். விரல் நுனிகளால் மீட்டி இதமாக வாசிப்பதே வீணை வாசிப்பதற்கு அழகாகும். நெளிபோட்டுக் கொண்டு வாசிப்பது வீணையில் மிருதங்கம் தட்டுவது போன்ற ஒலி கேட்கும். ஆகவே சதை மீட்டு என்பதான விரல் நுனியால் மீட்டி ஸரஸ்வதியை வணங்கும் பவ்யமாக வீணையை வாசித்தல் வேண்டும். மந்த்ரம் வாசிக்கும் தந்திகளில் இடதுகையின் மூன்று விரலாலும் சேர்ந்தாற்போல் நகர்த்திக் கொண்டே இரண்டு ஸ்தாயிகளிலும் ஒரே சமயத்தில் ஒரே சாகித்யம் கேட்கும் ஆச்சர்யமாக வாசிப்பை எனது குருகுலத்தில் போதிக்கப்பட்டிருக்கிறது. கேட்க ரம்யமாக இருக்கும் வீணை தேவ வாத்யம் என்றும், தெய்வீக வாத்யம் என்றும் போற்றப்படுகிறது. இந்த வீணையை ஸரஸ்வதி, பார்வதி, லக்ஷ்மி மூவராலும் வாசிக்கப்பட்டது என்பதற்கு (கச்சபி வீணை, ஸரஸ்வதியும், மாதங்கி வீணையை பார்வதியும், லக்ஷ்மிக்கு சாரங்கி வீணை) என்று புராண வரலாறுகள், கூறுகின்றன. வீணை வாத்யத்தை தந்த்ரீ வாத்யம் என்று சொல்லப்படுகிறது. ராமாயணத்தில் தந்த்ரீ வாத்யம் என்று புகழப்படுகிறது.

## யாழ் பற்றிய விளக்கம் சிறப்புப் பகுதி - சூடாமணி

யாழில் பல வகை உள்ளது. அவற்றில் முக்கியமானது நாரதம் யாழ். நாலு வகை யாழான பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என வகைப்படும். செங்கோட்டியாழ் என்பது செவந்த மரத்தால் செய்யப்பட்டது, 7 தந்திகளைக் கொண்டது, தற்காலத்து வீணையை ஒத்தது. தற்போது சிகப்பு மரத்தில் வீணை உள்ளது.மேலும் தேவிகளில் மூவரான சரஸ்வதி, லக்ஷ்மி, கௌரி மூவரும், சரஸ்வதி கச்சபி என்ற யாழையும், லக்ஷ்மி சாரங்கி என்ற யாழையும் கௌரிருத்திரிகை என்ற யாழையும், வைத்து வாசித்தார்கள் என்று தெரிகிறது. இம்மூவரும் வைத்திருந்த யாழ்களால் பாடப்பட்ட பண்கள் ஒன்றுக்கொன்று தேர்ச்சியுடையதாய் இருந்தது என்று சொல்லப்படுகிறது. நாரதர்மகதி என்ற பெயர் கொண்ட யாழை கொண்டிருந்தார் என்று குறிப்பு கூறுகிறது. நாரதயாழ் ஆயிரம் தந்திகள் அமைந்தது. தமிழகத்தில் நாரதர் யாழ் ஆசிரியராக இருந்தார் என்று சொல்லப்படுகிறது. முக்கியமாக எட்டு வகை யாழ் நம் தமிழகத்தில் இருந்ததாக தெரியவருகிறது. பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ், நாரதயாழ், தும்புருயாழ், கீசகயாழ், மருத்துவ யாழ் என்பதாகும். யாழைக் கொண்டு பண் இசைத்தார்கள் நம் தமிழ் மக்கள் என்பது நமது தமிழகத்திற்கு பெருமை தருவதாகும். வீணை என்று தற்காலத்தில் கூறப்பட்ட, பழங்கால யாழ், இசையின் சுர சுத்தத்தை காட்டும் ஒரு அளவுமானி என்று என்னால் அனுமானிக்கப்படுகிறது. நமக்கு வேண்டிய ஒரு சுரத்தின் உண்மை சொரூபத்தை காட்டுவது யாழ் மட்டுமே. (எட்டு வகை யாழ் குறிப்பு கருணமிர்த்தசாகரம்)

## வீணை மேளஞ் செய்யும் விதம்

மேளம் கட்டுவதற்கான முறையை கவனிக்கவும். மேளம் செய்வதற்கான மெழுகை பதப்படுத்தி வீணை தண்டியின் மேலுள்ள சட்டத்தில் பதிய வைக்கவேண்டும். தண்டியின் மேல் இரு பக்கங்களிலும் உள்ள மெழுகுச் சட்டங்கள் என்றுள்ள மரச்சுவர்கள் இருக்கும். இந்த மரச்சட்டத்தின் மேல் மெழுகை வைத்து அழுத்துவார்கள். பின் தந்தியை போட்டு கொள்வார்கள். அந்த மெழுகின் மேல் 24 மெட்டுக்களை பதிப்பார்கள். பின் மெழுகு பகுதிகளை ஒவ்வொரு மெட்டின் இடைவெளியை வளைவு வளைவாக செதுக்கி எடுத்துவிடுவார்கள். இந்த வளைவுதான் விசேஷம் உள்ளது. இந்த மாதிரி செய்வதை மேளம் கட்டுவது என்பார்கள். இந்த மேளம் எனது அனுபவப்படி 2 விதமாகக் கட்டுகிறார்கள். ஒன்று படுக்கை மாதிரி வளைத்து செதுக்குவார்கள். மற்றொன்று இம்மாதிரி ஆழமான வளைவாக செதுக்கி எடுப்பார்கள். தஞ்சையில், திருச்சியில் இம்மாதிரியும் சென்னையில் இம்மாதிரியும் மைசூர், திருவனந்தபுரம், விஜயநகர வீணைகளில் இரண்டு விதமாகவும் கட்டுகிறார்கள். மொத்தத்தில் இம்மாதிரி படுக்கை வளைவு கொண்ட மேளத்தில் நாதம் நின்று ஒலிக்கும்

இம்மாதிரி குழியாக செதுக்கப்படும் மேளத்தில் ஜிலு ஜிலுப்பாக ஒலி (சௌண்டு) இருக்கும். ஆனால் சீக்கிரம் ஒலி அலை ஓய்ந்துவிடும். எப்படி ஆழ்கடலில் அலையின் ஓசை ஆழமாக இருப்பதால் சத்தம் இரைச்சல் உடனே அடங்கிவிடுமோ, அதுபோல கரை ஓர ஆழமற்ற இடத்தில் அலைகள் பேரிரைச்சலோடு ஒலி அலை எழும்பி அடங்கும். அது போல படுக்கை மேளத்தில் ஒலி அலை லேசில் அமுங்கிப்போகாது. ஆகவே படுக்கை வடிவம் இம்மாதிரியான மேளம் சிறப்பானது. இப்போது மேளம் செய்யும் விதத்தை தொடங்குவோம். (தொகுப்பு சூடாமணி) 7 தந்திகளையும் ஸ்ருதி சேர்க்கப்படும் அனுமந்த்ரம், மந்த்ரம், பஞ்சமம், ஸாரணை தாள அனுசாரணை தாளபஞ்சமம், தாள ஹெச்சு ஸட்ஜம் (ஆர்) தாரஸ்தாயி ஸட்ஜமாக ஸ்ருதி கூட்டவேண்டும். இதில் மேல் 4 தந்திகளில் அனுமந்த்ர, பஞ்சமஸ்ருதி ஒரே இசையாக ஒலிக்கும். மந்த்ர, ஸாரணை ஒரே ஸ்ருதியாகக் கூட்டவேண்டும். இதேபோல் தாள வகையில் தாள அனுசாரணை முதல் தந்தி ஆதாரஸட்ஜஸ்ருதியையும், தாள பஞ்சமஸ்ருதி இரண்டாம் தந்தி மத்ய பஞ்சமஸ்ருதியாகவும், தாள ஹெச்சு சாரணை மூன்றாம் தந்தியை தாரஸட்ஜஸ்ருதியாகவும், வைத்த பிறகு மேளம் செய்ய ஆரம்பிக்க வேண்டும். வீணையில் $4^1/_2$ கட்டை பேசவேண்டுமானால் இவற்றிற்கென ஸ்ருதி பேதம், தந்தி விவரங்கள் ஸாரணை (ஆர்) வாசிக்கும் முதல் தந்தி 31ம் நம்பர்.

பஞ்சமம் (ஆர்) வாசிக்கும் 2ம் தந்தி 28 ம் நம்பர்.

மந்த்ரம் (ஆர்) வாசிக்கும் 3ம் தந்தி T 20ம் நம்பர்.

அனுமந்த்ரம் (ஆர்) வாசிக்கும் 4ம் தந்தி T 22ம் நம்பர்.

தாள ஸாரணை 31ம் நம்பரையே போடவேண்டும்.

தாள பஞ்சமம் 28 நம்பரையே போடவேண்டும்.

தாளதாரஸ்தாயி ஸட்ஜம் 32 நம்பரையே போடவேண்டும்.

**எனது குருகுலத்தில் $4^{1}/_{2}$ கட்டை ஸ்ருதி வைத்து வாய்ப்பாட்டையும் வீணைக்கு அதே ஸ்ருதி வைத்து வீணையோடு வாயால் பாடும் பழக்கம் உள்ளது. மேலும் பஞ்சமத்தை ஸட்ஜமாக வைத்து அதற்கு மேல் பஞ்சமம் கண்டுபிடித்து மற்ற ஸ்வரங்களை கண்டுபிடிப்பதற்கு இம்முறையே (ஸ-ப) காரணமாயிருப்பதால் மத்திமத்தை ஸட்ஜமாக வைத்து அதற்கு மேல் மத்யமம் கண்டுபிடித்து மற்றஸ்வரங்களை கண்டுபிடிப்பதால் ஸ்வரஸ்தானங்களை சரியானபடி கண்டுபிடிக்க ஸ-ப-ஸ-ம முறை பஞ்சம மத்யம முறையை சுரங்கள் பிடிப்பதற்கு காரணமாயிற்று.**

**<u>மேளம் செய்யும் விதம்:-</u> அனுமந்த்ர பஞ்சமம், மந்த்ரம் பஞ்சமம் ஸாரணி ஒரே ஸ்ருதியாக இணை ஸ்ருதிகளை சேர்த்து மத்யஸட்ஜம், மத்ய பஞ்சமம், தாரஸட்ஜம் ஒரே ஸ்ருதியாக இணைந்து ஸ - ப - ஸ் அதன் இடத்தின் நிலையை சுத்தமாக சேர்த்து பின் அனுமந்த்ரம் மந்த்ரம் பஞ்சமம் ஸாரணை, தாள அனுசாரணை, தாளபஞ்சமம், தாளஹெச்சு ஸட்ஜம் (ஆர்) ஹெச்சுசாரணை தந்திகளை ஸ்ருதி வைக்கவும்.**

*தற்போது வீணையின் ஸாரணையை மீட்டி அந்த தந்தியில் எந்த ஸ்தானத்தில் ஹெச்சுஸட்ஜம் (ஆர்) தாரஸட்ஜம் பேசுகிறதோ அந்தஸ்தானத்தின் கீழ்வீணை தண்டத்தில் மெழுகில் (ச் என்னும்) மெட்டை பதிக்கவும். அதே ஸாரணையை மீட்டி எந்த ஸ்தானத்தில் ஹெச்சு பஞ்சமம் பேசுகிறதோ அந்தஸ்தானத்தில் (ப) மெட்டை பதிக்கவும்.*




மெட்டுக்கள் கீழே உள்ளபடி வரிசைகிரமமாக பதிக்கவேண்டும்.

1. ச் முதலில் பதிக்கவேண்டும் - <u>தார ஸட்ஜம்</u> பதிக்கவேண்டும்.

2. ப இரண்டாவதாக பதிக்கவேண்டும் - <u>பஞ்சமம்</u> பதிக்கவேண்டும்

3. ரி மூன்றாவதாக ரி பதிக்கவேண்டும் - <u>ஸதுஸ்ருதி ரிஷபம்</u> பதிக்கவேண்டும்
   2

4. த நாலாவதாக சதுஸ்ருதி தைவதம்
   2
   பதிக்கவேண்டும் - <u>ஸதுஸ்ருதி தைவதம்</u> பதிக்கவேண்டும்

5. க ஐந்தாவதாக அந்த்ர காந்தாரம் <u>அந்த்ர காந்தாரம்</u> பதிக்கவேண்டும்.
   3

6. நி ஆறாவதாக காகலி நிஷாதம் - <u>காகலி நிஷாதம்</u> பதிக்கவேண்டும்
   3

7. ம ஏழாவதாக பிரதி மத்யமம் - <u>பிரதி மத்யமம்</u> பதிக்கவேண்டும்
   2

8. ரி எட்டாவதாக சுத்த ரிஷபம் - <u>சுத்த ரிஷபம்</u> பதிக்கவேண்டும்
   1

9. த ஒன்பதாவதாக சுத்த தைவதம் - <u>சுத்த தைவதம்</u> பதிக்கவேண்டும்
   1

10. க பத்தாவதாக ஸாதாரண காந்தாரம் - <u>ஸாதாரண காந்தாரம்</u> பதிக்கவேண்டும்
    2

11. நி பதினொன்றாவதாக கைசிகநிஷாதம் - <u>கைசிக நிஷாதம்</u> பதிக்கவேண்டும்
    2

12. ம சுத்த மத்யமம் - <u>சுத்த மத்யமம்</u> பதிக்கவேண்டும்

*சூடாமணி*

இந்த மெட்டின் மேல் பஞ்சமத் தந்தியை பிடித்து அந்த ஸ்வரத்துக்கு சமான மானஸ்வரத்தை சாரணையில் கண்டுபிடித்து அந்த ஸ்தானத்தின் கீழ் சதுஸ்ருதி ரிஷபம் ரி 2 என்ற மெட்டை பதிக்கவும். இதேபோல் இந்த மெட்டின் மேல் பஞ்சமத் தந்தியில் பிடித்து அதற்கு சமமான ஹெச்சு ஸ்வரத்தைச் சாரணையில் கண்டுபிடித்து அந்த ஸ்தானத்தின் கீழ் த 2 (சதுஸ்ருதி தைவதம்) என்ற மெட்டை பதிக்கவும். இந்த மெட்டின் மேல் பஞ்சம தந்தியை பிடித்து அதற்கு சமதையான ஸ்வரத்தை சாரணை தந்தியில் கண்டுபிடித்து அந்த ஸ்தானத்தின் கீழ் க3 (அந்த்ர காந்தாரம்) என்றும் மெட்டை பதிக்கவும். இந்த மெட்டின் மேல் பஞ்சமம் தந்தியில் பிடித்து அதற்கு சமதையானஸ்வரத்தைக் சாரணையிற் கண்டுபிடித்து அந்தஸ்தானத்தை கீழ் ம2 (பிரதி மத்யமம்) என்னும் மெட்டை பதிக்கவும். இந்த மெட்டின் மேல் பஞ்சம தந்தியை பிடித்து அதற்கு சமதையான ஸ்வரத்தை சாரணையிற் கண்டுபிடித்து அந்த ஸ்தானத்தின் கீழ் ரி1 (சுத்த ரிஷபம்) என்ற மெட்டை பதிக்கவும். இந்த மெட்டின் மேல் பஞ்சம தந்தியிற்பிடித்து அதற்கு சமமான ஹெச்சு ஸ்வரத்தை சாரணையிற்கண்டுபிடித்து அந்த ஸ்தானத்தின் கீழ் த1 (சுத்த தைவதம்) என்ற மெட்டை பதிக்கவும். இந்த மெட்டின் மேல் பஞ்சம தந்தியை பிடித்து அதற்கு சமதையானஸ்வரத்தை சாரணையில் கண்டுபிடித்து அந்த ஸ்தானத்தின் கீழ் க2 (ஸாதாரண காந்தாரம்) என்ற மெட்டை பதிக்கவும். இந்த மெட்டின் மேல் பஞ்சம தந்தியை பிடித்து அதற்கு சமதையான ஹெச்சுஸ்வரத்தை சாரணையிற் கண்டுபிடித்து நி2 (கைசிக நிஷாதம்) என்ற மெட்டை பதிக்கவும். இந்த மெட்டின் மேல் பஞ்சம தந்தியிற் பிடித்து அதற்கு சமமான ஸ்வரத்தை சாரணையில் கண்டுபிடித்து அந்த ஸ்தானத்தின் கீழ் ம1 (சுத்த மத்யமம்) என்ற மெட்டை பதிக்கவும். ஆகவே இப்போது பதிக்கப்பட்ட 12 மெட்டுக்களும் சேர்ந்து சாரணை தந்தியில் மத்யஸ்தாயி சம்பூர்ணமாய் கிடைத்திருக்கிறதை அறியவேண்டும். இதன் வடிவத்தை மீண்டும் வரைகிறேன். (சங்கீத சந்திரிகை)

a b

வரைபடம் அ.சூடாமணி

சு.ரி ச.ரி சா.கா அந் கா சு.ம பி.ம ப சு.த ச.த கை.நி கா.நி ச்

ரி ம க க ம ம ப த த நி நி ச் ரி ரி த த ம ம ப த த நி நி ச்

1 2 2 3 1 2 1 1 2 2 3 1 2 2 3 1 2 1 1 2 2 3

a b

<u>மத்யஸ்தாயி பூர்ணமாயிற்று</u>

இந்த மேளத்தில் சாரணை தந்தியை தட்டினால் அதுவே நாம் வைத்த சுருதிக்கு (ஸ) ஸ்வரமாகும். தக்கு ஸட்ஜம், ஆதாரஸட்ஜம், கீழ்ஸ்தாயி ஸட்ஜம், ப்ரக்ருதி ஸட்ஜம், ஸ் என்ற பேரிரைச்சலோடு விழும் நீர்வீழ்ச்சியிலிருந்து இந்த ஸ் என்ற ஒலியால் ஸட்ஜம் என்ற பெயர். ஆக இவ்வளவு பேர் கொண்ட ஆதாரஸட்ஜம் வீணையில் முதல் தந்தியில் தட்டினால் எடுத்துக்கொண்ட ஸ்ருதிக்கு அது ஆதாரஸட்ஜமாகும். இதை அடுத்து மீண்டும் விளக்கம் தருகிறேன். (விளக்கம் சூடாமணி)

| <u>தட்டும் ஸ்ருதி ஸ</u> | ஆதார ஸட்ஜம் தக்கு ஸட்ஜம் |
|---|---|
| 1 ரி | சுத்த ரிஷபம் |
| 2 ரி | ஸதுஸ்ருதி ரிஷபம் |
| 2 க | சாதாரண காந்தாரம் |
| 3 க | அந்த்ர காந்தாரம் |
| 1 ம | சுத்த மத்யமம் |
| 12 ஸ்தானங்கள் 2 ம | பிரதி மத்யமம் |
| ப | பஞ்சமம் |
| 1 த | சுத்த தைவதம் |
| 2 த | ஸதுஸ்ருதி தைவதம் |
| 2 நி | கைசிக நிஷாதம் |
| 3 நி | காகலி நிஷாதம் |
| ச் | ஹெச்சு ஸட்ஜம் (ஆர்) தாரஸட்ஜம். |

குறித்து மேற்படி 12 மெட்டுக்களாகும். புள்ளி உள்ள இடங்கள்தான் பிரதம ஸரளிவரிசை வாசிக்கும் இடம். சுத்த ரிஷபம், அந்த்ரகாந்தாரம், சுத்த மத்யம், பஞ்சமம், சுத்த தைவதம் காகலி நிஷாதம், தாரஸட்ஜம் மாயாமாளவகௌளராகம் எனது குருகுலப்படி ப்ரக்ருதிக்கான உதாரணம். கார்ணம் ப்ரக்ருதிஸ்வரத்திற்கான ஸ்வரபேதமில்லாத சுத்தஸ்வரங்கள் மாயாமாளவகௌளையில் மேற்சொன்ன ஸரிகமபதநிஸ் ஸ்வரங்கள் இந்த மாயாமாளவகௌளம்தான் ஸங்கீத பிதாமஹரான புரந்ததாஸர் கீதத்தை பாடியுள்ளார். மேலும் இந்த ராகத்தை தெய்வீக ஸ்துதிக்காகவும் காலையில் பாடும் ராகமாகவும் சகல அம்ஸத்தை பெற்றிருப்பதால் இதற்கு சுபமங்களராகம் என்றும் உத்தமமான மோக்ஷத்தை அடைய தெய்வாம்ஸத்தை பெற பாடப்படும் ராகம் என்றும் ஆகும். அதேபோல் இந்த பனிரெண்டு மெட்டுக்களுக்கும் இணையாக ஸ்தாயிஸ்வரங்களை ஹெச்சுஸ்வரங்களை ஸரிகமபதநிஸ கண்டுபிடித்து மற்ற 12 மெட்டுக்களையும் கிரமமாக அமைக்க 24 மெட்டுக்கள் 24 ஸ்தானங்களும் கிடைக்கிறது. கிரமமாக பதிக்கப்பட்டிருக்குமாயின் மற்ற மூன்று தந்திகளாகிய பஞ்சமம், மந்த்ரம், அனுமந்த்ரத்திற்கு லட்க்ஷணத்தின் படி ஸ்தானங்கள் அமையும். அதாவது,

1. <u>அனுமந்த்ரத்தில் தக்கு மந்த்ரஸ்தாயி சுத்ததைவத முதல் மத்யஸ்தாயி பஞ்சமம்</u> வரை 24 ஸ்வரஸ்தானங்கள்.

2. <u>மந்த்ரத்தில் மந்த்ரஸ்தாயி சுத்தரிஷப முதல், தாரஸ்தாயி ஷட்ஜம்</u> வரையிலுள்ள 24 ஸ்வரஸ்தானங்கள்.

3. <u>பஞ்சமத்தில் மந்த்ரஸ்தாயி சுத்த தைவத முதல் தாரஸ்தாயி பஞ்சமம்</u> வரையிலுள்ள 24 ஸ்வரஸ்தானங்கள்.

4. சாரணையில் மத்யஸ்தாயி சுத்த ரிஷப முதல் தாரஸ்தாயி ஹெச்சுஸட்ஜம் வரை 24 ஸ்வரஸ்தானங்களையும் வீணையிலுள்ள 24 மெட்டுக்களும் முறைப்படி காட்டுகின்றன. இவை 96 ஸ்ருதி பேதங்களை காட்டுகிறது. மேளம் செய்ய நல்ல இசை ஞானம் வேண்டும். ஸ்வரஸ்தானங்களின் ஸ்தான இடங்களை தேர்ந்து கற்றவர்கள் மட்டுமே மேளம் செய்ய லாயக்கானவர்கள் ஆவார்கள். ஆகவே வீணை தண்டத்திலுள்ள இருபத்தி நான்கு மெட்டுக்களால் ஏற்படும் 96 ஸ்வரஸ்தானங்களை காட்டும் அட்டவணை.

## சார்ட் - 1

## வீணை தண்டத்திலுள்ள இருப்பத்தினான்கு மெட்டுக்களால் ஏற்படும் 96 ஸ்வரஸ்தானங்களை காட்டும் சக்ரம்

அ.சூடாமணி

| விடுகளின் சங்கை | 1 வது தந்தி சாரணையில் | 2 வது தந்தி பஞ்சமம் | 3 வது தந்தி மந்திரத்தில் | 4 வது தந்தி அனுமந்திரத்தில் |
|---|---|---|---|---|
| 1ம் மெட்டு | சு.ரி | சு.த | சு.ரி | சு.த |
| 2ம் மெட்டு | ச.ரி சு.க | சு.தை சு.நி | ச.ரி சு.க | ச.தை. சு. நி |
| 3ம் மெட்டு | ஷ.ரி சா க | ஷ.தை கை.நி | ஷ.ரி சா.க | ஷ.தை கை.நி |
| 4ம் மெட்டு | அ.க | கா.நி | அ.க | கா.நி |
| 5ம் மெட்டு | சு.ம | ச | சு.ம | ச |
| 6ம் மெட்டு | ப்ர ம | சு.ரி | ப்ர.ம | சு.ரி |
| 7ம் மெட்டு | ப | ச.ரி சு.க | ப | ச.ரி சு.க |
| 8ம் மெட்டு | சு.த | ஷ.ரி சா.க | சு.த | ஷ.ரி சா.க |
| 9ம் மெட்டு | ச.த சு.நி | அம்.க | ச.த சு.நி | அம்.க |
| 10ம் மெட்டு | ஷ.தை கை.நி | சு.ம | ஷ.தை கை.நி | சு.ம |
| 11ம் மெட்டு | கா.நி | ப்ர.ம | கா.நி | ப்ர ம |
| 12ம் மெட்டு | ச் | ப | ச | ப |
| 13ம் மெட்டு | சு.ரி | சு.த | சு.ரி | சு.த |
| 14ம் மெட்டு | ச.ரி சு.க் | ச.த சு.நி | ச.ரி சு.க | ச.த சு.நி |
| 15ம் மெட்டு | ஷ.ரி ஸா க் | ஷ த கை நி | ஷ ரி சா க | ஷ த கை நி |
| 16ம் மெட்டு | அம்க | கா நி | அம் க | கா நி |
| 17ம் மெட்டு | சு.ம் | ச் | சு ம | ச |
| 18ம் மெட்டு | ப்ர ம் | சு.ரி | ப்ர ம | சு ரி |
| 19ம் மெட்டு | ப் | சரி சு க் | ப | ச ரி சு க |
| 20ம் மெட்டு | சு. த் | ஷ ரி சா க் | சு த | ஷ ரி சா க |
| 21ம் மெட்டு | ச த் சு நி | அ க் | ச த சு நி | அ க |
| 22ம் மெட்டு | ஷ த் கை நி | சு ம் | ஷ த கை நி | சு ம |
| 23ம் மெட்டு | கா நி | ப்ர ம் | கா நி | ப்ர ம |
| 24ம் மெட்டு | ச் | ப் | ச் | ப |

வீணையின்படி தொகுப்பு.

## வீணையிலுள்ள 24 மெட்டுக்களில் (சார்ட் 2) ஏற்படும் 96 ஸ்தானங்கள்

| | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 73 | 74 | 75 | 76 | 77 | 78 | 79 | 80 | 81 | 82 | 83 | 84 | 85 | 86 | 87 | 88 | 89 | 90 | 91 | 92 | 93 | 94 | 95 | 96 |
| 49 | 50 | 52 | 52 | 53 | 54 | 55 | 56 | 57 | 58 | 59 | 60 | 61 | 62 | 63 | 64 | 65 | 66 | 67 | 68 | 69 | 70 | 71 | 72 |
| 25 | 26 | 27 | 28 | 29 | 30 | 31 | 32 | 33 | 34 | 35 | 36 | 37 | 38 | 39 | 40 | 41 | 42 | 43 | 44 | 45 | 46 | 47 | 48 |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |

மெழுகுச்சட்டம்

அனுமந்த்ரஸ்தாயி

| | | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | சு.த | ச.த | கை.நி | கா நி | ச | சுரி | சுரி | சா க | அ க | சு ம | பி ம | ப | சு த | ச த | கை நி | காநி | ஸ | சு ரி | ச ரி | சா க | அ க | சு ம | பி.ம | ப 96 |
| மந்த்ரஸ்தாயி | சு.ரி | ச.ரி | சா க | அம் க | சு ம | பி ம | ப | சு.த | ச த | கை நி | கா நி | ஸ | சு ரி | ச ரி | சா க | அம க | சு ம | பி.ம | ப | சு.த | ச த | கை நி | கா நி | ச் 72 |
| பஞ்சமத்தில் | சு த | ச.த | கைநி | காநி | ச | சு ரி | ச ரி | சா க | அம் க | கம | பிம | ப | சு த | ச த | கைநி | கா நி | ச் | சு ரி | ச ரி | சா க் | அம் க் | சு ம் | பி.ம் | ப் 48 |
| ஸாரணையில் (ஆதாரம் தட்டு ஸ) | சு ரி | ச.ரி | சா க | அம்.க | சு ம | பி ம | ப | சு த | ச.த | கை நி | கா நி | ஸ் | சு ரி | ச ரி | சாக் | அம்க் | சு.ம் | பி.ம் | ப் | சு த் | ச.த் | கை.நி | கா.நி | ஸ் 24 |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |
| | மத்யஸ்தாயி | | | | | | | | | | | | தாரஸ்தாயி | | | | | | | | | | | |

12, 24, 48, 96 - 12 ஸ்தானம், 24 ஸ்தானம், 48, 96 ஸ்தானங்கள், நுட்பஸ்ருதிகள் வீணையின்படி குறிப்பு - மேளம் செய்ய

செல்வி அ.சூடாமணி

வீணையின் மெட்டுக்கள் அமைப்பு

| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 4வது தந்தி அனுமந்தரம் | 73 | 74 | 75 | 76 | 77 | 78 | 79 | 80 | 81 | 82 | 83 | 84 | 85 | 86 | 87 | 88 | 89 | 90 | 91 | 92 | 93 | 94 | 95 | 96 |
| 3வது தந்தி மந்த்ரம் | 49 | 50 | 52 | 52 | 53 | 54 | 55 | 56 | 57 | 58 | 59 | 60 | 61 | 62 | 63 | 64 | 65 | 66 | 67 | 68 | 69 | 70 | 71 | 72 |
| 2வது தந்தி பஞ்சமம் | 25 | 26 | 27 | 28 | 29 | 30 | 31 | 32 | 33 | 34 | 35 | 36 | 37 | 38 | 39 | 40 | 41 | 42 | 43 | 44 | 45 | 46 | 47 | 48 |
| 1வது தந்தி ஸாரணை | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |

வீணையில் மேள அமைப்பு
படுக்கை மேளம்

இந்த சார்ட்டின்படி ஒவ்வொரு ஸ்வரமும் (8) எட்டு எட்டாக வீணையில் உள்ளது என்பதை குறிக்கிறது.

| எண் | ஸ்வரங்களின் பெயர் | வீட்டு எண் | | | | | | | | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | சு.ரி | 1 | 13 | 30 | 42 | 49 | 61 | 78 | 90 | 8 |
| | சு.ரி சு.க | 2 | 14 | 31 | 43 | 50 | 62 | 79 | 91 | 8 |
| | ஷ.ரி சா.க | 3 | 15 | 32 | 44 | 51 | 63 | 80 | 92 | 8 |
| | அ.க | 4 | 16 | 33 | 45 | 52 | 64 | 81 | 93 | 8 |
| | சு.ம | 5 | 17 | 34 | 46 | 53 | 65 | 82 | 94 | 8 |
| | பி.ம | 6 | 18 | 35 | 47 | 54 | 66 | 83 | 95 | 8 |
| | ப | 7 | 19 | 36 | 48 | 55 | 67 | 84 | 96 | 8 |
| | சு.த | 8 | 20 | 25 | 37 | 56 | 68 | 73 | 85 | 8 |
| | ச.தை சு.நி | 9 | 21 | 26 | 38 | 57 | 69 | 74 | 86 | 8 |
| | ஷ.த கை.நி | 10 | 22 | 27 | 39 | 58 | 70 | 75 | 87 | 8 |
| | கா.நி | 11 | 23 | 28 | 40 | 59 | 71 | 76 | 88 | 8 |
| | ச் | 12 | 24 | 29 | 41 | 60 | 72 | 77 | 89 | 8 |

வீணையில் ஒவ்வொரு ஸ்வரமும் வரும் எண் (சார்ட் 3ன் தொடர்ச்சி) சங்கீத சந்திரிகை

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சு.ரிஷபம் | 8 வரும் அது | 1, | 13 | 30 | 42 | 49 | 61 | 78 | 90 |
| ச.ரிஷபம் | 8 வரும் அது | 2 | 14 | 31 | 43 | 50 | 62 | 79 | 91 |
| சா.கா | 8 வரும் அது | 3 | 15 | 32 | 44 | 51 | 63 | 80 | 92 |
| அம்.கா | 8 வரும் அது | 4 | 16 | 33 | 45 | 52 | 64 | 81 | 93 |
| சு.ம | 8 வரும் அது | 5 | 17 | 34 | 46 | 53 | 65 | 82 | 94 |
| பி.ம | 8 வரும் அது | 6 | 18 | 35 | 47 | 54 | 66 | 83 | 95 |
| ப | 8 வரும் அது | 7 | 19 | 36 | 48 | 55 | 67 | 84 | 96 |
| சு.தை | 8 வரும் அது | 8 | 20 | 25 | 37 | 56 | 68 | 73 | 85 |
| ச.தை | 8 வரும் அது | 9 | 21 | 26 | 38 | 57 | 69 | 74 | 86 |
| கை.நி | 8 வரும் அது | 10 | 22 | 27 | 39 | 58 | 70 | 75 | 87 |
| கா.நி | 8 வரும் அது | 11 | 23 | 28 | 40 | 59 | 71 | 76 | 88 |
| ஸ் | 8 வரும் அது | 12 | 24 | 29 | 41 | 60 | 72 | 77 | 89 |
| ஆக | 96 | ---------- | | | | | | | |

ஸ்தானங்கள் இந்த வரிசைபடி எட்டு எட்டாக வரும் சுத்த ரிஷபம் 8, ச, ரிஷபம் 8, சாதாரண காந்தாரம் 8 அந்த்ரகாந்தாரம் 8, சுத்த மத்யமம் 8, பிரதிமத்யமம் 8 பஞ்சமம் 8 சுத்த தைவதம் 8 சதுஸ்ருதி தைவதம் 8 கை நிஷாதம் 8, காகலி நிஷாதம் 8, தாரஸட்ஜம் 8 என்று 96 ஸ்தானங்கள் வருகிறது. இதனையேதான் நான் எனது குருவின் ஆணைப்படி அஷ்டகம் எட்டுதான் இசைக்கு ஆதாரம் என்றும் மேளகர்த்தா ராகம் 8 தான் ராக வடிவம் என்றும், எட்டின் வடிவமே 8+8+8 24, அக்ஷரம் கொண்ட காயத்ரீ மந்திரத்தின் 24 அக்ஷரமே இசைக்கு ஆதார ஸ்வரங்கள். இதன் அடக்கமே ஸ்ரீரங்கப்ரணவ ஓம்கார விமானம் என்று கூறுகிறேன்.

| அச்சுதம் | அனந்தன் | கோவிந்தன் | வாசுதேவன் என்ற 24 அக்ஷரத்தின் |
|---|---|---|---|
| 8 | 8 | 8 | 25 |

முடிவான 25 வது அக்ஷரம் பரம்பொருள் என்றும் ஆய்வை எடுத்து வீணை வாய்ப்பாட்டில் எனது தாயாரிடம் சிக்ஷை பயின்று இன்று இந்த ஆய்வுதனை தொடுத்து முடித்துள்ளேன். ஸ்ருதி 22 என்பது இல்லை 24 ஸ்ருதிதான் என்பதனை விவரிக்க வீணை வாத்யம் மட்டுமே சிறந்தது என்ற மேற்கோளை காட்டி 24 ஸ்தானங்களை காட்டி, அவை வரும் நிலைகளை காட்டி இசைக்கு ஆதாரம் காட்டி எனது குருபரம்பரைக்கு அஞ்சலி செலுத்தி ஸ்ரீத்யாகப்ரும்மத்தை வணங்கி இந்த கணித பகுதியை நிறைவடையச் செய்கின்றேன். அஷ்ட்டகம் எட்டு என்பது எனது ஆய்வின் கருத்து. இந்த எட்டின் தத்துவமே அஷ்டாக்ஷர நாமமான ஓம் நமோ நாராயணாய. இந்த எட்டின் அதிபதி ஸ்ரீமந்நாராயணன் ஓம் ப்ரணவாதிபதி அரங்கன் இந்த எட்டின் கூட்டம் 24ன் தலைவன் 25ம் எண் வாஸுதேவன். இதனையே ஸ்ரீத்யாகப்ரும்மம் ஸர்வம் வாஸுதேவமயம் என்கிறார். வாஸுதேவஸர்வம் என்று கூறி <u>கோவிந்தா</u> என்று சொல்லி 24வது சுரம் கோவிந்தா என்பதை ஸ்ரீரங்க விமானத்தை நினைவில் கொண்டு அச்சுதா, அனந்தா, கோவிந்தா 8+8+8-24 என்ற தத்துவத்தை அறிந்து பாடியுள்ளார். <u>கோவிந்தா</u> நாம ஸங்கீர்த்தனம் 'கோவிந்தா கோவிந்தா' என்று பஜனையில் பாடுகிறார். எந்தரோ மஹானு பாவுலு பஞ்சரத்னத்தில் <u>கோவிந்தா</u> என்பது இந்த 24 வது சுரத்தைப் பற்றித்தான் என்பது எனது ஆய்வின் முடிவு. மேலும் கீர்த்தனை ப்ருந்தாவன லோல கோவிந்த என்ற தோடிப்பாட்டு கோவிந்த முகுந்த என்ற ராமஸமயமு மத்யமாவதி பாட்டில், மேலும் பல கீர்த்தனைகளைப் பாடியுள்ளார். இந்த எட்டின் வடிவமே ஆதிதாளம், எட்டு அக்ஷரம் இந்த எட்டுதான் தாளங்களில் சிறப்புடையது. மோனை யதுகை கொண்ட ப்ரபந்தத்தை ஆதிதாளத்தில் எனது தாயார் பாடியுள்ளார். அஷ்டாக்ஷரம் பெருமாளை ஆழ்வார்கள் ப்ரபந்தமாக பாடினார்கள். ஆகவே அந்த ப்ரபந்தம் எட்டின் எண்ணிக்கையை கொண்டதாக இருக்கவேண்டும் என்பது எனது தாயாரின் குறிக்கோள். இதனை நானும் விளக்கியுள்ளேன். அஷ்டாக்ஷர பெருமானை ஆதிதாளத்தில் பாடுவதுதான் (எட்டுக்கு எட்டு) சிறப்பு.

இந்த எட்டின் தொடர்ச்சியாக ஸ்வரப்ரஸ்தாரத்தை பார்ப்போம்.

ஸ்வரப்ரஸ்தாரம் ஆர்ச்சிகம், காதிகம், சாமிக, ஸ்வராந்தர, ஔடவ, ஷாடவ, சம்பூர்ணம்

மேளகர்த்தா (ஆர்) மேளம் என்று எட்டு வகை:-

| | | | |
|---|---|---|---|
| ஆர்ச்சிகம் | 1 | ஸ்வரத்தை வைத்து ப்ரஸ்தரிப்பது | சங்கீத சந்திரிகை |
| காதிகம் | 2 | ஸ்வரத்தை வைத்து ப்ரஸ்தரிப்பது | |
| சாமிக | 3 | ஸ்வரத்தை வைத்து ப்ரஸ்தரிப்பது | |
| ஸவரார்ந்தரம் | 4 | ஸ்வரத்தை வைத்து ப்ரஸ்தரிப்பது | |
| ஔடவம் | 5 | ஸ்வரத்தை வைத்து ப்ரஸ்தரிப்பது | |
| ஷாடவம் | 6 | ஸ்வரத்தை வைத்து ப்ரஸ்தரிப்பது | |
| சம்பூர்ணம் | 7 | ஸ்வரத்தை வைத்து ப்ரஸ்தரிப்பது | |
| மேளம் என்றால் | 8 | ஸ்வரத்தை வைத்து ப்ரஸ்தரிப்பது | |

ப்ரஸ்தாரம் அடுத்து ராகபேதம் ஐந்து வகையாகிறது. எனதுகுறிப்பு

1. மேளகர்த்தா ஜன்ய ராகங்கள்

2. சம்பூர்ண ஷாடவ ஔடவ ராகங்கள்

3. சுத்த வக்ர ராகங்கள்

4. சுத்த சாளக சங்கீர்ண ராகங்கள்

5. மித்ர சத்ரு ராகங்கள் என்று ஐந்து பேதங்களாகிறது.

1. ஆரோஹண அவரோஹணத்தில் சுத்த சம்பூர்ணமாய் இருப்பது 8 லக்கம் கொண்டது

ஸரிகமபதநிஸ் - ஸ்நிதபமகரிஸ - மேளகர்த்தா என்று பெயர். சூடாமணி

2. ஆரோஹண அவரோஹணத்தில் சுத்த சம்பூர்ணமாய் அல்லது 7 லக்கம் கொண்டது

ஸரிகமபதநி - நிதபமகரிஸ சம்பூர்ணம் என்று பெயர்.

ஜன்ய ராகங்கள் என்பது

| | |
|---|---|
| மேளகர்த்தா என்பது - | மாயாமாளவகௌள |
| ஜன்யம் என்பது | பௌளி |
| ஆ:ஸரிகமபதநிஸ் - | அ:ஸ்நிதபமகரிஸ - மாயாமாளவகௌள |
| ஆ:ஸரிகபதஸ் - | அ:ஸ்நிதபகரிஸ - பௌளி |

ஒரு தாய் ராகத்தில் அதனுடைய குழந்தைகள் என்பது ஜன்ய ராகங்கள் ஆகும். அந்த ஜன்ய ராகம் அந்த தாய் ராகத்தின் ஸ்வரத்தையே கொண்டிருக்கும். -சூடாமணி

மேள ராகம் என்பது நடபைரவி உதாரணம் ஸரிகமபதநிஸ் ஸ்நிதபமகரிஸ

ஷாடவம் 6 சரிகமதநிஸ் ஸ்நிதமகரிஸ ஸ்ரீரஞ்சனி

ஔடவம் 5 சரிகபதஸ் ஸ்தபகரிஸ மோஹனம்

ஸ்வரங்கள் வரிசை கிரமமாக இருப்பது சுத்தமென்றும்

ஸ்வரங்கள் வரிசை கிரமமல்லாது மடங்கி வருவது வக்ரமென்றும் பெயர்.

ராகங்களின் சாஸ்த்ரோத்தமான நியமமாய் உள்ளது சுத்தமென்றும் அன்ய சாயை உள்ளதற்கு சாளக என்றும் இவை இரண்டும் மிஸ்ரமாயுள்ளது சங்கீர்ணமென்று பெயர்.

| | | |
|---|---|---|
| சுத்த ராகம் | - | ஹம்ஸத்வனி - ஸரிகபநிஸ், ஸ்நிபகரிஸ |
| சாளகம் என்பது | - | நவரோஜ் - பதநிசரிகமப - பமக ரிசநிதப |
| சங்கீர்ணராகம் | - | பெஹாக் (ஆர்) சகமபநிஸ - ஸ்நிதபமகரிஸ ப்யாக் |

ஒரு ராகம் பாடினதும் அடுத்து பாடும் ராகம் ரஞ்சகமாக இருந்தால் அதற்கு மித்ரராகம் என்று பெயர். அப்படி இல்லாது இருக்கும் ராகத்திற்கு சத்ருராகம். மேலும் 1.சம்பூர்ணம் 2. ஷாடவம் ஔடவம் ஆகியவை.

1. சுத்த சம்பூர்ணம்
2. வக்ரஸம்பூர்ணம்
3. சுத்த ஷாடவம்
4. வக்ர ஷாடவம்
5. சுத்த ஔடவம்
6. வக்ர ஔடவம் என்றும் வகையாகிறது.

<u>மேளகர்த்தா ராகம் பற்றிய விளக்கம்</u>

1. ஆரோஹண அவரோஹணங்கள் சுத்த சம்பூர்ணங்களாய் இருந்து சுத்த விக்ருதிகள் மட்டும் வித்யாசமாய் நிற்கும் ராகங்களாகிய மேளங்கள் மற்ற ஜன்ய ராகங்களுக்கு கர்த்தாவாகியிருப்பதால் மேளம்கர்த்தா என்று பெயர் பெற்றது. இதனை மேளம் தாய் ராகம் என்று பெயர் பெற்றது.

2. சுத்த விக்ருதியென்று அந்தந்த ராகத்திற்குரிய ரிகமதநி ஸ்வரங்களின் பிரிவுகள் ஆகும். சுத்த விக்ருதி ஆகும்.

3. மேளகர்த்தா 72 மேளத்திற்கும் பெயராகும்.

<u>தாளங்கள் பற்றிய விவரங்களை பார்ப்போம்</u>

தாளம் தசப்ரமாணங்களை உடையது. அவை 1. காலம் 2. மார்க்கம் 3.க்ரியை 4. அங்கம்

1. இதில் காலம் என்பது தாமரை இதழ் நூறு அடக்கி அதில் ஓர் இதழில் ஊசி செலுத்தும் நேரம் கணமெனப்படும்.

| | | |
|---|---|---|
| 2. கணம் எட்டு கொண்டது | - | லவம் |
| லவம் எட்டு கொண்டது | - | காஷ்டம் |

| | | |
|---|---|---|
| **காஷ்டம்** | - | **நிமிஷம்** |
| **நிமிஷம்** | - | **துடி** |
| **துடி இரண்டு கொண்டது** | - | **த்ருதம்** |
| **த்ருதம் இரண்ட கொண்டது** | - | **லகு** |
| **லகு இரண்டு கொண்டது** | - | **குரு** |
| **லகு மூன்றுகொண்டது** | - | **ப்லுதம்** |
| **லகு நான்கு கொண்டது** | - | **காகபாதம்** |

*லகு என்றால் பொதுவாக சதுஸ்ரலகுவைதான் குறிக்கும். காரணம் சதுஸ்ரலகுவே முதன்மையாகையால் லகுவென்றால் சதுஸ்ரலகு என்று அர்த்தம். எனது இசை பயிற்சிக்கான கணிதம்*

*2. மார்க்கம்:- தக்ஷணம், வார்த்திகம், சித்ரம், சித்ரதரம், அர்த்தசித்ரம், அதிசித்ரம் எண் மார்க்கம் 6 விதம் ஆகும்.*

| | | |
|---|---|---|
| *எட்டு மாத்திரையை ஓர் களையாகக் கொண்டது* | - | *தக்ஷணம்* |
| *நான்கு மாத்திரையை ஓர் களையாகக் கொண்டது* | - | *வார்த்திகம்* |
| *இரண்டு மாத்திரையை ஓர் களையாகக் கொண்டது* | - | *சித்ரம்* |
| *ஒரு மாத்திரையை ஓர் களையாகக் கொண்டது* | - | *சித்ரதரம்* |
| *அரை மாத்திரையை ஓர் களையாகக் கொண்டது* | - | *அர்த்தசித்ரம்* |
| *கால் மாத்திரையை ஓர் களையாகக் கொண்டது* | - | *அதிசித்ரம்* |

*இந்த ஆறையே ஷட்காலமென்றும் சொல்லப்படும்.*

*தக்ஷணம் ஆறாம் காலம் என்றும், வார்த்திகத்தை ஐந்தாம் காலமென்றும், சித்ரத்தை நான்காம் காலமென்றும், சித்ர தரத்தை 2ம் காலமென்றும், அதிசித்ரத்தை முதற்காலமென்றும் சொல்லப்படுகிறது.*

*-சூடாமணி*

*நான்கு (4) அக்ஷர காலத்தை மாத்திரையென்று பெயர்*

| மாத்திரை | காலம் | லயம் | பெயர் |
|---|---|---|---|
| $^1/_4$ | முதற் காலம் | விளம்பிதம் | அதிசித்ரம் |
| $^1/_2$ | இரண்டாம் காலம் | | அர்த்தசித்ரம் |
| ' | 3ம் காலம் | மத்திய காலம் | சித்ரதரம் |
| | 4ம் காலம் | | சித்ரம் |
| 4 | 5ம் காலம் | திருதகாலம் | வார்த்திகம் |
| 8 | 6ம் காலம் | | தக்ஷணம் |

*என்று சொல்லப்படுகிறது. ஆனால் எனது குருகுலத்தில் பாடாந்தரம்*

| | | |
|---|---|---|
| *ஸரளி வரிசை* | *1ம் காலம்* | *1 அக்ஷரம்* |
| *ஸரளி வரிசை* | *2ம் காலம்* | *2 அக்ஷரம்* |
| *ஸரளி வரிசை* | *3ம் காலம்* | *4 அக்ஷரம்* |
| *ஸரளி வரிசை* | *4ம் காலம்* | *8 அக்ஷரம் இப்படியாகும்.* |

*இந்த 1ம் காலமும் 4ம் காலமும் வர்ணத்தில் 1ம் காலம்பாடி 2ம் காலம் பாடுவது என்பதாகும். வர்ணத்தின் 2ம் கால அக்ஷரமும் காலம் பண்ணுவதில் 4ம் கால அக்ஷரமும் ஒன்றாகும். (8) அதாவது வர்ணத்தில் முதற்காலம் 4 அக்ஷரம் 2ம் காலம் 8 அக்ஷரம்.*

<u>அனுலோமம் பாட</u> பல்லவிபாட எனது விசேஷ குறிப்பு

விளம்பித மத்ய த்ருத லயங்களுக்குப்பிறகு பல்லவிக்கு விளம்பிதம் 2ம் காலம் எடுப்பு எடுத்து பின் பல்லவியை மூன்று காலம் பண்ண விளம்பித மத்யத்ருத 1 : 2 : 4 அக்ஷரமாக மாற்றவேண்டும்.

<u>ப்ரதிலோமம் பாட</u> பல்லவிபாட எனது விசேஷ குறிப்பு

பல்லவி பாடி ப்ரதி லோமத்திற்கு விளம்பிதத்தையே த்ருதமாக்கி, அதித்ருதமாக்கி, அதி அதித்ருதமாகப்பாட பல்லவி எடுப்பு எடுத்து பாடி முடிக்கவேண்டும். ஆகவே மூன்று காலம் என்பது எதற்குமூன்று காலம் என்பதை தெரிந்து கொண்டு பாடவேண்டும். அனுலோமத்தின் 1 கால விளம்பித லயத்தை பிரதிலோமத்தில் 1ம் கால த்ருத லயத்தில் பாட வேண்டும். அதாவது 1ம் காலம் கீழ் காலத்தை 1ம் கால துரித காலத்தில் பாடி துரித காலத்தில் மேலும் 2 காலங்களைப் பாட பிரதிலோகம் ஆகும். இதே போல் விளம்பிதகால 1ம் காலத்தை 2ம் காலத்தில் விளம்பித மத்யமாகப்பாடி 3ம் காலத்தை மத்யத்ருதமாகப்பாடி 4ம் காலத்தை த்ருதத்ருதலயத்தில் பாட பிரதிலோமம் பாடவேண்டும். இது ஜெயம்மாள் குருகுல பாடாந்தரம். அடுத்து க்ரியை என்பதை பார்க்க, க்ரியை மார்க்கம், தேசிகம் என இரண்டு வகைப்படும். இவற்றுள் நிசப்தம் சப்தமென மார்க்கம் இரண்டு வகைப்படும். எனது விசேஷ தொகுப்பு.

- சங்கீத சந்திரிகை குறிப்பு

ஆலாபம் - விரல்களை மடித்தல்

விக்ஷேபம் - விரல்களை திறத்தல்

ப்ரவேசம் - வலது புறங்கொண்டு வருதல்

நிஷ்க்ராமம் - உயரமாய் காண்பித்தல்

என்று நிசப்தம் நான்கு வகையாம்

தருவம் - சிட்டிகை போடுதல்

சம்யம் - வலது கை மேல் இடம் கையால் காதை போடுதல் அதாவது அடித்தல்

தாளம் - துடையில் வலது கையால் தட்டிப் போடுதல்

சந்நிபாதம் - இரண்டுகையாலும் சமமாய் காதை போடல்

என்று நிசப்தம் நான்கு வகையாகும். அக்ஷரங்களை எண்ணாமல் தட்டை மட்டும் போடும் தாள வகை சாபு தாளம் என்று பெயர். (ஆனால் எனது குருகுலத்தில் மூன்று அக்ஷரங்களை எண்ணியும் நாலு அக்ஷரங்களை தட்டியும் போட்டுக்காட்டி சாபு தாளம் என்ற மிஸ்ரசாபுவை போடுவோம்.) மேலும் கண்ட சாபு என்று சொல்லும் 2+3-5 (ஆர்) 4+6-10 என்ற அக்ஷரங்கள ள உடைய தாளத்தை மிஸ்ரஜம்பையாக எண்ணியும் அநுத்ருதம், த்ருதமாகவும் போடுவது வழக்கம், மிஸ்ர ஏகம் என்பதை 7 அக்ஷரங்களை எண்ணித்தான் தாளம் போடும் பிராசீன பழக்கங்கள் எனது குருகுலத்தில் உள்ளது. மேலும் தேசாதித் தாளம் தற்சமயம் நடைமுறையில் போடாமல் இருக்கிறது. இந்த தேசாதியை ஆதி தாளமாக போடப்படுகிறது. ஆனால் எனது குருகுலத்தில் தேஸாதி தாளம் 1 வீச்சு 3 தட்டுக்கள் ஒரு விசிறல் ஆக 8 அக்ஷரம் ஆகும். தேஸாதித்தாளம் முதல் நான்கை 1 தட்டு 1 வீச்சும் பின் (2) தட்டு நான்கையும் சேர்த்து 8 அக்ஷரம். அடுத்தபடியாக தேசிகம் வகையை பார்க்கலாம்.

சங்கீத சந்திரிகை குறிப்பு

1. த்ருவகம் - நிசப்தமான சிட்டிகை

2. சர்ப்பிணி - வலது புறத்துக்குக் கை நீட்டில்

3. க்ருஷ்ய - இடது புறத்துக்குக் கைநீட்டல்

4. பத்மினி - தலை கீழாகக் கை நீட்டுதல்

5. விசர்ஜிதம் - பிடித்து வெளியே விசுறுதல்

6. விக்ஷப்தம் - விட்டு மூடுதல்

7. பதாகம் - உயரமாயெடுத்தல்

8. பதிதம் - இடது புறத்துக்குள்ளே கொண்டுவருதல்

**இந்த எட்டும் தேசியம் எனப்படும். இந்த எட்டை தாளங்கள் அநுத்ருதம், த்ருதம், லகு, குரு, ப்லுதம், காகபாதம் எனப்படும். ஆறு வகையான இந்த அங்கங்களில் அக்ஷரம் அநுத்ருதம் 1.த்ருதம் 2.லகு நான்கு 4 குரு 8 ப்லுதம் 12 காகபாதம் 16 த்ருதசேகரத்தை சேர்த்தால் சப்தாங்கமாகிறது. இவற்றில் லகு, த்ருதம், அநுத்ருதம் நடைமுறையில் தாளங்களில் வரும் அங்கங்கள் ஆகும். லகு மட்டும் 5 வகைப்படும். திஸ்ரலகு 3 சதுஸ்ரலகு 4 கண்டலகு 5 மிஸ்ரலகு 7 சங்கீர்ணலகு 9 ஆக லகு 5 வகைப்படும். இந்த லகு பத்து வகை உள்ளது. அவை 3, 4, 5, 6, 7, 9, 8, 10, 12, 16 திஸ்ர, சதுஸ்ர, கண்டமிஸ்ர, சங்கீர்ண என்ற ஐந்து லகுவோடு பாக்கி ஐந்து வகை லகு உள்ளது. அவை மனுஷ்ய, ஸ்வர்க்க, ஹம்ஸ, தேஸ்ய, கர்னாடங்கம் என பத்து வகைப்படும்.** *முதல் ஐந்து லகுவை மட்டும் நடைமுறையில் வைத்துக்கொண்டு பாக்கி ஐந்து லகுவை கொள்ளாமல் விட்டு விட்டனர். காரணம் தாள வகையில் விவரம் அறிவது சிரமமானதால் அதை சேர்த்துக் கொள்ளவில்லை.*

*-ஆய்வின் சிறப்புத் தொகுப்பு - பயிற்சிக்காக*

| | | |
|---|---|---|
| *3 அக்ஷர* | லகுவை | தகிட தகிட தகிட தகிட என்ற சொற் கட்டுடனும் |
| *4 அக்ஷர* | லகுவை | தகதமி தகதிமி தகதிமி தகதிமி என்ற சொற் கட்டுடனும் |
| *5 அக்ஷர* | லகுவை | தா,தகிட, தாதகிட, தாதகிட, தாதகிட என்ற சொற் கட்டுடனும் |
| *7 அக்ஷர* | லகுவை | தா, தா, தகிட, தாதாதகிட,தாதாதகிட என்ற சொற் கட்டுடனும் |
| *9 அக்ஷர* | லகுவை | தா,தா,தாதகிட என்பது போலும் எண்ணுவார்கள். |

*ஆனால் பாக்கி 5 லகுவை*

*6 அக்ஷர லகுவை திஸ்ரமத்ய காலத்திலும் போடவேண்டும்.*

*8 அக்ஷர லகுவை சதுஸ்ர காலத்திலும் போடவேண்டும்.*

*10 அக்ஷர லகுவை கண்ட மத்ய காலத்திலும் போடவேண்டும்.*

*12 அக்ஷர லகுவை திஸ்ர த்ருத காலத்திலும் போடவேண்டும்.*

*16 அக்ஷர லகுவை சதுஸ்ர த்ருத மத்ய காலத்திலும் போடவேண்டும்.*

*முதல் 5 லகுவை விளம்பித காலத்தில் போடுவார்கள்*

*தாளத்தில் பின் 5 லகுவை*

*அக்ஷரம் 6ஐ திஸ்ர நடை மத்ய லய காலத்திலும்*

*அக்ஷரம் 8ஐ சதுஸ்ர நடை மத்ய லய காலத்திலும்*

*அக்ஷரம் 10ஐ கண்ட நடை மத்ய லய காலத்திலும்*

*அக்ஷரம் 12ஐ திஸ்ர த்ருத காலத்திலும்*

*அக்ஷரம் 16ஐ சதுஸ்ர திருதகாலத்திலும் - அடங்குவதால் பின் ஐந்தும் சிலாக்யம் இல்லை என்று விடப்பட்டுவிட்டது. முதல் ஐந்தை மட்டுமே நடைமுறையில் வைத்துக்கொண்டார்கள்.*

*மேற்சொன்ன (ஆர்) முதலில் சொன்ன தாள அங்கங்கள் விவரம் (சங்கீத சந்திரிகை)*

| அங்கப்பெயர் | அங்க அடையாளம் | ப்ரதமாங்கம் | அங்க விவரம் | அக்ஷர காலம் | மாத்திரை |
|---|---|---|---|---|---|
| 1.அனுத்ருதம் | ں | ں | 1.அனுத்ருதம் | 1 | 1/4 |
| 2. த்ருதம் | 0 | ں | 2.அனுத்ருதம் | 2 | 1/2 |
| 3. த்ருத சேகரம் | 8 | 8 | 1 த்ருதம் ǀ அனுத்ருதம் | 3 | 3/4 |
| 4. லகு | 1 | 1 | 1 லகு | | ⌗ǀ |
| 5. குரு | 8 | 8 | 1லகு 2 த்ருதம் | 8 | 2 |
| 6. ப்ளுதம் | 8 | 8 | 2 லகு 2 த்ருதம் | 12 | 3 |
| 6 காகபாதம் | + | + | 4 லகு | 16 | 4 |

<u>தாள அக்ஷரங்களை போடும் விதம்:- சூடாமணி</u>

அனுத்ருதத்தை ஒரு காதையாலும், ஒரு காதை என்பது ஒரு தட்டாகும். (1 அக்ஷரம்)

த்ருதத்தை ஒரு காதை ஒரு விஸர்ஜிதம் (தட் ஈஸ்) ஒரு தட்டு ஒரு வீச்சு (2 அக்ஷரம்)

த்ருத சேகரம் இரண்டு காதை ஒரு விஸர்ஜிதம் (தட் ஈஸ்) இரண்டு தட்டு ஒரு வீச்சு ஆக (3 அக்ஷரம்)

லகுவை ஒரு காதை சதுஸ்ரமானால் 4 அக்ஷரத்தை எண்ணி போடவேண்டும். 1 தட்டு 3 விரல் எண்ணிக்கை, திஸ்ாமென்றால் 1 லகு 3 அக்ஷரம் தட்டு 2 விரல் எண்ணிக்கை, கண்டமென்றால் 1 லகு 5 அக்ஷரம் 1 தட்டு 4 விரல் எண்ணிக்கை, மிஸ்ரமென்றால் 1 லகு 7 அக்ஷரத்தை 1 தட்டு 6 விரல் எண்ணிக்கை, சங்கீர்ணமென்றால் 1 லகு 9 அக்ஷரத்தை 1 தட்டு 8 விரல் எண்ணிக்கை என்பது போல் போடவேண்டும்.

5. குருவை ஒரு காதை (ஆர்) ஒரு தட்டு, ஏழு விரல்களாலும் சங்கீத சந்திரிகை

6. ப்ளுதத்தை நாலு அக்ஷர காலங்கொண்ட ஒரு காதை (ஆர்) ஒரு தட்டு ஒரு க்ருஷ்யை இடது புறத்துக்கு கைநீட்டிய பின் ஒரு சர்பிணியினாலும் வலது புறம் கை நீட்டியும் போடவேண்டும்.

7. காகபாதத்தை நாலக்ஷரகாலங்கொண்ட ஒரு காதை (ஆர்) ஓர் தட்டு போட்டு பின் ஒரு பதாகம் போட்டு ஒரு சர்ப்பிணியினாலும் முடிக்கவேண்டும்.

ஓர் சர்ப்பிணி போடு என்பது வலது புறத்துக்கு கையை நீட்டி போடவேண்டும்.

இந்த லய வின்யாஸத்தை எனது குருகுலத்தில் போட்டுள்ளேன். இந்த அனுலோம பிரதிலோமத்தை புரிந்து பாடினால் பல்லவி வெகு அழகாக இருக்கும். கடைசியாக பிரதிலோமம் 3ம் காலத்திற்கு த்ருதலயமாக எடுத்து (4 அக்ஷர சித்ரதரத்தை (1 மாத்திரை) யை பாடி 5ம் காலம் அதித்ருதலயம் 1/2 மாத்திரை அர்த்தசித்ரத்தை) பாடி 6ம் காலமாக அதிசித்ரத்தை 1/4 மாத்திரையாக குறைத்து பாடி பல்லவி எடுப்பு எடுத்து முடிக்கவும். பாடல்களில் நமக்கு முக்கியமானது யதிப்ரஸ்தாரமே பிபீலிகம் அல்லது சமம், விஷமம் ம்ருதங்கம், வேதமத்யமம், கோபுஸ்சம், ஸ்ரோதோவஹம் என்று ஆறு வகையான யதிகள்உள்ளது.

- சங்கீத சந்திரிகை

1. யதிகள் ஒரே விதமாய் வருவது சமம்.

2. முதலிலும் கடைசியிலும் சிறியதும், நடுவில் பெருத்தும் வருவது ம்ருதங்கம் ம்ருதங்கம் போல் வருவது.

3. எல்லாம் கிரமம் இல்லாது வருவது விஷமம்

4. முதலிலும் கடைசியிலும் பெருத்தும் இடையில் சிறியதுமாக வருவது வேத மத்யமம் உடுக்கை போல் வருவது.

5. முதலிலே பெருத்தும் கடைசியிலே சிறுத்தும் மேலிருந்து கீழே இறங்கி நிற்பது கோபுஸ்சம். மாட்டின் வால் நுனி போன்றது.

6. முதலில் சிறியதும், கடைசியிலே பெருத்தும் முறையே ஏறி சென்று நிற்பது ஸ்ரோதோவஹகம். குருகிய ப்ரவாகமாக வரும் நதி அகண்டுபோவது போல் வருவதால் சதுஸ்ரோதோவஹம் ஆகும். உதாரணம்,

ஆறுயதிகள் மேலும் பதினைந்து வகையாகும். சமவிஷமம், சமம்ருதங்கம், சமவேதமத்யமம் சமகோபுஸ்சம், சமஸ்ரோ தோவஹம், விஷமம்ருதங்கம், விஷமவேதமத்யமம், விஷம கோபுஸ்சம், விஷம ஸ்ரோதோவஹம், ம்ருதங்க வேத மத்யம், ம்ருதங்ககோபுஸ்சம், ம்ருதங்கஸ்ரோதோவஹம், வேத மத்யம கோபுஸ்சம், வேத மத்யம ஸ்ரோதோவஹம், கோபுஸ்சஸ்ரோதோவஹம் இந்த விதமான யதிப்ரஸ்தாரங்களையும் ஸ்ரீத்யாகப்ரும்மம் பஞ்சரத்ன கீர்த்தனைகளில் காணலாம். யதிப்ரஸ்தாரணங்களின் முடிவில் ஸ்ரீத்யாக ராஜர் ப்ராஸ அநுப்ராஸ அணிகளை ஆங்காங்கே அமைத்துள்ளார் என்பதற்கு உதாரணமாக இப்பாடலில்

''ஸ்ரீதமாநாதோவாதமா நேபேதமா இதி மோதமா
ஸ்ரீராம ஹ்ருச்சாரமாப்ரோவ பாரமா ராமபாரமா'' என்று பாடியுள்ளார்.

இனி நாம் பார்க்கவேண்டியது தாள வகைகள் அவை 7 தாளங்கள். அவைகளின் விசேஷ விளக்கங்கள் ஜாதி பேதங்களால் 35 தாளங்களும் கதிப்பேதத்தால் 175 தாளங்களும் ஆகிறது. இசை நன்கு வர அலங்காரங்களை சாதகம் செய்யவேண்டும். பொதுவாக மாணவமாணவிகளுக்கு அலங்காரம் மற்றும் வர்னம் இது பற்றி தெரியுமாதலால் இதனை அறிவது கஷ்டமில்லை. (எனது ஆய்வின் சிறப்பு விளக்கம்)

2. இதனை அடுத்து வர்னங்களை பற்றி தெரிந்து கொள்ளவேண்டியது. குருகுல பாடாந்தரம்

1. வர்னத்தின் அனுபல்லவி எது என்றால், 3 வது ஆவர்த்தம் என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

2. காலந்தள்ளிப் பாடுங்கள், என்பது சரண காலத்தை என்று பாடத்தெரிந்து கொள்ளவேண்டும்.

கீர்த்தனைகளில் ஒரு கீர்த்தனை என்ன ராகம் என்றும், எதன் ஜன்யம் என்றோ அல்லது மேளகர்த்தா என்றால் எத்தனையாவது மேளகர்த்தா என்றோ மனப்பாடம் ஆகியிருத்தல் வேண்டும். நிரவல் என்றால் என்ன? கற்பனாஸ்வரம் எங்கு போடபபடவேண்டும் என்று தெரிந்திருக்கவேண்டும். இப்பொழுது லயத்தை பற்றி பார்ப்போம். ஸ்ருதி மாத லயம்பிதா, ஸரஸ்வதி மாதா - குருப்ரும்மா லஷ்மி மாதா - குருர்விஷ்ணு பார்வதி மாதா - குரூதேவோமகேச்வர:

என்றதற்கு ஒப்பாக மூன்று மாதாவின் அருள் கடாக்ஷம் மூன்று பிதாவின் ஆசி அனுக்ரஹம் இல்லாவிட்டால் இசைஞானம் பெறமுடியாது. ஏனெனில் ஸரஸ்வதி மாதா கச்சபி வீணையையும், லக்ஷ்மி மாதா ஸாரங்கி வீணையும், பார்வதி மாதா ருத்திரிகை வீணையும் வாசித்து (இந்த பூவுலகில் விண்ணுலகில், பாதாள உலகம் மூன்று உலகத்திற்கு மாதாவானவர்கள்) நம்மை மோக்ஷமடைய இசை பாடினால்தான் மோக்ஷம் கிட்டும் என்ற நம்பிக்கையை ஊட்டும் வண்ணம் வீணையை வாசிக்கிறார்கள். இதனை நமக்கு அடைய சக்தி அருளை தருபவர்கள் ப்ரும்மா, விஷ்ணு, சிவன், ஆவார்கள். ஆகவே ஸ்ருதி லயத்தோடு ராக தாள பாவத்தோடு பாடி பரமனை அடைவோம் என்பதினாலேயே இந்த ஆய்வை தமிழில் எழுதி உள்ளேன். சாஸ்திரீய சங்கீதம் இசையின் ஓர் அங்கம் என்பதை உணர்ந்து கொள்ளவேண்டும். ஸ்ருதி பாட்டின் சுர நிலையை நிர்ணயிக்க குறிப்பதாகும்.

லயம் என்பது பாட்டின் காலப்ரமாணத்தை குறிக்கும்.

லயம் மூன்று வகைப்படும். அவை

| | | |
|---|---|---|
| விளம்பித | லயம் | சௌக்ககாலம் |
| மத்ய | லயம் | மத்யம காலம் |
| த்ருத | லயம் | துரிதகாலம் |

அதிநுட்பமான காலப்ரமாண வித்யாசங்களை குறிக்கும் பொருட்டு இம்மூன்று வித லயங்களில் ஒவ்வொன்றையும் மூன்று வகையாக பிரிக்கலாம். அவை

| | | |
|---|---|---|
| 1. விளம்பித | விளம்பித | அதிசௌககாலம் - ஸ்ரீரகுவர 2 களை |
| விளம்பித | மத்ய | சௌககாலம் - கொலுவை |
| விளம்பித | த்ருத | சுமார் சௌககாலம் - மோக்ஷமு |
| 2. மத்ய | விளம்பித | மத்யம காலத்தில் - ஸ்ரீரசாகர சௌக நடை |
| மத்ய | மத்ய | மத்யம காலநடை - பாலகனகமய |

| | | |
|---|---|---|
| மத்ய | த்ருத | மத்யமமானத்ருத லய நடை குருலேக எடுவண்டி |
| 3 த்ருத | விளம்பித | சுமார் துரித காலம் மருகேலரா |
| த்ருத | மத்ய | துரித காலம் நினுவினாநாமதெந்து |
| | | - உதாரணத்திற்கு ஸ்ரீதியாகப்ரும்ம கீர்த்தனைகள் |
| த்ருத | த்ருத | அதிதுரித காலம் மனவ்யாள, |

லயை என்பது பற்றி நான் ஏற்கனவே பல இடங்களில் குறிப்பிட்டுள்ளேன்.

விளம்பித, மத்ய, த்ருத மென்று லயை மூன்றாகும்.

விளம்பிதம் இரட்டித்து மத்யமென்றும் - விளம்பிதத்தை அடுத்து மத்யமமானகாலம்.

மத்யம் இரட்டித்து த்ருதமென்று சொல்லப்படுகிறது. மத்யமகாலத்தை அடுத்து துரித காலம்

மேலே சொன்ன ஷட் காலங்களில் முதலாம் இரண்டாம் காலங்களை விளம்ப காலமென்றும்

மூன்றாம் நான்காம் காலங்களை மத்திய காலமென்றும், ஐந்தாம் ஆறாம் காலங்களை த்ருதகாலம் என்றும் சொல்லப்படுகிறது. இதில் பிறகு யதிப்ரஸ்தாரத்தைப் பார்ப்போம்.

மாத்திரை

| | |
|---|---|
| 1/4 அதிசித்ரத்தை முதற்காலம் | |
| 1/2 அர்த்த சித்ரத்தை இரண்டாம் காலம் | விளம்பித மென்றும் |
| 1 சித்ரதரத்தை மூன்றாம் காலம் | |
| 2 சித்ரம் நான்காம் காலம் | மத்திய காலம் |
| 4 வார்த்திகத்தை ஐந்தாம் காலம் | த்ருத காலம் என்றும் கருதப்படுகிறது. |
| 8 தக்ஷணத்தை ஆறாங்காலம் | எனது சிறப்பு விளக்கம் |

யதி என்பது யதிப்ரஸ்தாரம் என்பது அணிகளாகும். ஆறுவகையாகும். 'பிபீலிகம் அல்லது சமம். விஷமம் ம்ருதங்கம், வேதமத்யமம், கோபுஸ்சம், ஸ்ரோதோவஹம் எனப்படும்.

க்ரஹம் (ஆர்) அல்லது எடுப்பு என்பது பற்றி பார்க்கவேண்டும்.

குரல் பாடி பின் தாளம் ஆரம்பிப்பது - அதீதம்

தாளம் போட்டு பின் பாட்டு ஆரம்பம் - அனாஹதம்

பாட்டும் தாளமும் சேர்ந்து ஆரம்பிப்பது - சமம்

இந்த மூன்றும் கலந்து வருவது - விஷமம் (அதிதம், அனாகதம், சமம்)

இம்மூன்றும் அல்லாதது விஷமம் என்றும் பலர் கூறுவர். அதீதம், அனாஹதம், விஷமம் இவை மூன்றுக்கும் பொதுவாய் உசி என்று பெயர்.

பாட்டுக்கு தாளம் முக்கியம். ஆகையால் அது பற்றி சிறிது பார்க்கவேண்டும். அவை 1 களை 2 களை நாலு களை என்று கூறுவர்.

## ஆதி தாளம்

| | |
|---|---|
| 1 களை என்பது | 1 தட்டு கொண்டது தாளத்தை தட்டும் லகுவை 1 தட்டாக எண்ணி போடுவது |
| 2 களை என்பது | 1 விளம்பித கால கீர்த்தனைகளை 2 தட்டுகளாக தட்டிப்பாடுவது அதாவது சதுஸ்ர லகு என்றால் 2 களைக்கு 1 லகுவில் உள்ள 1 தட்டு 3 விரல்களையும் இரண்டு இரண்டு முறையாகத் தட்டவேண்டும். |
| 4 களை என்பது | 1 லகுவில் உள்ள 1 தட்டு மூன்று விரல்களை, ஒவ்வொன்றையும் 4 தட்டு 4 தட்டுகளாக எண்ணிப்போடுவது இதனையே |

1 களை சவுக்கம், 2 களை சவுக்கம், நாலுகளை சவுக்கம் என்பர்.

*1 களை சவுக்கம் என்பது 1 தட்டு நாலு அக்ஷரம் 4 அக்ஷரம் கொண்ட மத்ய லய உ.ம்.பாலகனகமய உருப்படியாகும். 2 களை பாட்டு. 2 களை சவுக்கம் என்பது 2 தட்டு கொண்ட 8 அக்ஷர விளம்பித லய உருப்படியாகும். (உ.ம்.ஸ்ரீரகுவர)*

*4 களை சவுக்கம் என்பது பல்லவியை அமைத்து அழகாகப் பாடுவார்கள்.*

*வர்னங்கள் 2 காலங்களில் பாடும்போது நான்கு அக்ஷரத்தை விளம்பிதமாகக் கொண்டு 2 தட்டு தட்டிப்போடுவார்கள். அதன் இரண்டாம் காலத்தை 2 தட்டுதட்டி எட்டு அக்ஷரம் போட்டு பாடுவார்கள்.*

***இங்கு தானவர்னத்தைப் பற்றி பார்ப்போம்:-***

*வர்னத்தில் காலம் தள்ளி பாடிக்காட்டுவது 1, 2ம் காலம் பாடுவது. திஸ்ரநடை (ஆர்) திஸ்ரகதியில் பாடுவது பிராசின வழக்கம். வர்னத்தில் திஸ்ரகதி செய்வது சிறப்பு. சதுஸ்ரகதியில் பாடுவது என்பது 1, 2 காலம் செய்து காட்டுவது (முதலில் சொன்ன 4 அக்ஷரம் 8 அக்ஷரம்) போன்றவைகளாலும் தாள நடையில் அமைந்துள்ள வர்னம் தானவர்னம் எனப்படுகிறது. இந்த தான வர்னத்தில் காலம் செய்து பாடுதல் என்று கூறுவர். அது 1ம் காலம் 2ம் காலம் அதாவது விளம்பித 4 அக்ஷரம் த்ருத லயம் 8 அக்ஷரமாக 2ம் காலத்தை துரிதகதியில் பாடுவது ஆகும்.*

*காலம் 1காலம் 2 காலம் 3 காலம் 4*

*1 காலம் 1 அக்ஷரம்*

*2 காலம் 2 அக்ஷரம்*

*3ம் காலம் 4 அக்ஷரம்*

*4ம் காலம் 8 அக்ஷரம்* இந்த கணக்கில் இதிலுள்ள

*4ம் காலம் என்பது வர்னத்தில் 1ம் காலத்தின் 2ம் காலமாகப்பாடப்பட வேண்டும். 4ம் காலம் என்ற 8 அக்ஷரம் ஆனது வர்னத்தின் 1ம் காலத்தின் 2ம் காலமாகும். ஆகவே வர்னத்தின் 1ம் காலம் 4 அக்ஷரம் என்று கூறுகிறது. 4 அக்ஷரம் என்பது 1 மாத்திரை வர்னத்தின் 2ம் காலம் 8 அக்ஷரம் என்பது 2 மாத்திரை ஆகும்.*

*களைகளின் சேர்க்கையே கதியாகும். அது சதுஸ்ரகதி, திஸ்ரகதி, மின்ஸரகதி, கண்டகதி, சங்கீர்ணகதி என்று ஐந்து கதியாகும்.*

*கதி என்பது ஒவ்வொரு கதியின் அக்ஷர எண்ணிக்கையை கொண்டு 1 தட்டுக்கு அந்த கதியின் எண்ணிக்கையிருக்கவேண்டும். உதாரணத்திற்கு 'நீ வாடனேகான' த்யாகராஜக் க்ருதி சாரங்காராகம் சதுஸ்ரஜாதி, கண்டகதியாகும். ஏகதாளத்தில் பாடியுள்ளார்.*

*கண்டகதி என்பது தட்டுக்கு 5 அக்ஷரம் இதுபோல ஏகதாளத்தில் 1 தட்டும் 3 விரல் எண்ணிக்கைக்கும், 1 தட்டுக்கு தா, தகிட என்பதுபோல் போடவேண்டும்.*

*1 தட்டு 3 அக்ஷரத்திற்கான தகிட என்ற தட்டு மூன்று அக்ஷரத்திற்கு நிற்கும்படி தட்டவேண்டும்.*

***வீணையில் வாசிக்கும் முறை:-*** *சாதாரணமாக ஒரு சுரத்தை அடித்துப் பிடிக்கவேண்டும் என்றால் முதல் ஸ்வரத்தை விட்டு இரண்டாம் சுரத்தை தட்டிப் பேசவைக்கவேண்டும்.*

*1. சச,ரிரி, கக ஜண்டை வரிசையில் முதல் ச வை விட்டு இரண்டாம் ச வை தட்டி பேச வைக்கவேண்டும். ஒரு சுரத்தில் (ம) வில் (1) இழுத்துப்பிடித்து ம வரவேண்டும்.*

*2. அதுபோல் ஒரு சுரத்தை உதைத்தல் என்றால் கோர்வையாக ஒரு சுரத்தை அதன் இடநிலை விட சற்று கூடுதலாக காட்டவேண்டும் என்னும்போது உதைத்தல் அல்லது இருக்கவேண்டிய ச்ருதியை விட நுட்பஸ்ருதியை வைத்து இழுத்துப்பிடித்தல்.*

*3. ஒரு சுரத்தை ஒரே இடத்தில் குலுக்கி ஆட்டுவது. உ தாரணம் பாலகனமயவில் |தாதா| ஒரே |ராரா|*

***சுரத்தை 2 முறை வாசிக்க உலுக்குவதற்கு குலுக்கல் ஒரு சுரத்தை இழுத்துப்பிடிப்பது மோஹனத்தில் தைவதத்தில் தாரஸட்ஜத்தை பிடிப்பது இதனையேதான் பூர்வ மக்கள் ரசனை பொருட்டு ஒரு ஸ்தாயியில் 22 ஸ்ருதிகளை பிரித்து அவற்றில் இரண்டு ஸ்ருதி குறைத்து வீணையில் கமகமாய் வாசித்து வந்ததாக தமிழ் நூல்கள் கூறுகின்றன.***

ஒரு சுரத்தை இழுத்தல் என்பது மேலிருக்கும் சுரத்திலிருந்து கீழ் சுரத்திற்கு இழுத்துக் கொண்டு இறங்குவது. அதாவது பாவிலிருந்து (பா.ம) மவை இழுத்து பாம என்று வாசிப்பது. வீணையில் பாகுரமோ, விருத்தத்தை தாளமாலிகையாகவோ குறிப்பான ராகதாளத்தில் அமைத்துத் தெரிந்து கொண்டால்தான் வித்வாம்ஸினி என்ற நிலை கிடைக்கும். இம்மாதிரி அமைப்பதற்கு வர்னமெட்டு என்ற பெயர். இப்படியமைந்த பாட்டுக்களை சங்கதிபோட்டு பாட தெரிந்து கொள்ளவேண்டும். ஸ்வரபாடரீதி பழக்கத்தினாலேயே வாசித்து வாசித்து வரவேண்டும். வீணையில் முக்கியமாக ஸ்ருதி சேர்க்கத் தெரிந்திருக்கவேண்டும். ஸ்வரஸ்தானங்களை தெரிந்திருக்க வேண்டும். முக்கியமாக மெட்டுக்களில் பேசும் சுரம் சுத்தமான ஸ்தானத்தை காட்டாது. ஆகவே முந்தின ஸ்வரத்தில் பிந்திய ஸ்வரத்தை பிடிக்கத் தெள்ளத் தெளிவாக தெரிந்து வைத்துக்கொள்ள வேண்டும். மேலும் கூடுமானவரை மேளம் செய்யத்தெரிந்து கொள்ளவேண்டும். அப்பொழுது மேளம் செய்யத் தெரிந்ததால் சுர ஞான தெளிவாக வாசிக்கும் நிலை வரும். ஏனெனில் சாஸ்த்ரீய சங்கீதத்திற்கு சாஸ்திரம் எப்படி முக்கியமோ அப்படி வீணையில் வாசிக்க ஸங்கீத சாஸ்த்ர ஞானம் முக்கியம். ஸங்கீத ஸாஸ்த்ர ஞானமுஸாருப்யஸௌள என்று ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடுகிறார். வீணையோடு மாணாக்கர்களுக்கு கீர்த்தனையை போதிப்பார் என்பதிலிருந்து நாதோபாஸனைக்கு வீணைதான் முக்கிய அம்சம் என்றுதெளிவுபடுத்தியவர் ஸ்ரீத்யாகப்ரும்மம் நிற்க. எனக்கு தெரிந்த மேளம் செய்யும் வகையை எழுதி உள்ளேன். அதை புரிந்து கொண்டும் செய்யலாம்.

வீணைமேளம் செய்வதை ஒரு சிறுகுறிப்பாக எழுதியுள்ளேன். தந்தியை 7ஐயும் சுருதி சேர்த்துக் கொண்டு தாளசாரனையை தட்டி முதலில் ஸதுஸ்ருதி ரிஷபம், அடுத்து சுத்த ரிஷபம், அடுத்து அந்த்ரகாந்தாரம், அடுத்து சாதாரண காந்தாரம், மத்யமம், பஞ்சமம், பிரதி மத்யமம் வைத்த பின் தாளத்தை மத்யம சுருதி பண்ணிவிட்டு சுத்த மத்யமத்தை ஸவாகக் கொண்டு ஸரிக என்று தந்தியில் வாசித்து பேசிப் பார்த்தால் அந்த்ர காந்தாரம் ஸப்தம் கேட்கும் இடம் சதுஸ்ருதி தைவதம் அடுத்து கைசிக நிஷாதம் (மத்யமத்திலிருந்து ஸரிகம என்று வாசிக்கும் சப்தம் வரக்கூடிய இடம் கைசிக நிஷாதம், மத்யமஸ்ருதிகைசிக நிஷாதத்துடன் முடிகிறது. கைசிக நிஷாதத்திற்கு பிறகு ஸட்ஜம் வைக்கவேண்டும். ஸட்ஜம் வைத்த பிறகு தாரஸ்தாயி சதுஸ்ருதி ரிஷபம் வைக்கவேண்டும். அடுத்து சுத்த ரிஷபம் வைக்கவேண்டும். முன்சொன்னபடி செய்து அந்த்ரகாந்தாரம் வைக்கவேண்டும். அடுத்து சாதாரண காந்தாரம் வைக்கவேண்டும். சுத்த மத்யமம், பஞ்சமம், பிரதிமத்யமம் பின் அதிதாரஸ்தாயி ஸட்ஜம் வைத்த பிறகு 4 கட்டைகள் சுத்த தைவதம், சதுஸ்ருதி தைவதம், கைசிகம், காகலி நிஷாதம் வைக்க மேளம் ஸம்பூர்ணமாக பூர்த்தியடையும். பின் மெட்டுக்களின் இடைவெளியை இம்மாதிரியாக சீவி எடுத்து விடவேண்டும். இப்பொழுது முக்கியமாக பார்க்கவேண்டியது மேளம் குழியில்லாதபடி சீவ வேண்டும். அப்பொழுதுதான் ஒலி நிலைத்து நீண்ட நேரம் ஒலிக்கும். வீணையோடு சாஸ்த்ரீய சங்கீதம் நிறைவு பெறுகிறது.

<u>சாஸ்த்ரீய சங்கீதத்தின் கடைசி பகுதி</u> - ஆய்வின் முக்கியமான பகுதி

எனது தாயார் தேடி தேடித் தந்த குறிப்புகளிலிருந்து (பல மன்னர்கள் திருவரங்க பெருமானை ஆராதித்து இசையை வளர்த்தார்கள் என்பது கோவில் புராணம் கூறுகிறது.) 24 வது ஸ்ருதி கோவிந்தா என்பது விமான லக்ஷணப்படி எடுத்துக் கொண்டுள்ளேன். இந்த திருவரங்க விமானத்தின் சிகரத்தில் ஸர்வஜகத்காரணமாயும் ஓம்கார ரூபமுள்ள சரஸ்வதி உள்ளார் என்று ஸ்ரீரங்கபுராணம் விவரிக்கிறது. இங்கு ப்ரும்மா நித்யவாஸம் செய்கிறார். இந்த புராணத்தை நாரதருக்கு ருத்ரன் கூறுகிறார். அரங்கனைப்பற்றி, அவனது பெருமையை பற்றி இங்கு லக்ஷ்மி நாராயணனின் வலமார்பில் வாழ்கின்றார். இங்கு காயத்ரீ வாஸம் செய்கிறாள் பிரும்மா. விஷ்ணு, சிவன், ஸரஸ்வதி, லக்ஷ்மி, காயத்ரீ வாஸம் செய்கிறார்கள். இந்த பெண் தெய்வங்கள் மூவரும் யாழை வாசிக்கிறார்கள். மேலும் சந்தரபுஷ்கரணி தீர்த்தத்திற்கு கிழக்கில் பில்வதீர்த்தம் ஆக்னேயதிக்கில் ஜம்புதீர்த்தம், தெற்கில் அசவத்தீர்த்தம், தென் மேற்கு மூலையில் பாலாச தீர்த்தம் (இதுவரை சொன்ன தீர்த்தங்களில் பில்வதீர்த்தத்தின் தேவதை <u>அச்சுதன்,</u> ஜம்புதீர்த்தின் அதிதேவதை <u>அனந்தன்</u>, அச்வத் தீர்த்தத்திற்கு தீர்த்ததேவதை ஹரிக்கு <u>கோவிந்தன்</u> என்று பெயர். இதையேதான் இசைக்கு 23, 24 வது ஸ்ருதியாக எடுத்துள்ளேன். 24வது ஸ்ருதி <u>கோவிந்தா</u> ஆகும். 23, 24 ஸ்தானம், அச்சுதஸட்ஜம், <u>கோவிந்தா</u> என்ற தாரஸட்ஜம் ஆகும். இது எனது ஆய்வின் கண்டுபிடிப்பு 24 ஸ்ருதிகள் என்பதுபற்றி ஆகும். இப்படிப்பட்ட இசைக்காதாரமான கோயில் ஸாஸ்த்ரங்கொண்ட இசைதத்துவம் கொண்ட கோயில் திருவரங்கமாகும். வாஸுதேவமந்த்ரம் நாராயணமந்த்ரம் சொல்லி பாஞ்சராத்ர ஆகமவிதிப்படி திரவாராதனம் செய்யப்படும் கோயில் இந்த திருவரங்கம். இந்த திருவரங்கத்தின் மகிமையை அறிந்த ஸ்ரீத்யாகப்ரும்மம் இசைக்கு ஆதாரமான கோயில் திருவரங்கம் தான் என்று பாடியுள்ளார் என்பது எனது கருத்து. எனது தாயார் கொடுத்த அறிவுரைப்படி சாஸ்த்ரீய சங்கீதம் கர்னாடக ஸங்கீதம் புராண இசை, தமிழிசை திருவரங்கமே என்று கூறி சாஸ்த்ரீய சங்கீத தொடரை முடிவுக்கு கொணருகிறேன்.







மானுடல்யாழை ஒத்தது
என்றவிளக்கப்படம்

## சங்கீத சாஸ்த்ரம், சாஸ்த்ரீய சங்கீதம்
## முடிவுரை

நான் எடுத்துக்கொண்ட ஆய்வில் வேத, சாஸ்த்ர, புராண இதிஹாஸ, கர்னாடக, ஹிந்துஸ்தானி, இவை அனைத்துக்கும் மேலே தலையாய தலைப்பு தமிழிசை என்பதுதான் என் ஆய்வின் முக்கிய நோக்கம். அதில் ஸ்ரீத்யாகப்ரும்மம் பற்றியும், அவரது இசையில் தத்துவம் என்ன, அவருடைய இசை எப்படிப்பட்டது என்றெல்லாம் தொடுத்து தற்போது முடியும் நிலைக்கு வந்துள்ளேன். தமிழிசை 5000 ஆண்டுகளாக இருந்தது என்பதற்கு திருவரங்கமே ஆதாரம். இங்கு இயல், இசை, நாடகம், அரங்கேறியது என்றால் மிகையாகாது. இங்கு கம்பராமாயணம் அரங்கேறியது த்யாகப்ரும்மத்தின் தமிழிசையின் தத்துவத்தினால் பிறந்த கீர்த்தனைகள் அரங்களின் மேல் பாடப்பட்டுள்ளது. இந்த அரங்கனை ஆழ்வாராதிகள் தமிழ்பாசுரம்பாடி மகிழ்வித்துள்ளார்கள். இங்கு சாஸ்த்ரோத்தமான இசைக்கு, கர்னாடக இசைக்கு, தமிழிசைக்கு, இயலுக்கு, இசைக்கு, நாடகத்திற்கு, நாட்டியத்திற்கு போற்றி வளர்த்த மன்னன் அரங்கன் ஆவார். அவரை ரங்கராஜா என்றும், கோவிந்தா என்றும் கூறி ஆர்ப்பரிக்கிறார்கள். பக்தியினால் இந்த அரங்கனிடமிருந்து தான் இசைக்கு ஆதாரமான ஸ்ருதி உள்ளது என்பதை நான் இந்த ஆய்வில் உறுதியிட்டு கூறியுள்ளேன். உவமையாக வேறு எந்த இடத்தையும் ஒப்பிட முடியாத இசைக்காதாரமான கோயில் திருவரங்கம் என்றால் மிகையாகாது. இங்குள்ள காயத்ரீயின் 24 அக்ஷரம், ரிக், யஜுர், ஸாம வேதங்களின் ஸாஸ்த்ரோத்தமான ஆகம விஷயங்களும், இசைக்கு ஆதாரமான கோயில் என்பதற்கு பேரீதாடனமும் ஆதாரம் என்று மெய்பித்துள்ளேன். எல்லோரும் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் மிடற்றால் குரல், நாவினால் துத்தம் அண்ணத்தால் கைக்கிளை, சிரத்தால் உழை, நெற்றியால் இளி, நெஞ்சால் விளரி, மூக்கால் தாரம் என்று ஸரிகமபதநி யை சொன்னவர்கள் ஸ்தாயியைப் பற்றி திட்டவட்டமாக ஏன் கூறவில்லை? இங்கு காயத்ரீயின் 24 அக்ஷரத்திலிருந்து 24 ஸ்வரம் என்பதை நான் நிரூபித்துள்ளேன். இதுவே இந்த ஆய்வு பகுதிக்கான முடிவுரை.

மானுடலின் தத்துவத்தை அடுத்து நமது பூத உடல் திருநாடு என்னும் ஸ்ரீவைகுண்டம் சொல்லுகிறது. இது இந்த பூ உலகில் இல்லை. இது வைணவர்களுக்கு லக்ஷ்யமான மோக்ஷ நிலையாகும். இதனை பரமபதம் அடைவது என்று கூறுவார்கள். எம்பெருமானின் பரதத்துவம் விளங்கும் இடம் இங்கு ஜீவாத்மாக்கள் பகவானை போலவே ஸ்வரூபம் பெற்று அவருடன் இரண்டர கலவாமல் அவனுக்கு கைங்கர்யம் செய்வார்கள். பரமபதநாதன் வீற்றிருந்த திருக்கோலம் தெற்கே திருமக மண்டலம் பெரிய பிராட்டி, விரஜா நதி, அயரமபுஷ்கரணி, அநந்தாங்க விமானம், இப்படிப்பட்ட வைகுண்டம் பூலோக வைகுண்டம் என்பதும் திருவரங்கமாய் திகழ்கிறது. இந்த பூலோக வைகுண்டத்தை ஒரங்கசாயி என்று ஸ்ரீத்யாகப்ரும்மம் புகழ்ந்து பாடுகின்றார். ஸ்ரீரங்க பஞ்சரத்னத்தில் அஷ்டகம் அக்ஷரத்தை கொண்டும் அஷ்டவசுக்கள், அஷ்டமஹரிஷிகள், அஷ்டாவதானம், அஷ்டலக்ஷ்மி, அஷ்டமேரு, அஷ்டதிக்பாலர்கள், அஷ்டருது, அஷ்டமிதிதி அஷ்டபந்தனம், அஷ்டத்திக்கு, அஷ்டபதி, அஷ்டாங்க விமானம் எட்டின் கணக்கிலேயே எனது ஆய்வாக தொகுத்துள்ளேன். இந்த எட்டுக்கு பொருந்தகூடிய இசை கொண்ட கோயில் இயல், இசை, நாடகம் கொண்ட கோயில் வைகுண்டத்தை தரணியில் நடத்திக்காட்டி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக ஒவ்வொரு வருஷமும் வைபோகங்களை விடாது கொண்டாடி வேத, சாஸ்திரபுரான இதிஹாஸங்களை உரைத்து இயல்பேசி, இசைபாடி, நாடகமாடி பெருமையோடு விளங்கும் கோயில் திருவரங்கமே என்ற என் ஆய்வு முற்று பெறுகிறது. இதனை அடுத்து ஒரு சிறுகுறிப்பு மனிதனின் உடல் எண் சாண் உடம்பு என்பார்கள். மனிதனை எண்சாண் உடம்பு யாழின் அமைப்பை கொண்டதாக உள்ளது. இந்த மனிதனின் உடலில் தண்டுவடமும் யாழின் தண்டுவடமும் தண்டின் 24 மெட்டுபோல் ஒன்றாக அமைப்பு உள்ளதால் மனிதன் காயத்ரீயின் 24 அக்ஷரத்தை மிகத் தெளிவாக 24 ஸ்ருதியாக கொண்டு இறைவனை ஸ்தோத்தரிக்க அவரது மானுடல் அமைந்துள்ளது. இந்த மானுடலிலிருந்தே மனிதன் தன்னை கட்டுப்படுத்திக் கொண்டு இசையின் தத்துவத்தை அறிந்து தெய்வாம்ஸத்தை பெறலாம். மேலும் மனிதனின் உடல் அமைப்பு இசைக்கு பொருத்தமானதாக அமைந்துள்ளதால் தெய்வாம்ஸத்தை இசை மூலம் எளிதில் பெற சாத்தியமான கருவியாக மானுடல் அமைந்திருக்கிறது என்பது எனது கருத்து. மனிதனின் தலை யாழின் குடம் போல் அமைந்துள்ளது. யாழின் நரம்பு மனிதனின் நரம்பு மண்டலம் போல் அமைந்துள்ளது. இதனால் மனிதன் யாழை மீட்டி இசையை பாட அவனுக்கு வரப்பிரசாதமாக அமைந்துள்ளது. மேலும் 108, 1008 வர்ம புள்ளி ஸ்தானங்களில் காயத்ரீ மகா மந்த்ரத்தை 108, 1008 என்று கணக்கிட்டு ஜபிக்கும்பொழுது அவனது வர்மஸ்தானங்களின் இயக்கத்தால் சரியான ஆத்ம த்யான நிலையை அடைய அவனுக்கு வழிவகை செய்கிறது. மேலும் தசவித கமகங்களை அவனது உடலிலேயே வரப்ரசாதமாக கிடைக்கப்பெற்றான். மனிதன் இந்த தசவித கமகங்களினால் இசையை சரியான முறையில் பாடி நாதோ பாஸனை செய்து

எம்மதத்தினரும் சம்மதத்தோடு மோக்ஷநிலையை அடையலாம். அதற்கு இசை ஒரு கருவியாக மானுடலில் அமைய பெற்றது என்பது எனதுகருத்து. ஆகவே மோக்ஷ நிலையை அடைய நாம் எங்கும் தேடி செல்லவேண்டாம். நமது உடலின் அமைப்பின்படியே தெய்வீகத்தை அடைய நமது உடல் நமக்கு ஒரு கருவியாக சாதனமாக அமைந்துவிடுகிறது. இதனை படைத்த இறைவனுக்கு நன்றி செலுத்துவோமாக.

## மானுடலின் வீணை தத்துவம்

*எனது முக்ய ஆய்வுப்பகுதி (படம்) விளக்கம் தரப்பட்டுள்ளது.*

*மூலாதாரம் ஸ்வாதிஷ்டானம் சேர்ந்தது அக்னி கண்டம். மணிபூரகமும் அநாகதமும் சேர்ந்து சூரியகண்டம். அதற்கு மேல் விஷ்ணுக்ரந்தி முடிச்சு உள்ளது. விசுத்தியும் ஆக்ஞையும் சேர்ந்தது ஸோம கண்டம். அதற்கு மேல் ருத்கந்தி முடிச்சுள்ளது. மூலாதாரத்தில் இருக்கும் அக்னியானது 'ரா' பீஜத்தையும் குறிக்கிறது. சஹஸ்ராரத்தில் இருக்கும் பிராணன் 'மா' பீஜத்தை குறிக்கிறது. மூலாதாரத்திலிருக்கும் அக்னி பிராணனை சந்திக்க மேலெழும்பிச்சென்று அதனுடன் கலத்தல் தான் 'ராம நாம' என்னும் தாரகமந்த்ர பிறப்பதாகும். இதனால் ஜீவாத்மா பரமாத்மாவுடன் கலப்பதற்கு (பயமற்றபடி) சாதகமாகிறது.*

*மேருதண்டம் என்றும் முதுகெலும்பிற்குள் ஸுஷும்னா என்ற நாடி இருக்கிறது. இதனடியில் மூலாதார சக்ரமும் அதற்கு நாலுவிரக்கடைக்கு மேல் ஸ்வாதிஷ்டானமும் அதற்கு மேல் தொப்புளுக்கு எதிரில் மணிபூரகம் இதயத்துக்குகெதிரில் அநாகதமும் கண்டத்துக்கெதிரில் விசுத்தியும், புருவமத்தியில் அக்ஞையும், சிரசின் மேல் ஸஹஸ்ரார சக்ரமும் உள்ளன. இவை யோகிகளுக்கு ப்ரத்யக்ஷம்.*

| | | | |
|---|---|---|---|
| 1. நமச்சிவாயத்தில் | நகாரம் ஸ்வாதிஷ்டானத்தில் | - கால்கள் | கருணாமிர்த சாகரம் |
| 2. இரண்டாவது எழுத்து | மகாரம் மணிபூரகத்தில் | - வயிறாகவும் | |
| 3. சிகாரம்மாகிய மூன்று | சிகாரம் அனாகத சக்ரத்தில் | - இரண்டு கைகளாகவும் இரத்த சயமாகவும் | |
| 4. வகாரமாகிய நாலாவது எழுத்து | வகாரம் விசுத்திஸ்தானத்தில் | - சுவாசாசயமாகவும் கழுத்தாகவும் | |
| 5. யகாரமாகிய | யகாரம் ஆக்கினாஸ்தானத்தில் | - ஓம்காரமாகவும் விளங்குகிறது. | |

- சூடாமணி ஆய்வுக்குறிப்பு

| | | |
|---|---|---|
| மூலாதாரமும் ஸ்வாதிஷ்டானமும் சேர்ந்து அக்னி கண்டம் - மூலாதாரம் | | 'ரா' பீஜம் |
| சஹஸ்ராரத்திலிருக்கும் ப்ராணன் | | 'மா' பீஜம் |

இதனைத்தான் ஓம் நமோ நாராயணாய - ஓம் நமசிவாய இந்த இரண்டு மஹா மந்த்ரங்களின் 'ராவும் +மாவும்' சேர்ந்ததே ராமநாமம் ஆயிற்று என்று பெரியவர்கள் கூறினார்கள். இப்பொழுது ரா பீஜம் + மா பீஜம் சேர்ந்து ராமநாமம். ராமநாம தாரக மந்த்ரம்.

| | | |
|---|---|---|
| நாதம் | - | ஸங்கீதத்தின் ஆதாரம் நாதம் |
| ஆஹத | - | மனிதனுடைய முயற்சியினாலேயே கேட்கப்படும் நாதம் ஆஹத நாதம் |
| அனாஹத | - | மனிதனுடைய முயற்சியின்றி இயற்கையிலேயே கேட்கப்படும் நாதம் அநாஹத நாதம் |
| ஆஹதம் | - | நாம் கேட்கும் பாடும் வாத்யத்தில் வாசிக்கும் ஸங்கீதம் முதலியவை ஆஹத நாதத்தை சேரும். |
| அனாஹதம் | - | அனாஹத நாதத்தை யோகிகளால் மட்டுமே உணரமுடியும். வானமண்டலத்தினின்றும் தனித்து உற்பத்தியாகும் நாதம், நம்முடைய தேகத்தில் மூலாதாரம் என்னும் ஸ்தானத்தில் உற்பத்தியாகும் நாதமும் அநாஹத நாதம் பிரிவைச் சேர்ந்தது. |
| ஆஹதநாதத்தை உணர்த்த | - | ஆயிரம் ஆயிரம் உருப்படிகளை இயற்றி உள்ளார் ஸ்ரீத்யாகப்ருமமம். |
| அனாஹத நாதத்தை உணர்த்த | - | தனது அனுபவத்தை ஸ்வரராகஸுதாவில் கூறியுள்ளார் ஸ்ரீத்யாகப்ருமமம். |

| | | |
|---|---|---|
| நாதம் | - | நாதத்தை உபாஸிப்பதால் நாதத்தின் ஸ்வரூபிகளான பிரம்மா, விஷ்ணு, சிவன், மூவரை உபாஸித்ததாகும். |
| அனுஷ்டானத்தில் | - | அனுஷ்டானத்தில் ஹ்ருதயத்தில் உண்டாகும் நாதம் மந்த்ரம் என்றும், கண்டத்தில் உண்டாகும் நாதம் மத்யமம் என்றும், சிரஸில் உண்டாகும் நாதம் தாரம் என்றும் சொல்லப்படுகிறது. |

<u>ராமநாமம் தாரக மந்த்ரம்</u>

அஷ்டகம் எனப்படுவது 8 அக்ஷரம் இது எண்சாண் உடம்பை குறிக்கிறது. நமது உடலிலேயே சதா ஓம்காரம் கடல் அலை ஒலி போல் ஒலித்துக் கொண்டிருக்கிறது. ஆகவே எட்டுதான் இசைக்கு இலக்கணம், கணிதம், கோட்பாடு ஆகும். மேலும் ப்ரபந்தங்கள் என்றாலேயே நாலாயிரத் திவ்யப்ரபந்தம், இவை அஷ்டாக்ஷரனை, நாராயணனை பாடும் பாசுரங்கள். இதற்கு அஷ்டகம் தான் தாள வகையாக இருக்கவேண்டும் என்று எனது தாயார் எட்டை வலியுறுத்தி பாசுரம் அனைத்தையும் ஆதிதாளத்தில் அமைத்துள்ளார். மேலும் ஸ்ரீரங்கத்தைப்பற்றி ருத்திரன் உரைப்பதாக ஸ்ரீரங்க மஹாத்மியம் கூறுகிறது. அஷ்டாக்ஷரனாக ஸ்ரீமந்நாராயணன் இசைக்கு அதிபதி, பஞ்சாட்சரன் ருத்ரனும் இசைக்கு ஆதாரமானவர், ஆக இந்த அஷ்டாக்ஷரனும் பஞ்சாட்ரனும் சேர்ந்தாலே ஒழிய ராமநாமம் பிறக்காது. ஆகவே தான் மஹாவிஷ்ணுப் பற்றி ருத்திரன் உரைப்பதாக ஸ்ரீரங்க மஹாத்மியம் கூறுகிறது. இந்த நமோநாராயணாய என்பதும் நமச்சிவாய என்பதும் சேர்ந்து நாராயணாவில் ராவும் நமச்சிவாயத்தில் மாவும் சேர்ந்த ராமநாமம் ஆயிற்று என்று கூறப்படுகிறது. இது பற்றி விரிவான கருத்தைக் கூறியுள்ளேன். இதற்கான வரைபடம் வரைந்து விளக்கி உள்ளேன். ஆக இசைப்பற்றி அனைத்து விவரத்தையும் அளித்துள்ளேன். நமச்சிவாயத்தில் ஓம்காரம் ஸ்வாதிஷ்டானத்தில் கால்கள்

<u>அபிரஹாம் பண்டிதர் குறிப்பு</u>

2. இராண்டாவதுஎழுத்து மணி பூரகத்தில் - வயிறுக்காகவும் (மகாரத்தை)

3. சிகாரமாகிற மூன்றாவது எழுத்து அநாகத சக்ரத்தில் இரண்டு கைகளாகவும், இரத்த சயமாகவும்.

4. விசுத்திஸ்தானத்தில் நாலாவது எழுத்தாகிய வகாரத்தை சுவாசா சயமாகவும், கழுத்தாகவும்.

5. ஆக்கினாஸ்தானத்தில் ய காரத்தை எழுத அது ஓங்காரமாகவும் விளங்குகிறது.

ஒரு மனுஷ சரீரத்தின் அமைப்பையும் அங்கங்களையும் காட்டிக் கொண்டிருக்கும் ஆதிஸ்தானமாகிய மேல் முக்கோணத்தில் விளங்கும் ஓம்கார வடிவம் <u>சிரசையும்</u> கீழ் முகம் நோக்கிய முக்கோணமாய் விளங்கும் மூலாதாரத்தில் ஓம்கார வடிவம் பிரஜாபதியையும் குறிக்கும். இங்கு முக்கியமாய் கவனிக்கவேண்டியது இப்படி ஸ்தூல சூட்சம் காரணம் என்றும் மூன்று வழியிலும் விளங்கி நிற்கும் ஓம் என்ற அக்ஷரமும் அது விளங்கி நிற்கும் சரீரமும் ஐந்து அக்ஷரங்களினால் சரீரத்தில் நமச்சிவய என்பது எப்படி உள்ளது என்று விளக்கப்பட்டுள்ளது. இதன்படியே நமோநாராயணாய என்று குறித்து ராமநாமம் எப்படி இடம் பெற்றது என்பதை நாமே உணரலாம். இப்படிப்பட்ட ராமநாமத்தை ஜபித்து மேலான மோக்ஷத்தை அடைந்தவர் நாதயோகி, நாதப்ரும்மம் ஸ்ரீத்யாகப்ரும்மம்.

தமிழிசையே தமிழ்நாட்டின் இசை, அதுவே முதன்மையானது வரலாறு கண்ட பாஷை தமிழே.

| | | | |
|---|---|---|---|
| ஸட்ஜம் | ஆதாரஸ்தானம் | ஆதாரஸ்தாயி | ஓம் - மிடறு - ஸ - குரல் |
| ரிஷபம் | இரண்டாவதுஸ்தானம் | இரண்டாம் ஸ்ருதி. | |
| | | இரண்டு பிரிவு ப்ரக்ருதி விக்ருதி | நாவு - ரி - துத்தம் |
| காந்தாரம் | மூன்றாம் ஸ்தானம் | கண்டத்தில் - அண்ணம் | - க- கைக்கிளை - |
| மத்யமம் | நான்காம் ஸ்தானம் வேதம் நான்கு ருக், யஸுர், சாம அதர்வண | அ.உ.ம.ஓம் மத்ய ஒலி அச்சுத மத்யமம் | சிரம் - ம - உழை |

| | | | |
|---|---|---|---|
| பஞ்சமம் | 5 ம் ஸ்தானம் பஞ்சபூதங்கள் ஆதிசேஷனிடம் நாராயணனிடம் ஒடுக்கம் | பிருதிவி. அப்பு, தேயு, வாயு ஆகாசம், 5வருக்கு அருள் செய்த பெருமாள் | நெற்றி - ப - இளி |
| தைவதம் | 6ம் ஸ்தானம் ஆறுசாஸ்திரங்கள் | மேளராகத்தில் 12 சக்கரத்தில் சங்கமம் ராகங்கள் 6 | நெஞ்சு - த - விளரி |
| நிஷாதம் | ஸப்தஸ்தானம் 7 ஸ்வரங்கள் ஸரிகமபதநி | | மூக்கால் - நி - தாரம் |
| தாரஸட்ஜம் | எட்டு ஸ்தானம் | எட்டுஸ்வரங்கள் | |
| | அஷ்டகம் | ஸரிகமபதநிஸ் | |
| | நாராயணன் அஷ்டாக்ஷரன் | மேளராகம் மானுடம்பு | அஷ்டாக்ஷர மந்த்ரம் - ஸ் - தாரஸ்தாயி |
| | | யாழின் தத்துவம் ஒன்றே | அஷ்டாக்ஷரன் கோவிந்தா ஸட்ஜம் |

ஆக ஓம் என்ற எழுத்தும் தமிழ் ஸரிகமபதநி தமிழ் கசடதபற தமிழ் எழுத்து, குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் இவை தமிழிசை நூல்களில் வரும் தமிழிசை பெயர்கள். ஆகவே தமிழிசையே தரணிபோற்றும் இசை. இந்த இசையை ராஜாவான அணி அரங்கன் ரங்கராஜன் என்பவன், கோவிந்தா என்பவன் தமிழ் பாசுரங்களை கேட்டு மகிழ்ந்து திராவிட வேதம் முன்னே செல்ல ஆரிய வேதம் பின் தொடர அணி அரங்கன் திருவீதி உலா வருகிறான். தமிழுக்கே அவன் சதஸில் முதன்மையான ஸ்தானம் தரப்படுகிறது. அரங்கன் மூச்சே தமிழ் தமிழ் தமிழ்.

## மனம்

காயேன வாசா மன ஸேந்த்ரியைர்வா - விஷ்ணு ஸஹஸ்ர நாமம் 33

சரீரத்தாலோ வாக்காலோ மனத்தாலோ கருமேந்த்ரியங்களாலோ, ஞானேந்த்ரியங்களாலோ இயற்கையின் இயக்கத்தாலோ எது எதை செய்கிறேனோ அது எல்லாவற்றையும் பரமபுருஷனாகிய நாராயணனுக்கே என்று ஸமர்ப்பிக்கின்றேன் என்று விஷ்ணு ஸஹஸ்நாமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் இயல், இசை, நாட்டியம், நாடகம் எது வழியேனும் கடவுளை தோத்தரிக்கலாம். சித்தரிக்கலாம். த்யானிக்கலாம். இவை ஒன்றோடொன்று தொடர்புடையது ஆகும். நல்ல இசையோடு நாட்டியமாடி தெய்வாம்ஸத்தை கூறுபவர்களே சங்கீத விதூஷக விதூஷகி சங்கீத கலைஞர்கள் என்பர். நாடகத்தை போட்டு அதன் மூலம் கடவுளர்களின் பெருமையை காட்டுவார்கள். இவர்களை நாடக நடிகர் நடிகையர் என்பர். பொதுவாக முன்காலத்தில் இசையோடு கூடிய பாசுரங்களை அபிநயித்து கடவுளை நீ அந்த அவதாரத்தில் அப்படியிருந்தாய், இந்த அவதாரத்தில் இப்படியிருந்தாய் என்று அபிநயித்து காட்டுவார்கள். இந்த நிகழ்ச்சி கோயிலில் திருவிழா காலங்களில் நடக்கும். இதுவே திருவரங்கம் கோயிலின் மார்கழி மாதம் நடக்கும் நிகழ்ச்சியாகும். இந்த நிகழ்ச்சி மூலம் மேற்சொன்னபடி எல்லாம் அந்த பரமபுருஷனாகிய நாராயணனுக்கே தனது பக்தியை அர்ப்பணிக்கின்றேன் என்று இயல், இசை, நாடக மூலம் தெளிவுபடுத்துவர் அடியார்கள் என்று புராணம் கூறுகிறது. இந்த விதமாக மனம் தெய்வாம்ஸத்தை நினைக்க வழிகோலுகிறது தமிழிசையோடு கூடிய இயல், இசை, நாட்டியம் என்று தீர்மானிக்கலாம்.

## மனத்தின் தத்துவம்

ப்ரம்மத்தின் ஸ்பரிசத்தினால் மனமானது ப்ரம்மமயமாகிவிடுகிறது. சதாகாலமும் இடகலை பிங்கலை என்ற (சந்திர நாடி சூரிய நாடி) இரு மூக்குத் துவாரங்கள் வழியே ப்ராண வாயு ஓடி மனத்தை அலைக்கழிக்கிறது. ரேசகம், பூரகம், கும்பகம் என்று ப்ராணாயாமத்தின் மூன்று நிலைகள். ரேசகம் என்றால் சுவாசத்தை நாசி வழியே வெளியே விடுதல், பூரகம் என்றால் சுவாசத்தை நாசி வழியே உள்ளுக்கிழுத்தல். கும்பகம் என்றால் இழுத்த சுவாசத்தை மந்திர பூர்வமாக வயிற்றில் நிறுத்துதல். இப்படி பிராணாயாமம்

செய்யும் போது யோகி (சீறும் சர்ப்பத்தை கட்டுப்படுத்துவது போல்) பழக்கத்தினால் பிராணவாயுவை காயத்ரீ மந்த்ரபூர்வமாக வயிற்றில் நிறுத்துகிறான். இக்கும்பகம் (நிறுத்துவது நாளடைவில் அதிகரித்து அதிகரித்து குண்டலினி எனப்படும் யோகசக்தி மூலாதாரம் என்ற கீழ் நிலையிலிருந்து உயரிய (ஸஹஸ்ராரம்) நிலைக்கு சுழுமுனை என்ற நரம்புத் தண்டுக்கு (ஸ்பைனல் கனால்) ஓடும் வழியே சிரஸை (தலையை) அடைகிறது. அப்போது ஜீவாத்மா பரமாத்மா ஐக்யபாவம் ஏற்பட்டு அவ்வுத்தமயோகி சிவன் வேறு ஜீவன் வேறு என்னாது (ஸமாதி) ஒன்றிய உயர்நிலையை அடைகிறான். அப்போது அவனுக்கு புண்ணிய பாவகர்மாக்கள் நசித்துதான் கர்த்தா என்ற எண்ணமே இல்லாது காம அஹங்காராதி விஷயங்களில் இருப்பவன் போல் தோன்றினாலும் இல்லாமல் இருக்கிறான். இப்படிப்பட்ட ஸமாதி நிலையை அடைந்தவர்கள் ப்ரம்மயோகிப்ரம்ம ஞானி ஆகிறார்கள். இப்படிப்பட்ட ப்ராணாயாமத்திற்கு 'காயத்ரீயே அளவு கோலாகவும், பரிசுத்தப்படுத்தி ஜீவனை குண்டலினி சக்தி மேலே எழும்ப காரணமாயும் உள்ளது. இப்படிப்பட்ட காயத்ரீ மந்த்ரத்தை சொல்லுபவர்கள் ஜீவாத்மா பரிசுத்தமடைந்து அவர்களை எல்லாமுறையிலும் முன்னேறவும் உதவுகிறது காயத்ரீ மந்த்ரம்.

மனத்தின் தத்துவத்தை தொடர்ந்து நாதத்தால் மனம் லயிக்கிறது. நாதம் அதன் முக்கியத்தும் இரண்டு வகை ஆஹதம், அனாகஹதம் யோகிகளே கேட்கக்கூடியது. அப்படி என்றால் மானிடர்களாகிய எல்லாருமே யோகிகள் ஆகிவிடமுடியாது. ஆகவே நாதத்தோடு கூடிய இசையான ஆகதமுறைப்படி இறைவனை வழிபடலாம். மும்மூர்த்திகளாகிற ஸ்ரீத்யாகப்ரும்மம், ஸ்ரீதீக்ஷிதர், ஸ்ரீஸ்யாமாசாஸ்திரிகள், புரந்தர தாசர் ஏனைய வாக்கேயகாரர்களின் கீர்த்தனைகளால் தெய்வீகத்தை அடைய நமக்கு சாதகமாக அமைகிறது. சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம், ஓம்காரம், பிரபஞ்சத்தை காத்து அழித்து கடாட்சித்து தொழிலை செய்பவனே என்று ஓம் ப்ரணவமான விஷயத்தையே மீண்டும் மீண்டும் உரைக்கிறார் ஸ்ரீத்யாகப்ரும்மம். ஒகரூபமுநபரோசி, ஒகரூபமுநஏசி, ஒகரூபமுநஜுசுகண்டி என்கிறார். நான்கு வேதம் அடங்கிய நூல் கீதையில் சாரம் என்கிறது. இந்த கீதையை எவன் ஒருவன் படிக்கிறானோ அவனுடைய மனது தத்துவங்களுக்கு அப்பார்ப்பட்ட பரம்பொருளை அடைந்துவிடுகிறது. மூன்று ஸ்வரங்களை ஸ்ருதி சேர்த்து ஸ - ப - ஸ் என்று ஸ்ருதி கூட்டி ப்ரக்ருதிஸ்வரம் மட்டும் இல்லாமல் விக்ருதி ஸ்வரமாகிய ரிகமதநியால்தான் ராகம் உருவாகும் என்பதனால் ப்ரக்ருதி, விக்ருதி ஸ்வரங்களை கொண்டு அதாவது நாதத்தோடு இசையை கொண்டு தெய்வாம்ஸத்தை பெற முயற்சிக்கலாம். இதனை ஸ்ரீத்யாகப்ரும்மம் மனசுலோனி மர்மமுலு என்கிறார். மேலும் உலகத்தால் காணக்கூடிய ஏழுஸ்வரங்களும், ஏழு ஸ்வரங்கள் இசையில் கணிதம் கொண்ட ஸ்வரம் ஸோபில்லு ஸப்தஸ்வர என்று பாடி மோக்ஷமடைய சப்தஸ்வரமும் மனதிற்கு சாதகமானது என்கிறார். ஏழு என்பது தமிழில் சிறப்பு பெற்ற ஈரெழுத்து. ஏழுத்வீபம், ஏழு தந்திகள், ஏழுகிரகங்கள், ஏழுகிழமைகள், ஏழுதாளம், சூரியனின் ஏழுகுதிரைகள், ஏழு உலகம், ஏழு கடல், ஏழு கன்னிகள், எழு ப்ரகாரங்கள் சங்கீதத்துக்கு ஸப்தஸ்வரங்கள் என்று இவ்வளவு கூறினாலும் எனது கணிதப்படி ஏழுஸ்வரங்களோடு எட்டு ஸ்வரங்களாகிய எட்டின் அம்சமாகிய அஷ்டாக்ஷரத்தை கொண்டும் மோக்ஷமடைய பரம்பொருள் நமது உடலில் எட்டு என்பதற்கு முத்திரை குத்தியுள்ளான். ஆகவே ஸ்ரீத்யாகப்ரும்மம் ஸத்யோ ஜாதாதி பஞ்சவக்த்ரஜ

ஸரிகமபதநி, வரஸப்தஸ்வர என்று கூறினதோடு ஏழின் தத்துவத்தையும் எட்டின் தத்துவத்தையும் கொண்டு மனதை ஒரு நிலைப்படுத்தி இசையை வளர்த்து பரம்பொருளை அடைய உபாஸிப்போமாக. இவை எல்லாவற்றிற்கும் மனத்தை மானுடல் தத்துவம் கொண்ட வீணையோடு நம்மை ஐக்கியமாக்கி கொண்டு வீணையில் கீர்த்தனைகளில் லய சுத்தத்தோடு பாடி வாசித்து பரம்பொருளை அடையலாம். இதனை அடுத்து சாஸ்த்ரங்கள், இதிகாசப் புராணங்கள் கோயில்களிலிருந்து இசைக்கான விவரத்தை அறியலாம். தமிழ் நூல்கள் சில பல அழிந்துவிட்டன என்பதனால் இசைக்கு ஆதாரம் அழிந்துவிடவில்லை. அவற்றை கோயில் தூண்கள், சிற்பங்கள், மண்டபங்கள், விமானங்கள், கோபுரங்கள் மூலம் அழியா பொக்கிஷமாக இவை வைக்கப்பட்டிருப்பது மறை பொருளாக காணலாம். இதனை நாம்மனத்தின் தத்துவம் கொண்டு தேடி கண்டுபிடிப்போமானால் இந்த இசையில் வேதசாஸ்த்ர புராணங்களிலிருந்து தேடி எடுக்கலாம். இயற்கை அதாவது நதி காடு மலைகளின் தத்துவத்திலிருந்து இசை பற்றி தெரிந்து கொள்ளலாம். இயற்கையிலிருந்து ஸ்ருதி இசைக்கான ஆதாரங்களை கூறலாம். கடவுளின் அவதாரம், அவர்களின் பொருளான தெய்வாம்ஸத்திலிருந்து இசை பற்றிய ஆதாரங்களை சேர்க்கலாம். சங்கீதம் கல்பிதம், மனோதர்மம் என்று இரண்டு வகைப்பட்டு மனோ தர்மத்தால் தெய்வத்தை நம் இஷ்டத்திற்கு ஈர்த்து தெய்வத்தை வழிபடலாம். இதுவே நம் மனத்தின் தத்துவம் ஆகிறது.

அமைப்பு

செல்வி.அ.சூடாமணி

## முக்கிய குறிப்பேடுகள்

*இதிலிருந்து ஆரம்பித்துள்ள பக்கங்கள் இந்நூலாசிரியைக்கு உரியது.*

*1. இசைக்கு தலைவன் அரங்கன்*

*2. ஓம் என்னும் ப்ரணவ விமானமே இசையின் தத்துவம் கொண்டது.*

*3. திராவிட வேதம் முன்னே செல்ல ஆரிய வேதம் பின் தொடர அணி அரங்கன் நடைபோடுகிறான்.*

*4. திராவிட வேதம் நாலாயிரத் திவ்யப்பிரபந்தம்*

*5. ஆரிய வேதம் சதுர் வேதமாகிய ரிக், யஜுர், ஸாம, அதர்வண*

*6. அரங்கனின் கோயிலின் 24 தூண்களை கொண்ட காயத்ரீ மண்டபம் 24 ஸ்ருதிகளாகும்.*

*7. இந்த ரகசியம் அறிந்த ஸ்ரீத்யாகப்ரும்மம் அரங்கனை பஞ்சரத்னம் 5 பாடி சிறப்பித்துள்ளார்.*

*8. ஸ்ரீமந்நாராயணன் ஸ்ருஷ்டி செய்யவேண்டுமென்று ஸங்கல்பித்தவுடன் அவனுடைய திருமுக மண்டத்திலிருந்து தேவதைகளில் அக்னியும், மந்த்ரங்களுள் காயத்ரீ மந்திரமும், ஸாமத்திற்குள் ரதந்திர என்ற ஸாமமும், பசுக்களில் ஆடும், வர்ணங்களுள் பிராமணனும், தோன்றினார்கள் என்று வேதம் கூறப்படுகிறது. எனவே ஐந்தும் புனிதமானவைகளாக கருதப்படுகின்றன. வேதத்திலுள்ள மற்ற மந்திரங்களை காட்டிலும் 24 அக்ஷரங்களைக் கொண்ட காயத்ரீ மந்த்ரம் உருவத்தில் மிகச்சிறியது மகிமை பெரியது.*

*9. ஆய கலைகள் 64. அவற்றில் நுண்கலைகள் லலித கலைகள் மனிதனின் பண்பை வளர்க்கின்றன.*

*10. நமது நாட்டின் தனிப்பெருமை இயல், இசை, நாடகத்திலேயே அடக்கம். இதில் நடுவிலுள்ள இசையில்லாமல் ஏதும் கிடையாது.*

*11. எ றும்பு எண்ணாயிரம் என்பர். 12. 8 என்ற எண் இசை வடிவுடைய தலையாய எண் ஆகும். 13. 8 அக்ஷரமே மேளகர்த்தா ஆகும். மேளராகம் என்றாலே எட்டு அக்ஷரம் இருக்கவேண்டும். ஸரிகமபதநிஸ் - ஸ்நிதபமகரிஸ*

*14. இயல் இசை நாடகம் முத்தமிழ் ஆகும். இயல் இசை நாடகம் தமிழ் இசைக்கு அடி வரவு.*

*15. வேத சாஸ்த்ரம் இசைக்கு அடி வரவு.*

*16. ஆறு பருவத்திற்கு பாடவேண்டிய ராகங்கள்.*

*சங்கீத சந்த்ரிகை.*

| | | |
|---|---|---|
| மாசி, பங்குனி | - | தீபகம் |
| சித்திரை வைகாசி | - | மேகநாதமும் |
| ஆனி ஆடியில் | - | ஸ்ரீராகமும் |
| ஆவணி புரட்டாசியில் | - | மாளவகௌசிகமும் |
| ஐப்பசி கார்த்திகையில் | - | பைரவமும் |
| மார்கழி தையில் | - | ஹிந்தோளம் பாடவேண்டும். |

*கும்பகோணம் ஜெயம்மாள் அவர்களால் திருப்பாவை பாசுரம் (ஆழி மழை கண்ணாவை ஹிந்தோள ராகத்தில் மார்கழி தையில் பாடவேண்டிய ராகமாக கருதி) மெட்டு அமைத்துள்ளார். ஹிந்தோளத்தில் பாடப் பட்டுள்ளது சிறப்பு அம்சம்.*

*17. நாதம் என்பதன் பொருள் நாதம் மூலாதாரத்திலிருந்து வெளிக்கிளம்பும் த்வனியாகும். த்வனி தனித்து இசையுடன் தொடர்ச்சியாக வெளிப்படுவது நாதமாகும். நாதவடிவானவன் சங்கரன் என்று கூறுகிறார் ஸ்ரீத்யாகப்ரும்மம்.*

*18. சப்தம் உண்டாகும் விதம் பஞ்ச பூதங்கள் நிலம், நீர், நெருப்பு, காற்று, வான் என்ற பஞ்ச பூதங்கள் தமக்குள் ஒன்றுபடும்போது உண்டாவது சப்தம். அந்த ஒலியை பிரித்தால் தனியோசை வரும். அதுவே த்வனியாகும்.*

*த்வனியை கோர்வையாக ஒலிக்கப்பெற்றால் சங்கீதமாகிறது. பஞ்சபூதத்தை குறிப்பிடவே 'ப' பிறந்தது. (பஞ்சமம்.) பஞ்ச பூதங்கள் இப்படியும் கூறலாம். ப்ருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம்.*

*19. பல்லாயிரக்கணக்கான வருடங்களுக்கு முன் உலகம் தோன்றின நாள் முதல் கொண்டு அடர்ந்த காட்டில் மலை, மேடு உச்சிகளில் மூங்கில் அசையும் ஓசை, இலை ஓசை, ஆற்று நீரோசைகளிலிருந்து இசை பிறந்தது என்கிறார்கள். ஆற்று நீரோசையிலிருந்து ஸ்.... என்ற ஓசை ஏற்பட்டு அதுவே ஸ ஆனது என்கிறார்கள். இவ்விதமாக த்வனி உண்டாகிறது என்று வரலாற்று குறிப்பேடுகள் கூறுகின்றன. இதில் ஆற்றுநீர் ஓசைக்கு சிவ சமுத்திரத்தில் காணலாம் - சூடாமணி.*

*20. சங்கீதம் அதன் பெருமை சங்கீதம்:- சம் - நல்ல - கீதம் - பாடல், சங்கீதம் என்றால் நல்ல பாடல் என்று அர்த்தம்.*

*21. மனித உடலில் 72 ஆயிரம் நரம்புகள் உள்ளன. அவை அனைத்தும் 10 நாடிகளில் அடங்குகின்றன. 10 நாடிகளில் நமக்கு தசவித கமகத்தை உணர்த்துகிறது.*

*22. சிவாயநம விளக்கம்:- சிவம் கடவுள். சிவாயநம என்பது பஞ்சாட்சரம். சி-சிவம், வா-திருவருள் ய-ஆத்மா, ந-திரோதமயம் 'ம' என்பது ஆணவமயம் ஆக நமச்சிவாயத்தை சொன்னவர்கள் ஆத்ம சக்தி பெறுகிறார்கள். இவர்கள் இசை அறிவு பெற்றவர்கள்.*

*23. மனிதனுக்கு முன்பே இசை பிறந்துவிட்டது. மூங்கில்கள் காற்றில் உரசும் பொழுது சப்தம் ஏற்படுகிறது. அது நாதமாக கேட்கிறது. கண்ணனின் குழலே ஓம் என்ற ப்ரணவத்தை கேட்கும் ஒலிக்கருவியாகிறது. இசை தத்துவத்தின் ஆசான் கண்ணனின் குழல் மூங்கிலால் ஆனது.*

*24. திருப்பதியில் கல்யாண வேங்கடேஸ்வரர் சிலை 8 அடி ஆகும். இம்மாதிரியான விஷயங்கள் இசையை அறிய உதவும் அளவுகோல்.*

*25. காவடி சிந்து காவடி தூக்கி செல்கையில் பாடுவார்கள்.*

*26. சிவன் - பஞ்சாட்சரம், ஆறுமுகன் - ஷடாச்சரம், விஷ்ணு - அஷ்டாக்ஷரம் இவர்களுக்கு தொடர்பு உள்ளது. சிவன் பஞ்சாட்க்ஷரம், விஷ்ணு அஷ்டாக்ஷரம் ராம நாமம் ஆகிறது. திருமாலின் மருமகன் முருகன். ப்ரணவம் என்றால் ப்ர என்றால் விசேஷமானது ணவம் என்றால் புதுமை ஆகப்ரணவம் என்பது விசேஷப் புதுமை என்றாகிறது.*

*27. ஆய்வுக்கண்டது எடுப்பு, தொடுப்பு, முடிப்பு பின்னால் விவரிக்கப்படுகிறது. நமது பூத உடல் இசை தத்துவம் அடங்கியது. தொண்ணூற்றாறங்குல - பூத உடம்பு - நடு - மூலாதாரம்.*

*ஒவ்வொரு சரீரத்தின் அளவு தன் கையினால் தொண்ணூற்றாறு அங்குலமுடையது. இதனால் தொண்ணூற்றாறு நுட்பஸ்ருதிகள் ஏற்படுகிறது. இதனால் பாட ஞானம் பெருகிறான் என்ற தத்துவம் புரிகிறது. இந்த 96'' த்தினிடையே பிறந்ததாம் 96 நுட்பஸ்ருதிகள் என்பதாகும். இந்த 96'' த்தின் மேலே 47 1/2 அங்குலமும் கீழே 47 1/2 விட்டு நடு நின்றுஓர் (1) அங்குலமே மூலாதாரம் எனப்படுகிறது. (இசை நுணுக்க தாலார் என்கிறார். ஆதாரம் என்றது மூலாதாரத்திற்கு மேலே நாலுவிரல் விட்ட அந்தர்த்தானமாகிய பின்னாதாரம் ஆகும்.*

*28. 11991 ஆதி இசைகள்*

*29. பருவ காலங்களுக்கு பாடும் ராகம்:- வசந்தகாலம்: காம்போதி, மாலையில் பாடும் ராகம் கல்யாணி, யாமவேளையில் பாடும்ராகம் ஆஹிரி, விடியற்காலையில் இந்தோளம், நாட்டை, பூபாளம், உச்சி வேளையில் பாடும் ராகம் ஸ்ரீராகம், துக்கவிராகம், ஆஹிரி, மகிழ்ச்சி ராகம் காம்போதி, யுத்த ராகம் நாட்டை,*

*30. ரிஷிகள், பிதிருக்கள், தேவர்கள், பஞ்சமஹாபூதங்கள், போகபோக்யங்கள், ஜங்கமஸ்தாவரங்கள் ஆகிய இந்த உலகனைத்தும் நாராயணனிடமிருந்து உண்டானவை.*

*31. யோகம், ஞானம், சாங்கியம், வித்தைகள், சிற்பம் முதலிய தொழில்கள், வேதங்கள், சாஸ்திரங்கள், விஞ்ஞானம் இவை அனைத்தும் ஜனார்த்தனரிடமிருந்து உண்டானவை.*

*32. 18 தத்துவம் என்பது புலன் ஐந்து, பொறி ஐந்து, பிராணன் ஐந்து, மனசு, புத்தி, அகங்காரம் இவைகளை கடந்தவனே கடவுளை காணலாம் என்கிறது. 18 படி தத்துவங்கள் சபரிமலை 18 படி தத்துவம் கொண்டது.*

*33. காயத்ரீ மந்த்திரத்தின் 24 அக்ஷரங்களும் 24 ஸ்வரஸ்தானங்கள்.*

*34. காயத்ரீ என்ற சொல்லுக்கு அர்த்தம் (காயந்தம் + த்ராயத இதி காயத்ரீ)*

*35. சங்கீத சாஸ்த்ரம், சாஸ்த்ரீய சங்கீதம் என்பதெல்லாம் உயரிய சங்கீதம் பாடும் முறைக்கு சாஸ்த்ரம் டள்ளது. அதற்கு பாரம்பரிய வரலாறு உள்ளது. அதுவே சங்கீத சாஸ்த்ரம்.*

36. சாஸ்த்ரம்:- இசையுடன் வார்த்தைகள் கலக்கும் போது மட்டும் அது தமிழிசை, கர்னாடக இசை, ஹிந்துஸ்தானி இசை, மேலை நாட்டு இசை என்ற பாகுபாடு ஏற்படுகிறது.

தமிழிசை:- தமிழ் மொழியுடன் கலக்கும் போது மட்டும்

ஹிந்துஸ்தானி இசை:- ஹிந்தி மொழியுடன் கலக்கும்போது மட்டும்.

உருது:- உருது மொழியுடன் கலக்கும் போது மட்டும்

மேலை நாட்டு இசை:- ஆங்கிலம், ப்ரெஞ்சு, இத்தாலி, இதர தேசபாஷை (ஆர்) மொழியுடன் கலக்கும்போது.

கன்னட, தெலுங்கு, மலையாளம்:- மொழியுடன் கலக்கும் போது மட்டும்

கர்னாடக இசை :- இது எல்லா பாஷைக்கும் பொதுவானது. பாஷை பேதமற்றது.

கர்னாடக ஆதி இசைகள்:- ஆதி இசையும், கர்னாடக இசையும் ஒன்றானது.

37. தமிழ் பாக்களுக்கு பாடவேண்டிய இராகங்கள்:-

| | | |
|---|---|---|
| வெண்பாவிற்கு | சங்கராபரணம் | |
| அகவற்கு | தோடி | |
| கலிப்பாவுக்கு | பந்துவராளி | |
| கலித்துரைக்கு | பைரவி | |
| தாழிசைக்கு | தோடி | சங்கீதசந்திரிகை |
| விருத்தத்திற்கு | கல்யாணி, காம்போதி, மத்யமாவதி | |
| உலாவிற்கு | சௌராஷ்டிரம் | |
| தேவாரத்திற்கு | பூபாளம் | |
| பிள்ளை கலிக்கு | கேதாரகௌளவம் | |
| பரணிக்கு | கண்டாரவம், தக்கலை ஆகும். | |

38. இயல், இசை, நாடகம், முத்தமிழ். இதில் இயலை - இயல் தமிழ் - பேசும் தமிழ் - எழுத்துத்தமிழ் என்று பிரிக்கப்படுகிறது. வகைப்படுகிறது.

39. தமிழிசை என்பது - ஆதி இசை, திவ்யப் பிரபந்தம், பாசுரங்கள், திருக்குறள், தேவாரம், திருவாசகம்.

| <u>40. நவரஸங்கள் 9</u> | | <u>தமிழ் பெயர்கள்</u> | |
|---|---|---|---|
| வீரரசம் | | வீரச்சுவை | |
| பயானகம் | | பயச்சுவை | |
| கருணாரஸம் | | இழிப்புச்சுவை | |
| அற்புத ரஸம் | அ.சூடாமணி | அற்புதச் சுவை | |
| ஸ்ருங்கார ரஸம் | ஆய்வாளர் | இன்பச்சுவை | கருணாமிருதசாகரத்திலிருந்து |
| துக்கரஸம் | | அவலச்சுவை | தமிழ் பெயர் குறிப்பு மட்டும். |
| ஹாஸ்ய ரஸம் | | நகைச்சுவை | |
| ரௌத்ர ரஸம் | | ஒடுவுநிலைச்சுவை | |
| காந்த ரஸம் | | உருத்திர சுவை | |

த்யாகராஜர் நவரஸத்தையும் பாடியுள்ளார். ஒரே பாடலில் 'பாலகனகமய'

41. ஸத்யோஜாத

| | |
|---|---|
| வாமதேவம் | இவை ஐந்தும் பரமசிவனின் |
| அகோரம் | பஞ்சமூர்த்திகள் இதனை ஸ்ரீத்யாகப்ரும்மம் |
| தத்புருஷம் | பஞ்சவக்த்ரஜ, ஸரிகமபதநி என்கிறார். |
| ஈசான்யம் | |

42.அஷ்டதிக்பாலர்கள்:- இந்திரன், அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானம்

தசாவதாரம்:- மஸ்ய, கூர்ம, வராஹ, நரஸிம்ம, வாமன, பரசுராம, ஸ்ரீராம, பலராம, கிருஷ்ண, கல்கி

43. வேதம் காத்த பெருமானின் கோவிலிலேயே தமிழிசை தத்துவம் அடங்கியுள்ளது.

ஓம் என்ற மூலமந்திரத்தின் அக்ஷரமே தமிழ் எழுத்தாகும். 'ம' வே மத்யமாகும். இது உள்ள கோயில் திருவரங்கம்.

44. பஞ்சபாரதியமே ஸ்வரார்ணவம் என்ற குறிப்பு, எனது சிறப்பு குறிப்பு.

45. அரங்கன் மூன்று இடங்களில் நிஜ உருவத்தோடு இருப்பதால் திருப்பாற்கடல், ஸுர்யமண்டலம், ஸ்வர்கத்தில் உபேந்திரஸ்தானம் த்ரிதாமா என்று பெயர் உடையவனாவன்.

46. பண் என்றால்:- இசைத்தமிழில் பண் என்பது மேளராகத்தையும் பண் என்றால் ராகம் என்றும் பாட்டென்றும் கருத்து. திறன் - என்பது ஜன்யராகத்தை குறிக்கும்.

47. ஹிந்துஸ்தானி ஸங்கீதத்தில் மேளராகத்தை 'தாட்' என்று கூறுவர்.

48. ஸ்ரீரங்கத்தில் ஒன்பது புண்ய தீர்த்தங்கள் உள்ளன. அவை 9ன்பதும் நவரஸத்தை குறிக்கும் என்னுடையதான கருத்தாகும்.

49. ஸ்ரீரங்கம் வேத மயமும் - ஸப்த லோகமயமும் ஆகும்.

| | | |
|---|---|---|
| வேதஸ்வரூபன் | - | பெரிய பெருமாள் |
| வேதச்ருங்கம் | - | விமான சிகரம் |
| வேதப்ரணவம் | - | விமானம் (ஓம் ப்ரணவ வடிவம் கொண்டது) |
| வேதாக்ஷரம் | - | காயத்ரீ மண்டபம் (24 தூண்கள் கொண்டது - வேதாக்ஷரம் 24ம் ஸ்ருதிகளானது.) |

50. ஸ்தலம் (ஸ்ரீரங்கம்) மூன்று விசேஷங்களை கொண்டது.

| | |
|---|---|
| ஸ்தல விசேஷம் | இசையை விளக்கும் கோயில் |
| மூர்த்தி | தானே உண்டான மூர்த்தி |
| தீர்த்தம் | நவதீர்த்தங்கள். |

51. தரணியில் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் ஓம் என்ற தத்துவத்தை உபதேசித்து உலகுக்குய்ய வைத்த அணி அரங்கன் இசையின் நாயகன்.

52. வாஸுதேவ ஸர்வம் என்று அறிந்து கொண்டேன் என்று ஸ்ரீத்யாகப்ரும்மம் கூறுகிறார். இது திருவரங்கத்தை குறிக்கிறது.

53. ஓம் நமோ நாராயணாய, 8 அக்ஷரங்களை உடைய அஷ்டாக்ஷரம். 1000 கால் மண்டபமும் (900 காலுடன் 100 கால்கள் சேர்க்கப்படுகிறது உத்ஸவத்தின் போது) இது சேர்ந்து 1008 ஜன்ய ராகத்தை குறிக்கிறது. இதில் தசாவதாரம் உள்ளது. சப்த ப்ரஹாரம் 7 ஸ்வரங்களை குறிக்கிறது. 21 கோபுரம் 21 மூர்ச்சனைகளை குறிக்கிறது. அஷ்டாக்ஷரப்படி 8 படி எட்டு ஸ்வரமாகிய மேளத்தை குறிக்கிறது. விஷ்ணு பேதமற்றதை விமான லக்ஷணம் குறிக்கிறது. ஆண்டாள் வகுத்தது அர்த்த பஞ்சமம்.

54. திராவிட வேதம்:- திராவிடம் என்பது தமிழ் ஆகும். ஆதியிலிருந்தே (சங்க காலம் முதற்கொண்டு நமது நாட்டில் பேசப்பட்ட மொழி திராவிட மொழியாகும். அதனை பிரித்து வடித்து தமிழ் மொழி சிறப்படையப்பட்டது. - ஜெயம்மாள்

55. ஆம்பல்பூத்த சயபர்வதம், பர்வதமடுவிலே அவதரித்த இரண்டு ஆற்றுக்கு நடுவிலே.

சயபர்வதம்:- மலையிலிருந்து காவிரி நதி ஓடிவருகிறது. அதனை மாலையாக அரங்கன் அணிந்தான்.

- ஆதிரங்கம்:- ஸ்ரீரங்க பட்டிணத்தில்

மத்யரங்கம்:- சிவசமுத்திரம் (ப்ளப்) ஸ்ரீவரபுரத்தில் (சாலிக்கிராமம்)

அந்தியரங்கம்:- ஸ்ரீரங்கம்

ஆதிரங்கத்தில்:- காவிரி இரண்டாகிறது

இரண்டு நதிப்பெயர்கள்:- ககனசுக்கி, பரசுக்கி

ஸ்ரீரங்க பட்டினம்:- கௌதம க்ஷேத்திரம், விஷ்ணுசிலை

ஸட்ஜம் ஸ:- ஸட்ஜத்தை குறிக்கிறது.

மத்ய ரங்கம்:- காவிரி இரண்டாக மத்தியில் அரங்கன் பள்ளிகொண்டுள்ளான்.

பஞ்சமம்:- பஞ்சமத்தை குறிக்கிறது. ரங்கனாயகி தாயார் தேவேந்திரனுக்கு ப்ரத்தியக்ஷம்.

ஸ்ரீரங்கம் :- அந்தியரங்கம்:- விஷ்ணு சிலை சயனம் இலங்கை நோக்கி.

ஸ்தாயி ஸட்ஜம் - தாரஸ்தாயியை குறிக்கிறது.

நதிகள்:- காவிரி, கொள்ளிடம்

இந்த மூன்று க்ஷேத்திரங்களையும் இசையால் இணைக்கப்பட்டுள்ளது. மூன்று இடத்திலும் அரங்கன் சயனம் ஸ்ருதி ஸ - ப- ஸ் இந்த மூன்று இடத்தையும் உடையவர், தேசிகர், நம்மாழ்வார் மங்களா சாசனா செய்கிறார்கள்.

சிவசமுத்திர நீர்வீழ்ச்சியில் இசையின் தத்துவத்தை காணலாம். 3 பிரிவாக விழுகிறது. ஸ - ப - ஸ் என்ற ஸ்வரத்தின் கனபரிமாணத்தை நிர்ணயிக்கும் வகையில் ஸவரத்தானம் பேதமடைதலின் ஸ்வர இடைவெளியில் தெளிவுபடுத்துகிறது. இயற்கையின் தத்துவத்தில் இசையின் கண்டுபிடிப்பு - இதனை நேரில் சென்று பார்த்து எடுத்து எழுதியுள்ளேன். இந்த விவரங்கள் என்னுடைய குறிப்பாகும்.

56. பஞ்சபாரதீயமே இசை நூல் ஸ்வரார்ணவம் என்பது எனது ஆய்வின் முடிவு.

57. நாரதீயம் த்யாகப்ரும்மத்திற்கு அளிக்கப்பட்டது. அதில் 24,000 க்ரந்தங்கள் உடையது என்று வரலாறு கூறுகிறது. ஆகவே 24,000 கீர்த்தனைகளை ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடியிருக்க வேண்டும் என்று புரிகிறது. பஞ்சபாரதீயம் நூல் பெற்றதனாலேயே பஞ்ச ரத்னமாக அனேக வகை பாடல்களையும் பாடியது புரிகிறது.

58. ஸ்ரீத்யாகப்ரும்மம் தலைபாகை அணிந்ததிலிருந்து (அரங்கனால் மானசீகமாக கௌரவிக்கப்பட்டார் எனத் தெரிந்துகொள்ள முடிகிறது. அவரது இசை கேட்டு மகிழ்ந்து அவருக்கு அருள் புரிந்திருக்கிறார் என்று புரிகிறது.

59. தலைகாவிரியில் முதலில் பாகமண்டலாவின் கடைசியாக ஸப்தரிஷி மண்டலம் உள்ளது. இதுவே காவிரி நதியின் ஆரம்பமாகவும் சொல்லப்படுகிறது. நீர்வீழ்ச்சியின் ஓசையில் ஸப்தரிஷி மண்டலம் என்ற இடத்திலிருந்து 7 ஸ்வரத் தத்துவத்தை என்னால் உணரமுடிகிறது.

60. சதுர்முக ப்ரும்மா நாலு வேதத்தையே தலையாகக் கொண்டவர் என்கிறது புராணம்.

61. நாராயணன் பரப்ரும்மம், நாரதர் நாதப்ரும்மம், இந்த நாதப்ரும்மம் என்ற பெயரைப் பெற்றவர் ஸ்ரீத்யாகப்ரும்மம். நாரதரிடம் தமிழகத்தில் மாணாக்கராக இசை பயின்றவர் - எனது கருத்து.

62. ஏழு கடலை படைத்தவன், எட்டு பர்வதம் ஏற்படுத்தியவன், எட்டு தேவர்களையும் தன் வயிற்றுள் அடக்கியவன், நான்கு வேதத்தையும் தளதாக்கியவன் (கணபதியாகும்). - ஓர் குறிப்பிலிருந்து

63. தமிழிசைக்கு வேண்டிய ஆதாரங்கள் சங்கப்புலவர்கள் செய்த நூல்கள் பெருநாரை, பெருங்குருகு முதலியவை தேவவருடியார் நாரதர் செய்த நூல் பஞ்சபாரதீயம், சிகண்டிமுனிவர் செய்தது இசைநுணுக்கம், சுத்தானந்த வியற்கவியர் இயற்றியது சுத்தானந்த பிரகாசிகை. அறிவனாசிரியர் அருளியது - பஞ்சமரபு யாமர் யாமளேந்திரராசிரியர் - இந்திரகாவியம் மற்ற நூல்களான தாளவகை யோத்து வியாழமாலை, வெண்டாளி முறுவல், சயந்தயம் முதலியன ஆகும். (இந்த குறிப்பு ஆதாரம் அப்ரஹாம் பண்டிதர்)

64. பண் பாவராக பண்ணாகவே உள்ளது.

65. சரீரத்தில் 72,000 நாடிகளில் மிகச் சிரேஷ்டமானது இடக்கலை, பிங்கலை, சுழுமுனை இம்மூன்றின் மூலமாக ப்ரும்மத்தை அறியலாம். 72 மேளங்களின் ஸ்வரங்களின் ரகசியத்தை மனிதனால் உணரமுடிகிறது.

66. யக்ஞங்களில் நான் ஜபயக்ஞமாக இருக்கிறேன். சந்தஸில் காயத்ரீயாக இருக்கிறேன் என்கிறார் கண்ணபிரான்.

67. காயத்ரீயின் பஞ்சமுகம் முத்துப் போன்று ப்ரகாசிக்கும் முகமொன்றும், பவழம் போன்று காந்தியுடைய முகமொன்றும், பொன் போன்று ஒளிரும் முகமலர் ஒன்றும் நீல ஆகாயம் போன்ற முகமண்டலம் ஒன்றும் ஆக ஐந்து முகங்களுடன் பத்து கரங்களில் வரம் தரும் கரம், அபயம், அங்குசம், பாசம், கதை, சங்கம், சக்ரம், கபாலம், தாமரைகளும் கொண்டு விளங்குகிறாள் காயத்ரீ.

*68. ஸ்ரீரங்கவிமானம்:- ஓம் என்னும் வடிவமைப்பு கொண்டது. ஆகவே காற்று மண்டலத்தில் இசை ஒலியை ஈர்க்கும் சக்தியை கொண்டதாக உள்ளது. மேலும் விமானத்தின் கீழே காயத்ரீ மண்டபம் உள்ளதால் இசை ஒலி (வைப்ரேஷன்) எழுவதை துல்லியமாக உணரமுடியும்.*

*பாஷாங்க ராகத்திற்கு அன்னிய ஸ்வரம் வரும். தேசியராகத்திற்கு ராகத்தின் சாயல் வரும். அன்ய ராகச்சாயல், அன்னியஸ்வரத்தால் தேசியராகம் என்று கூறிவிடமுடியாது.*

*69. இயல் இசை நாடகம் முத்தமிழ்:-*

*இயலை இரண்டு தமிழாக வடிவமைக்கிறோம்... இயற் தமிழ் - பேச்சுத் தமிழ் என்றும், எழுத்துத்தமிழ் என்றும், இசை தமிழிசை என்பது திவ்யப்பிரபந்தம், தேவாரம், திருவாசகம் என்றும் சொல்லப்படுகிறது. தமிழிசை என்பது இசையோடு தமிழ் பாடல்களை பாடுவது அல்லது தமிழ் பண்களைப் பாடுவது.*

*70. பாடல்களை பண்களாக வளர்த்து மக்களிடம் பரப்பினார்கள் - ஆழ்வார்கள், நாயன்மார்கள்.*

*71. இயல் இசை நாடகம் என்னும் மூன்றும் ஸ்ரீத்யாகப்ரும்மத்தால் வழி அமைக்கப்பட்டது (தெலுங்கில்).*

*72. மனிதனுக்கு முன்பே இசை பிறந்துவிட்டது:- மூங்கில் காற்றில் ஏற்படுத்திய ஓசை (சப்தம்) பாலே தமிழிசைதான் - நம்மாழ்வார்.*

*73. நாயன்மார்கள் 63 பேர்கள் ஆவர்.*

*74. ஆய்வில் கண்ட முடிவு ஸ்ரீத்யாகப்ரும்மம் வால்மீகி என்பது மேற்படி விளக்கத்தாலே என்று ஆய்வில் முடிவெடுக்கப்பட்டது. த்யாகப்ரும்மம் வால்மீகியின் மறு அவதாரம் என்பது மேற்படி வரிகளால் நிரூபணமாகிறது. (விஷ்ணு ஸஹஸ்ரநாமம் பக்கம் 8)*

*75. வேத வித்யாஸ்தானமாவது:-*

*வேதம் 4, வேதாங்கம் 6, மீமாம்ஸம் 1, நியாய சாஸ்திரம் 1, தர்மசாஸ்திரம் 1, புராணம் 1 ஆக 14 லோகவித்யா ஸ்தானமாவது:- ஆயுர்வேதம், அர்த்த சாஸ்திரம், காந்தர்வம், தனுர்வேதம் ஆக 4 ஆகும்.*

*76. ஸஹஸ்ர நாமத்திற்கு:- ரிஷி வேதவியாஸமகாமுனிவர், இச் சந்தஸ் அனுஷ்டுப்க்கு தேவகீபுத்திரனான பகவான் தேவதை.*

*77. கீதை குழல், நடனம் கண்ணனிடம், முத்தமிழ் உண்டு. இயல், இசை, நாடகம் முக்கண்ணனிடத்திலும் உண்டு.*

*78. ஆய்வுக்கு கண்டவை:- எடுப்பு, தொடுப்பு, முடிப்பு.*

*எடுப்பு:- தி டிவைன் பவர் ஆப் ம்யூசிக், இசையினால் தெய்வாம்ஸம் இசையில் தெய்வாம்ஸம் பெற்றவர் ஸ்ரீத்யாகப்ரும்மம்.*

*தொடுப்பு:- தமிழிசை, முத்தமிழ் இயல், இசை, நாடகம் பழந்தமிழ் வரலாற்றுச்சிறப்புடன் இசை பற்றியது.*

*முடிப்பு:- ஆய்வுத் தெளிவு.*

*திருவரங்கமே இசை தத்துவம் கொண்டது என்பது,*

*79. ஸ்ரீமந்நாதமுனிகள் ப்ரபந்தத்தை சந்தம் கெடாமல் இருக்க வழிவகுத்து வைத்தார்.*

*80. முத்தமிழை வாழ்த்துகிறேன் என்கிறார் பெரியாழ்வார்.*

*பிள்ளைத் தமிழை பாடியவர் பெரியாழ்வார்.*

*81. ப்ரபந்தங்கள் 96 ஆகும்.*

*82. மோஹம் என்பது ப்ரேமை*

*ப்ரேமை என்பது இன்பம் இன்பத்தை திரம் போட்டு காட்டுவது - ஞானம், ஞானத்தின் முடிவே ப்ரம்மஞானம்.*

*83. ஸத்யம்:- ஸத்யத்தை வெல்ல முடியாது.*
*நித்யம்:- சாஸ்வதமானது*

84. க்ருஷ்ணன் 64 கலைகளையும் 64 நாளில் கற்றார். க்ருஷ்ணன் ப்ரஹஸ்பதியிடம் பயின்றார்.

85. விஸ்வரூபம் தரிசித்தல் என்பது விராடவிஸ்வரூபமாக பெருமாளை தரிசிக்க வேண்டும். இது நியதி.

86. க்ருஷ்ணன் கூறுகிறார்:- இந்த ப்ரக்ருதியில் நான் தான் எல்லாமும் ஆக இருக்கிறேன் என்று.

87. ஸ்வதர்மம் என்பது:- தன் சக்தியை கட்டுப்படுத்த ஜபம், தபம், த்யானம்செய்வது.

88. 100 கோடி ராமநாம ஜெபம் செய்து ராமனைக் கண்டார் ஸ்ரீத்யாகப்ரும்மம்.

89. சோழரும் பாண்டியரும் கலை வளர்த்த மன்னர்கள் ஆவர். இவர்கள் முற்றூட்டு என்னும் பெயரால் கலைகளுக்கு உதவி வந்தனர்.

90. திருமங்கை மன்னன் மூலமாகத் திராவிட ப்ரபந்தமாக திருவாய்மொழிக்கு வேதஸாம்ய விசேஷம் கிட்டியது.

91. சங்கத்தார் நம்மாழ்வாரை புகழ்ந்து பாடியுள்ளனர். சேமங்குருகையோ செய்ய திருப்பாற்கடலோ நாமம் பராங்குசனோ நாரணனே - தாமம் துளவோ வகுளமோ, தோளிரண்டோ நான்கோ உளவோ பெருமானுக்கு.

92. பல்லாயிரம் ஆண்டாக நம் இந்தியாவில் எல்லோராலும் பேசப்பட்ட மொழி திராவிடம், ப்ராக்ருதம் என்று வேறு சிலர் கருத்து.

93. தமிழ் எழுத்து ஒலியால் முந்து தமிழ்மாலை ஆகிறது. பாக்கி மொழிகளில் எழுத்து ஒலியால் பிந்தியதாகிறது (வாரியார்).

94. வெளிமூச்சு 12ம் 12 ஸ்தானங்களை வெளிப்படுத்தவும் அமைக்கப்பட்ட தெய்வாம்ஸ அருள் மனிதனுக்கு.

95. தமிழ் ஓம்காரமாகும். ஆகவேதான் ஓம்கார விமானம் கொண்ட இந்த திருவரங்க நாயகன் திராவிட வேதமாகிய தமிழுக்கு முதலிடம் தந்துள்ளான். இந்த ஓம் என்ற தமிழ் எழுத்தினையே விமான வடிவாகக் கொண்டான் இந்த அஷ்டாக்ஷர நாயகன். ஆகவேதான் இந்த ஓம்காரம், ஓம் வடிவம் கொண்ட, ஓம்ப்ரணவ விமானம், 108 ஸ்தலங்களின் கடைசியான பூலோக வைகுண்ட திருவரங்கத்தில் அமையப்பெற்றது.

96. ஆகவேதான் நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்தை தமிழ் வேதத்தை அரங்கன் ரசிக்க ஆழ்வார்கள் பாடினார்கள். பாட ஆழ்வார்களை தனது அம்சமாக அரங்கன் பணித்தான்.

97. அ.உ.ம. சம்மேளனம் ஓம்காரம்.

98. சத்து சித்து ஆனந்தம் சச்சிதானந்தம்.

99. சத்து சித்து ஆனந்தம் |

ஆற்று ஊற்று மழை | வாரியார்

100. விநாயகர் மூலாதாரக் கடவுள்

ஓம்காரம் - தும்பிக்கை

101. நாராயணனின் பாஞ்சசன்னியம் (சங்கு) ஓம்கார வடிவம், விஷ்ணுவுக்கு உதித சக்ரம் ப்ரயோக சக்ரமாகும். (ஜெயம்மாள்) கண்ணனின் குழல் ஓம்காரநாதத்தை வெளிவிடும் கருவி. அ.உ.ம. அதாவது ஆதாரம் பஞ்சமம் தாரஸ்தாயி ஸட்ஷம் ஸ - ப - ஸ் ஓம் காரத்தின் இசை வடிவுக்கு வடிவமைத்தது குழல்.

102. கண்ணேறு என்பது மட்டமான பார்வை

103. மதுரையை கண்ணகி எரித்த போது எரியாதிருந்தது தமிழ்

104. வைகை ஆற்றிலே மிதந்தது தமிழ்

105. நவரஸம் பொங்கும் நாயகிகளை நவராத்திரியில் பூசிக்கவேண்டும்.

106. ஸாஸ்த்ரம் புராணங்கள்:- பாகவதம், ராமாயணம்

107. ப்ரணவ சப்தத்தோடு மயில் நடனமாடுகிறது. மயில் பார்வை அனுகூலமானது.

*108. அணி அரங்கனுக்கு நடைபோடப்படுகிறது. அது சிம்மகதி, வியாக்ர கதி, ரிஷபகதி, கஜகதி ஸர்பகதி என்று 5 கதிகளை தாளங்களில் 7 தாளங்கள் 5 கதிகளால் 35 தாளவகையாகிறது என்று புரியவைக்கிறது ஸ்ரீரங்கக்கோயில் புராணம்.*

*109. ஸ - ப - ஸ் மூன்று ஸ்வரம் நீங்கலாக* *சிறப்பு குறிப்பு சூடாமணி*

*ஸ்வரங்கள் - ரிகமதநி பஞ்சாட்சர வடிவத்தின் குறிப்பு 5*

*இதில் நமசிவாய 'மாவை மா பீஜம்' என்று குறிப்பிடப்படுகிறது. ஸரிகமபதநிஸ் அஷ்டாக்ஷர மந்திரத்தின் குறிப்பு 8. இதில் வரும் ஸ்வரம் ஸட்ஜமே கோவிந்த ஸட்ஜம். நாராயணாவில் வரும் 'ரா' வே ரா பீஜம் ஆகிறது. இதனிடையே பிறந்தது ராபீஜம், மாபீஜம் ராமநாமம்.*

*3 ஸ்வரம் நீங்கப்பட்டது என்பது ராமநாமத்தை அடையாளமாக குறிக்கிறது. 24 அக்ஷர காயத்ரீ மந்த்ரத்தை அஷ்டாக்ஷரத்தால் வகுக்க 3 வருகிறது. இது காயத்ரீயின் த்ரிநேத்திரத்தை குறிக்கிறது. அது ஸ - ப - ஸ், ஸ்-ப-ஸ முடிவான எல்லை ராமநாமம்.*

*இந்த மூன்றை 8ல் கழிக்க - 5 வருகிறது - ஐந்து முகம், பஞ்சாட்க்ஷரம், காயத்ரீ, தேவியின் 5 முகத்தை குறிக்கிறது.*

*ஆக காயத்ரீயின் 24 அக்ஷரத் தத்துவத்திலேயே இசைபிறக்கிறது.*

*இந்த 3 வரலாற்று சிறப்புடையது.*

| | |
|---|---|
| *3 வகுக்க 24 ல்* | *- 8 ஸரிகமபதநிஸ் - ஓம் - நமோநாராயணாய* |
| *3 கழிக்க 8ல்* | *- 5 ரிகமதநி - நமசிவாய* |
| *8ல் வகுக்க 24ல்* | *- 3 ஸ - ப - ஸ் ராம* |

| | | | |
|---|---|---|---|
| *ஆகப்ரக்ருதி ஸ்வரம்* | *- ஸ - ப - ஸ்* | *ப்ரக்ருதி* | *விக்ருதி* |
| *ஆக விக்ருதி ஸ்வரம்* | *ரிகமதநி* | *இது தாயார் - தாயாரின் கருணை.<br>இந்த கூட்டு ஸ்வரம் 8ன் மும்மடங்கு 24 ஆகும்.* | |

*இந்த 24 அக்ஷரம்தான் 24 ஸ்ருதி ஆகிறது. இந்த 24ல் (3) மூன்று 8 விமானலக்ஷணத்தில் பார்க்கலாம்.*

| | | |
|---|---|---|
| *அச்சுதா* | *அனந்தா* | *கோவிந்தா* |
| *8* | *8* | *8* |

*24வது அக்ஷரமே கோவிந்தா. ஆக ஸ்ருதி 24 தான் என்பது முடிவாகிறது.*

*110. 19ம் நூற்றாண்டின் தொடக்கம் வரையில் சங்கீதப்பயிற்சி பக்தி பூர்வமாகவும் குருசிஷ்ய பரம்பரையாகவும் வழங்கி வந்தது.*

*111. இதிகாஸ புராணங்கள் 5வது வேதமாகும். உடையவருடைய சன்னதியில் அழகிய மணவாளனுக்கு இருப்பது போல் காயத்ரீ மண்டபம் இருக்கிறது.*

*112. பழைய காலத்தில் வேதத்தை வாய்மொழி என்றும் திருமாலை (அதாவது) பெருமாளை வாய்மொழிப்புலவன் என்றும் குறித்ததுண்டு.*

*தமிழ் வேதமாகிய திருவாய்மொழி அருளியபுலவர் பெருமாளைத் ''திருவாய்மொழி பெருமாள் என்றும் ''தொழுதேத்துவர்'' ஞானத்தமிழ் கடல் என்று ஞானிகளும் பாராட்டுவர். வேதம் தமிழ் செய்த பெருமாளான அரங்கனை வால்மீகியின் மறு அவதாரமான ஸ்ரீத்யாகப்ரும்மம் ''ஓரங்கசாயி'' என்று பாடினார்.*

*வைகுந்தத்தில் உள்ள ஸ்ரீமந்நாராயணன் வேதம்:- தமிழ் செய்த பெருமாளாக பூலோக வைகுந்தத்தில் அரங்கனாக பள்ளி கொண்டவன். வேதமாகிய நாராயணன் தமிழ் வேதமாகிய நாலாயிர ப்ரபந்தத்தை தனது அம்சங்களான ஆழ்வார்களால் உலகுக்கு உரைத்தார். நம்மாழ்வார் வாய்மொழியாலே வேதசாரமான திருவாய்மொழியை (நாராயணன் வேதம் ஆனதால்) தானே உரைத்தார். இதுவே எனது ஆய்வின் முக்கிய குறிப்பு. உதவி செய்தது ஜெயம்மாள்.*

*113. தமிழ் மண்ணில் இசை அகத்தியர் காலம் தொட்டு பரிணமித்தது என்று தெரிகிறது. ஆதியில் ஒன்றாக இருந்த ரிக் வேதம் இராவணனுடைய பாடலுக்குப் பின்னே சாம வேதமாகப் பிரிக்கப்பட்டதென்று சான்றுகள் கூறுகின்றன.*

வேதப்பூர்வமாக சுரங்கள் உண்டாயின என்பதை உரைப்பதற்காகவே சாமவேதம் பாடும் இன்னிசையிலிருந்தே சுரங்கள் உற்பத்தியாயின என்று சொல்லப்படுகின்றது. சாம வேதத்திற்கு முன்பே தமிழ் மக்கள் வழங்கி வந்த இசைக்கு தமிழ் சங்கீத சாஸ்த்ரம் மிக விரிவாகவும் தெளிவாகவும் இருந்ததாக வரலாறு கூறுகிறது.

114. பேரீதாளம், பெரியமேளம், சுற்றுமேளம், ஜெக்க தாளத்துடன் விமானம் புறப்பட்டதாக ஸ்ரீரங்கபுராணம் கூறுகிறது. ஸ்வயம் வியக்த க்ஷேத்திரம் என்ற புகழ் பெற்ற திருவரங்கமே இசைக்கு ஆதாரம் என்று என்னால் தெளிவாக்கப்பட்டு குறிப்பிடப்படுகிறது. ப்ரதோஷகாலம் என்பது மாலை 5 1/4 மணி ஸந்த்யாம்ஸம் ப்ரதோஷகாலம் என்று கூறப்படுகிறது. பஞ்சபூதங்களோடு சேர்ந்ததுதான் ஓம்காரம்.

115. ஸ்ரீத்யாகராஜ கீர்த்தனையில் ராகத்தின் அனுபவம் தெளிவாக இருப்பதை காணலாம். 1/96ல் தொண்ணூற்றாறில் ஒன்றான நுட்பஸ்ருதியை காணலாம்.

116. ரிகமதநிக்கு நுட்பஸ்ருதி சேர்க்கையாலேயே ராகத்திற்கு ஜீவகளை ஏற்படுகிறது.

117. திருவரங்க விமானத்தில் நாலு கலசத்தின் மேல் ஆமல சக்ரம், சாந்தசக்ரம், சாந்தோதித சக்ரம், உதித சக்ரம் இருப்பதாக சொல்லப்படுகிறது.

118. திருவாவடு ஆதினத்தில் இசை மரபு உள்ளது. (ஒரு குறிப்பு கூறுகிறது.)

119. தென்னிந்தியாவில் தென் பகுதியில் தென் மதுரையில் 1000 தந்திகள் பூட்டிய நாரத பேரியாழ் வீணை, நாரதீயம், அகத்தியம், பெருநாரை, பெருங்குருகு இருந்தன என்பது ஆதாரச் செய்தி - கருணாமிர்தசாகரமும் கூறுகிறது.

த்வாபரயுகத்தில் கடைசி வரை க்ருஷ்ணபகவான் இருந்தார். க்ருஷ்ணபகவானுடைய தேகம் மறைந்தவுடன் கலி பிறந்ததாக தெரிகிறது. 5014 வருஷங்களுக்கு முன் கலியுகம் ஆரம்பித்தது என்று ஓர் ஆதாரம் கூறுகிறது.

ஸாம வேதத்தில் 1875 ருக்குகள் உள்ளது.

ஸாம வேதத்தில் 1000 ஸாகைகள் உள்ளது.

வேங்கடமகியின் 24 ஸ்ருதி, யீனா, ரானா, வீனா, கானா, மானா, தனு சேனா, தானா, த்தானா, நய, பய, தாய, லோக, லய, ஸுக, மேய, ச்சாய, ஜய, தேய, நர, கர, க்கரா, கிரி, வீர சங்கீதரத்னாகரம் சாரங்கதேவர் ஸ்வரங்களை 22 வகையாக பிரித்துள்ளார். ஆனால் வேங்கடமகி என்பவர் சங்கீதசாரங்க கீதமு என்ற தெலுங்கு மொழி இசை நூலில் 24 ஸ்ருதி உள்ளதாகக் கூறுகிறார்.

வேங்கடமகியின் கடபயாதி முறைப்படி ஸ்வரங்கள் 12 ஆக பகுக்கப்பட்டுள்ளது. இவற்றை பாடும்போது இராக நளினம் சுருதி ஸ்வரங்கள் ஆனது அளவில் குறைந்து ஒலிப்பது இன்றும் பழக்கத்திலிருந்து வருகிறது. அந்த 2 ஸ்ருதி தைவதத்தில் ஸ்தாயியை பிடிப்பதாகும். ஸட்ஜம் 2 ஸ்ருதி கிரி-வீர ஆகும். இதன்படி பார்போமானால் கிரி - மலையைவீர - தூக்கியவன் கோவிந்தன் ஆக (24) வது ஸ்ருதி கோவிந்தா எனவும் (23) கிரி - அச்சுத ஸட்ஜமும் ஆகிறது. இது எனது கணிதப்படி குறிப்பிடப்படும் 2 ஸ்ருதிக்கான ஆதாரம் (ஜெயம்மாள் குறிப்பு) எனது ஆசிரியை குறிப்பு.

தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற புருஷார்த்தங்களை உபதேசித்து முன் நடந்தது சரிதத்தை வர்ணிப்பதே இதிஹாஸத்தின் லக்ஷணம். ஆகவே ஸ்ரீமந்ராமாயணம் ஓர் இதிஹாஸக்ரந்தம், இதனைபோல் வ்யாஸபாரதம், கர்க்கஸம்ஹிதை இவ்விதமானவை. இதனைப்போல் ஸ்ரீத்யாகப்ரும்மம் தர்மம், அர்த்தம் காமம், மோக்ஷம் என்ற புருஷார்த்தத்தின் உபதேசமாக கூறி முன் நடந்த இராமாயணத்தின் இதிஹாஸ ரஹஸ்யார்த்தத்தை நமக்கு மீண்டும் நினைவுக்கு உணர்த்தியவர் இதிஹாஸ லக்ஷணமாக அவர் ராமாயணத்தை கீர்த்தனைகளை வடிவமைத்து நமக்கு உதவினார் என்றால் மிகையாகாது.

120. ஸ்வரங்களில் ப்ரக்ருதி என்றும், விக்ருதி ஸ்வரங்கள் என்னும் இரண்டு பிரிவுகள் உள்ளன. பேத மற்ற ஸ்வரங்களாகிய ஸ பாவை ப்ரக்ருதி என்றும் பேதங்களுடைய ஸ்வரங்களாகிய ரிகமதநியை விக்ருதி ஸ்வரங்கள் என்றும் குறிப்பதுண்டு. ஆனால் பூர்வக்ரந்தங்களில் ஷட்ஜம்

| | | |
|---|---|---|
| சுத்தரிஷபம், | சுத்த காந்தாரம், | சுத்த மத்யமம். |
| ரி | க | ம |
| பஞ்சமம், | சுத்ததைவதம், | சுத்த நிஷாம் |
| ப | த | நி |

என்றும் ஸ்வரங்களைப் ப்ரக்ருதி (சுத்டத) ஸ்வரங்களென்றும், மற்ற ஸ்வரங்களை விக்ருதிஸ்வரங்கள் என்றும் குறிக்கப்பட்டுள்ளது. பூர்வகாலத்தில் ஷட்ஜகிராமம் என்று வழங்கி வந்த ராகங்களின் ஸ்வரங்களையே சுத்த ஸ்வரங்களென்றும் அழைத்தார்கள். இந்த ஸட்ஜக் கிராமத்தின் சுத்த ரிஷப, காந்தார தைவத, நிஷாதங்கள் தற்காலத்திய சுத்த ரிஷப, காந்தார தைவத நிஷாதங்களைக் காட்டிலும் 1 ஸ்ருதி அதிகமானவை என்றறியவும், இதனையே ப்ரயோகத்தில் திருக்கோயில் பாசுரங்களை அரையர்கள் சாதிப்பதில் ஸ்வரங்களை வைத்து அரையர் ஸேவை வ்யாக்யானம் நடக்கும்போது கேட்கலாம். எது எப்படியிருந்தாலும்

*(சுத்த காந்தாரமும், சுத்த நிஷாதமும்) இரட்டை வீடுடையது*

*என்பதால் சுத்த ரிஷப, அந்த்ர காந்தார, சுத்த மத்யமம் பஞ்சமம், சு.தைவதம், காகலி நிஷாதம் - ப்ரக்ருதி என்றும் (உ.ம்) மாயாமாளவகௌளம்) அதன் எதிர் ஸ்வரங்களாகிய - ஸ,ச - ரி, சா - கா, பிரதிமத்யமம், ப, ச - தை, கை - நிஷாதம் (உ.ம். ஹேமவதி) விக்ருதியானது என்று எனது தாயார் எனக்கு அளித்த குறிப்பின் படி எழுதி உள்ளேன். மேலும் சுத்த ஸ்வரங்களாகிய ஸரிகமபதநி யை ப்ரக்ருதி என்றும் (பூர்வ காலத்தில் ஷட்ஜக்ராமம் என்று வழங்கி வந்த ராகங்களின் ஸ்வரங்களை சுத்த ஸ்வரங்களென்றும் சொல்லப்பட்டது) மற்ற சுரங்களை விக்ருதி ஸ்வரங்களென்றும் குறிப்பிட்டார்கள். ஆகவே தான் மாயாமாளவகௌளை ராகத்தை (பூர்வகாலத்தில்) ஷட்ஜக் கிராமப்படி ஸரிகமபதநி தற்கால ஸரிகமபதநியை விட 1 ஸ்ருதி அதிகமானவை என்றுசொல்லப்படுகிறது. சுத்தஸ்வரங்களின் நிமித்தமாக இருப்பதால் அதை ஸரிகமபதநியை ப்ரக்ருதி என்றும் அதற்கு நேர் எதிராக உள்ள ஸரிகமபதநிஸ் ச - ரி, சா - கா, ப்ரதி - ம, பஞ்சமம், ச - தை, கை - நிஷாதமான - ஹேமவதியை விக்ருதி என்றும் எனது தாயார் எனக்களித்த குறிப்பாகும்.*

<u>எனது குருபரம்பரையினை பற்றிய முடிவுரை</u>

*எத்தனையோ மகான்கள்:-*

*எத்தனை யோமகான்கள் இந்த பூவுலகில் பிறந்த போதிலும் ஸ்ரீத்யாகப்ரும்மம் தனித்தன்மை பெற்று சிறப்புற்றார் என்பதனை இந்த ஆய்வுக் கட்டுரையில் விவரிக்கப்பட்டுள்ளது. இதுவே இந்த ஆய்வின் முடிவுரை.*

*1. இவரது இசை கணிதம் கொண்டது.*

*2. இவரது பாடலிலேயே தத்தவம் அடங்கியுள்ளது.*

*3. இவரது பாடலிலேயே தத்துவார்த்தம், பரதத்துவம் பற்றி சிறப்பாக புரிந்து கொள்ளும் வகையில் உள்ளது.*

*4. நாதப்ரும்மமாக வாழ்ந்த இவர் நாதம் பற்றி கீர்த்தனைகளில் விவரித்து நாதோபாஸனை செய்வதன் அவசியத்தையும், அதனால் ஏற்படும் மோக்ஷோபாயத்தையும் விளக்கிக்கூறி உள்ளார்.*

*5. இவரது கீர்த்தனைகள் மூலம் இவர் வால்மீகி என்பதையும் அதனால் தான் ராமரையும், ராமாயணத்தையும், தெளிவுபட கூற முடிந்தது என்பது புரிகிறது.*

*6. இவர் பாடிய ராமாயணம் இவரது, கனவு, நினைவு, வடிவத்தால் ஆனது. ராமனைப் பற்றிய சிந்தனை, கனவு, நேரில் கண்ட காட்சிகள் ஆகியவையால் இவரது ராமநாமக்கனவு பலவிதமானது என்று குறிப்பிடத்தக்கது.*

*7.ஆய்வுக்கென்று தேர்ந்தெடுத்து இவரது கீர்த்தனைகளை தெளிவுபடுத்தி இவரது கீர்த்தனையின் கன, நய, தேசிய வகையில் அமைந்தது பற்றி குறிப்பிட்டுள்ளேன். இவரது பாடலில் அனைத்தும் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.*

*8. எப்படி 24,000 கீர்த்தனைகளை பாடினர் என்பதும், இவரது கீர்த்தனைகளின் அமைப்பிலிருந்து திருவரங்கத்தை பற்றி தெளிவான முடிவாகக் கொண்டு காயத்ரீயின் தத்துவம் கொண்டு 7, 8, 12, 24, 48, 96 ஸ்ருதிப்ரயோகத்தால் ராகவிளக்கம் செய்யப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. வால்மீகி என்பதற்கும் 24,000 பாடலுக்கும் சம்பந்தம் உள்ளதை இவரது பாடலில் தெளிவு பெற முடிகிறது.*

*9. ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் கீர்த்தனையில் எந்த ராகங்களின் ஜீவஸ்வ,மோ அதுவே $^1/_2$ $^1/_4$ 1/8 1/16 சுருதிகளை குறிப்பதாகும். இந்த முறை அவர் கையாண்டிருப்பதிலிருந்து இவர் தமிழிசை இலக்கணம் நன்கு அறிய நாரதர் இவருக்கு அளித்தது பஞ்சபாரதீயம் தான் என்று உணர முடிகிறது.*

*10. த்வைத, அத்வைதம் பற்றி இவரது கருத்து எத்தகையது என்பதை இவரது பாடலில் உணரமுடிகிறது.*

*11. இவரது சிறப்பை மேலும் கூற வேண்டுமானால் இவரது கீர்த்தனைகளில் தமிழிசை நூல்களின் இலக்கண விதிகளின்படி ராகத்தை நுட்பஸ்ருதி ப்ரயோகத்தை செய்ததேயாகும். உணரமுடியாதபடி குறிப்புரையால் உணர்த்தியிருப்பது இவரது மேதாவிலாசம் பற்றி கூற வார்த்தையில் அடங்காது. இவர் கீர்த்தனைகளை சுவடியிலோ இல்லை குறிப்பேடோ வைக்கவில்லை என்பது பற்றி மேற்கோள் பலர் காட்டி உள்ளார்கள். தெய்வாம்சமான இவர் ராகத்தில் தெய்வீகத்தை குரு சிஷ்ய பரம்பரையின் பாடாந்தரத்தால்தான் உணரமுடியும் என்பதனை வீணை இசையோடு மாணாக்கர்களுக்கு எடுத்து உணர்த்தி செயல்படுத்திவிட்டு சென்ற மகான் என்பதனை அறியும் போது மனம் நிறைவுகொள்கிறது. ஸ்வரார்ணவம் பற்றி பலருடைய கருத்துக்களிலிருந்து வித்தியாசமான எனது கருத்தினை பல இடங்களில் குறிப்பிட்டுள்ளேன். தமிழ்நாட்டில் இருந்த இவருக்கு நாரதருடைய பஞ்சபாரதீயம் (நாரதீயம் நாரதமகரந்தம்) தரப்பட்டதை இதுவரை யாரும் குறிப்பிடாத ஒன்று தரப்பட்டது தமிழிசை நூல்கள் அனைத்தும் தரப்பட்டன என்பதையும் இதுவரை யாரும் குறிப்பிடாத ஒன்று. யாழாசிரியனாக தமிழகத்தில் இருந்த நாரதர் யாழின் தத்துவத்தை பூராவற்றையும் ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு குறிப்புணர்த்தியதால் மட்டுமே இவர் நாரதரை குருஸ்வாமி என்று மனநெகிழ்ந்து கூறியதை இதுவரை யாரும் குறிப்பிடாத ஒன்று. மேலும் ஸ்வரார்ணவம் ஓர் இலக்கண நூல் மட்டுமே என்று கூறிய பலருடைய குறிப்பிற்கு எனது வித்யாஸமான கருத்து 'பஞ்சபாரதீயமே' ஸ்வரார்ணவம் என்று ஆகும். வடமொழி சொல்லால் மாற்றி 'ஸ்வரார்ணவமாக' அதனை தமிழகத்திலிருந்து எடுத்துச்சென்று தங்கள் விருப்பங்களை தெரிவித்தாலும் அது சரிவர முற்றுப்பெறாது போனது 22 ஸ்ருதி என்று முடிவோடு. ஆனால் ஸ்ரீத்யாகப்ரும்மம் தமிழிசையின் இலக்கண குறிப்போடு 24 ஸ்ருதிதான் ஆதாரமானது என்பதனை ஆதாரத்தோடு உலகுக்கு எடுத்து உணர்த்திய மகான் என்பதனோடு இந்த முடிவுரை எனது குரு பரம்பரை அஞ்சலியோடு முடிவு அடைகிறது.*

## ஸ்ரீத்யாகப்ரும்மம்

## முடிவுரை

*- செல்வி சூடாமணி*

*இசையைப்பற்றி பலர் ஆய்வுசெய்து கரை கண்டதாக முடிவு ஏற்பட்டு விட்டதாக கூற முடியாது. கடல் அலை எப்படி ஓய்வதில்லையோ அதுபோல இசை அலை ஓய்வதில்லை. ஓய முடியாது. இன்னும்பலரும் பலவிதமாக நமக்கு எடுத்துக் கூறலாம். ஸரஸ்வதியே இன்னும் முடிவுரை கூறவில்லை. இசையில் இசைகடலில் இன்னமும் நீந்திதெளிந்து சந்தோஷித்து அனுபவித்துக் கொண்டிருக்கிறார் என்று வரலாறு கூறுகின்றன. இதனையே ஞானிகள் கூறுகின்றனர். எனது இசை ஆய்வில் ஓர் எளிய கருத்தினை முடிவுகள் செய்திருக்கிறேன். ஸ்ரீத்யாகப்ரும்ம கீர்த்தனைகளை அனைத்திலுமே இசையின் தத்தவத்தை அறியமுடியும் என்பதானது. அவரது கீர்த்தனைகளை படிப்படியாக பாடி மனனம் செய்யும் நமக்கு புலப்படுகிறது. ஆய்வுக்கு நமக்கு வேண்டியது பிற நூல்களிலிருந்து அல்ல. மஹானின் க்ருதிகளிலிருந்தே ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளலாம் என்பதே எனது கருத்து. ஸ்ருதி பற்றி, ஸ்ருதி வாலயூ, ஸ்ருதி எவ்வளவு என்று டிகிரி போட்டு கணிதம் காட்டி போட்டா போட்டியோடு சொன்னார்கள். 22, ஸ்ருதி என்று. ஆனால் 24 ஸ்ருதியை பற்றி ஒருவரும் திட்டவட்டமாக கணித கோட்பாடோடு கூறவில்லை. அவர்கள் கூறிய கணித கணக்கு என்ன வகை வகையாக மாறி மாறி கூறியும் முடிவை தெளிவாக கூற முடியவில்லை. ஆனால் ஸ்ரீத்யாகப்ரும்மம் அவரது கீர்த்தனைகளிலேயே 7, 8, 12, 24 ஸ்ருதிகளையும் (48, 96 நுட்பஸ்ருதிகளையும்) (7) என்பது சப்தஸ்வரம், 8 என்பது அஷ்டகம் மேளகர்த்தாக ராகம், 12 ஸ்தானங்கள், 24 ஸ்ருதிகள், 48, 96 நுட்பஸ்ருதிகள்இவைகளை அவரதுகீர்த்தனையில் திண்ணமாக எடுத்துக் காட்டியுள்ளார். நவரஸங்களையும் கீர்த்தனைகளில் சங்கதி மூலமும் கர்னாடக, சாஸ்த்ரீய இசையின் மகத்துவம் பற்றி பக்திஸ்ருங்காரம் தெய்வீகம் போன்ற நவரஸங்களை பாடியும் காட்டியுள்ளார். கீர்த்தனைகளின் சங்கதியின் வழிகளிலிருந்தே மேற்சொன்ன விவரங்களையும் தி டிவைன் பவர் ஆப் ம்யூஸிக் என்ன என்பதை உணரவும் பாடியுள்ளார். மேலும் ஸ்வராக்ஷர எடுப்பிலிருந்தே அந்த ராகத்தின் அங்க அடையாள லக்ஷணங்களை உணரச்செய்திருக்கிறார். 7, 8, 12, 24, 48, 96 போன்ற நுட்பஸ்ருதிகளை கீர்த்தனையின் வடிவத்திலிருந்தே உணரவைத்திருக்கிறார். உதாரணத்திற்கு ஒரு ராகத்தின் சாயலை உயிர்ப்பித்துக் காட்டுவதில் அந்த ராகத்திற்குரிய லக்ஷண லக்ஷயத்திலிருந்து சுருதி (வால்யூ) எப்படி கூடி குறைகிறது என்பதை அவரது கீர்த்தனைகளின் வடிவமைப்பிலிருந்து தெரியும்படி பாடி குறிப்பிட்டு குறிப்பு நமக்கு தந்துள்ளார். எல்லோரும் இவரது கீர்த்தனை எளிமையானது என்கிறார்கள். அதில் எத்தனை விஷயம் உள்ளது என்பதை கண்டுபிடிக்காமலேயே இசையின் காலம் கடந்துவிட்டது எனலாம். ஒரு ராகத்தின் சாயலிலிருந்து அந்த ராகத்தில் வரும் ஆரோஹண அவரோஹண ராக லக்ஷம் எல்லாவற்றிற்கும் விளக்கமளித்துவிட்டார். ஒவ்வொரு ராகத்திற்கும் ஸ்வராக்ஷரத்திற்கும் அமைப்பு மூலமும் சங்கதி மாற்றும்போதும் ஏற்படும் வித்யாசத்தின் மூலமும் ஸ்ருதி*

நிர்ணயத்தை கையாண்டிருக்கிறார். ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமிகள் ஸ்வரம் சாகித்யம் செய்து வைக்காமல் போய்விட்டார் என்னும்போது சற்று சிந்தித்து பார்ப்போமானால் அவரது ஆக்க பூர்வமான பணி இசைக்கு அவரது கீர்த்தனையிலேயே அமைத்து விட்டார் என்று புலப்படும். வீணை இசையோடு பாடி போதித்து மற்றவர்கள் மனதில் புத்தக வடிவம் செய்துவிட்டார் என்றால் மிகையாகாது.

ஸ்ரீத்யாகப்ரும்மம் பற்றி ஓர் அரிய கருத்துரை முடிவுரையாக தரப்படுகிறது.

மாணாக்கர்கள் மனதில் கீர்த்தனைகளை புத்தக வடிவமாக பதியவைத்துவிட்டார் என்பதற்கு ஆதாரமாக சிறப்பு விவரங்களை இங்கு கூறியுள்ளேன். அவரது கீர்த்தனைகளை ஸ்வரங்கள் என்றால் என்ன என்பதையும், ஸ்வர ஸம்யோகங்கள் 16 என்ன என்பதையும், த்வாதசஸ்வரஸ்தானங்கள் 12 என்பதையும், சப்தஸ்வரங்கள் 7 என்ன என்பதையும், அஷ்டஸ்வரங்கள் 8 என்ன என்பதையும், சப்தஸ்வரங்களுக்கு காரணம் என்ன என்பதையும், அஷ்டஸ்வரங்களின் கருத்து என்ன, ஒரு ராகம் உருவாவதற்கு என்ன என்பதையும், 16 ஸ்வரங்களுக்கு காரணம் யாது என்னும் (ஷோடச) 12 ஸ்வரங்களுக்கு காரணம் யாது என்றும் (த்வாதச), ஷோடசஸ்வரங்களின் 16ன் வரிசைகிரமம் பற்றி அறிவதும் ஸப்தஸ்வரங்களின் பேதமுறையை தெளிவாக்குவதும் ஒரே ராகத்தில் பல கீர்த்தனைகளை வடிவமைத்து காட்டுவதும் ஸ்வர சஞ்சார பேதங்களை பற்றி தெளிவாகவும்(ஸங்கதி மூலம் தெளிவாக்கியும்) ஸ்தாயிகள் பற்றிய குறிப்புகளை குறிப்பு மூலம் ஸ்தாயிகளின் எடுப்பு மூலமும் ஸ்ருதி பற்றி அறிவதும் 22 ஸ்ருதியாகிய துவாவிம்சதி சுருதி இல்லை, 24 ஸ்ருதிகள் தான் கொண்டது இசை என்பதனை கீர்த்தனை வடிவமைப்பிலிருந்தும் தெளிவுபுடுத்தியும், 24 ஸ்ருதிகள் பற்றி இசையில் தமிழிசைதான் மகோன்னது என்பதனை கீர்த்தனைகளில் விளக்கியும், 22 ஸ்ருதி அல்ல 24 ஸ்ருதிதான் என்பதனை தெளிவடைவதற்கு பல அங்கங்களை பாடி காட்டியதன் மூலமும், தசவித கமகங்கள் என்ன என்று அறிய மூர்ச்சனையில் உணரவும், உணர்த்தியும், ஸ்வர ப்ரஸ்தாரத்தின் மூலம் அறியவும், வீணையிசையிலேதான் இவை அனைத்தையும் நிரூபிக்கமுடியும் என்று வீணையோடு பாடி காட்டி மாணாக்கர்கள் மனதில் நிழல்படமாக பதிய வைத்த மஹான் ஸ்ரீத்யாகப்ரும்மம். இவரது கீர்த்தனைகள் சுவடியில் பதிக்கவில்லை என்ற குறை ஏற்படாதபடி மாணாக்கர்கள் மனதில் சுவடியின் அச்சாக பதித்துவிட்டார். இசை கணிதம் கொண்டது என்பதை இவர் நமக்கு அளித்த செல்வத்திலிருந்தும், கோயில்களின் வடிவமைப்பிலிருந்தும் நதி ஆறுகள் தத்துவத்திலிருந்தும் புராணங்களிலிருந்தும், வேதத்திலிருந்தும், சங்க காலத்திலிருந்தும் இசை எப்படி இருந்தது என்பதனை வரலாறு கதையிலிருந்து (நௌகா சரித்ரம்) ஸ்ரீமத்வால்மீகி ராமாயணத்தின் மூலமும், பஜனை திவ்யநாமம் இவற்றிலிருந்தும், பூஜை ஆகம விதிகளிலிருந்தும் இசை கணிதம் கொண்டது என்பதனை நமக்கு அவரது கீர்த்தனையிலேயே குறிப்பு தந்துவிட்டார். மேலும் இலக்கிய இலக்கணம் கொண்டது என்பதற்கு கீர்த்தனை வடிவத்தில் மோனை யதுகைகளை கொண்டது. யாப்பு இலக்கண இலக்கிய வடிவமைப்பை தெளிவாக்கிவிட்டார். கட்டுப்பாடு கொண்ட ராக, தாள, பாவ, லய வின்யாஸம் ஒன்றாலேயே இசையை கட்டுப்படுத்துவது சாத்தியம் என்பதனை இவரது கீர்த்தனையின் கட்டுப்பாடு கொண்ட நடையிலிருந்து வழிமுறைகளிலிருந்து புலப்பட்டுவிட்டது. முக்கியமாக தமிழிசையாக 12, 24, 48, 96 ஸ்வரபேதங்கள் இவரது கீர்த்தனைகள் அடிக்கடி உணர வடிவமைத்து முத்திரை குத்திவிட்டார். இசையில் இவரது கீர்த்தனையில் நுட்பஸ்ருதிகளை தெளிவாக உணரும் வண்ணம் படைத்திருப்பதால் ராக தீர்க்கம் ஏற்பட்டிருப்பதை காணலாம். இவரது கீர்த்தனைகளில் லய சுத்தம், தாள சுத்தம், முக்கியமாக மனக்கணக்கு, சுருதிக்கு நுட்பஸ்ருதிக்கு உள்ள பேதம், கற்பனாஸ்வரத்திற்கும், மனோதர்மத்திற்கும், ஸ்வரப்ரஸ்தாரத்திற்கும், லய கோர்வைக்கும், ஸ்வரகோர்வைக்கும், தாளப்ரக்கரணத்திற்கும், ஆலாபனைக்கு கர்பனாஸ்வரத்திற்கும், சாஸ்த்ரீய சங்கீதத்திற்கும், கர்னாடக இசைக்கும், தமிழிசைக்கும், முக்கிய அம்சத்திற்கும், முடிவுரை ஏற்படுத்திவிட்டார். இதற்கு காரணம் இவருக்கு கிடைத்த ஸ்வரார்ணவம், நாரதீயம் ஸ்வரார்ணவம் என்று மாற்றப்பட்ட தமிழிசை நூலான பஞ்ச பாரதீயம்தான் இவ்வளவுக்கும் ஆதாரம் என்று என்னால் உறுதியாக கூறமுடிகிறது.

தமிழ் நூல்தான் ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கு ஸ்ரீநாரதர் தந்தருளியிருக்கிறார் என்பது எனது ஆய்வின் முடிவான தெளிவான கருத்து. வடமொழி நூலான ஸ்வரார்ணவமும் இசைக்கு இலக்கணம் கொண்ட நூல் என்பதும், நாரதீயம் இசை தத்துவத்தை கூறும் நூல் என்பதும், பஞ்சபாரதீயம் என்னும் தமிழ் இசை நூல் நுட்பஸ்ருதிகளை ஸ்ருதி தத்துவங்களை கொண்ட நூல் என்பது, புலனாகி இதனாலேயே ஸ்ரீத்யாகப்ரும்ம கீர்த்தனைகளில் மேல் சொன்ன அனைத்தும் உருவாகிக்கிடந்து பரந்து நின்று இன்று நிலைத்தது என்பதனை எனது ஆய்வின் முடிவுரையாக கொள்கிறேன். மேலும் நாரதர் தமிழ்நாட்டில் யாழாசிரியனாக இருந்தார் என்றும் நாரதர் ஸ்ரீத்யாகராஜருக்கு நேரில் தோன்றி வரலாறறுச்சிறப்பு நூல்களை தந்தார் என்ற குறிப்பேடுகளிலிருந்தும் இசையின் தத்துவத்தை நாரதரிடம் ஸ்ரீத்யாகப்ரும்மம் தெய்வாம்சத்தின் மூலம்

கற்றுணர்ந்து இருக்கலாம் என்ற முடிவுக்கு வருகிறேன். மேலும் ஸ்ரீத்யாகப்ரும்மம் வீணை கற்றுணர்ந்ததால் நாரதர் யாழாசிரியராக தமிழ்நாட்டில் இருந்திருக்கிறார் என்பதிலிருந்தும் நாரதர் ஸ்ரீத்யாகப்ரும்மம் வீணையில் நல்ல இசை ஞானம் பெற பல இசை நூல்களையும் தந்தருளியிருக்கவேண்டும் என்பது தெரிந்து இருக்கிறது. அவைகளை எனது குறிப்பேட்டில் தந்துள்ளேன். தமிழிசையின் அனைத்து தத்துவத்தையும் ஸ்ரீத்யாகராஜ கீர்த்தனையில் புகுத்தியுள்ளதை காணலாம். நாரதீயம் இசையின் குறிப்புக் கொண்ட நூல் என்ற க்ரந்தம்படி (24 ஆயிரம் கீர்த்தனைகளை) ஸ்ரீத்யாகப்ரும்மம் பாடியிருக்கவேண்டும் என்பதும் எனது கருத்து. பலர் ஸ்ரீத்யாகப்ரும்மம் 24 ஆயிரம் கீர்த்தனைகளை பாடியிருக்கிறார் என்று மட்டுமே கூறியிருக்கிறார்கள். ஆனால் எனது குறிப்புப்படி ஸ்ரீவால்மீகி ராமாயணத்தின் 24 ஆயிரம் ஸ்லோகத்திற்காக ஸ்ரீத்யாகப்ரும்மம் 24 ஆயிரம் கீர்த்தனைகளை பாடியிருக்கலாம் என்ற ஒரு கூற்று முடிவு கிடைக்கிறது. மேலும் பஞ்சபாரதீயத்தினாலேயே பஞ்சரத்னத்தில் ரத்னத்தின் ரத்ன சுருக்கமாக இசை நுணுக்கங்களை அமைத்திருக்கலாம் என்று என் ஆய்வின் முடிவுக்கு எட்டுகிறது. இந்த ஆய்வில் எடுப்பு, தொடுப்பு, முடிப்பு என்பதற்கு தற்போது முடிப்பு முதலாக எடுப்பில் கர்னாடக இசை பற்றியும் ஆரம்பித்து தொடுப்பில் பல இசை கருத்துக்களை தொடுத்து தற்போது முடிப்பேடாக மலர்கிறது. எடுப்பு தி டிவைன் பவர் ஆப் ம்யூசிக் சங்கீதத்தில் தெய்வாம்சம் என்கிறது தொடுப்பு தமிழிசை, முத்தமிழ் இயல், இசை, நாடகம், பழந்தமிழ் வரலாறு எப்படி இவரது கீர்த்தனைகளில் கலந்தது என்றதும், முடிப்பு இத்திருவரங்கமே இசைக்கு தத்துவம் கொண்டது என்பதனை இவரது பாடல்களிலிருந்து கண்டெடுத்து நல்ல தரமாக முத்துக்களை ஒரு நூலில் - எடுத்து தொடுத்து முடித்தும் காட்டியுள்ளேன். இவரது கீர்த்தனைகளில் Couplet, Epistle, Divine, Divinity, Sandas (Prosody), hymn இருப்பதை உணரமுடிகிறது. ஆழ்வார்கள் பாசுரங்களை, இராமாயணம், பாரதம் போன்ற புராணங்களை பாடினார்களோ அதுபோலவே ஸ்ரீத்யாகப்ரும்மம் ராமாயணம், ஸ்ரீமத்பாகவதம் போன்ற நூல்களுக்கு ஆதாரமாக கீர்த்தனைகளை பாடியுள்ளார். ஆகவே ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதப்ரும்மம் நாதயோகி ஆத்மயோகி என்றெல்லாம் முடிவாகிறது. ஸ்ரீத்யாகப்ரும்மத்தின் தெய்வாம்சத்தை பல வழிகளில் கூறி ஸ்ரீத்யாகப்ரும்மம் நாதப்ரும்மம் என்று கூறி இவரது கீர்த்தனைகளில் சாரத்திலிருந்து இந்த ஆய்வின் முடிவுகளை முடிக்கின்றேன். இதனை தொடர்ந்து இதற்கு சம்பந்தப்பட்ட இசைக்கான குறிப்பேடுகள் அளிக்கப்படுகிறது.

பாடும் மந்திரத்தை உச்சாடனம் செய்பவர்களை ரக்ஷிப்பதால் காயத்ரீ என்ற பெயர் வந்தது. அதாவது காயத்ரீயின் 24 அக்ஷரமும் இசைக்கு 24 ஸ்தானங்கள் என்பதால் அதை பாடுபவர்களையும் மந்திரமாக உச்சாடனம் செய்பவர்களையும் காப்பதால் காயத்ரீ என்று பெயர் வந்ததாக வரலாறு உரைக்கிறது. 7 ஸ்வரங்களும், 8 ஸ்தானங்களும், 12 ன் 1/2 ஆன 1/2 ஸ்வரங்களும் 24 - 1/4 ஸ்ருதிகளும் 48 - 1/8 ஸ்ருதிகளும் 96 - 1/16 ஆன நுட்பஸ்ருதிகளும் நாமாக ஏற்பத்தியது இல்லை. உலகத்தை படைத்த ஆண்டவனால் நிச்சயித்து நமக்கு அளிக்கப்பட்டதை உணரவேண்டும், அறியவேண்டும், தெளியவேண்டும். மேற்படி லக்ஷணங்களுக்கு ஸ்ரீரங்க ஓம்ப்ரணவ விமானமே சாட்சி. திருப்பாற்கடலிலிருந்து புறப்பட்ட விமானத்தில் முப்பத்திமுக்கோடி தேவர்கள் இருந்தனர் என்றும் துந்துபி மேளவாத்யங்களுடன் விமானம் திருபாற்கடலிலிருந்து புறப்பட்டதாக ஸ்ரீரங்க புராணம் கூறுகிறது. ஸ்வயம் வயக்த க்ஷேத்ரம் என்ற புகழ் பெற்ற திருவரங்கமே இசைக்கு ஆதாரம் என்று என்னால் தெளிவாக்கப்படுகிறது.

இசையால் ஆத்ம த்யானம் பெற்றவன் உள்ளவனுக்கு தேகம் பற்றிய நினைவு இருக்காது. ஆகவேதான் தன்னையே சமாதி நிலைக்கு கொணர்ந்து ஆத்மக்ஞானி ஆகிவிடுகிறான். இந்த வகை ஸ்ரீத்யாகப்ரும்மம் ஆத்மக்ஞானியாகி தன் உயிர்போகும் நேரத்தை திட்டவட்டமாகக் கூறி ஒளியோடு மோக்ஷமடைந்தார் இசையால் என்பது வரலாற்று உண்மை.

ப்ரதோக்ஷகாலம் என்பது மாலை $5\ {}^{1}/_{4}$ மணி ஸந்தியாம்ஸம் கிட்டதட்ட ப்ரதோஷகாலம் என்று கூறப்படுகிறது.

பஞ்சபூதங்களோடு சேர்ந்ததுதான் ஓம்காரம்

திருவரங்க விமானத்தில் 2000 தேவதைகள் இருக்கிறார்கள் என்ற வரலாற்று விஷயமானது இது ஒரு குறிப்பு மட்டுமே. இந்த தேவதைக்கு தனியான படையல் செய்யப்படுகிறது. பெருமாளுக்கு தனியாக ஒரு வெண்கல பெரிய வட்ட வடிவமான பாத்திரத்தில் உருளியில் தளிகை சமர்ப்பிக்கப்படுகிறது. பெருமாளுக்கு தனியாக நிவேதனமும், தேவதைகளுக்கு தனியாக நிவேதனமும் நடக்கிறது. இரவு அரவணை சமர்ப்பிக்கப்படுகிறது ஆதிசேஷனுக்கு. இந்த முறையை ராமானுஜர் வழிவகுத்து நடக்கிறது என்பது ஸ்தலவிஷயம், சிறப்பம்சம் என்னவென்றால் காயத்ரீதேவிக்கு க்ஷீரான்னம் சமர்ப்பிவிக்கப்படுகிறது.

சித்திரை திருநாள் விஜயநகர மன்னர் விருப்பணனால் ஏற்படுத்தப்பட்ட திருநாள். சித்திரை மாதம் இங்கு உத்ஸவம் (ஸ்ரீரங்கத்தில்). இதற்கு திருவரங்கத்துக்கு சுற்றுபுறம் உள்ள கிராமத்திலிருந்து மக்கள் வருவார்கள். அவர்கள் அரங்கனை கோவிந்தா என்றே கோஷம் போட்டு கொண்டே கோயிலுக்கு சென்று வழிபடுவார்கள். அரங்கனுக்கு மற்றொரு பெயர் கோவிந்தா. எனது ஆய்வின் 24வது அக்ஷரமே கோவிந்தா. விஜயநகர சமஸ்தானத்தில் அரச குருவாக இருந்த எனது தாய் வழிதந்தை பாட்டனார் கோயில் நிர்வாகப்பொறுப்பை முன்னிட்டு தேரடி அருகில் வீட்டில் வசித்தாகவும் விஜய நகர அரசு பொறுப்புக்காக கோயிலில் அதிகாரப்பூர்வமான பணியில் ஈடுபடுத்தப்பட்டிருந்தார்கள் என்று என் தாயார் எனக்கு அளித்த திருவரங்க குறிப்பாகும். இந்த கோவிந்தாவை அடுத்து வேங்கடமகியின் 24 ஸ்ருதியான 23 கிரி, 24 வீர, மலையை தூக்கியவன் கோவிந்தா என்ற அர்த்தமும் எனக்கு ஒரே அர்த்தமாகப் புலப்படுகிறது. இதுவே நான் 24வது அக்ஷரம் என்று கூறும் கோவிந்தாவாகிறது.

## இந்த ஆய்வில் கேட்கப்பட்ட வினாவுக்கு

1. ஸ்ரீரங்கம் இரண்டாம் திருச்சுற்றில் ராமனுக்கு இல்லாத சன்னதி க்ருஷ்ணனுக்கு ஏன் உள்ளது?

2. இசைக்கு திருவரங்கத்தை தேர்ந்தெடுத்தது எப்படி இந்த கோயிலை பற்றி சிறப்பு யாது?

3. இத்திருவரங்க கோயிலுக்கும் ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கும் என்ன சம்பந்தம்?

4. திருவரங்கம் பூலோக வைகுண்டம் என்பது எப்படி?

5. சப்த ப்ரகாரம் என்பது பற்றி சிறப்பு என்ன?

### விடை

1. விமான லக்ஷணப்படி வாஸுதேவன், சங்கர்ஷணன், ப்ரத்யும்ணன், அனிருத்ரன், வாஸுதேவன், கண்ணன் கூட்டம். பின்பு நரன், நாராயணன், ஹரி, க்ருஷ்ணன் விமானத்தில் நால்புரத்தில் கலசம் உள்ளது. த்ரேதாயுக த்வாபரயுகத்தின் விசேஷமான அவதாரிகைகளில் ராமக்ருஷ்ண அவதாரம் முடிவான அவதாரிகை. க்ருதயுகப்பெருமானை, நாராயணனை போற்றிப்பாடுகிறார்கள் தேவர்கள். அந்த நாராயணனை திருவரங்கத்தில் பெருமாளாகப் போற்றப்படுகிறார். மேலும் யுக அவதாரிகைப்படி பெரியபெருமாளை ராமானாகவும், அரங்கனை க்ருஷ்ணனாகவும் ஆழ்வாராதிகள் போற்றிப்பாடுகிறார்கள். இந்த விதமான ஏற்றங்களுக்காகவே இரண்டாம் திருச்சுற்றில் ராமனுக்கு இல்லாத சன்னதி க்ருஷ்ணனுக்கு உள்ளது.

2. இசைக்கு திருவரங்கத்தை தேர்ந்தெடுத்தது காயத்ரீ மண்டபமே இசைக்கு ஆதாரம் என்பதனால். மேலும் இங்கு ஸரஸ்வதி விமானத்தில் அந்தர்வாகியாக இருக்கிறார். இந்த காயத்ரீயின் 24 அக்ஷரமே 24 ஸ்ருதி என்பதாகிறது. மேலும் இந்த திருவரங்க விமானம் ஓம் என்ற ப்ரணவாக்ருதி திவ்ய விமானம் என்பதனால் ஓம் என்ற தத்துவமே இசைக்கு மூலாதாரமாகிறது. இந்த ஓம்காரத்தின் மூலம் காயத்ரீ மண்டபத்தில் இசைக்கான (வைப்ரேஷன்) உள்ளது. இங்கு லஷ்மி, ஸரஸ்வதி, காயத்ரீ மானசிகமாக இருக்கிறார்கள். இவர்களில் மூவரும் வீணையில் இசையை இசைக்கிறார்கள். கண்ணன் குழல் ஊதுகிறான். தேவர்கள் இதனை கண்டு மானஸீகமாக மகிழ்கிறார்கள். ஆகவே இசைக்கு திருவரங்கத்தை தேர்ந்தெடுத்துள்ளேன்.

3. திருவரங்கம் இசைக்கு ஆதாரமான கோயில். இதில் காயத்ரீ மண்டபம் உள்ளது. 24 தூண்கள் கொண்ட காயத்ரீ மண்டபம் 24 ஸ்வரஸ்தானங்களை உடையதாகும். அதுவே 24 ஸ்ருதி இந்த 24 ஸ்ருதியை காயத்ரீயின் 24 அக்ஷரத்தையே ஸ்ரீத்யாகப்ரும்மம் ஒவ்வொரு முதல் அக்ஷரத்தையும் ஒவ்வொரு கீர்த்தனையாக பாடி திருவரங்கத்தின் காயத்ரீ மண்டபத்தினை பற்றி சிறப்பித்துள்ளார். இதுவே திருவரங்க கோயிலுக்கும் ஸ்ரீத்யாகப்ரும்மத்திற்கும் உள்ள சம்பந்தமாகும்.

4. திருபாற்கடலில் ஆதிசேஷன் மேல் நாராயணன் பள்ளிக்கொண்டுள்ளார். திருவரங்கத்தில் காவேரி மத்தியில் ஆதிசேஷன் மேல் பள்ளிக் கொண்டுள்ளார். அங்கு திருபாற்கடலில் மத்தியில் ஆதிசேஷன் மேல் மிதக்கிறார். இங்கு திருவரங்கத்தில் காவேரி கொள்ளிடம் மத்தியில் மிதக்கிறார். திருபரமபதம் ஸ்ரீவைகுண்டம், திருநாடு பரமலக்ஷ்யமான மோக்ஷ நிலையாகும். எம்பெருமானின் பரத்வம் விளங்குமிடம், பரமபதநாதன் வீற்றிருந்த திருக்கோலம் தெற்கே திருமுகமண்டலம், அநந்தாங்க விமானம், தீர்த்தம் வ்ரஜாநதி, அயிரமதபுஷ்கரணி இதைப்போல திருவரங்கத்தில் விர்ஜையாறு ஓடுகிறது. சந்த்ர புஷ்கரணி உள்ளது. பரமபத நாதன் புஷ்கரணி கரையில் உள்ளார். பூலோக வைகுண்டம் என்று இதனால் கூறப்படுகிறது. மேலும் லக்ஷ்யமான மோக்ஷ நிலையடைய எம்பெருமானின் பரதத்வம் கொண்ட திருவரங்கமே மோக்ஷோபாயம் பெரும் நிலையான வீடாகும். இதனையே நம்மாழ்வார் நீயிருக்கும் இடமே எனது வீடு மோக்ஷ நிலை என்கிறார்.

5. சப்தப்ரகார மத்தியே என்று ஏழு ப்ரகாரத்தின் மத்தியில் தான் கர்ப்பக்ரஹம் என்னும் மூலஸ்தானம் உள்ளது. நமது இதயத்திற்குள் தெய்வத்தை உபாஸனை செய்வது போல் சப்தப்ரகாரத்திற்கும் மத்தியிலுள்ள மூலஸ்தானத்தின் ஹ்ருதயாகாரத்தில் உள்ள அரங்கனை பூஜிக்கவேண்டும். இந்த அரங்கனை (ஓம்கார வடிவம், ஓம் தத்துவம் கொண்ட இந்த அரங்கனை விராட விஸ்வரூபமாக வெள்ளிக்கிழமை அதிகாலையில் விஸ்வரூப தரிசனம் செய்ய வேண்டும். ஏன் என்றால் நவக்கிரகங்களில் ஒருவரான சுக்ர பகவான் இந்த அரங்கனை பூஜித்துள்ளார். நவக்ரஹ அதிபதியான அணி அரங்கனை ஸேவிப்போமாக. வினா விடை முற்று பெறுகிறது. வினா விடையோடு ஜெயம்மாள் அவர்கள் இந்த ஆய்வுதனை முடித்து செல்வி அ.சூடாமணி அவர்களுக்கு ஆய்வை முற்றுப் பெற்றதாக அறிவித்துள்ளார்.

*குருகுலத்தின் ஆசிரியை*
*கும்பகோணம் திருமதி ஜெயம்மாள்*

*ஜெயம்மாள்*

## தமிழிசை ஆய்வுக்கென தேர்ந்தெடுத்த புத்தகங்கள்

1. பாசுரமாலா
அமைப்பு ஜெயம்மாள்
2. ஸ்ரீதியாகராஜக்ருதிமாலா
அமைப்பு ஜெயம்மாள்
3. நாலாயிரத்திவ்யப்பிரபந்தம்
4. விஷ்ணுசகஸ்ர நாமம்
5. சௌந்தர்யலஹரீ
6. ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்
2 வால்யூம்
7. கம்பராமாயணம்
8. 108 ஸ்ரீவைஷ்யவதிவ்யதேசவைபவம்
9. ஸ்ரீரங்கம் கோயிலொழுகு
2 வால்யூம், 2ம்வால்யூம் (பைஹரிராவ்)
10. ஸ்ரீரங்கமஹாத்மியம்
11. கருணாமிர்தசாகரம் - அபிரஹாம் பண்டிதர்
12. சங்கீதரத்னாகரம் (சாரங்கதேவர்)
2 வால்யூம்
13. சதுர்தண்டிப்பிரகாசிகை
14. ராக்பரிச்சய் (ஹிந்தி)
15. ஸ்வரமேளகலாநிதி
16. சாமவேதசங்கீதை - 2 வால்யூம்
(சாயனபாடியம் காசிவாசி உயர்திரு சிவானந்த யதிந்திரசுவாமிகளால் மொழிபெயர்க்கப் பட்டது.)
17. சாமவேதசாரம்
18. நம்மாழ்வார் திருவாய்மொழி
19. தேவீமஹாத்மியம்
20. ஸ்தோத்திரமாலை
21. சங்கீத தர்பணம்
22. த்யாகராஜர் (சாம்பமூர்த்தி)
23. சத்குருத்யாகப்ரும்மம் (திரு சம்பந்தம்)
24. ஸம்க்ஷேப ராமாயணம்
25. ஹிந்தி டிக்ஷனரி - பெரிய வால்யூம்
(ஹிந்தி வார்த்தைக்காக)
26. கன்னட பாஷை புஸ்தகம்
27. க்ருதிமணிமாலை - 2 வால்யூம்
ரங்கராமானுஜம்
28. ஸ்பிரிச்சுவல் ஹெறிடேஜ்
29. பரதார்ணவம்
30. தெலுங்கு பாஷை புஸ்தகம்
31. ஸ்ரீத்யாகராஜகீர்த்தனை - T.S.பார்த்தசாரதி
32. சங்கீதசந்திரிகை (மாணிக்க முதலியார்)
33. ஸ்ரீபுரந்தரமணிமாலை
34. ஆதிசங்கீதரசார்ணவம்
35. பாசுரப்படிபாகவதம்
36. சிவநவாவரணம்
37. தீக்ஷிதர் கிருதிமாலா (ராகவன்)
38. தீக்ஷிதர் கிருதிமாலா (சுந்தரம்)
39. ஸத்குருஸ்ரீத்யாகராஜகீர்த்தனைகள்
ஏ.கே.கோபாலன்
40. ஸ்யாமாசாஸ்திரிகள் கீர்த்தனை (ராமநாதன்)
41. வழிகாட்டும் வள்ளுவர்
42. ராமுரார் கீர்த்தனைகள்
43. திருக்குறள் (தமிழ்ப் பல்கலைக் கழகம்)
44. விஷ்ணு புராணம்
45. உபாஸனா தெய்வங்கள் (காயத்ரீ பற்றியது)
46. ஸ்ரீகாயத்ரீ சஹஸ்ரநாம ஸ்தோத்திரம்
47. யாப்பெருங்கலக்காரிகை
48. பகவத் கீதை
49. ஸ்ரீஸுதர்ஸநப்ரபாவம்
50. பேரீதாடனம்
51. இஷ்வாகு குலதனம்
52. ஆனந்த ராமாயணம் - 5 வால்யூம்
53. அஷ்டஸ்லோகி
54. தீக்ஷிதர் கீர்த்தனை
55. ஸ்ரீஸ்யாமா ஸாஸ்த்ரிகள் கீர்த்தனை
56. ஸ்ரீபுரந்தரதாஸர் - வரலாறு
57. ஸ்ரீநிவாஸ புராணம்
58. காவேரி புராணம்
59. பாரமேஸ்வாஸம் ஹிதை
60. வேதம் வழங்கும் அறிவு
61. பாபநாசம் சிவன் புஸ்தகம்
62. கோபாலக்ருஷ்ணபாரதி (இசை புஸ்தகம்,

